அனைத்திந்திய நூல் வரிசை

# வானம் முழுவதும்

ஹிந்தி மூலம்
ராஜேந்திர யாதவ்

தமிழாக்கம்
மு. ஞானம்




நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா

# முன்னுரை

திரு. ராஜேந்திர யாதவின் 'வானம் முழுவதும்' நாவல் வாசகர்களின் அமோக ஆதரவைப் பெற்றது. படைப்புச் சிறப்பும், மக்களிடையே பிரபலமும் ஒருங்கே பெற்றுத் திகழும் படைப்புகள் சிலவே. படைப்புச் சிறப்புமிக்க இலக்கியங்கள் பலவற்றின் பெயரைக் குறிப்பிட முடியும். ஆனால் அவற்றில் எதற்கும் இத்தனை பதிப்புகள் வெளிவரவில்லை. இதைத் திரைப்படமாக எடுத்ததும், அளவில் சிறியதாக இது விளங்குவதும் கூட இது பிரபலம் அடைந்ததற்குத் துணை செய்திருக்கக்கூடும்.

நியூவேவ் கதைகளுக்குப் பெயர் பெற்ற பல கதாசிரியர்கள் உணர்ச்சிப் பெருக்கு மிக்க கதைகளுக்கு எதிராகக் குரல் கொடுத்துக் கொண்டே உணர்ச்சிப் பெருக்கு மிக்க கதைகளை எழுதுகிறார்கள். ராஜேந்திர யாதவ் மிக இளம் வயதிலேயே "வானம் முழுவதும்" போன்ற முதிர்ச்சி மிக்க நாவலை எழுதினார் என்பது ஒரு இனிய ஆச்சரியம். இதில் கவனிக்க வேண்டிய விஷயம் என்னவென்றால், இந்நாவலின் முக்கிய பாத்திரங்கள் (கதாநாயகனும், கதாநாயகியும்) மிக இளம் வயதினர், உணர்ச்சி வசப்படுபவர்கள், இளம் வயது, அதாவது விடலைப் பருவ உணர்ச்சிக் கொந்தளிப்புகளைச் சித்திரிக்க முதிர்ச்சி யடைந்த படைப்பாற்றல் வேண்டும். மிக இளம் வயதிலேயே இந்த ஆற்றலை திரு. ராஜேந்திர யாதவ் பெற்றுவிட்டார் என்பது வியப்பும் மகிழ்ச்சியும் தரும் விஷயம். இதனை அவர் பரிவான அனுதாப உணர்வின் காரணமாகவே பெற்றிருக்க முடியும். ஆழ்ந்த பரிவுணர்ச்சி விரிவடைந்தால் படைப்பில் சிந்தனை மெருகூட்டுகிறது. இப்படி விரிவடைவது அனைவருடனும் உள்முகத் தொடர்பு ஏற்படும்போதுதான் சாத்தியம். படைப்பில் பாத்திரங்களின் எண்ணிக்கை முக்கியமில்லை. அவர்களுக்கு இடையே நிலவும் உறவே முக்கியம், அந்த உறவுகளின் சித்திரிப்பே முக்கியம், அந்தப் பாத்திரங்களின் விருப்புகளும், முயற்சிகளும் எப்படி ஒத்துப்போகின்றன, எப்படி முரண்படுகின்றன என்பதுமே முக்கியம். இவையே உறவுகளின் இருமை நிலைகள். இந்த இருமையை இயல்பாகச் சித்திரிப்பதே படைப்பை வழி நடத்துகிறது.

"வானம் முழுவதும்" புதினத்தை ஆராய முற்படும்போது நம் கவனம் பல விஷயங்களின் மீது செல்கிறது. அவற்றில் சிலவற்றை விவரிப்போம்.

"வானம் முழுவதும்" நாவலின் ஆசிரியர் தன்னுடைய இந்தப் படைப்பு குறித்து "இது முக்கியமாக கீழ்மட்ட நடுத்தர வர்க்க இளைஞன் ஒருவனின் வாழ்க்கைப் போராட்டத்தின் கதை" என்று மிகவும் சரியாகவே கூறியிருக்கிறார். முதன்முதலில் இது 1952-ல் "பேய்கள் பேசுகின்றன" என்ற தலைப்பில் அச்சேறியது. 1960-ல் இது "வானம் முழுவதும்" என்கிற நாவலாக வெளியானது. 1952 வாக்கில் வெளிவந்த நாவல்களுடன் இதை வைத்துப் பார்த்தால் இந்த நாவலின் வரலாற்றுச் சிறப்பு புலனாகும். அச்சமயத்தில் அரசியல் கதைப்படைப்பாளராக யஷ்பாலும், உளவியல் கதைப்படைப்பாளர்களாக இலாசந்திரஜோஷியும், அக்ஞேயும் புகழ்பெற்று விளங்கினர். ஜைனேந்திரகுமார் புகழின் உச்சியை எட்டிவிட்டபின் இறங்கு முகத்தில் இருந்தார். பகவதிசரண் வர்மாவின் சித்ரலேகா புகழ்பெற்றிருந்தது. பண்டித ஹஜாரி பிரசாத் துவிவேதியின் "பாணபட்டனின் சுயசரிதை" ஒரு புதுவகை சரித்திர நாவலாக புகழ்பெற இருந்த தருணம் அது. ஜைனேந்திருக்குப் பிறகு யஷ்பால், அம்ருத்லால் நாகர், பகவதிசரண் வர்மா ஆகியோரின் பெயர்கள் பிரபலமாக இருந்தன. காதல் கதைகளில் தர்மவீர் பாரதியின் "பாவங்களின் கடவுள்" ராமேஷ்வர் சுக்லா (அஞ்சல்)வின் "ஏறும் வெயில்" ஆகியவை இளைஞர்களை ஈர்த்து வந்தன. அவற்றில் விடலைப் பருவத்துக் கீழ்த்தரக் காதல்கள் இருந்தனவேயன்றி உண்மைக் காதலின் சிக்கல்கள் அறவே சித்திரிக்கப்படவில்லை. இந்நிலையில் வெளிவந்த "வானம் முழுவதும்" புதினம், குடும்ப வாழ்க்கைப் பின்னணி யில் அன்றாட வாழ்வுப் பிரச்சினைகளுக்கு இடையே காதலைச் சித்திரிக்கிறது. அந்நாட்களில் காதலைக் குடும்பப் பின்னணியில் சித்திரிப்பது வழக்கமில்லை. வானம் முழுவதும் நாவலின் கதையமைப்பின் சிறப்பு குடும்பப் பின்னணியில் காதலைச் சித்திரிப்பது ஆகும். அது ஒன்றும் லட்சியக் குடும்பத்தின் பின்னணியல்ல; கீழ்மட்ட நடுத்தர வர்க்கத்தின் வறுமையின் பயங்கள், அதனால் விளைந்த நல்ல, கெட்ட மனமாற்றங்கள், அப்படிப்பட்ட குடும்ப உறுப்பினர்களின் உயரிய லட்சிய வாதங்கள், உளுத்துப்போன மன இயல்புகள் அனைத்தும் நிரம்பிய யதார்த்தமான குடும்பப் பின்னணி.

பிரச்சினைகள் நிறைந்த இந்தக் கதையின் கதாநாயகன் சமரும் வழக்கமான கதாநாயகன் அல்ல. அவன் ஹிந்தி சிறுகதை இலக்கியத் திற்குப் புதிதான வில்லன் அல்லது எதிர்நிலைக் கதாநாயகன். குறைந்த பட்சம் அந்தக் கால கட்டத்திலாவது இந்த மாதிரியான கதாநாயகன் புதுமையானவன் என்றே சொல்ல வேண்டும். அவனிடம் பரம்பரைக் கதாநாயகர்களுக்குரிய வீரபராக்கிரமங்கள் ஒன்றும் கிடையாது. எப்போதும் இருதலைக்கொள்ளி எறும்பு, முரண்பாடுகளின் மூட்டையாக ஊசலாடுபவன், பயந்தவன், வேலை கிடைக்காமல் திண்டாடுபவன், அதனாலேயே சஞ்சலமும் பலவீனமும் மிக்கவன். இப்படிப்பட்டவனைப் பாரம்பரியக் கண்ணோட்டத்தில் கதாநாயக

னாகக் கருதவே முடியாது. இந்தப் புதுமையும், குழப்பமும், சஞ்சலமும், "வானம் முழுவதும்" கதையமைப்பு முழுவதிலும் காணப்படுகின்றன. எனவேதான் கதையிலும் கதாநாயகனிடத்திலும சஞ்சலம் இருந்தாலும், ஒன்றுக்கொன்று ஏற்றாற் போலவே இருக்கின்றன. கலைத் தன்மையுடன் ஒன்றுடன் ஒன்று பின்னப்பட்டேயிருக்கின்றன.

நாவலாசிரியர் தன் முன்னுரையில் "வானம் முழுவதும் முக்கியமாக கீழ் நடுத்தர வர்க்கத்தைச் சேர்ந்த ஒரு இளைஞனின் வாழ்க்கைப் போராட்டங்கள், தியாகம் ஒருபக்கம், கனவுகள் - ஆசைகள் மறுபக்கம், பொருளாதார, பாரம்பரிய நிர்ப்பந்தங்கள், இவற்றுக்கிடையே நடக்கும் போராட்டம். அதில் ஏற்படும் தோல்விகள், தளர்ச்சிகள், அவற்றிற் கிடையே எப்படியாவது வழி கண்டுபிடிக்க முடியாதா என்கிற துடிப்பு இவற்றின் கதை" ("இன்னும் கொஞ்சம், 25 வருடங்கள் கழித்து") என்று கூறுகிறார்.

இருமுறை 'கதை' என்று வருவதைப் பிடித்துக் கொண்டு விமர் சகர்கள் இது கதைதான், புதினம் அல்ல என்று சாதித்தால் அது அவர் களுடைய வறட்டுப் பிடிவாதம் அல்லது கதை என்ற சொல்லாக்கத்தைப் புரிந்து கொள்ளமுடியாத குறை என்றுதான் சொல்ல வேண்டும். (உண்மையிலேயே இது கதைதான், ஆனால் அதுபற்றி பிறகு பேசுவோம்).

"வானம் முழுவதும்" ஒரு காதல் கதை. முழுக்க முழுக்க காதல் கதை. இன்றைய இலக்கியத்தில் காதல் கதை என்று கூறப்படுபவை ஒருதலைக் காதலையோ, குறைபட்ட காதலையோதான் விவரிக்கின்றன. நிறைவான காதலை விவரிப்பதால்தான் சாதாரண தாம்பத்திய கதையை விவரித்தாலும். இந்த நாவல் விறுவிறுப்பாகவும், ஆழமாகவும், கவர்ந்து இழுப்பதாகவும் விளங்குகிறது. காதல் என்பது மத்தாப்பு வெளிச்சமல்ல. அது சமுதாய அங்கீகாரம் பெற்ற பொறுப்பும் பண்பும் மிக்க ஒரு உணர்வாகும். இதைக் கண்கூடாகப் பார்க்க வேண்டுமானால் வானம் முழுவதும் நாவலைப் படியுங்கள்.

திருமணத்திற்குப் பின் காதல் என்பதைக் கிண்டல் செய்து அதைப் பத்தாம்பசலித்தனம் என்பவர்கள், திருமண வாழ்க்கையின் ஏற்ற இறக்கங்களையும் அதன் நீள்வெளிகளையும் அறியாதவர்கள். கீழ்மட்ட மத்திய வர்க்கத்தில் தாம்பத்தியக் காதல் என்பது பல கஷ்டங் களுக்கிடையேதான் முயன்று அடையப்படுகிறது; தானே கிடைப்ப தில்லை. வாழ்நாள் முழுவதும் அடைய முடியாதவர்கள் அநேகர். இந்தத் தோல்விக்குக் காரணம் நமது கலாச்சாரம், நமது பாரம்பரியக் குருட்டு நம்பிக்கைகள். "வானம் முழுவதும்" நாவலாசிரியர் அவற்றை நன்கு உணர்ந்திருக்கிறார். அந்தக் கலாச்சாரங்களை வாழ்ந்து பார்த்திருக் கிறார். அவர் மனத்தில் அந்த மனிதத்தன்மையற்ற கலாச்சாரங்கள், பாரம்பரியங்கள், குருட்டு நம்பிக்கைகள் ஆகியவற்றின் மீது வெறுப்பு இருக்கிறது என்பது கவனிக்க வேண்டிய விஷயம். இந்நாவலுக்கு அவர் வைத்த முதல் பெயர் "பேய்கள் பேசுகின்றன" என்பதாகும். அதில் இந்த

வெறுப்பு தெரிகிறது. அவருடைய வெறுப்பு இன்றும் அப்படியே உள்ளது என்பது அவருடைய இலக்கிய நண்பர்களுக்கும் வாசகர் களுக்கும் தெரியும்.

இன்றும் ராஜேந்திர யாதவ் பெண்கள் மற்றும் தலித்துகள் பிரச் சினையில் எவ்வளவு தூரம் கோபமும், ஆக்ரோஷமும் கொண்டிருக்கிறார் என்பது அவருடைய "ஹம்சம்" தலையங்கங்களில் விளங்கும். இதற்கான ஆதார சூத்திரம் "வானம் முழுவதும்" நாவலில் நமக்குக் கிடைக்கிறது. "வானம் முழுவதும்" பெண்ணிய நாவல் அல்ல. ஆனால் பெண்ணியத் திற்கு ஆதாரம் தரும் ஒரு படைப்பு.

இது காதலிக்க அவகாசமே இல்லாத பாத்திரங்களின் காதல் கதை. சொல்லப்போனால் சூழ்நிலைகள் காதலுக்கு எதிர்த்திசையில் அப்பாத்திரங்களை இட்டுச் செல்ல முயல்கின்றன. காதலை அந்தப் பாறை நிலத்தில் நட்டு வளர்ப்பதுதான் கதைப் பின்னணியின் மாயா ஜாலம். காதல், பாறைகளைத் துளைத்துக் கொண்டு துளிர் விடுகிறது. படைப்பில் காதல் களியாட்டங்கள் கண்ணுக்கு எட்டியவரை எங்கும் காணப்படவில்லை. தென்படுவதெல்லாம் நேர் எதிரான சூழ்நிலைகள் தான். சமரின் பாறை போன்ற பிடிவாதம், கோபம், சீற்றம் இவைதான். இவற்றுக்கிடையே காதல் ஒளிந்து வளர்கிறது. "வானம் முழுவதும்" புதினத்தின் காதல் உண்மையான காதல். அது எதிர்மறைச் சூழலில் நிலைத்து நிற்கும். எவ்வளவுக்கு எவ்வளவு ஒடுக்கப்படுகிறதோ, அவ்வள வுக்கு அவ்வளவு வளரும், இறுதியில் வெளிப்படும்.

சமர் ஒரு கீழ்மட்ட மத்தியதர வர்க்கத்தைச் சேர்ந்த பெரியதொரு குடும்பத்தைச் சேர்ந்தவன். திருமணமானவன். வேலைக்குப் போய் சம்பாதிக்காமல் பி.ஏ. படிப்பவன். இது அவனுடைய தாம்பத்தியக் காதல்கதை. சமர் ராஷ்டிரிய ஸ்வயம் சேவக் உறுப்பினன். அவன் பண்டைய லட்சியங்களை ஜடத்தனமாக நம்புபவன். பிரம்மச்சாரியாக வாழ்ந்து நாட்டுக்காக உயிரைக் கொடுக்கத் துடிப்பவன். வலுக்கட்டாய மாக அவனுக்குப் பிரபாவை மணமுடிக்கின்றனர். அவனுடைய குடும்பத்தில் ரிடையர்டாகி இருபத்தி ஐந்து ரூபாய் பென்ஷன் வாங்கும் தந்தை, தாய், கிளார்க்காக இருக்கும் அண்ணன், அண்ணி, அண்ணனின் குழந்தை, கணவனால் கைவிடப்பட்ட தங்கை முன்னி இவ்வளவு பேரும் அடக்கம். கணவனால் கைவிடப்பட்ட தங்கை "வானம் முழு வதும்" புதினத்திற்கு செறிவூட்டுகிறாள். அவள் கீழ்மட்ட மத்தியதர வர்க்க ஹிந்து குடும்பங்களின் உளுத்துப்போன கலாச்சாரங்களைப் பல கோணத்தில் வெளிப்படுத்தி அதன் இரங்கத்தக்க மூடத்தனமான கையறுநிலையைத் தோலுரித்துக் காட்டுகிறாள். இந்தக் குடும்பச் சூழ்நிலையில்தான் பிரம்மச்சரிய விரதம் பூணத் துடிக்கும் சமர் பிரபாவை மணக்கிறான்.

புதுமணம் கண்ட தம்பதியர் ஒருவர் மற்றவருக்கு ஆத்ம சமர்ப் பணம் செய்து ஒருவர் மற்றவரின் காதலுக்கு உரிமை படைத்தவர்களா

கிறார்கள். ஆனால் இங்கு அவர்களுக்கு இந்தக் காதல் கிடைக்கவில்லை. அவர்களுக்கு அது ஏன் கிட்டவில்லை என்பதை விவரிப்பதே "வானம் முழுவதும்" புதினமாக விரிந்திருக்கிறது.

சமருக்கு அவன் விருப்பப்படி திருமணம் நடக்கவில்லை. அவன் மேலும் படிக்க விரும்பினான். பிரம்மச்சாரியாக வாழ விரும்பினான். இன்று இந்த இளைஞனுக்கு முதலிரவு என்று ஊரே அறியும். துணிவு மிக்க செயல் வீரர்களாக இளைஞர்கள் நாட்டுக்குத் தேவை என்று முழக்கமிடும் இந்த இளைஞனே, இன்று தொழுவத்தில் அடைபட்டுப் போய்விட்டான். புயலுக்கும், மழைக்கும் அஞ்சாத சமர் இரண்டு வாரங்களாக ஷாக்காவுக்கே (ஆர்.எஸ்.எஸ். கேந்திரம்) போகவில்லை என்பதை யார் நம்புவார்? அவன் திருமணத்தை ஒரு தடையாக நினைக் கிறான். அவன் அனுமன், பீஷ்மன் ஆகியோர் வழியில் வாழ விரும்பு பவன். முதலிரவன்று குழப்பங்களுக்கு இடையே அவன் "இந்தத் தடை களையும், துன்பங்களையும் மிதித்து முன்னேறுவோம், வாழ்நாள் முழுவதும் பிரம்மச்சரியம் என்கிற என் விரதத்தில் நான் இன்றும் உறுதியாக இருக்கிறேன்" என்று சங்கற்பம் செய்து கொள்கிறான்.

கீழ் மட்ட நடுத்தரவர்க்க அல்லது பொதுவாக நடுத்தரவர்க்க இளைஞன் நினைவு தெரிய ஆரம்பித்தவுடனேயே பிரம்மச்சரிய விரதம் ஏற்க முடிவு செய்து கொள்கிறான். இந்த பிரம்மச்சரியம் நீண்ட நெடுங் காலமாகப் படுத்தி வருகிறது. காந்திஜி ஆறுமுறை தன் பிரம்மச்சரிய விரதத்தை மீறினார் என்று கஸ்தூரிபா கூறுகிறார். அது போகட்டும். பிரம்மச்சாரிக்குக் கல்யாணம் ஆயிற்று என்று அல்லவா சொல்லிக் கொண்டிருந்தோம். இந்நாவலில் கதாநாயகனது முதலிரவிலிருந்து கதை துவங்குகிறது. அந்த வாலிப பிரம்மச்சாரி இரவில் தன்னோடும், பகலில் பிறரோடும் போராடுகிறான். "வானம் முழுவதும்" நாவல், முதலிரவின் போது இளம் பிரம்மச்சாரியின் மனப் போராட்டத்தில் ஆரம்பிக்கிறது.

ராஜேந்திர யாதவ் விடலைப்பருவத்துப் பைத்தியக்காரத்தனமான குழப்பங்களை இயல்பாக சித்திரிக்கிறார். கதாநாயகனின் வறட்டுப் பிடிவாதத்திற்கிடையே அவனுடைய மனதின் பலவீனம் அவ்வப்போது தெரிந்துவிடுகிறது. இந்த 'பலவீனமே' அவனுடைய இயல்பான ஆரோக் கியமான ஆளுமையை வளர்க்கிறது. அவனுடைய ஆரோக்கியமற்ற தீவிரவாத ஆளுமையை இந்த பலவீனமே செப்பனிடுகிறது. அவனுடைய பைத்தியக் காரத்தனமான பிடிவாதத்திற்கும், கதாநாயகி பிரபாவின் முன்னிலையில் அவனது சஞ்சலத்திற்கும் இடையே நடக்கும் போராட் டத்தை ராஜேந்திர யாதவ் தனக்குத்தானே பேசிக்கொள்ளும் நாடக பாணியில் மிகத் திறமையாக வர்ணித்திருக்கிறார். தீவிரமான மனப் போராட்ட நிலையில் வெளிப்படும் தனக்குத்தானே நடத்தும் உரை யாடல் சாதாரணமாக இரண்டு பாத்திரங்களின் உரையாடலை விட அதிகம் பாதிப்பை ஏற்படுத்தும்.

அது வெறும் தனி மனிதப் புலம்பல் அல்ல. ஒருவனின் இரு மன

நிலைகளின் வாக்குவாதம். அந்த மனதில் குடும்ப, சமுதாய பொருளாதார நிலைகளும் அடக்கம். ஒரு மனம், "வாழ்நாள் முழுதும் பிரம்மச்சரியம் என்கிற என் விரதத்தில் நான் இன்னும் உறுதியாக இருக்கிறேன்" என்கிறது. இன்னொரு மனமோ "மனைவி எப்போதும் இடைஞ்சல்தானா என்ன ? ராமனின் சக்தியாக சீதை விளங்கவில்லையா ? ரஜபுதனத்துப் பெண்கள் தங்கள் கணவர்களைத் தாமே போர்க்களத்திற்கு அனுப்பி வைக்கவில்லையா ?" என்கிறது. இது ஒரு ராஷ்டிரீய ஸ்வயம் சேவக் இளைஞனின் மனப்போராட்டம். பலவீனம் என்று பிரமையாக சமர் நினைக்கும் மனதின் இயற்கையான போக்கு அல்ல. அவனுடைய வாழ்க்கைக்குப் பொருள் கற்பிக்கும் பாசப்பெருக்கு அல்ல. அவனுடைய இந்த இயல்பான போக்கு இப்போது மௌனமாக ஒடுங்கி நிற்கிறது. ஆனால் அதுவே போகப்போக சமரின் உணர்வுகளை ஆக்கிரமித்து அவனை சரியான இடத்தில் கொண்டு சேர்க்கிறது. பிரபாவின் பச்சை வளையல்கள் அணிந்த கை வெகு சாதாரணமாக ஏதோ ஒரு அலட்சியப்படுத்தத்தக்க ஒரு பிம்பமாக ஆரம்பத்தில் வருகிறது. திருமணத்தில் கைத்தலம் பற்றும் கட்டமும் அப்படியே, மணவறையை விட்டு ஓடி விட நினைக்கும் சமரின் நினைவுகளும் அப்படியே. ஐயோ, என் கால்களில் விலங்கிடாதீர்கள். விலங்கிடாதீர்கள்... பச்சை வளையல்கள் அணிந்த வியர்க்கும் கரத்தை ஒரு கையில் பற்றி கோதுமை மாவு உருண்டையை மறு கையில் ஏந்தி உள்ளேயிருந்து வந்த இரு வகையான குரல்களை சும்மா கேட்டுக்கொண்டிருந்தேன்... இன்னும் காலம் கடந்து விடவில்லை, எழுந்து ஓடிவிடு... இன்று குடும்பம் என்பது என்ன ? அது ஒரு சிறைக்கூடம். இதில் சிக்கியவர்கள் கைதிகளாக வாழ்க்கையில் உழலுகிறார்கள். அவர்கள் குற்றம் எதுவும் செய்யவில்லை. அவர்கள் செய்த குற்றம் எல்லாம் அந்த வர்க்கத்தில் பிறந்ததுதான். பாரம்பரியங்களும், குருட்டு நம்பிக்கைகளும், வீண் பகட்டுகளும் அவர்களை மேலும் நெருக்குகின்றன. இந்தச் சிறையிலிருந்து விடுதலை பெற வழியேயில்லை. அவர்கள் அனைவரும் நிரபராதிகளே! அவர்களுடைய உடல் மன ஆரோக்கியத்தைக் கீழ்மட்ட மத்தியதர வர்க்கச் சூழ்நிலைகள் பாதித்துவிட்டன. அதனால் அவர்களுக்கு ஒருவர் மற்றவரைக் கண்டால் ஆவதில்லை, சண்டை போட்டுக்கொள்கிறார்கள். குற்றவுணர்வுக்கும் அவ்வப்போது ஆளாகிறார்கள். அவர்கள் பாரம்பரியத்தை சுமந்து சேர்க்கிறார்கள். அவற்றைத் தூக்கியெறிந்து இலேசாவதில்லை.

இந்தக் குடும்பத்தில் ஒரு பாவப்பட்ட ஜன்மம் சமரின் திருமணமான தங்கை முன்னி. ராஜேந்திர யாதவ் அவளைப் பிரபாவின் மீது பரிவுணர்ச்சி கொண்டவளாக சித்திரிப்பது மனதைத் தொடுகிறது. அவள் நிலை பிரபாவின் நிலையை விட மிகவும் மோசம். அவள் கணவன் ஸ்திரீலோலன், குடிகாரன், சூதாடி, முன்னியை அவன் பல வகையில் கொடுமைப்படுத்துகிறான். அவள் பிறந்தகம் வந்து அங்கேயே வாழ்கிறாள். சிறிதுகாலம் கழித்து அவள் கணவன் அவளை அழைத்துப்

போக வருகிறான். முன்னிக்குப்போக விருப்பம் இல்லை. ஆனால் சமரின் தந்தையோ கௌரவம், மானம்-மரியாதை ஆகியவற்றுக்குப் பயந்து அவளை அவளுடைய ராட்சசக் கணவனுடன் அனுப்பி வைக்கிறார். முன்னியை அனுப்பி வைப்பது பசுவைக் கசாப்புக் கடைக் காரனிடம் ஒப்புவிப்பது போன்றதொரு காட்சி. சொல்லப்போனால் அதைவிட மோசம். பசுவுக்குத் தன் எதிர்காலம் பற்றித் தெரியாது. கசாப்புக் கடைக்காரனும், கணவன்போல வாழ்நாள் முழுவதும் கொடுமைகள் இழைக்கமாட்டான். கணவன் அன்பும், பாதுகாப்பும் தருவான் என்று எதிர்பார்க்கிறோம். கசாப்புக் கடைக்காரனிடம் பசுவோ, பசுவை விற்பவனோ அப்படி ஒன்றும் எதிர்பார்ப்பதில்லையே!

இதில் வேடிக்கை என்னவென்றால முன்னியின் கணவனின் கொடுமைகளினால் துன்புறும் முன்னியின் பிறந்தகமே பிரபாவின் புக்ககம். மகள் மீது கொடுமைகள் நடக்கிறது எனினும் குடும்பம் மருமகள் மீது அதே கொடுமைகளைச் செய்கிறது. கொடுமைக்கு ஆளானவர்கள், கொடுமையை வெறுக்கத் தலைப்படாமல் தாமே கொடுமையானவர்கள் ஆவதும் நமது பாரம்பரியமே.

"வானம் முழுவதும்" நாவலின் முக்கியமான படைப்புச் சிறப்பு கீழ்மட்ட மத்தியதரவர்க்கக் குடும்பத்தின் பின்னல் ஆகும். சமரின் அப்பா எவ்வளவுக்கு எவ்வளவு கோபக்காரரோ, அவ்வளவுக்கு அவ்வளவு துன்பமும்படுகிறவர். பாரம்பரியம், கலாச்சாரம் என்கிற பெயரில் அவர் தன் பிள்ளைகளுக்குக் கெடுதலே செய்கிறார். ஆனால் குடும்பத்தில் மிகப் பாவப்பட்ட, நொந்துபோன ஜன்மம் அவர்தான். சமரை அடிக்கும்போது அவர் எவ்வளவு பரிதாபத்துக்குரியவராகக் காட்சியளிக்கிறார்? சமரின் அண்ணன் எப்படியோ தள்ளி வரும் ஜீவனற்ற வாழ்க்கைக்கு அவனுடைய பழைய சைக்கிள் நல்ல ஸிம்பாலிக் வெளிப்பாடு. சமரின் அம்மா முன்பு மருமகளாக வாழ்ந்த ஒரு மாமியார். இதில் சற்று விறுவிறுப்பான பாத்திரம் சமரின் அண்ணி. அவள் இந்த ஆரோக்கியமற்ற குடும்பத்தில் தன்னுடைய கபடங் களினால் ஒருவருடன் ஒருவரை மோதவிட்டு குடும்பத்தில் சலசலப்பு ஊட்டிக்கொண்டே இருக்கிறாள். இந்த நாவலில் எல்லாருமே அடிபட்டு நொந்த பாவப்பட்டவர்கள்தான். முன்னி அனைவரிலும் அதிகமாகப் பாவப்பட்டவள். கெட்டவர்கள் என்று யாருமே கிடையாது. இது வில்லனே இல்லாத ஒரு கதை. ஆனால் காமெடியும் அல்ல. சமுதாய அமைப்பும், பாரம்பரியங்களுமே வில்லன்களாகி வரதட்சணை, வேலையில்லாத் திண்டாட்டம், பாலுணர்வு உளைச்சல், ஆண்கள் பெண்களைக் கொடுமைப்படுத்தல் போன்ற பிரச்சினைகளுக்கு வித்திடு கின்றன. அவையே மனிதனைத் துன்பப்படுத்துபவனாகவும், துன்புறுபவ னாகவும் ஆக்கி வைக்கின்றன. அவற்றாலேயே மனிதர்கள் துயருறு கிறார்கள். தம்மை மறக்கிறார்கள். அவர்கள் பாரம்பரியத்தையே சாஸ்வதமாக எண்ணி அவற்றையே பற்றி நிற்கிறார்கள். அவர்கள்

வாழ்க்கை மேலும் மேலும் மோசமாகிறதேயன்றி உருப்படுவதற்கு வழியேயில்லை. சமரும், பிரபாவும் இந்த இருட்டுச் சுரங்கத்திலிருந்து வெளியேற முயற்சிக்கிறார்கள். அவர்களுடைய பிடிவாதமும், பாரம்பரியத்தில் வந்ததுதான். ராஜேந்திர யாதவ், தாம்பத்தியப் பிணைப்பானது சூழ்நிலைகளை மீறி வாழ்க்கையில் ஒரு பிடிப்பைக் கொடுப்பதாகக் காட்டியிருக்கிறார். சூழ்நிலைகள் எவ்வளவு கடினமானவையாக இருந்தபோதும் மனித உறவுகள் அவற்றைச் சவாலாக ஏற்று சமாளிக்க முடியும்.

தாம்பத்திய உறவை ஏற்கும் விதம் இயல்பாக இருக்கிறது. எங்கும் உணர்ச்சிக் கொந்தளிப்போ, லட்சியவாத, சீர்திருத்தவாத இடறல்களோ இல்லை.

"வானம் முழுவதும்" நாவலின் முதல் பகுதியின் இறுதிப் பகுதி மிகவும் மனதைத் தொடுவதாக அமைந்துள்ளது. இது மிகவும் சிக்கலான பின்னல் அமைப்பு கொண்டது. முந்தைய சூழ்நிலைகளின் மோதல்களின் முடிவு. பல அக, புற துன்பங்களுக்குப்பின் எய்தியது. அதனாலேயே இயற்கையாகவும், மனதைத் தொடுவதாகவும் அமைந்துள்ளது. பிரபாவின் பால் சமர் காட்டும் பிடிவாதம் போலியானது. அதைச் சிறுபிள்ளைத்தனம் என்று சொல்வது பொருத்தம். அவன் கொள்ளும் மிதமிஞ்சிய மதிப்பு, அவனுடைய லட்சியவாதம் எல்லாமே சிறுபிள்ளைத் தனமானவைதான். விடலைப் பருவத்தில் ஏதாவது செய்யவேண்டுமென்ற இனம் புரியாத உணர்ச்சிப் பெருக்கு யதார்ததத்துடன் மோதும்போது நகைப்புக்கும், இரக்கத்திற்கும் உரியதாகிவிடுகிறது. யதார்த்தத்தில் மோதியும் பாடம் கற்காத உணர்ச்சிப் பெருக்கு, ஒன்று சிதறிப்போகிறது அல்லது நகைப்புக்கும். இரக்கத்திற்கும் பாத்திரமாகவே இருந்து விடுகிறது. சமரும் பிரபாவும் உள்ளூர ஒருவர் மற்றவரால் ஈர்க்கப்படுகிறார்கள். இது பாரம்பரியத்தால் விளைந்ததாகக்கூட இருக்கலாம். தன் பிடிவாதத்திற்கும், ஆணுக்குரிய குரூரத்திற்கும் இடையிலும் சமருக்கு பிரபா தன்னவள் என்கிற நினைவு இருக்கவே செய்கிறது. சமர் நடத்தை கெட்டவன் அல்ல என்பதும் கவனிக்கப்படவேண்டிய விஷயம். எனவே, சமர் பிரபாவின் உறவுகள் பரிணமித்த விதத்திற்கு விதைகள் முன்பேயே இருந்தன என்றே கருதவேண்டும். இவ்வகையில் படைப்பு தர்க்க ரீதியாகத் தொய்வின்றியே விளங்குகிறது. அந்தப் பரிணாம வளர்ச்சிக்குப் புறச் சூழ்நிலைகள் தேவையில்லை. சமர், பிரபா இருவருக்குமே பிடிவாதத்தினாலும், கர்வத்தினாலும் ஒருவர் மற்றவரை உதாசீனம் செய்வது தெரிந்திருக்கிறது. இந்த அலட்சியமும், பிடிவாதமும் கூட ஒரு வகைப் பாசப்பிணைப்புதான். பிரபா, சமரை மெச்சிப் பேசுவதும் சமரின் குற்றவுணர்வு இறுதியில் தன் மூடத்தனத்தை உணர்வதில் போய் முடிகிறது. "நான் நடந்துகொண்டது தவறு மட்டுமல்ல, முட்டாள்தனமானதுமாகும் என்று எனக்கும் பட்டது."

சமர், பிரபா திருமணம் பெரியோர்களால் நிச்சயிக்கப்பட்டது.

பெரியோர்களால் தீர்மானிக்கப்படும் திருமணங்களில் பரஸ்பரம் அறிமுகம் இல்லாத தம்பதிகள் சந்திக்கும்போது அவரவரின் ஆளுமையில் சில இயல்புகள், மற்றவரைக் குத்திவிடுவது சகஜம். நிராலா "குல்லி பாட்"டில் தன்னுடைய முதலிரவை சுவாரசியமாக விவரிக்கிறார். சமர் பிரபாவின் சந்திப்பு ஓரளவு அப்படிப்பட்டதே. மணமகன் மணமகளை ஏற்கவும் விரும்புகிறான், அதே சமயத்தில் முரண்டும் பண்ணுகிறான். மணமகள் கணவனுக்குத் தன்னைச் சமர்ப்பிக்கவும் விரும்புகிறாள். அதே சமயத்தில் தன்னை மரியாதையுடன் நன்றாக நடத்தவேண்டும் என்றும் நினைக்கிறாள். கணவன் தன்னை வேண்டி விரும்பிக் கேட்டுக் கொள்ள வேண்டும், தன்னிடம் இனிய மொழிகள் பேச வேண்டும் என்று அவள் விரும்புகிறாள். இது பிடிவாதத்திலும், போலித்தனத்திலும் நடக்குமா? பிரபா ஆத்ம சமர்ப்பணத்திற்குத் தயார். ஆனால் பணிந்து போகத் தயாரில்லை. அவள் தன்னை சமர் மீது திணிக்க விரும்பவில்லை. சமர் படிக்க விரும்பினால அதற்குத் தடையாக இருக்க அவள் விரும்ப வில்லை. பிரபாவின் தலைக்கனம் என்று சமர் நினைப்பது உண்மையில் பெண்மையின் சுயமரியாதை. அப்படி ஆத்ம சமர்ப்பணத்திற்கு இடை யேயும் விளங்கும் சுயமரியாதை போற்றுதற்குரியது. சமரின் பிடிவாதம் பொய்மையானது. பிரபாவைத் தன்னவள் என்று நினைப்பதே மெய்யானது. அதுவே வளர்ச்சியும் பெறுகிறது.

இந்தப் பொய்மைக்கும் மெயமைக்கும் நடக்கும் போராட்டத்தின் கதைதான் "வானம் முழுவதும்" நாவல் என்று சொல்லலாம். படைப்புத் திறன் இந்தப் போராட்டத்தை வெகு இயல்பாக இட்டுச் செல்கிறது. பொய்மை மெய்யாக மாற்றம் பெறும் நிகழ்ச்சியுடன கீழ்மட்ட நடுத்தர வர்க்கத்தின் பொருளாதார, கலாச்சார, சமுதாய நிலைகள் பின்னப்பட் டுள்ளன. காதல் கதையில் வாழ்க்கைச் சிக்கல்களை எப்படிப் பிணைத்து எழுத முடியும் என்பதற்கு விடுதலைக்குப் பிந்திய கதையிலக்கியங்களில் "வானம் முழுவதும்" ஒரு முன் மாதிரியாகும்.

இந்நாவலின இன்னொரு தனித் தன்மையையும் கோடிட்டுக் காட்ட வேண்டியது அவசியம். அறிவானது, உணர்வு நிலையை ஆதரித்து நிற்கும் தன்மையை விவரிக்கும் படைப்புகள் மிகச் சிலவே. சமர் முட்டாளதனம் என்று வர்ணிக்கும் பிடிவாதம், அகங்காரம், அலட்சியம், தன்னையே வருத்திக் கொள்ளுதல் ஆகியவை மெல்ல மெல்ல அறிவுடைமைக்கு மாறுகின்றன. அறிவுடைமை எய்திய பின் தம்பதிகள் அந்நியோன்னிய உணர்வுடன் ஒருவர் மற்றவருக்குத் தம்மை அர்ப்பணித்துக் கொள்கின்றனர்.

—விஸ்வநாத் திரிபாடி

# இன்னும் கொஞ்சம்

*(25 ஆண்டுகளுக்குப் பிறகு)*

*('வானம் முழுவதும்' நாவலின் பனிரெண்டாவது பதிப்பின்போது)*

*"வானம் முழுவதும்" நாவலைப்பற்றி ஒரு சாரார் இரு வகையாகச் சொல்லுகிறார்கள். சிலர் இந்த நாவல் இக்காலத்திற்குப் பொருந்தாமல் போய்விட்டது என்கிறார்கள். இன்னும் சிலரோ சினிமாவாக எடுக்கப் பட்டு விட்டதால் இது ஒரு ஜனரஞ்சகமான நாவல் என்கிறார்கள்.*

*எழுதிப் பல வருடங்கள் கழித்து சினிமாவாக எடுத்தாலே ஒரு படைப்பு ஜனரஞ்சகமானது என்றோ மட்டமானது என்றோ ஆகிவிடும் என்றால், பதேர் பாஞ்சாலி, க்ரைம் அன்ட் பனிஷ்மெண்ட், போரும் அமைதியும், ஷேக்ஸ்பியரின் நாடகங்கள், ஹிந்தியின் சித்ரலேகா, கோதான், கபன், உஸ்னே கஹா தா, தீஸ்ரி கஸம் ஆகியவை மட்டமான படைப்புகள் என்று ஆகிவிடும்.*

*அதே போல நாவல் வடிவம் காலப் பொருத்தமிழந்து போயிற்று என்பதும் விந்தைதான். நம்நாட்டில் 90 சதவிகித மக்கள் கிராமங்களிலும், சிற்றூர்களிலும் வசிக்கின்றனர். பொருளாதார-சமுதாய ரீதியாகக் கீழ் மட்டத்திலும், கீழ் நடுத்தர மட்டத்திலும் இருப்பவர்கள் பெரும்பாலும் எழுத்து வாசனையற்றவர்கள் என்பதை அறிந்திருந்தும், "எழுத்து வாசனை" கொண்ட பட்டணவாசிகள் வரதட்சணை, தீண்டாமை போன்ற பிரச்சினைகள் எல்லாம் தீர்ந்துபோன பிரச்சினைகள் என்று கூறினால் அந்த "கிட்டப் பார்வைக்காரர்களைக்" கண்டு பரிதாபம்தான் ஏற்படுகிறது. கோதானில் (1934-35) மாலதி விவாகரத்து செய்து கொண்டதாலேயே அல்லது அதற்கு முன்பாக விஜயலட்சுமி பண்டிட் விவாகரத்து செய்து கொண்டார் என்பதாலேயே இன்று நம் சமுதாயத்திலும், இலக் கியத்திலும் விவாகரத்து என்பது காலப்பொருத்தம் இழந்து போனதாகி விடுமா? கோதான், கபன், சேவாசதன் ஆகிய நாவல்களில் எடுத்தாளப் பட்ட பிரச்சினைகள் இன்று இல்லை என்றும் இன்றைய இளைஞர் களுக்கு இந்தப் பிரச்சினைகள் பற்றி ஒன்றுமே தெரியாது என்றும் ஒரு பேச்சுக்கு வைத்துக் கொண்டாலும், அவற்றை இலக்கியம் இல்லை என்று ஒதுக்கிவிட முடியுமா?*

*"வானம் முழுவதும்" முக்கியமாக கீழ் நடுத்தர வர்க்கத்தைச்*

சேர்ந்த ஒரு இளைஞனின் வாழ்க்கைப் போராட்டத்தை விவரிக்கும் கதையாகும். ஒரு பக்கம் கனவுகள், ஆசைகள், மறுபக்கம் சமுதாய பொருளாதார, பாரம்பரிய நிர்ப்பந்தங்கள், இவற்றுக்கிடையே நடக்கும் போராட்டம், அதில் ஏற்படும் தோல்விகள், தளர்ச்சிகள், அவற்றிற் கிடையே எப்படியாவது ஒரு வழி கண்டுபிடிக்க முடியாதா என்கிற துடிப்பு இவற்றின் கதை. கதையின் அந்த மையக் கருத்தைக் கோடிட்டுக் காட்டவே அதை எழுதி எட்டு ஆண்டுகள் கழித்துத்தான் கவிஞர் தினகரின் வரிகளில் "வானம் முழுவதும்" என்கிற சொல்லைப் பிடித்துக் கொண்டேன். ஆனால் அதையெல்லாம் விட்டுவிட்டுப் பெண்டாட்டியும் புருஷனும் பேசாது இருந்த கதை என்று சொல்லும்பொழுது உத்தர ராமாயணம் எழுதிய பவபூதியின் ஞாபகம்தான் வருகிறது. நான் மீண்டும் வலியுறுத்திச் சொல்கிறேன்— அப்படி அவர்கள் பேசிக்கொள்ள வில்லை என்பது சமர், பிரபா ஆகியோருக்கு இடையே கருத்துப் பரிமாற்றம் நிகழவில்லை என்பதை உருவகமாகக் காட்டுவதேயன்றி வேறில்லை. கூட்டுக்குடும்பத்தில் பல பழக்க வழக்கங்கள் மற்றும் பொருளாதார, சமுதாயக் கட்டாயங்களின் காரணமாகக் கணவன், மனைவி உரையாடவே வாய்ப்பின்றிப் போகிறது. கதையில் வரும் சமரும், பிரபாவும் ஓரிரு வார்த்தைகள் பேசிக் கொண்டார்கள் என்றே வைத்துக் கொண்டாலும் பெரிதாக என்ன மாற்றம் ஏற்பட்டு விடப்போகிறது?

வெவ்வேறு பதிப்பகங்கள் வாயிலாக ஒரு லட்சம் பிரதிகளுக்கு மேலாக விற்கப்பட்டுவிட்ட நிலையில், பனிரெண்டாவது பதிப்பில் போய் இந்த மாதிரி சமாதானம் சொல்லிக்கொண்டிருப்பது அவ்வளவு பொருத்தமாக இல்லைதான். ஆனால் தேவையில்லை என்றில்லை. பெர்னாட்ஷா தன் உயிலில்கூட இதுபோன்ற சமாதானங்கள் எழுத வேண்டி வரவில்லையா?

*ராஜேந்திர யாதவ்*
*மே **4, 1973***

# 1

தாளமோ லயமோ இன்றி டும் டும் என்று ஒலித்துக்கொண்டிருந்த டோலக்கின் ஒலியும் பெண்களின் கீச்சுக் குரல்களும் சட்டென நின்றன. "என்ன ஆயிற்று? என்ன ஆயிற்று?" என்று குழந்தைகளும், பெண்களும், வாசலிலும், மேல் மாடியிலும் திரண்டனர். கீழே வாசலில் இடுப்பை ஒடித்து ஒடித்து கைதட்டிப் பாடிக்கொண்டிருந்த பெண் வேடமிட்ட அலிகள், மிரட்சியடைந்து தங்கள் பாட்டை மறந்து எதிரே வெறிக்க வெறிக்கப் பார்க்க ஆரம்பித்தனர்.

தெருவின் எதிர் சாரியில் எங்கள் வீட்டுக்கு நேர் எதிர் வீட்டு சாமலின் மனைவி, தங்கள் வீட்டு அறைக்குள், மேலே மண்ணெண்ணெய் ஊற்றிக்கொண்டு பற்ற வைத்துக் கொண்டு விட்டாள். புகை மண்டலத்தைப் பார்த்து மக்கள் ஓடிவந்தனர். ஆனால் கதவை உடைத்து எடுப்பதற்குள் அவள் உயிர்ப்பறவை பறந்துவிட்டது. "ஐயோ: மங்கலமான நேரத்தில் இப்படி அபசகுனமாக நடந்துவிட்டதே! என்ன ஆகுமோ!" என்று மக்கள் மனம் திகிலில் படபடத்தது. ஏதோ பூகம்பம் வந்துவிட்டது போன்று ஒரே இரைச்சலும், கூப்பாடும் அமளி துமளிப்பட்டது. மக்கள் இங்கும் அங்கும் ஓடினர்.

எவ்வளவோ முயன்றும் இன்று எனக்கு முதலிரவு என்பதை என்னால் நம்ப முடியவில்லை.

இந்த கலாட்டாவுக்கு நடுவில் நான் ஒருவர் கண்ணிலும் படாமல் கிளம்பி ஓட்டம் பிடித்தேன். ஈரநெடி மிக்க அசிங்கம் நிறைந்த அந்த குறுகிய சந்துகளிலிருந்து பெண்களின் அழுகுரல் மங்கிக்கொண்டே வெகுநேரம் பின் தொடர்ந்தது. பின் தொடர்ந்த அந்த ஒலியைத் திருமணத்தின்போது ஒலிக்கும் மகிழ்ச்சியான பாடலா, எவளோ ஒருத்தி செத்ததற்கு வைக்கும் ஒப்பாரியா என்பதை என்னால் பகுத்துணர முடிய வில்லை. பகுத்துணர நேரமும் இல்லை.

இன்று இந்த இளைஞனுக்கு முதலிரவு என்று ஊரே அறியும். துணிவுமிக்க செயல்வீரர்களான இளைஞர்கள் நாட்டுக்குத் தேவை என்று முழக்கமிடும் இந்த இளைஞனே இன்று தொழுவத்தில் அடைபட்டுப் போய்விட்டான். புயலுக்கும், மழைக்கும் அஞ்சாத சமர் இரண்டு வாரங் களாக ஷாக்காவுக்கே (ஆர்.எஸ்.எஸ்.கேந்திரம்) போகாமல், நண்பர்களை ஏறிட்டுப் பார்க்க முடியாமல் நடமாடுகிறான் என்பதை யாராவ்

நம்பமுடியும்? அல்லது அதே சமர்தான் இதோ இங்கே நண்பர்கள், விருந்தினர்கள், தெரிந்தவர்கள், தெரியாதவர்கள் அனைவரின் கேள்வி யெழுப்பும் கண்களிலும் படாமல் சந்து பொந்துகள் வழியாகக் கோயில் பக்கம் ஓடிக்கொண்டிருக்கிறான் என்பதைத்தான் நம்ப முடியுமா? சற்று அமைதியாக உட்கார்ந்து இவ்வளவு பெரிய மாற்றத்தைப் பற்றி யோசித்துவிட்டு இரவு நெடுநேரம் கழித்து திரும்புவதற்கு அதுதான் சரியான இடம். அதற்குள் ஆரவாரங்களும் அடங்கிவிடும். ஆனால் இந்த ஆரவாரங்கள் இன்னும் துரத்திக் கொண்டே வருகின்றனவே!

"அடே... அடே... இன்னும் ஒரு கிளாஸ் குடிப்பா, உன் மகனுக்குக் கல்யாணம், நீ என்னடான்னா அழுது வடியிறியே! ஆனா... ஏனப்பா உன் சம்பந்தி கொஞ்சம்... டாகுர் சாஹப்! உங்க குடும்பத்திலும் மாப்பிள்ளை வீட்டுக்காரங்களுக்கு நாட்டுச்சரக்குதானா, கொஞ்சம் சீமை..."

பளபளக்கும் முகங்கள், சேற்றில் அமிழ்ந்தன போன்ற கண்கள்... குழறும வாய்கள்... சாராய நெடி அடிக்கும் மூச்சுக்காற்றுகள்... பந்தலுக்குக் கீழே தலைப்பாகையை சரி செய்து கொண்டு அப்பா உறுமிக்கொண் டிருந்தார்... "எங்களை ஏமாத்திட்டான் அந்தப்பயல்..."

"எழுந்திருங்க, எழுந்திருங்க, ஊர்வலத்துக்கு நேரமாச்சு. தூங்க ணும்னா பெண்டாட்டி பக்கத்தில் தூங்க வேண்டியதுதானே, இங்கே எதுக்கு வந்தீங்க? நீங்களும் உங்க டிரஸ்ஸும்.. பார்க்கிறவங்க நல்ல மாப்பிள்ளை வீட்டு ஜனங்கள்னு நினைப்பாங்க... எழுந்திருங்க... எழுந்திருங்க..."

"ஏய்... ஏய் அங்கே பார், அம்மா பின்னால் ஒளிஞ்சுக்கிறாளே பார்... அதுதான்டா அந்த நீளச்சடைக்காரி, காதிலே வெள்ளைக்கல் வச்ச தோடு போட்டிருக்காளே அவதான். அவ கண்ணைப் பார்ரா, என்ன அழகு என்ன அழகு, எனக்கு உயிரே போயிடும் போலிருக்குடா."

"ஊம், நான் சொல்றதைத் திரும்ப அப்படியே சொல்லு... 'கிணறு வெட்டினாலும், தர்மசத்திரம் வைத்தாலும் உன்னைக் கலந்தாலோசித்தே செய்வேன்.' அடுத்தாப்ல பெண்ணு பிரதிக்ஞை எடுத்துக்கணும்..."

"தூ... ஊ... தூ... ஊ... தூ... ஊ" கொம்பு முழக்கம். "டும்... டும்..." என்ற பறை ஒலி "ஓடு.. ஓடு... இந்த மாயச்சுழலிலிருந்து ஓடு" என்று என்னுள் ஒரு குரல் அப்போதிருந்தே ஒலித்துக் கொண்டேயிருந்தது. ஐயையோ! எதிரே வருகிற இளைஞனின் முகம் பார்த்த முகமாக இருக்கிறதே. திரும்பு, திரும்பு. இல்லாவிட்டால் மணிக்கணக்காகப் பிடித்துக் கொள்வான். வம்பு கேலிப் பேச்சுக்கள் கேட்க வேண்டிவரும். "பெண்டாட்டி எப்படி?" என்பான். ஸ்வீட் கேட்பான், ஏன் என்னைக் கல்யாணத்துக்கு இட்டுச் செல்லவில்லை என்பான் ஓடு... ஓடு. அப்பா! வாழ்க்கையின் துவக்கமே இவ்வளவு பாரமாக இருக்கிறது? எல்லா வற்றையும் உதறிவிட்டு எங்காவது கண்காணாத இடத்திற்கு ஓடிவிட

வேண்டும் என்றிருக்கிறது. அப்படி ஓடிவிட்டால் நாளைக்கே பேப்பரில் "மகனே, உன்னைப் பிரிந்து உன் தாயின் உடல்நிலை கவலைக்கிடமாக இருக்கிறது. உன்மீது எங்களுக்கு எந்தவிதமான வருத்தமும் இல்லை. உடனே திரும்பி வா" என்று வரும். ஒன்றும் காரியார்த்தமாக நடக்க மாட்டேன் என்கிறது. பெரிய லாரி ஒன்று மணலில் சிக்கிக் கொண்டு நிற்பது மாதிரி இருக்கிறது. எஞ்சின் உறும, சக்கரங்கள் இருந்த இடத்திலேயே சுற்றி வானளாவப் புகையும் புழுதியும் எழுப்பிக் கொண்டு ஒரு அங்குலமும் நகராத லாரி மாதிரி, திக்குகள் சூனியமாகி பார்வையும் தெளிவற்றுப் போய்விட்டதுபோல இருக்கிறது. எங்கும் சோர்வு, மூச்சுத் திணறுகிறது. மனம் மருள்கிறது. சுற்றிலும் புழுதிப் படலம் நிறைந்து நீங்காமல் நிற்கிறது.

மாலையிருள் கவ்வியிருந்தது. தலையில் ஏதோ சுமை ஏற்றிவைத்தது போலக் கனத்தது. கோவில் தூணில் தலையைச் சாய்த்துக் கொண்டேன். கறுப்பு-வெள்ளைச் சலவைக்கற்களால் ஆன சதுரங்க விரிப்பு போன்ற தரை, சுவாமி சந்நிதி வரை போகும் தூண்களின் இருவரிசை. அதன் மேல் நிற்கும் விசாலமான மேல்தளம். நடுவில் கைத்தாளம், மிருதங்கம், ஹார்மோனியம், கிதார் ஆகியவற்றை வைத்துப் பாடிக்கொண்டிருக்கும் பக்தர்கள். மீராவின் "மேரா தோ கிரிதர கோபால்..." பஜனை- நடுநடுவே "லாலா கீ ஜய்", "ஸ்ரீ கிருஷ்ண கீ ஜய்" என்ற பக்தி கோஷங்கள் ஒலிக்கும் மாலை நேரம். சாம்பிராணியும், ஊதுபத்தியும் மணம் கமழ்கிறது. மங்கிய ஒளி... 'ஐயோ, நான் என்ன செய்வது என்று யாராவது சொல்லுங்களேன்!'

தூணில் சாய்ந்து கொண்டு நான் வெளிப் படிக்கட்டுகளிலேயே உட்கார்ந்திருந்தேன்.

'என்னால் ஓடிப்போகவும் முடியவில்லையே!' அப்போது ஒரு பத்து பதினைந்து நாட்களுக்காவது கல்கத்தா, பம்பாய், பூனா, ஹரித்வார் எங்காவது ஓடிப்போயிருந்தால் இப்படியெல்லாம் நிகழ்ந்திருக்காதே! அப்போது, "ஐயோ என் கால்களில் விலங்கிடாதீர்கள், விலங்கிடாதீர்கள்" என்று அழுது அரற்றிக்கொண்டு மட்டும்தான் இருக்க முடிந்தது. பச்சை வளையல்கள் அணிந்த வியர்க்கும் கரத்தை ஒரு கையில் பற்றி, கோதுமை மாவு உருண்டையை மறு கையில் ஏந்தி உள்ளேயிருந்து வந்த இரு வகையான குரல்களைச் சும்மா கேட்டுக்கொண்டே உட்கார்ந் திருந்தேன். ஒன்று "இன்னும் காலம் கடந்துவிடவில்லை, எழுந்து ஓடிவிடு" என்றது. இன்னொன்று "ஐயோ, யாரை என் கழுத்தில் கொண்டு வந்து கட்டுகிறார்களோ தெரியவில்லையே!" என்றது. புகை மண்டிய தீ நாக்குகளைச் சுற்றித் தடுமாறும் கால்களால் ஒருவாறு நிறைவேற்றிய சப்தபதிச் சடங்கு! புரோகிதர் என்னென்னவோ சொல்லிக் கொண்டிருந்தார். இப்படித்தான் சமர்த்த ராமதாஸர் கல்யாணத்திலும் புரோகிதர் ஏதோ மந்திரத்தில் "எச்சரிக்கை" என்று சொல்லப்போக

அவர் மணவறையை விட்டு எழுந்து ஓட்டம் பிடித்தார் என்பது நினைவுக்கு வந்தது.

உற்றாரும் உறவினரும் "பெரியவனுக்குக் கலியாணம் முடிச்சு எட்டு வருஷம் ஆயிட்டுது. இப்போதாவது சின்னவனுக்கு கல்யாணம் பண்ணிடணும்" என்று எப்போது பார்த்தாலும் சொல்லிக்கொண்டு இருந்தார்கள் "என்னிக்குத் தான் இந்த வீட்டிலே புது மருமக காலடி எடுத்து வைப்பாளோ" என்று அம்மா தினமும் நச்சரிப்பாள். அப்பா "முன்னி கல்யாணத்திலே ஏழாயிரம் எட்டாயிரம் கடன் ஏறிட்டது. இந்தப் பசங்க ஏதாவது பண்ணாதான் உண்டு. இனிமேல் நம்மாலே ஒன்றும் செய்ய முடியாது விடுப்பா" என்பார். தன் சுகம்! தன்நலம்! தன் இன்பம்! மற்றவன் செத்தால் என்ன, வாழ்ந்தால் என்ன என்பதே நம் இல்லறமாகிவிட்டது. மற்றவனுக்கு என்று ஒரு மனம் இருக்கும், அதில் அவனுக்கென்று ஆசைகள் இருக்கும் என்பதே ஒருவருக்கும் தோன்றுவதில்லை. இந்த வயதானவர்கள் இருக்கிறார்களே, இவர்கள் 'தம் காலத்தில் நடந்த மாதிரிதான் எப்போதும் நடந்தாக வேண்டும்; இல்லையேல் உலகம் முழுகிப்போய்விடும்' என்று நினைக்கிறார்கள். 'சின்னப்பசங்களுக்கு என்ன தெரியும்? இவங்க இஷ்டம்னு ஒண்ணு இருக்க முடியுமா என்ன? போங்கய்யா, நாங்க எவ்வளவோ பார்த்தாச்சு' என்பார்கள். ஆனால் உண்மை என்னவென்றால் அவர்கள் பார்வை தங்கள் குறுகிய வட்டத்திற்கு அப்பால் போகச் சக்தியற்றவை என்பது தான். அவர்களுக்குத் தெரிந்த தெல்லாம், "பெண்டாட்டி வேண்டும், பிள்ளை குட்டிகள் பெற்றுக் கொள்ள வேண்டும்; எங்காவது கிளார்க்காகி விட வேண்டும்." பெரியவர்கள் காலத்திற்குப்பின் 'ஹூக்கா பிடித்துக் கொண்டு அவர்கள் மாதிரி நாட்டாண்மை செய்ய வேண்டும்; பையன் களுக்கு வேறு என்ன வேண்டும்?' என்பதுதான். ஐயோ, வாழ்க்கையில் ஏதாவது ஒன்றைச் சாதிக்க வேண்டும் என்ற என் ஆசைகளும், கனவுக் கோட்டைகளும், மனத்திற்குள்ளேயே ஒடுங்கிச் சாகவேண்டியதுதானா? இரவெல்லாம் கண்விழித்து ரத்தத்தைப் பாய்ச்சி வளர்த்துக் கொண்ட கனவுகள் மண்ணோடு மண்ணாக வேண்டியது தானா?

காலையில் யோசித்தது நானில்லை, வேறுயாரோ என்று தோன்றியது. இப்போது எல்லாம் போலித்தனம் என்று பட்டது. நான் டயரியில் எழுதினேன் "நான் ஏன் இவ்வளவு சீக்கிரத்தில் நம்பிக்கை இழந்துவிடுகிறேன்? என் கனவுகள் செத்துவிட்டன என்று இவ்வளவு விரைவில் ஏன் கருதிக் கொள்கிறேன்? நெருப்பில் காய்ச்சினால்தானே பொன் பத்தரை மாற்றுத் தங்கமாகிறது? ஒவ்வொருவரின் வாழ்க்கையிலும் சோதனைக்காலம் என ஒன்று உண்டு. இது எனக்கு சோதனைக்காலம், துன்பங்களைக் கண்டு இவ்வளவு சீக்கிரம் மிரண்டு விடுவது நல்லதல்ல. துன்பங்களுக்கிடையில் நிலை தடுமாறாது நிற்க நான் பயிலவேண்டும். துன்பங்களுக்கிடையே மனம் சஞ்சலப்படாது இருப்பது அல்லவா

லட்சிய புருஷனாவதற்கான முதல் பாடம்? நெப்போலியன் போர்க் களத்தில் கடிதம் எழுதுவது வழக்கம் என்று தெரியாதா? நான் ஒன்றைச் சாதித்துக் காட்டவேண்டும். உலகே தலைவணங்கும்படி ஒன்றைச் சாதித்துக் காட்டவேண்டும் என்பதை நான் மறக்கக்கூடாது என்ற ஒரு கூற்று கட்டளையாகி பாரதமாதாவை இந்த அந்நிய நாட்டு மிலேச்சர்களின் பிடியிலிருந்து விடுவிக்க வேண்டும். பாரதம் மஹாபுருஷர் களின் நாடு. ராணா பிரதாப்பின் ரத்தமும், சிவாஜியின் ரத்தமும் என் உடம்பில் ஓடுகிறது. அதற்குக் களங்கம் வரும்படி நடந்து கொள்ளக் கூடாது. இவர்களின் பாரம்பரியத்தையும் கலாச்சாரத்தையும் பாது காப்பதும், பேணுவதும் என்னைப் போன்றோர்களின் பொறுப்பு அல்லவா? இன்னும் எத்தனையோ புத்தர்களும், மஹாவீரர்களும், கிருஷ்ணர்களும், ராமர்களும் என்னைப் போன்ற இளைஞர்களுக் குள்ளே உறக்க நிலையில் இருக்கிறார்கள். அவர்களைத் தட்டியெழுப்பி முன்னே கொணரவேண்டும். எங்களைப் போன்றோரின் ஆற்றல்தான் இன்று ஹனுமானையும், பீமனையும், பீஷ்மனையும் உண்டாக்க வல்லது. இன்று எனக்கு சோதனைக்காலம், இது என்றைக்குமா இருக்கப் போகிறது? இந்த மாதிரித் தடைகளையும், அகழிகளையும் கடந்த பின்னர் அல்லவா பெருமையையும் அமரத்துவத்தையும் அடைய முடியும்? இந்தத் தடை ஓட்டம் எங்களைப் போன்றோருக்குச் சவால் அல்லவா? இறைவன் இந்தத் தடைகளை எங்களைப் போன்றோரின் ஆற்றலை மேம்படுத்துவதற்காக அல்லவா ஏற்படுத்து கிறான்? இந்தத் தடைகளையும், துன்பங்களையும் மிதித்து முன்னேறு வோம். வாழ்நாள் முழுவதும் பிரம்மச்சரியம் என்கிற என் விரதத்தில் நான் இன்றும் உறுதியாகத்தான் இருக்கிறேன், இருப்பேன்..."

இப்படிக் காலையில் நான் டயரியில் எழுதினேன். ஆனால் இப்போதோ ஒரு பெருவெள்ளம் என்னை அடித்துக் கொண்டு போவதுபோல் இருக்கிறது. எங்கே போய்த்தள்ளுமோ? இந்த நிகழ்கால கணத்தில் என்ன செய்வது சரி? இந்த மாயாஜாலத்திலும் அந்த மோகினியின் வலையிலும் போய்ச் சிக்குவதா? அதைத் தவிர்த்துவிட்டு ஓடிவிடுவதா? கூடியவரை இதில் மாட்டவே வேண்டாம் என்றுதான் பார்க்கிறேன். இறைவனே! இந்த சோதனைக் காலத்தில் எனக்கு ஆத்ம பலத்தைக் கொடுப்பாயாக! நான் தோற்றுப் போய்விடக்கூடாது, தலை வணங்கி விடக்கூடாது. எப்படியோ கல்யாணம் என்பது நடந்தேறி விட்டது. ஆனால் மனத்தளவில் நான் பழைய சமர்தான். நான் இந்த மேனாமினுக்குகளிலும், தொல்லைகளிலும் சிக்கமாட்டேன். நான் நினைப்பது மிக அதிக உயர்வான ஒன்றாக இருக்கலாம், ஆயினும் என்னால் முடிந்தவரை உயிரையும் கொடுத்து அதை அடைய முயல்வேன். இதுதான் என் சாதனைக்கான காலம். என்னை நானே உருவாக்கிக் கொள்ள வேண்டிய காலம்.

பிரபா பத்தாவது வரையில் படித்திருக்கிறாளாம், யாரோ சொன்னார்கள். நான் அவளுடைய கையைப் பார்த்ததோடு சரி. இல்லை ஒருமுறை திருமணச் சடங்கில் அவள் முன்னால் நடந்தபோது அவள் பாதங்களைக்கூடப் பார்த்தேனே! மருதோன்றி இட்டிருந்தாள். சரி, சரி, அதற்கும் எனக்கும் என்ன சம்பந்தம்? எனக்கும் அவளுக்கும் உறவு ஒன்றும் இருக்கப் போவதில்லை. நான் அவளிடம் பேசவும் மாட்டேன். ஏதோ அவசியமான வேலை என்று வந்தால் ஓரிரு வார்த்தைகள் பேசுவேன். அவ்வளவுதான். முதலில் அவளைப் பிறந்த கத்திற்கே அனுப்பிவிடப் பார்க்கிறேன். அவனவன் தன் சுயநலத்தைப் பார்க்கும்போது நான் மட்டும் ஏன் பார்க்கக் கூடாது? யார் சொன்னாலும் கேட்கமாட்டேன். மற்றவர்கள் சொல்லுக்கும், வற்புறுத்தலுக்கும் இணங்கிக் கல்யாணம் பண்ணிக்கொண்டு விட்டேன். இதுவே அதிகம். அவள் என்ன ஆவாள் என்பது பற்றி எனக்கென்ன? நான் என்னை நானே உருவாக்கிக் கொள்ளவேண்டிய காலம் இது. மனத்தை ஒருமுகப்படுத்தி என் படிப்பை முடிக்கவேண்டும். இன்னும் நான்கு ஆண்டுகள் பாக்கி, எம்.ஏ. முடிக்கவேண்டும். அதுவரை அவள் எங்கிருப்பாளோ, என்ன செய்வாளோ, எனக்குத் தெரியாது. தெரிந்துதான் என்ன ஆகப்போகிறது. போகாத ஊருக்கு வழிகேட்பானேன்? சோதனைகள் பல சமயங்களில் ஆளைமயக்கும் வடிவில் வருவதுண்டு. அதில் மதிமயங்காதிருப்பதே அறிவுடைமை. அவளுக்கு விருப்பமானதை அவள் செய்யட்டும். நாங்கள் ஏன் ஒருவருக்கொருவர் இடைஞ்சலாக இருக்கவேண்டும்?

ஆனால் அவள் மிகவும் படித்தவள், புத்திசாலி என்று யாரோ சொன்னார்களே! நம் எண்ணங்களை அவளுக்கு எடுத்துச் சொல்லி விளங்க வைக்க முடியாதா? ஒருவேளை பிற்பாடு இல்லறத்தில் ஈடுபட வேண்டிவந்தால் இந்தச் சமயத்தை அதற்கான ஆயத்தம் செய்து கொள்ள அவள் பயன்படுத்திக் கொள்ளலாமே! குறைந்தபட்சம் நான் அவள் முகத்தையாவது பார்த்து வைத்துக் கொண்டிருக்க வேண்டும். முகத்தில் லேசாக அம்மைத் தழும்புகள் இருப்பதாக அண்ணி சொன்னாள். பார்க்க எப்படியிருப்பாள் என்று தெரியவில்லை. இன்று முதலிரவு, எல்லாரும் கேலி பேசுவார்கள். அதனால்தான் இங்கே ஓடி வந்துவிட்டேன். இன்று என்னென்ன செய்யவேண்டுமோ, எப்படிச் செய்யவேண்டுமோ?

சரி, அதைப்பற்றியெல்லாம் எனக்கு என்ன? இன்று நான் செய்ய வேண்டிய முக்கியமான தீர்மானம் ஒன்று இருக்கிறது. இன்றைக்குத்தான் மிகவும் கஷ்டமான பரீட்சை. இன்று வழுக்கி விழுந்தால் என்னை யாராலும் காப்பாற்ற முடியாது. இன்று தப்பித்துக்கொண்டுவிட்டால் எல்லாத் தொல்லைகளிலிருந்தும் தப்பித்துக்கொண்டுவிடலாம். ஒரேயடியாகப் பேசாமல் இருப்பது முடியாது என்று தோன்றுகிறது. அவளிடம்

இப்படிச் சொல்லுவோம்–"இங்கே பாருங்க, நாம படிச்சவங்க, புத்திசாலிங்க. நம்மைப் பெத்தவங்க தங்களுக்குத் தெரிஞ்சதை முடிஞ்சதை செஞ்சுட்டாங்க. ஆனா நாமதான் நம்ம வாழ்க்கையைத் தீர்மானிச்சுக் கணும். முதலில் நாம படிப்பை முடிக்கணும்". ஆனால் இதையெல்லாம் கேட்டு அவள் அழத் துவங்கி விட்டால்? இல்லையில்லை... யசோதரையின் அழகால் புத்தரைக் கட்டிப் போட முடிந்ததா? கோபிகைகளின் காதலால் ஸ்ரீகிருஷ்ணனை யோகியாகாமல் தடை செய்ய முடிந்ததா?

ஆமாம், மனைவி எப்போதும் இடைஞ்சல்தானா என்ன? சீதை ராமனின் சக்தியாக விளங்கவில்லையா? ரஜபுதனத்துப் பெண்கள் தங்கள் கணவர்களைத் தாமே போர்க்களத்திற்கு அனுப்பி வைக்க வில்லையா? ஆனால்.. நான்.. நான் மிகவும் பலவீனமானவன் ஆயிற்றே! நான் ராமன் போலவும், ரஜபுதன வீரன் போலவும் என்னை நானே ஆக்கிக் கொண்டால் அல்லவா, அந்தப் பேச்சு! அதுவரை அவளை ஒதுக்கி வாழ்வதே என்னைக் காக்கும் கவசமாகவும், ஆயுத மாகவும் இருக்கும். அவள் கண்ணீர் வடித்துப் பார்ப்பாள், மயக்கப் பார்ப்பாள். நான்தான் ஜாக்கிரதையாக நடந்து கொள்ளவேண்டும். ஏ இறைவனின் திருவுருவச் சிலையே! நீயே சாட்சி.

இறைவனே! எனக்கு ஆற்றலைக்கொடு, சுயக்கட்டுப்பாட்டையும் நல்லறிவையும் கொடு. நான் நல்வழியில் நடப்பேனாக! என்னோடு என் வழியில் நடப்பவர்கள் நடக்கட்டும். நடக்க இயலாதவர்களுக்காக சஞ்சலமுற்று நான் நின்றுவிடாதிருப்பேனாக! என் உதடுகள் "ஹே தயாநிதி! கடமை நெறியில் அசையாதிருக்க ஆற்றலைக்கொடு" என்ற பாடலை முணுமுணுத்தன.

பஜனை முடிந்து கீர்த்தனைகள் துவங்கும் சத்தம் கேட்டு நான் திடுக்கிட்டு என் நிலைக்கு மீண்டேன்.

## 2

அந்த வெடிச்சிரிப்புகளும், கலகலவென்ற சிரிப்புகளும், கேலிகளும், வாத்தியக்காரர்கள் ஒருவர் முகத்தைப் பார்த்து ஒருவர் ஊதித் தீர்க்கும் ஷெனாய் ஓசையும், எனக்கோ புயலொன்று ஒரு பெரிய கூண்டுக்குள் சிறைப்பட்டு வெளிவர வழியின்றி அதற்குள்ளேயே சீறிச்சீறிச் சுற்றி வருவதாகவும், அது எதிரொலிப்பதாகவும் பட்டது.

நடந்தது நல்லதா கெட்டதா என்று தீர்மானிக்க முடியவில்லை. முதலிரவு வந்தது, போயும் விட்டது. உண்மையிலே நான் அவளுடன்

பேசவில்லை. அது இறைவன் என் வேண்டுதலை ஏற்றுக் கொண்டதன் பயனா, அல்லது என் துரதிர்ஷ்டத்தின் துவக்கமா என்று இன்னமும் எனக்குக் குழப்பமாகவே இருக்கிறது.

நான் எளிதில் உணர்ச்சி வசப்படுபவன். மனத்தளவில் மிகவும் பலவீனமானவன். உணர்ச்சிகளும், பலவீனங்களும் பொங்கும்போது விரைவில் தடுமாறி வெள்ளத்திடைத் துரும்பாகக் கரையேற முடியாதபடி அடித்துச் செல்லப்பட்டுவிடுவேன்.

அண்ணி என்னை லேசாக ஒரு தள்ளுத்தள்ளி உள்ளே அனுப்பி விட்டுப் பின்னால் கதவைச் சாத்திவிட்டாள். இப்படியாக நான் முதலிரவு அறைக்குள் போய்விட்டேன். அப்போது பிரபா ஜன்னலில் தலைபதித்து நின்றிருந்தாள். நின்ற வண்ணமே தூங்கிவிட்டாளோ என்று தோன்றியது. சிறிது நேரம் அப்படியே நின்றிருந்தேன். பிறகு பயந்த தோரணையில் மெதுவாக நகர்ந்து கட்டிலின் ஒரு முனையில் அமர்ந்து கொண்டேன். தூங்கிவிட்டால் விடியும்வரை எழுவது என்கிற பேச்சே என்னிடம் கிடையாது. எனவே, நேரே போய் கப்சிப் பென்று தூங்கிவிடுவதாக நான் யோசனை பண்ணி வைத்திருந்தேன். இப்போது நெஞ்சு படபடவென்று அடித்துக் கொண்டிருந்தது. பாறை போல் தோற்றமளித்த என் ஆற்றல் எல்லாம் வெடி வைத்தது போலத் தூள்தூளாகிவிடும் போல் இருந்தது. நான் என் தன்னம்பிக்கையையும், உறுதியையும் எவ்வளவோ இழுத்துப் பிடித்து வைத்துக் கொண் டிருந்தேன். என்னுடன் இருந்த இளைஞர்கள் எனக்கு என்னென்னவோ விளக்கத் துடித்தனர். முட்டாள்கள்! அந்த ஆயிரக்கணக்கான, லட்சக் கணக்கான சாமானியர்களில் ஒருவனாக என்னையும் எண்ணிவிட் டனர்! அவர்களுக்கு ஒரு பெண்மணி, பெண்மணி என்ன பெண்மணி, நடக்கப் பிடிக்க இருக்கும் பெண்பிள்ளை இருந்தாலே போதும். ஏதோ வானலோகத்திலிருந்து வந்த பாரிசாதம் போலவும் அவளுக்காகவே அவர்களது ஆத்மா யுகம் யுகமாகத் தவங்கிடந்தது போலவும் தோன்றும்! ஜட்கா வண்டியில் தன்பாட்டுக்குப் போய்க் கொண்டிருக்கிற பெண் பிள்ளைக்குப் பின்னால் தன் பாதையை விட்டுவிட்டுப் பல மைல்கள் போவார்கள் - வெறும் தரிசனப் பேரின்பத்திற்காக. நான் அப்படிப் பட்டவன் அல்லவே? என் பாதை வேறு.

மனத்திற்குள், 'பெண் என்பவள் காரிருள், பெண் என்பவள் மோகச்சுழல், பெண் என்பவள் மாயை, பெண் என்பவள் தெய்வீகத் தன்மையை நோக்கி உயரும் மனிதனைக் கட்டியிழுத்து அரக்கத்தனம் என்னும் பாழுங்கிணற்றில் தள்ளிவிடுவாள். பெண், மனிதனின் மாபெரும் பலவீனம்' என்று உருப்போட்டுக் கொண்டிருந்தேன்.

என் பாதை அந்த ஆயிரக்கணக்கான, லட்சக்கணக்கான சாமானியர்களின் பாதை அல்ல. புறத்தே பார்த்தால் எப்படிக் காட்சி யளித்தபோதும் உள்ளூர நான் அவர்களினின்றும் முற்றிலும்

மாறுபட்டவன். நான் என் எதிர்காலத்தைத் தீர்மானித்துக்கொள்ள முடிந்தவன். நான் எப்போதும் கத்திமுனையில் நடப்பவன், தடுமாறாமல் சற்றே சமாளித்துக் கொண்டால் போதும். நான் இந்த சாதாரண ஜனங்களை விட எவ்வளவு உயர்ந்து நிற்பவன்!

இந்த அறைக்குள் வரும் முன் எல்லாக் கல்யாணங்களிலும் பார்த்திருப்பது போல பிரபா புதுமணப்பெண்ணாக ஒடுங்கி, தலை குனிந்து ஒரு மூட்டை மாதிரி உட்கார்ந்திருப்பாள். நான் வந்தவுடன் அந்த அலங்காரங்களுடன் எழுந்து என்னை வரவேற்பாள், அந்தக் கணத்தில்தான் நான் எச்சரிக்கையுடன் நடந்து கொள்ள வேண்டும் என்று நினைத்திருந்தேன். ஆனால், அவளைப் பார்த்து நான் திடுக்கிட்டுப் போனேன். கல்யாணங்களில் அணிவிக்கப்படும் வண்ணங்கள் மிகுந்த உடைகளைப் போலத்தான் அவள் அணிந்திருந்தாள். ஆனால் நான் கட்டிலில் உட்கார்ந்த பின்னும் அவள் மௌனமாக ஜன்னலருகே நின்றிருந்தாள். உள்ளே நுழையும் முன் அக்கம்பக்கத்துப் பெண்களும், உறவுப் பெண்களும் அண்ணியுடன் கிசுகிசுத்து, கலகலவென்று சிரித்து என்னென்னவோ சொல்லிக் கொண்டிருந்தனர். நான் எதையும் காதிலேயே கேட்டுக் கொள்ளவில்லை. இப்போது அறையில் நிலவிய நிசப்தத்தில் முக்காலியின் மேல் வைத்திருந்த மின்விசிறியின் ஒலி மட்டுமே கேட்டுக் கொண்டிருந்தது. சமயத்தில் அதன் இறக்கைகள், ஒரு கம்பியில் உரசிக் கணகணவென்று சப்தம் எழுப்பின. கல்யாணத் திற்காகப் பக்கத்து வீட்டில் மின்சாரம் இரவல் வாங்கிக் கொண்டிருந் தார்கள். நான் அலட்சியத்தையும், விட்டேற்றித் தனத்தையும் காட்டிக் கொள்ள ஆன மட்டும் முயன்று கொண்டிருந்தேன். என் எண்ணத் தூய்மையினாலும் உயர்வினாலும் என் தலைக்குப்பின் ஒரு ஒளி வட்டம் பளிச்சிடுவதாக எனக்கு ஒரு தோற்றம். அங்கேயோ தூங்கி விட்டாளோ என்று சிறிது நேரத்தில் ஒரு குறுகுறுப்பு ஏற்பட்டது. ஆனால் நான் கட்டிலில் உட்கார்ந்தவுடன் அவள் சற்றே தலைநிமிர்ந்து பார்த்தாளே தவிர பிறகு ஒன்றுமே நடக்காதது போலத் திரும்பவும் தலையைப் பதித்துக் கொண்டுவிட்டாள்.

நான் அசமஞ்சம்போல மின் விசிறியை வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தேன். இப்போது என்ன செய்வது? கட்டிலில் குறுக்கு வசத்திலேயே மெதுவாகப் படுத்தேன். என்னுடைய இந்த நிஷ்டூரமான நடத்தையினால் அவள் இப்போது தேம்பித்தேம்பி அழப்போகிறாள், இரு கைகளாலும் என் கால்களைப் பற்றிக் கொண்டு, கண்ணீரால் நனைந்த முகத்துடன் "நாதா! இந்த அடிமை செய்த குற்றம்தான் என்ன?" என்று இறைஞ்சப் போகிறாள், பிறகு என் கால்களில் தன் தலையால் முட்டிக்கொண்டு மன்னிக்கும்படி ஓராயிரம்முறை வேண்டுவாள் என்று நினைத்தேன். அப்போது தடுமாறாமல் இருப்பது தான் பெரிய காரியம். இதோ, அந்த நாடகம் நடைபெற இன்னும் சில வினாடிகளே பாக்கி...

ஆனால், எவ்வளவோ நேரமாகிவிட்ட போதிலும் அவ்வப்போது மெல்லிய வளையல் ஓசையைத் தவிர, நள்ளிரவின் நிசப்தம் விஷப் புகையாக மண்டியதைத் தவிர வேறு ஒன்றும் நடக்கவில்லை. ஆர்வத்திலும், பயத்திலும் விம்மித் தணிந்த என் இதயம் ஒரு கல்போல விறைத்துப் போய்விட்டது என்று எனக்குப் பட்டது. எனக்குள் ஒரு கேள்வி எழுந்தது— நான் ஏன் இங்கே வந்தேன்? என்னை ஒருவரும் வரவேற்கவும் இல்லை. என்னிடம் ஒருவரும் பேசவும் இல்லை. இது எனக்கு அவமானமல்லவா? என் லட்சியக் கனவுகள், மகத்தான ஆசைகள், உறுதிகள் என்னும் அளவற்ற உறைபனிப்படலத்தின் கீழே ஒரு உயிரோட்டத்தின் கதகதப்பு இருந்தது என்பதை நான் ஒத்துக் கொள்ளவே வேண்டும். மனத்தின் ஒரு இருண்ட மூலையில் இதுபற்றி ஒரு பற்றுதலோ ஆர்வமோ ஏராளமாக இருந்தது என்றே நினைக்கிறேன். உள்ளே ஓடும் இந்தக் கதகதப்பான இளரத்தத்தின் துடிப்பு வெளிப்பட்டு ஆறாகப் பெருகிவிடக் கூடாதே, நான் அதில் அடித்துச் செல்லப்பட்டு விடக் கூடாதே, என்று இந்த மேலோட்டமான உறுதிக்கு இடையிலும் எனக்கு ஒரு அச்சமிருந்தது.

வில்லிலிருந்து சீறிப்பாய்ந்து தைக்கும் அம்புபோல என் மனதில் இந்த அவமான உணர்ச்சி சட்டென்று தைத்தது. 'இது எனக்கு இழைக்கப்பட்ட அவமானம்' உள்ளே ஓடிக்கொண்டிருந்த கதகதத்த இளரத்தம் பனியாக உறைந்தது. நான் வந்ததே ஏன்? இன்று வேறு எங்காவது போய்விட்டிருக்கக் கூடாதா? வீட்டினர் கொஞ்சம் கவலைப் படுவார்கள், அவ்வளவுதானே! எங்கள் வீட்டினர் படிக்காதவர்கள். இவள் மெட்ரிக் வரை படித்தவள். அந்தக் கர்வம் போலும் இவளுக்கு. இவள் தன்னைப் பற்றி மிகவும் உயர்வாகத்தான் நினைத்துக் கொண் டிருக்கிறாள் போலிருக்கிறது. அவள் அப்படியே நின்றிருக்க, நான் கோபத்துடன் எழுந்து விறைப்பாக உட்கார்ந்தேன். வெட்கங்கெட்டவள், இதுதான் இன்றைய கல்வியின் லட்சணமோ? ஒரு மட்டு மரியாதை கிடையாது. சாதாரண இளைஞர்களைப்போல் இவளைக் கெஞ்சித் தாஜா செய்வேன் என்று நினைக்கிறாள். 'ஹூம், உலகத்தின் இறுதி நாள் வரை அப்படி நடக்கப் போவதில்லை என்பதை மட்டும் நினைவில் வைத்துக்கொள்.' 'நாம் படித்தவர்கள், புத்திசாலிகள், நமக்குள் கலந்து பேசி நம்மை நாமே முடிந்தவரை உயர்த்துவதில் கவனம் செலுத்துவோம்' என்று நான் முன்பு நினைத்திருந்தேன். இனி அது முடியாது. இவளுக்கு இப்படி நடப்பதுதான் இஷ்டம் என்றால் எனக்கு மட்டும் என்ன வந்தது, நான் மட்டும் பணிந்து போவேனா? இன்று பணிந்து போவது வாழ்நாள் முழுவதுக்கும் வாழ்க்கைப் பிரச்சினையாகி விடும். இன்று துணிந்து நிற்க வேண்டியதுதான். "ஏன், உட்காரேன்" என்று நான் சொல்லுவேன். அதற்கு நாணிக் கோணி ஊடல் நாடகம் ஆடலாம் என்று பார்க்கிறாயா! அதற்குள் நான் வந்தவுடன் அவள் வணக்கம்

சொல்லவில்லை என்கிற அநாகரீகம் என் கவனத்திற்கு வந்தது. அவள் என் பாதங்களில் பணிவாள், நான் அவளைத் தோள் தொட்டுத் தூக்குவேன் என்றல்லவா நான் நினைத்திருந்தேன். இவள் வீட்டில் இப்படித்தான் கற்றுக் கொடுத்திருக்கிறார்களா? அப்போது மட்டும் எங்கள் பெண் மெட்ரிக் வரை படித்தவள் என்று பெரிதாகப் பீற்றிக் கொண்டார்களே!

இப்படியே சற்றுநேரம் உட்கார்ந்திருந்த பின், நான் ஒரு குலுக்க லுடன் சட்டென்று எழுந்தேன். அந்த அறையே என்னை அவமதித்து அட்டகாசம் செய்வதாகத் தோன்றியது. எனக்குத் தலை வெடித்துவிடும் போல் இருந்தது. நான் கிளம்பிப் போக ஆரம்பித்தால் அவள் பின்னாலேயே வந்து என் கையையாவது, சட்டை நுனியையாவது பிடித்துக் கொள்வாள் என்று ஒரு நினைவு அப்போதும் மனத்தின் ஒரு மூலையில் எங்கோ இருந்தது. அப்படிப் படிந்தால் சற்றுத் தயங்கி அவளை மன்னிக்கும் விஷயத்தைப் பரிசீலிக்கலாம் என்று நினைத்தேன். ஆனால் எழுந்து நின்று சில அடிகள் எடுத்து வைத்த பின்னும் அவள் அப்படி ஒன்றும் நடந்து கொள்வதாகக் காணோம். எனவே, என் தன்மானம் கொழுந்துவிட்டு எரிந்தது. இனி இவள் தடுக்க வந்தால் திரும்பியும் பார்க்காமல் போய்விடுவது என்று தீர்மானித்துக் கொண்டேன். பண்பு கெட்டவள்!

படாரென்று கதவைத் திறந்தேன், அவள் திடுக்கிட்டுத் தலையை உயர்த்தினாள், அதற்குள் நான் வெளியே வந்துவிட்டேன். ஏனோ ஒரு கணம் நான் நின்றிருந்தேன். பிறகு படியேறி மொட்டைமாடிக்கு வந்தேன். அனைவரும் கட்டில்களிலோ, தரையிலோ உறங்கிப் போய்விட் டிருந்தனர். நிலவொளி மழையில் இரவுப் பெண்ணாள் நிலவுக்குடை பிடித்துப் பால்வீதியில் நடந்து கொண்டிருந்தாள், ஒரு மூலையில் வெறும் தரையில் படுத்து உள்ளூரப் போராட ஆரம்பித்தேன்.

அம்மம்மா! இந்த நடத்தையை, வாழ்க்கையை என்றாவது மறக்க முடியுமா? வித்யோத்தமா இழைத்த அவமானம் மகாமூர்க்கனாகிய காளிதாசனைக் கவிராஜனாக்கியது.[1] நான் இந்த அவமதிப்பிற்கு எப்படிப் பழிதீர்க்கப் போகிறேன் என்று பார்ப்போம். ஆனால்... நான் ஏன்தான் அங்கே போய்த்தொலைந்தேனோ? அது உள்ளூர இருந்த என் பலவீனம் அல்லவா? வழிதவறிச் சென்றதற்காக தேவி கொடுத்த தண்டனையோ? தேவி தடுத்தாட்கொண்டாளோ? மனிதனின் உண்மையான ஆத்மாவை வெளிக்கொணர, அவமதிப்பைவிடப் பெரிய ஆற்றல் கிடையாது, என்று எங்கோ படித்திருக்கிறேனே! இனி எனக்கு

---

1. மகாகவி காளிதாசர் அடிமுட்டாளாக இருந்ததாகவும், அவர் மனைவி வித்யோத்தமா அவரை அவமதித்ததாகவும், அதன் பிறகு காளியின் அருளால் அவர் கவித்துவம் பெற்றதாகவும் கர்ணபரம்பரைக்கதை கூறும்.

எவ்வளவு ஆத்மவலிமை இருக்கிறது என்று பார்க்க வேண்டியதுதான். முதலிரவில் கிடைத்த இந்தப் பரிசு என்றைக்கும் நினைவிருக்கும். நடந்த வரை நல்லதே, அந்த வழி என்னுடையதும் அல்லவே!

விதியின் செயல் எனக்குத் தெளிவாகப் புலனாவது போலவும் அது பக்க வழிகளையெல்லாம் அடைத்து எனக்கு நேர் வழி காட்டுவது போலவும் தோன்றியது. அந்த வழி, உயர்வுக்கான வழி, மானுட தர்ம வழி.

இந்த மனப்போராட்டத்தில் என் கண்களிலிருந்து என்னை யறியாமலேயே கண்ணீர் துளிர்த்தது. என்னால் கட்டுப்படுத்திக்கொள்ள முடியவில்லை. வானத்தை வெறித்திருந்த கண்களிலிருந்து கண்ணீர்த் துளிகள் மௌனமாக உருண்டோடின. கடவுளே, என்னத்தைக் கொண்டு வந்து என் கழுத்தில் கட்டிவிட்டாய்? என்னை எந்தப் படுகுழியில் தள்ளிவிட்டாய்? கரடுமுரடான பாதையில் தனியே துணையின்றி நிற்பதாக மீண்டும் எனக்குத் தோன்றியது. ஆறுதல் கூறி என் களைப்பைத் துடைக்கவோ, என் கண்ணீரைத் துடைத்து, நான் இருக்கிறேன் என்று ஒரு வார்த்தை கூறவோ யாருமே இல்லை என்று எனக்குப்பட்டது. என்ன மாதிரிப் பெண்ணைக் கொண்டு வந்து என் தலையில் கட்டி விட்டார்கள்? இப்படியிருந்தால் வாழ்க்கை எப்படி நடக்கும் என்று தோன்றியது. கண்ணுக்குப் புலனாகாத ஒரு சக்தி என் உடலைப் பிழிந்து கண்களின் வழியாக வெளியேற்றுவது போல இருந்தது.

அடிமனத்தில், "இப்போது எழுந்து யாரிடமும் ஒன்றும் சொல்லாமல் போய்விட்டால் எப்படியிருக்கும்?" என்று யோசித்தேன். "எங்காவது கல்கத்தா, பம்பாய், ஹரித்வார் என்று கண்காணாமல் போய்விட வேண்டும்... ஓடு... ஓடு..."

இரவு முழுவதும் நான் அந்தச் சூளையின் புகையிலும், நெருப்பிலும் வெந்து கொண்டிருந்தேன்.

# 3

சமர் பிரபாவுடன் பேசவில்லை என்கிற செய்தி காட்டுத் தீயாக நகரமெங்கும் பரவிற்று.

முழங்கைகளை முட்டிக்கால்களில் குத்திட்டுக் கைகளால் தலையைப் பற்றியவண்ணம் நான் அறையின் வாயிற்படியில் அமர்ந்து என்னென்னவோ யோசித்துக் கொண்டிருந்தேன். மனதில் இழவு வீட்டின் சோகம் வியாபித்திருந்தது. மூலை முடுக்குகளில் ஒண்டியிருந்த மாலை இருள் வெளிவந்து பரவ ஆரம்பித்திருந்தது. சோகமும்

இருளுடன் போட்டி போட்டுக் கொண்டு அதிகமாகிக் கொண்டிருந்தது. எதிரே ஒரு இருண்ட கடல் ஆர்ப்பரித்து கொண்டிருப்பதாகத் தோன்றியது. இனிமேல் என்ன செய்வது...?

காலையிலிருந்து எத்தனையோ பேர் கேட்டுவிட்டனர், பிரபா விடமும் கேட்டிருப்பார்கள். நாங்கள் இருவருமே காட்டிய அலட்சியத்தில் மேற்கொண்டு கேட்க எவருக்கும் துணிவில்லை. அண்ணி முதலில் கிண்டலாகவும், பிறகு உண்மையாகவே கவலையுடனும் விசாரித்தறிய முயன்றாள். அம்மா கேட்டாள், நான் அனைவரையும் தட்டிக்கழித்து விட்டேன். பகல் முழுவதும் நான் தெரிந்தவர்கள் பார்வையைத் தவிர்த்துச் சுற்றித் திரிந்தேன். என் மனைவி என்று கூறப்பட்ட அந்தப் பெண்ணிடம் கோபம் கொண்டிருந் தாலும், அவள் என்னைப் பற்றி என்னென்ன புகார்கள் சொல்லியிருக்கிறாள் என்று தெரிந்து கொள்ளவும் துடிப்பாக இருந்தது. ஆனால் இதுவரை அப்படி யொன்றும் கேள்விப்படவில்லை என்பதுதான் எனக்கு ஆச்சரியமாக இருந்தது. அவள் வாயிலிருந்து எதையும் வீட்டினரால் பிடுங்க முடிய வில்லை போலத் தோன்றியது. அவர்கள் தெரிந்து கொள்ள நினைத்ததை யெல்லாம் என் நடத்தையினால்தான் தெரிந்து கொண்டார்கள் என்று பட்டது. என்னை மயக்கச் செய்யும் சாகசங்களோ இதெல்லாம் என்று திடீர் திடீர் என்று எனக்குப்பட்டது. ஆனால் வீட்டில் இனி எனக்கு என்ன இருக்கிறது என்பது போல ஒரு விரக்தியும் என் மனதில் தோன்றிய வண்ணம் இருந்தது. அவள் அனைவரிடமும் தமுக்கடித்தாலும் எனக்கென்ன என்று இருப்பேன் என்று தோன்றியது.

முன்னி வந்து "அப்பா கூப்பிடறாரு" என்று சொன்னபோது நான் சற்று ஆடித்தான் போய்விட்டிருந்தேன். 'அப்பா ஏன் கூப்பிடுகிறார்,' உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு அப்பாவிடம் போனேன்.

அப்பா ஏதோ பெரிய ரகசியத்தைக் கேட்டு அறிந்து கொள்ளும் தோரணையில், "என்ன நடந்தது?" என்று அடிக்குரலில் கேட்டார். நான் மௌனம் சாதித்தேன். "ஒண்ணும் சண்டை கிண்டை இல்லையே!" என்று மீண்டும் அவர் கேட்டார்.

அப்பா முன்னால் போவது என்றால் எனக்கு எப்போதுமே பயம். கடந்த இரண்டு மூன்று வருடங்களாக என் மீது கையை ஓங்கியதில்லை யென்றாலும் பழைய அடிகளே அவ்வப்போது 'விண்விண்' என்று வலிக்கும். அந்த நினைவே அவர்பாலிருந்த பயத்தை நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்த்து வந்தது. எப்போது என்ன செய்து வைப்பாரோ யார் கண்டது? முன்பு அவரிடம் அடிபடும் காலத்தில் ஒருவிட்டேற்றித் தனமான முரட்டுத்தனத்துடன், 'என்ன அடிப்பார், அவ்வளவுதானே! ஹாக்கி, கால்பந்து விளையாடும் போது அடிபடுவதில்லையா, பொறுத்துக் கொள்வதில்லையா' என்று நினைத்துக் கொள்வேன். ஆனால் இப்போதெல்லாம் அவர் நடந்து

கொள்ளும் விதத்தில் ஒரு விசித்திரமான மர்மம் நிறைந்த பீதியே ஏற்பட்டு வந்தது. ஒரு தவறு செய்து அடிவிழும், திட்டு கிடைக்கும் என்று அஞ்சும் சமயத்தில் அவர் அப்படிச் செய்யாதபோது என் கணக்கில் எவ்வளவு தண்டனை ஏறிக்கொண்டு வருகிறதோ என்று தோன்றும். ஆக அவரைக் கண்டாலே பயந்து ஒளிவது என் இயல்பாகி விட்டது. நான் உள்ளூர எவ்வளவு எதிர்ப்புணர்ச்சி வளர்த்துக் கொண்டு புரட்சிக்காரனாக விளங்கினாலும் அப்பாவிடம் பயம் என்பது என் ரத்த நாளங்களில் எல்லாம் பரவியிருந்தபடியால் அவர் முன்னால் நாக்கு மேலண்ணத்தில் ஒட்டிக்கொண்டுவிடும். மனத்திற்குள் குமைந்துகொண்டே அவர் சொல்வதை நான் செய்துவிடுவேன்.

நான் பயந்துகொண்டே அவருடைய கேள்விகளுக்குப் பதிலாக ஒரு சொற்பொழிவைத் தயார் செய்து கொண்டு போனேன். அவர் மௌனமாக ஹுக்கா பிடித்துக் கொண்டு பெரிய வேதாந்திபோல உதட்டைக் கோணிப் புகை விட்டுக் கொண்டிருந்தார். அக்கம்பக்கத்தில் கிடந்த நாற்காலிகளையும், மோடாக்களையும் பார்க்கும்போது இப்போது தான் சிலர் அங்கேயிருந்து சென்றிருக்க வேண்டும் என்று தோன்றியது. அவர் ஒரு புருவ அசைப்பிலேயே உட்காரச் சொன்னார். அவ்வளவுதான்! என் துணிவெல்லாம் காற்றில் கரைந்து போனது. எப்படியோ சமாளித்து ஒரு ஓரமாக உட்கார்ந்து கொண்டேன்.

"என்ன விஷயம்? பொண்ணு பிடிக்கலையா?" என்று மிக மென்மையான குரலில் அவர் கேட்டார். அந்த மென்மையைக் கண்டு நான் அரண்டு போனேன். நான் தயாரித்து வைத்திருந்த சொற்பொழி வெல்லாம் என்னை விட்டு நழுவிச் செல்வதுபோலத் தோன்ற ஆரம்பித்தது.

நான் மௌனமாக இருப்பதைக் கண்ட அவர் ஹுக்காவில் ஒரு நீண்ட இழுப்பு இழுத்துப் புகைவிட்டவராக, "தெளிவாச் சொல்லேண்டா, இதுல தயக்கம் எதுக்கு? அவகிட்டே பேசவே இல்லியாமே?" என்றார்.

நான் மௌனமாக உள்ளங்கையை விரித்துக் கைரேகைகளைப் பார்க்கலானேன். யோசித்து வைத்திருந்த பதில் எல்லாம் மறந்து போய் விட்டது. மனதில் ஒரு ஏக்கப் பெருமூச்சு மூண்டது.

இப்போது அப்பா உறுமினார், "அந்தப் பாவப்பட்ட பொண்ணு யாரை நம்பி வந்திருக்காங்கறதையாவது யோசிச்சுப் பாத்தியா, இதுக்கா ஒருத்தி வாழ்க்கைப்பட்டு ஒருத்தன் வாசலுக்கு வருவா? அவள் பொறந்த வீட்டுக்குப் போய் என்ன சொல்லுவா? கல்யாணம் பண்ணிக்க உனக்கு இஷ்டமில்லேங்கறதை ஒத்துக்கறேன். ஆனா ஊர் மாதிரி வாழவேண்டாமா? நடந்த கல்யாணத்தை மாத்த முடியுமா? அதுக்கு ஒழுங்கா நடந்துக்க வேண்டாமா?" திடீரென்று நான் தேம்பித் தேம்பி அழவும் அவர் பேச்சு அறுந்தது. உண்மையைச் சொல்லப் போனால் நான் இந்த நிதர்சனத்திற்கு ஆயத்தமாக இல்லை என்றுதான்

சொல்ல வேண்டும். அப்பா அதைப் பேசிவிடவும் என்னால் என்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை. நான் பிள்ளைகளைப் போலப் புறங்கையால் கண்ணையும் மூக்கையும் தேய்த்துத் துடைத்துக் கொண்டு நின்றேன். அவர் எனக்குப் புத்திமதி சொல்லும் பாணியில், "போப்பா, இப்படி சிறுபிள்ளைத்தனம் பண்ணாதே!" என்றார். நான் ஒன்றும் பேசவில்லை. எழுந்து வந்துவிட்டேன்.

நான் என் படிப்பறையில் உட்கார்ந்து வெகுநேரம் தலையும் இல்லாமல், வாலும் இல்லாமல் அர்த்தமில்லாமல் என்னென்னவோ எண்ணமிட்டுக் கொண்டிருந்தேன். நடந்தது எதற்கும் நான் பொறுப்பே கிடையாது என்று தோன்றியது. இந்தத் திருமணம் என்னுடைய உயர்ந்த லட்சியங்களுக்கும் கனவுகளுக்கும் நஞ்சாகும் என்று தெரிந்தும், பெண் படித்தவளாயிற்றே, விவரம் தெரிந்தவளாயிற்றே என்று ஒரு சிறு நம்பிக்கை இருந்தது. நாங்கள் ஒருவர் மற்றவரைப் புரிந்து கொண்டு ஒருவர் மற்றவரின் உருவாக்கத்தில் உதவியாக இருப்போம் என்று நினைத்தேன். நினைத்திருந்தால் நானும் முதலிரவு அன்று அவளைப் படுக்கையில் இழுத்துத் தள்ளி, அவளுடைய அழகைக் கன்னாபின்னா வென்று வர்ணித்திருக்கலாம். அல்லது பூனையையோ, கிளியையோ கொண்டு போய்க் கோபத்தில் காட்டுத்தனமாக அதைக் கொன்று, காட்டுமிராண்டிகள்போல் என் வெறுப்பைக் காட்டிக் கொண்டிருந் திருக்கலாம். ஆனால் நான் அப்படி நடந்து கொள்ளமாட்டேன். படித்த, நாகரிகம் தெரிந்த பண்பட்ட மனிதனாக, பரஸ்பர அறிமுகத் திற்குப் பின்னர் இந்த வாழ்க்கையைப் பற்றியும், உலகத்தைப் பற்றியும் என் கருத்துக்களை விளக்குவேன். அவற்றை நன்கு விளக்கியபின் மென்மையாக, "நீங்கள் இவ்விஷயங்களில் எந்த வகையில் எவ்வளவு துணை செய்வீர்கள்?" என்று கேட்பேன் என்று நினைத்திருந்தேன். ஆனால் அவள் தன் நடத்தையினால் இதற்கெல்லாம் இடமே இல்லாமல் செய்துவிட்டாள். இதையெல்லாம் பேச அங்கே சந்தர்ப்பம் எங்கே வாய்த்தது? இதில் நான் செய்த தவறு என்ன? இல்லையில்லை! அப்பா வீணாக என் மீது பழி சுமத்துகிறார்...

திடீரென்று என் மனத்தில் நான் அவளிடம் பேசவில்லை என்கிற விஷயம் அப்பாவுக்கு எப்படித் தெரிந்தது என்ற வினா எழுந்தது. நான் திடுக்கிட்டேன். அதுதானே! அவருக்கு இதைச் சொன்னது யார்? நான் யாரிடமும் இதைச் சொல்லவில்லையே! அவள்தான் சொல்லியிருக்க வேண்டும், இவ்வளவு முக்கிய விஷயத்தை யாரிடமும் சொல்லக்கூட அவசியமில்லை என்று துச்சமாக எப்படி அவள் எண்ணிவிட்டாள் என்பது எனக்கு காலையிலிருந்தே ஆச்சரியமாகத்தான் இருந்தது. அவள் சொல்லித்தான் இருக்கிறாள். இல்லாவிட்டால் மற்றவர்களுக்குத் தெரிந்திருக்கவே முடியாது. பெண் பிள்ளையல்லவா... அப்பாவிடம் சொல்லியிருக்காவிட்டாலும், முன்னியிடமோ, அண்ணியிடமாவது

கட்டாயம் சொல்லியிருப்பாள். முன்னியிடமாவது, அண்ணியிடமாவது கேட்டுப் பார்ப்போமா? வேண்டாம், வேண்டாம். அப்படிக் கேட்டால் அது பலவீனமாகிவிடும். இவர்கள் போய் அவள் காதில் ஓதி விடுவார்கள். எவ்வளவு பலவீனமான ஆள் பார் என்ற அவள் நினைப்பாள். நானா பலவீனமானவன், ஹூம்... இதுவரை அவள் என் உறுதியை ஒருமுறை தானே பார்த்திருக்கிறாள்!

"என்னங்க புது மாப்பிள்ளை! எந்தக் கோட்டையைப் பிடிக்கங்க இவ்வளவு ஆழ்ந்த யோசனை?" என்று கேட்டவண்ணம் அண்ணி எங்கிருந்தோ வந்தாள், "ஏம்பா... கல்யாணம் ஆனதும் ஆகாததுமாக ஊர்ப்பட்ட கவலையை இழுத்துப் போட்டுக்கிட்டியா? தலையிலே கையை வச்சுக்கிட்டு ஏன் உக்காந்திருக்கே! ஏதாவது தலைவலியா? யாராவது பார்த்தா அஞ்சு பெண்ணைப் பெத்துக் கட்டிக் கொடுக்கக் கவலைப்படறான் போலிருக்கு, பாவம்னு நெனைச்சுப்பாங்க".

நான் கையும் களவுமாகப் பிடிபட்டவன் போலத் திடுக்கிட்டேன். நம் கவலைகளையும், துயரங்களையும் காட்டிக் கொள்வதும் உள்ளூர பலவீனம் தானே! சமாளித்துக் கொண்டு, "இல்லியே அண்ணி! நான் ஒண்ணும் யோசிக்கலியே, சும்மாதான் உட்கார்ந்திருக்கேன்" என்றேன். வீட்டில் ஒவ்வொருவரும், என் எதிர்ப்படுபவர் ஒவ்வொருவருமே இந்த விஷயத்தையே குறித்து ஜாடைமாடையாகப் பேசுவதாக எனக்குப்பட்டது. இந்த ஜாடை மாடையான பேச்சில் குத்தலுக்கும், அதற்குப் பதில் சொல்வதற்கும் நான் மிகவும் அஞ்சினேன்.

"சும்மா அளக்காதே! எல்லோருக்கும்தான் தெரியுதே! பொழுது போயிட்டுது, பசிதாகம் நினைப்பே இல்லியே!" என்றவள் விஷமமாகச் சிரித்து, "ஏன், ஒண்ணும் காரியம் நடக்கலியா?" என்று கேட்டாள்.

அவளுடைய கிண்டலைப் புரிந்து கொண்டு, நான் தீவிரமான குரலில்— "நடக்கவும் நடக்காது அண்ணி. திமிரை மட்டும் என்னால பொறுத்துக்க முடியாது. ரொம்ப வேண்டியவங்களா இருந்தாலும் சரி, ரொம்பப் படித்த அழகானவங்களா இருந்தாலும் சரி! இந்தத் திமிரெல்லாம் என் கால் செருப்புக்கு ஆகாது, தெரிஞ்சுக்குங்க" என்றேன். நான் அவ்வளவு சத்தமாக ஏன் சொன்னேன்? அப்பாவுக்குப் பதில் சொன்னேனா, பிரபாவுக்குச் சொன்னேனா அல்லது அண்ணிக்குத் தான் பதில் கூறினேனா என்று இன்று என்னால் சொல்ல முடியாது.

அண்ணி "எனக்கும் அப்படித்தான் தோணுது தம்பி!" என்றாள். பிறகு சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு, "பிரபாவுக்கு அவ அழகைப் பத்தியும் படிப்பைப் பத்தியும் கொஞ்சம் தலைக்கனம்தான். என்னைக் கேட்டா அவ அப்படி ஒண்ணும் பெரிய அப்சரஸ் இல்லைன்னுதான் சொல்லுவேன். பருவத்திலே கழுதைகூட அழகுதான். நாங்களும் எங்க காலத்திலே அழகா இல்லியா, ஒரு காலத்திலே அம்மா அழகா இல்லியா, நான் இல்லியா" என்றவள், தன் பேச்சினால் தானே வெட்கப்

பட்டுக் கொண்டாள்.

"ஹூம்" என்று நான் உதட்டைப் பிதுக்கி, "இந்த அழகுக்கே இந்தப் பாடு படுத்துறா! உண்மையிலேயே அழகா இருந்தா என்ன செய்வாளோ?" என்று அவளுக்கும் கேட்கும்வண்ணம் நான் உரக்கச் சொன்னேன்.

அண்ணிக்கு விளங்கிவிட்டது. "உன்னைக் கையெடுத்துக் கும்பட றேம்பா, இப்படி சத்தம் போடாதே! ஏதோ நான்தான் உனக்கு ஓதறேன்னு நெனச்சுப்பாங்க" என்று தாஜா செய்யும் தோரணையில் சொன்னாள்.

"நீங்க ஓதறது என்ன அண்ணி, எனக்கு ஒண்ணும் தெரியாதா? நான் என்ன குருட்டுப்பயலா? இந்தப் பாழுங்கிணத்திலே தள்ளாதிங்க தள்ளாதிங்கன்னு தலைப்பாடா அடிச்சுக்கிட்டேன். ஆனா அப்போ நீங்ககூட காதிலேயே போட்டுக்கலே, ஏன் இவன் மட்டும் மாட்டாம இருக்கணும்னு நெனச்சீங்க. இப்போ என்ன செய்யறது நீங்களே சொல்லுங்க."

"சரிப்பா விடு, சின்னச்சின்ன விஷயத்தையெல்லாம் பெரிசு படுத்தாதே!" என்று அன்பும் பரிவும் காட்டி அண்ணி சொன்னாள். "வா, வந்து சாப்பிடு, எல்லாம் சரியாயிடும், நீயும் இளரத்தம், அவளும் சின்னப் பெண்தானே! நான் அவளுக்கு எடுத்துச் சொல்றேன். ஆனாலும் அவளும் அப்படி செஞ்சிருக்கக் கூடாதுதான், அவ தன்னைப் பத்தி என்னென்னமோ நெனைக்கிறா, அதுதான் பிரச்சனை. அவகிட்டே பேசவே எங்களுக்கு அருகதை இல்லைன்னு நெனைக்கிறா. யார் வந்தாலும் போனாலும், ஒரு முக்காடு கிடையாது, தலையிலே துணி கிடையாது... வீட்டிலிருந்து புஸ்தகம் கொண்டு வந்திருக்கா, அதையே படிச்சுக்கிட்டு உட்கார்ந்திருக்கா. வேறென்னத்தையும்தான் பொறந்தகத்திலேருந்து கொண்டு வரல்லியே! ஒண்ணுமில்லாவிட்டாலும் தன்னோட படிப்பைக் காட்டிக்கிட்டுத் திரியறா, இதுக்கெல்லாம் நீ ஏன் ஒன்னோட படிப்பை வீணாக்கணும்?" என்றவள், சற்று சும்மா இருந்தாள். பிறகு யோசனையில் ஆழ்ந்தவளாக, "நாளைக்குக் காலையிலே அவதான் சமைக்கிறா, உங்க அண்ணா அவ கைச்சமையலை அமிர்தம்ங் கறார். தின்னத்தின்னத் தெவிட்டாதாம்."

"அவருக்கு எப்படித் தெரியும்?" என்று நான் பட்டென்று கேட்டு விட்டேன்.

அவள் சற்று திடுக்கிட்டாள். பிறகு சாதாரணமான குரலில், "பெண் பார்க்கப் போனாரில்லே, சாப்பிட்டு வந்திருப்பாரு, அப்போ திலேருந்து புகழ்ந்து தள்ளிக்கிட்டுதான் இருக்காரு. நாளைக்கு நீயே பாத்துக்க", என்று சொல்லிவிட்டுத் திரும்பிவிட்டாள். போகும்போது, "சரி, வந்து சாப்பிடு. நீ வரலைன்னா என் தலையைத் தின்னமாதிரி, நான் போய் எடுத்து வைக்கிறேன்" என்று சொல்லிக்கொண்டே போனாள்.

காலையிலிருந்து வீட்டுச் சூழ்நிலை எனக்குக் கனத்து, மூச்சைத்

திணற வைப்பதாகவும், சலிப்பூட்டுவதாகவும் இருந்தது. சாப்பாடு என்ன, பொட்டுத் தண்ணீர் வாயில் வைக்கத் தோன்றவில்லை. இப்போது அண்ணியிடம் பேசிய பிறகு என்னவோ மனம் லேசாகிவிட்ட மாதிரி தோன்றியது. மௌனமாக சமையலறைக்குப் போய்ச் சேர்ந்தேன். இரவு மறுபடியும் அம்மாவும், அப்பாவும் மறைமுகமாக அண்ணியும், முன்னியும்கூட என்னிடம் வற்புறுத்திப் பேசினார்கள். "இதெல்லாம் சகஜம்தான்! அதுக்காக எப்போதும் சண்டை போட்டுக்கிட்டு நிக்க முடியுமா? அக்கினி வலம் வந்து கைப்பிடிச்சவளோட குடும்பம் நடத்தித்தான் ஆகணும். பாவம், அவ எங்கேதான் போவா? என்னதான் செய்வா? தப்பு அவளுதானாலும் இந்த மாதிரி நேரத்திலே அதை மன்னிச்சுடறதுதான் மொறை. இதோ ரெண்டு நாள்ள அவ அண்ணன் அவளை அழைச்சுக்கிட்டுப்போக வரப்போறான். அவ நம்மைப்பத்திப் பொறந்த வீட்டிலே என்ன சொல்லுவா? நம்ம உறவுக்காரங்க மத்தியிலே நமக்குக் கெட்டபேராயிடறதோட உறவுகளும் கெட்டுப்போயிடும், இப்போ அவளே வருத்தப்பட்டு மன்னிப்புக் கேட்டுக்குவா..." என்றெல்லாம் சொன்னார்கள். ஆனால் இந்தச் சூழலில் எனக்கும் எப்படியோ பிடிவாதம் தலைக்கேறிக் கொண்டது, நான் முன்னியிடம் "நீங்க என்னை இங்கே தூங்கவிடறதா இருந்தா சொல்லுங்க. இல்லே நான் திவாகர் வீட்டுக்கு இல்லாட்டி வேற யாராவது சினேகிதன் வீட்டுக்குப் போய்ப்படுத்துக்கிறேன்." என்று தெளிவாகச் சொல்லி விட்டேன்.

"தம்பி, நீ பிடிவாதம் பிடிக்க ஆரம்பிச்சா யார் பேச்சையும் கேக்கற தில்லே, இப்படியும் யாராவது பண்ணுவாங்களா? பெரியவங்க பேச்சையும் கேளுப்பா" என்று அண்ணி சொன்னாள்.

"முடியவே முடியாது அண்ணி, ஒண்ணைக் கேக்கப்போய்த்தான் இவ்வளவு கஷ்டம். இனிமேலாவது ஆளைவிடுங்க," அவர்கள் அனைவரின் பேச்சிலும் ஏதோ ஒன்று என் பிடிவாதத்தை வளர்த்துக் கொண்டே போயிற்று. முந்தைய நாள் நிகழ்ச்சி விஸ்வரூபம் எடுத்துக் கொண்டே போயிற்று.

அப்போது வாசற்படியில் ஏதோ நிழலாடியதைக் கண்டேன். அவள்தான்! அவள் கதவுக்கு அருகே வந்து நின்றாள். அண்ணி அருகாலுக்கு அருகே சென்று காதைக் கதவருகே வைத்துக் கொண்டு, "என்னம்மா... பாலா கொண்டாந்தே? ஏம்மா நீ எடுத்துகிட்டு வரே? இந்த முன்னி மகாராணி என்ன பண்றா? வீட்டுக்குப் புதுசா வந்தவளை ரெண்டு நாள் உட்காரக்கூட விடாம வேலை வாங்க ஆரம்பிச்சுட்டா பார்! ஏன், அவ எடுத்துக்கிட்டு வரக்கூடாதா? சரி, இவ்வளவுதூரம் எடுத்துக்கிட்டு வந்ததுதான் வந்தே, ஏன் அங்கேயே நின்னுட்டே, இதுலே வெக்கம் என்னம்மா?" என்று கேட்டாள். அதற்குள் உள்ளே யிருந்து குரல் வந்தது, "அண்ணி, அம்மா கூப்பிடறாங்க. காலைக்கு

பருப்பு எவ்வளவு ஊறவைக்கணும்னு சொல்லிட்டுப் போங்க."

"தோ வந்துட்டேன்" என்று கூறியவாறு என்னைப் பார்த்து விஷமமாகச் சிரித்துவிட்டு அண்ணி போய்விட்டாள். போகும்முன் மெதுவாக, "நீதான் மன்னிப்புக் கேட்டுக் கொள்ளேன், நீ கொஞ்சம் பணிஞ்சுதான் போனா என்ன? சும்மா முறுக்கிக்கிட்டு நின்னா என்ன பிரயோஜனம்?" என்று அவளிடம் சொல்லிவிட்டுப் போனாள்.

மீண்டும் அதே முதலிரவு அறை. ஆழ்ந்த நீலவண்ண பல்ப் எரிந்து கொண்டிருந்தது. ஒரு விசித்திரமான கனவுலகச் சூழ்நிலை. நான் பல்பை வெறித்து உலகத்தையே மறந்து பலத்த சிந்தனையில் ஆழ்ந்தவன் மாதிரி உட்கார்ந்திருந்தேன். ஆனால் உண்மையில் என் உணர்வுகள் அனைத்தும் வாயிற்படியிலேயே லயித்திருந்தன. கையில் பால் டம்ளரும், சிவப்புப் புடவை அணிந்த பாதி உருவமும் தெரிந்தன. அவள் வந்து இதோ மன்னிப்புக் கேட்கப் போகிறாள், பால் அருந்தும்படி வற்புறுத்தப் போகிறாள் என்று நான் ஆவலுடன் எதிர்பார்த்தேன். நானும் மன்னித்து விடுவதாக இருந்தேன். அவள் பிறந்தகத்தில் எங்கள் வீட்டைப் பற்றிப் புகார் சொல்வதை நான் விரும்பவில்லை. நான் எப்பேர்ப்பட்ட பிடிவாதக்காரன் என்பதுதான் இதற்குள் தெரிந்து போயிருக்குமே!

ஒரு நிமிடம்... இரண்டு நிமிடம்... ஐந்து நிமிடம்... பத்து நிமிடம்... நேரம் ஓடிக்கொண்டேயிருந்தது. அப்படியே உட்கார்ந்திருப்பது நன்றாக இல்லை. ஏதோ திடீரென்று நினைவுக்கு வந்தது போல நான் உணர்வுக்கு வந்தேன். ஆயினும் முழங்கால்களில் கைகளை ஊன்றிக் கொண்டு இதோ எழுந்து விடுவேன் என்கிற பாவனையில் உட்கார்ந்திருந்தேன். பிறகு கதவுக்கருகில் நிற்பவளைக் கவனியாதவன்போல வாயிற்படியை நோக்கி நடந்தேன். மிகுந்த அலட்சியத்தைக் காட்டிய வண்ணம், ஆனால் ஜாக்கிரதையாக அவள் மீது படாமல் நான் வெளியே வந்துவிட்டேன். அவள் பால் டம்ளரைக் கையில் ஏந்தி அப்படியே மௌனமாக இருந்தாள். வெளியே வரும்போது தொண்டை அடைக்கத் தயக்கத்துடன், 'இந்தாங்க' என்று ஒரு குரல் கேட்டது. ஆனால் நான் காதில் போட்டுக் கொள்ளாமல் எதையும் இலட்சியம் செய்யாதவன் போல தடதடவென்று வெளியே வந்துவிட்டேன். மீண்டும் மொட்டை மாடியில் வானத்துக் கூரை.

அன்றிரவு நான் இரண்டு தீர்மானங்கள் செய்துகொண்டேன். ஒன்று, அவள் பேசினாலும் பேசாவிட்டாலும் நான் பேசுவதில்லை என்பது. கூடியவரை எந்தத் தொடர்பும் வைத்துக் கொள்ளமாட்டேன். இந்த மாதிரி பலவீனத்தையும் காட்டமாட்டேன். இரண்டாவது, மனத்தைச் செலுத்திப் படிப்பைத் தொடருவேன். ஒன்றுமே நடக்காத மாதிரி, பழைய வாழ்க்கைக்குத் திரும்பிவிடுவேன் என்பது. நடந்ததை ஒரு கெட்ட கனவைப்போல மறந்துவிடுவேன்.

காலையில் சாப்பாடு தயாராயிற்று. பேசுவதில்லை என்ற தீர்மானம்

அப்படியேதான் இருந்தது. ஆனால் அவளிடம் எவ்விதத் தொடர்பும் வைத்துக் கொள்ளுவதில்லை என்கிற தீர்மானம் சற்று அநியாயமாக இப்போது பட்டது. பேசுவதில்லை, எந்தவித ஈடுபாடும் காட்டுவதில்லை என்பது வரை சரி. ஆனால் அவள் சமைத்ததைச் சாப்பிடுவதில்- எப்படித்தான் இருக்கிறது என்று பார்ப்பதற்கு என்று வைத்துக் கொள்ளுங்களேன்— ஒரு தடவை சாப்பிட்டுப் பார்ப்பதில் தவறில்லை என்று தோன்றியது. ஆம், சாப்பிட்டுப் பார்க்கத்தான் வேண்டும், அப்போதுதான் யாராவது ஆகாயத்துக்கும் பூமிக்குமாகப் புகழ்ந்தால் பதில் சொல்ல முடியும்.

அவள் கைச்சமையலை நான்தான் முதலில் சாப்பிடவேண்டும். இந்தக் கல்யாணச் சம்பிரதாய சடங்குகளில் எனக்குச் சம்பந்தமே கிடையாது. தினமும் அக்கம் பக்கத்திலிருந்து பெண்கள் படைதிரண்டு வந்து மதியம் மூன்று மணியிலிருந்து இரவு பதினோரு மணி வரை டோலக்கை விளாசித் தீர்ப்பார்கள். பிறகு கை நிறைய லட்டுகளும், பத்தாஸா[1]க்களும் வழங்கப்படும். பாடிப்பாடி முன்னிக்குத் தொண்டை கட்டிக் கொண்டது. அண்ணி வயதில் மூத்த பெண்களின் காலில் விழுந்தும், அவர்களுக்கு வெற்றிலை மடித்துத் தந்தும் சலித்துப்போய் முணுமுணுக்க ஆரம்பித்து விடுவாள். அந்த மாதிரி சமயங்களில் தனியாகத் தன் அறையில் புத்தகம் படித்துக் கொண்டோ, தன்னைப் பார்க்க வந்திருக்கும் தன் வயதை ஒத்த பெண்களுடன் பேசிக் கொண்டோ இருக்கும் பிரபாவிடம் வெற்றிலைத் தட்டை வைத்து விட்டுப் போய்விடுவாள். சின்ன மருமகள் பெரிய மருமகளைவிட அழகும், அடக்கமும் பண்பும் வாய்ந்தவள் என்று யாராவது அவள் காதுபடச் சொல்லிவிட்டால் திரும்ப வந்து, "இன்னும் வெற்றிலை மடிச்சு முடிக்கலியா பிரபா! அங்கே அம்மாவும், சின்னம்மாவும், வெற்றிலை கொண்டா கொண்டான்னு என் உயிரை வாங்கறாங்க, கொண்டா, நான் சீக்கிரம் மடிக்கிறேன். நீ புதுசுதானே, அதான் கூச்சப்படறே," என்று சொல்லிக் கொண்டே மடித்த வெற்றிலைகள் நான்கைந்தை எடுத்துக் கொண்டு வெளியே உட்கார்ந்திருக்கும் பெண்களுக்கு இடையே போய் உட்கார்ந்து இந்தக் கல்யாணத்தில் பெண்வீட்டார் எவ்வளவு குறைவாகச் செய்தார்கள் என்று வம்பளக்க ஆரம்பித்து விடுவாள்.

நான் அண்ணியிடம், சாப்பாடு என்ன, அவள் கையால் எதுவுமே சாப்பிடமாட்டேன் என்று சொல்லிவிட்டேன். அவள் என்ன சொல்கிறாள் என்று பார்க்க விரும்பினேன் என்பதே உண்மை. இதற்குள் அம்மா முதன்முறையாக வாய் திறந்தாள். "இல்லேப்பா,

---

1. சீனிப்பாகு வில்லைகள் பொதுவாகப் பிரசாதமாக வினியோகிக்கப்படும். (மொ.பெ.)

அப்படிச் சொல்லாதே! இது குடும்ப வழக்கம். அன்னலட்சுமியை யாராவது அவமதிப்பாங்களா?" இந்தக் கல்யாணக் கூத்தில் அம்மா எனக்கு வாய்திறந்து புத்திமதி சொன்னது இதுதான் முதல்தடவை. அவள் என்னை ஏன் அதட்டிக் கண்டிக்கவில்லை என்பது எனக்கு ஆச்சரியமாக இருந்தது. வீட்டினர் காட்டிய எதிர்பாராத கனிவைப் பார்க்கும்போது, நான் செய்வதில் அவர்களுக்கு மகிழ்ச்சிதானோ என்று சமயத்தில் தோன்றியது. எடுத்ததற்கெல்லாம் சத்தம்போடும் அம்மா மௌனமாகவே இருந்தாள். எப்போதாவது சின்னமாவிடம், "என்னவோ போடியம்மா, கல்யாணம் பண்ணிப்பாக்கணுங்கற ஆசையே போயிட்டுது" என்று முனகுவதோடு சரி. ஒரு பெருமூச்சுவிட்டு மேற்கொண்டு ஒன்றும் சொல்லாமல் அமைதியாகி விடுவாள்.

என்னைச் சாப்பிடக் கூப்பிட்டபோது சமையல் அறையில் முன்னி, அம்மா, அண்ணி, அமர் எல்லோரும் அமர்ந்திருந்தனர். சமையலறையில் பெண்களுக்கு மறைப்பாக அடுப்படியையும் சாப்பிடும் இடத்தையும் பிரிக்க மார்பளவு செங்கல் சுவர் ஒன்று எழுப்பப்பட் டிருந்தது. அவள் அந்த மறைப்பில் நின்றிருந்தாள். அவள் எப்படி உட்கார்ந்து சமைக்கிறாள் என்பது தெரியாவிட்டாலும், தட்டில் பரிமாறும்போதும், கிண்ணங்களை வைக்கும்போதும் அவளுடைய கைகள் எனக்குத் தெரிந்தன. முதலில் பார்த்தபடியே சிவந்த கைகள். உள்ளங்கைகளிலும், விரல் நகங்களிலும் மருதோன்றி. இரண்டு விரல் களில் புது மோஸ்தரில் படகு வடிவ பெரிய தங்க மோதிரங்கள். ஒரு கையில் கண்ணாடி வளையல்களுக்கு இடையே தங்க வளையல்கள், மற்ற கையில் கரும்பட்டுப் பட்டையில் கட்டப்பட்ட சின்ன ரிஸ்ட் வாட்ச். கைகள் அழகாக, விரல்கள் நீண்டு மென்மையாக இருந்தன என்று எனக்குப்பட்டது. அவள் முகத்தை ஒருமுறை நன்றாகப் பார்க்க வேண்டும் என்று முதன்முறையாக ஆசை எழுந்தது. கூடவே என்ன பைத்தியக்காரத்தனமாகக் கூத்தடிக்கிறேன் என்று என் மீது கோபமும் வந்தது.

நடுங்கும் இரு கரங்களில் தட்டு வந்தது. அண்ணி சட்டென்று வாங்கித் தட்டை என் பக்கம் நகர்த்திவிட்டாள். நான் ஏதோ மந்திர வித்தை காட்டப்போவதுபோல எல்லோரும் என்னைச் சுற்றிக் குழுமி விட்டனர். தட்டில் மடித்து வைக்கப்பட்ட இரண்டு மெல்லிய சிறிய ரொட்டிகள், மூன்று வகைக் கறிகள், பருப்பு, ராய்த்தா[1] இரண்டு சட்னிகள், அப்பளம், ஊறுகாய், பார்த்தவுடனேயே நாவில் எச்சில் ஊறியது. லேசான அசட்டுச் சிரிப்புடன் உதடுகளை நாவால் நக்கிக் கொண்டு தட்டையும், தண்ணீரையும் என் பக்கம் நகர்த்திக் கொண்டேன். ரொம்பவும் நாசூக்காக ரொட்டியின் முதல் விள்ளலைப் பருப்பில்

1. காராபூந்தி அல்லது ஏதாவது காய்கறி, கீரை போட்ட தயிர்

தோய்த்தேன். நான் சாப்பாட்டை எப்படி மெச்சப்போகிறேன் என்று பார்க்கும் ஆவல் அனைவருக்கும் இருந்தது. வாயில் முதல் கவளத்தைப் போட்டேனோ இல்லையோ "உவ்வா, உவ்வா" என்று ஓங்கரித்துக் கொண்டு வெளியே ஓடித் துப்பிவிட்டேன். கண்ணில் தண்ணீர் தளும்பிவிட்டது.

"என்ன, என்ன ஆச்சு?" என்று அனைவரும் திகைத்துப் போய் என்னைப் பார்த்தனர். பிரபாவின் கையிலிருந்து அப்பளக் குழவி நழுவி விழுந்த மாதிரி சத்தம் கேட்டது.

"என்ன ஆச்சாவது? என் தலை! பருப்பா இது? வாயிலே வைக்க வழங்கலே! எனக்கு வேண்டாம்பா இந்த விருந்து". நான் நாட்டு விடுதலைப் போர் வீரர்கள் போல ஒரு ரொட்டித் துண்டை எடுத்து முன்னந்தலையில் ஒற்றிக் கொண்டேன்[1] பிறகு தட்டை ஓங்கி உதைத்துத் தள்ளிவிட்டு, அதிலிருந்து சிதறும் கிண்ணங்களைத் திரும்பியும் பாராமல் போய்விட்டேன். "இல்லியே, பருப்பை நான் வாயிலே வச்சுப் பார்த்தேனே" என்று ஒரு அழுகை தோய்ந்த குரல் கேட்டது மாதிரி இருந்தது.

ஒரே ரகளையாகிவிட்டது. "மாட்டுப் பெண்ணுக்குச் சமைக்கத் தெரியலே. அவளுக்கு இனிமேல்தான் இதெல்லாம் கத்துக் குடுக்கணுமோ!" என்று அண்ணி குத்தல் பேசினாள். "பொண்ணு பார்க்கப்போனபோது யார் சமச்சதைப் போட்டாங்களோ, யார் கண்டது? பெரிசா கடியாரம் கட்டிக்கிட்டு சமைக்க வந்துட்ட ா. ஏண்டி யம்மா அடுப்படியிலே கடியாரத்துக்கு என்ன வேலை? ஒண்ணு வேலை செய்யணும், இல்லை மினுக்கிக்கிட்டு நிக்கணும். அட மொத மொத ஒழுங்கா சமச்சுப் போட்டுடக் கூடாதா? இனிமே அமிர்தம் மாதிரி சமச்சாலும் என்ன பிரயோஜனம்" என்று அம்மாவின் கர்ஜனை கேட்டது. "பருப்பை நான்தான் வாயிலே வச்சுப் பார்த்தேனேன்னு பெரிசா சொல்ல வந்துட்டா. ஒங்க வீட்டிலே வெறும் உப்பைப் போட்டுத்திம்பாங்களா இருக்கும். கொஞ்சம் கொறச்சுப்போட்டுத் தொலச்சாதான் என்ன? வேணும்னா அப்புறம் கொடுக்கறது. கௌரவம் கொறஞ்சா போயிடும்? இதையும் கத்துக்குடுக்கணும்போல இருக்குடா சாமி! கல்யாணத்திலேதான் ஒண்ணும் கெடைக்கலே, பொண்ணாவது ஒழுங்கா கெடச்சாளான்னா அதுவும் இல்லே..."

ஏனோ தெரியவில்லை, முன்னி மௌனம் சாதித்தாள். அவள் பிரபா பக்கம் இருப்பது போலத் தோன்றியது.

மறுநாள் அவள் அண்ணன் வந்தார். பிரபா அவருடன் போய்

---

1. ரொட்டியை முன்னந்தலையில் ஒற்றிக் கொள்வது உணவுக்குச் செய்யும் மரியாதை. போர்வீரர்கள் இப்படிச் செய்து ரொட்டியின் மீது சபதம் எடுப்பார்கள். 1857 முதல் சுதந்திரப் போரில் இப்படி ரொட்டிகள் அனுப்பப்பட்டு, அவற்றின் மீது போர் வீரர்கள் சபதம் மேற்கொண்டனர் என்பது வரலாறு. அதன் குறிப்பே இங்கு உள்ளது.

விட்டாள். என் வாழ்க்கையில் ஒரு கலகலப்பு, ஒரு பரபரப்பு! பிறகு மீண்டும் அதே வாழ்க்கை ஆரம்பித்துவிட்டது. சமையல அறையில் கமழ்ந்த அந்த நெய்யின் நறுமணமும், விசேஷ பண்டங்களின் இனிய மணமும் மறுநாளே பழங்கதையாகிப் போயின.

# 4

"சமர் அண்ணா! இங்கே கொஞ்சம் கீழே பாருங்க" என்று அமரின் குரல் ஒலித்தது. அண்ணாவின் சைக்கிளைத் துடைத்துக் கொண்டிருந்த நான் எட்டிப் பார்த்தேன். இரண்டு ஸ்வயம் சேவக்குகள் (தொண்டர்கள்) நின்றிருந்தனர். கீழே இறங்கி வந்தேன். "ரொம்ப நாளா நீங்க வரவேயில்லே, அதான் ஒடம்பு கிடம்பு சரியில்லையோன்னு பாத்துட்டுப் போக வந்தோம்_" நான் காலையில் உடற்பயிற்சிக்காக எங்கள் ஷாக்கா (ஆர்.எஸ்.எஸ்.கிளை) வுக்குப் போவேன். மாலையில் அறிவு வளர்ச்சிக் கூட்டத்திற்குப் போவேன். கல்யாணத்தின் காரணமாகவும், அதனால் விளைந்த மன உளைச்சல் காரணமாகவும் சிறிது காலமாகப் போக மனதே இல்லை. மிகவும் கஷ்டப்பட்டு அவர்களைத் திருப்பியனுப்பி விட்டு மனச்சோர்வுடன் தளர்ந்த நடையுடன் திரும்பினேன். இவர்கள் மீண்டும் வருவார்கள் என்கிற நினைவே என்னை அச்சுறுத்தியது.

உண்மையிலேயே அவள் ஒரு புயலாக வந்து, அலையாகப் பின் வாங்கிப் போனாள். வீட்டில் நிலவி வந்த இயல்பான சூழ்நிலையை ஒரு குலுக்கு குலுக்கி விட்டுப் போய்விட்டாள். ஒரு பெரிய விபத்து நடந்து முடிந்துவிட்டது போலவும், அது விளைவித்த நஷ்டத்தை முழுமையாக மனம் இன்னும் உணர முடியாமல் இருப்பதாகவும் பட்டது. என்னைப் பொறுத்தவரை ஒரு பிரச்சினை வந்து, வந்த வழியே போயும் விட்டது என்றுதான் சொல்லுவேன். தூரத்தில் பெரிய மலைபோலத் தோன்றும் பெரிய கஷ்டங்களிலும் அருகே நெருங்கிப் பார்த்தால், மேலே ஏறிக்கடக்க ஒற்றையடிப் பாதைகளும், பாட்டைகளும் தோன்றும் என்று யாரோ ஒருவர் சரியாகத்தான் சொல்லி யிருக்கிறார். ஒருமுறை அம்மா யாரிடமோ "எங்க சமருக்குப் பொண்ணா கிடைக்காது? அவனுக்கு வேற கல்யாணம் பண்ணிவிட வேண்டியது தான்" என்று சொல்லிக் கொண்டிருந்தாள். அதைக்கேட்டு, "போதும், போதும், ஒண்ணு பண்ணதே இவ்வளவு படுத்திட்டுதே... இனிமே என்னைப் படிக்க விடுங்க" என்று நான் சத்தம் போட்டேன். அப்படி உரக்க சத்தம் போட்டது என் வாழ்க்கையிலேயே அது முதல் முறையோ, இரண்டாம் முறையோ. அம்மா பிறகு ஒன்றும் சொல்ல

வில்லை. நான் அவளுடன் இன்று பேசாமல் இருக்கலாம். இரண்டு மாதம், நான்கு மாதம், ஒரு வருஷம், இரண்டு வருஷம் பேசாமல் இருக்கலாம். ஆனால் எப்படியிருந்தாலும் அவள் என் மனைவிதானே! இருவரின் வாழ்வையும் பிணைத்துக் கொண்ட பின் அனுசரித்து வாழ்ந்துதானே ஆகவேண்டும் என்று மனதின் ஒரு மூலையில் எங்கோ நினைவு இருந்தது.

என் பிடிவாதத்தினால் ஒன்றும் கொடுக்கல் வாங்கல் பேச்சு நடத்த முடியவில்லை. எதிர்பார்த்த அளவு கிடைக்கவும் இல்லை. எனவே, அம்மா, "என்னப்பா சந்தன், கல்யாணம் பண்ணிப்பாக்கணுங்கற ஆசையே செத்துப் போச்சு போ," என்று அடிக்கடி சலித்துக் கொள்வாள். சந்தன் என்பது என் மாமாவின் பெயர். கல்யாணத்தைப் பேசி முடித்தவர் அவர்தான். "பொண்ணு படிச்சவங்கறதைத் தவிர வேறு எதையாவது பாத்தியா?" என்று அவரை அம்மா நக்கல் செய்தாள்.

கல்யாண ஆடம்பரம் எல்லாம் ஓய்ந்து கசப்பான உண்மை நிலவரங்கள் கண்ணுக்குப் புலனாகத் தொடங்கின. மளிகைக் கடைக்காரனுக்கும், கோதுமை மண்டிக்காரனுக்கும் கணக்குத் தீர்ப்பதில் தினமும் வீட்டில் பாரதப் போரே நடந்தது. இருந்தாற்போலிருந்து அப்பா காரணமில்லாமலேயே அம்மாவிடமும், அண்ணனிடமும் "இனிமே என்ன செய்யறதுங்கறதைப் பற்றி கொஞ்சமாவது யோசிச்சீங்களா" என்பார். அவருக்குப் பென்ஷன் இருபத்தைந்து ரூபாய்தான். அண்ணனுக்குப் பஞ்சப்படி எல்லாம் சேர்த்து மொத்தம் தொண்ணூற்று ஒன்பது ரூபாய். கல்யாணத்தில் கிடைத்த சைக்கிளோடு இன்னும் மாரடித்துக் கொண்டிருக்கிறார். அம்மா தீராத நோயாளி, கட்டிலில் உட்கார்ந்தபடி ஜபமாலையை உருட்டிக் கொண்டே ஏதாவது முணுமுணுத்துக் கொண்டேயிருப்பாள். இரண்டு மூன்று பையன்கள் படிக்கிறார்கள். அமர் மெட்ரிக் எழுதவேண்டும், கடைக்குட்டி ஆறாவது. முன்னி வேறு. நான் இந்த வருடம் எப்படியும் இண்டர் முடிக்க வேண்டும்.

எங்கள் வீட்டிலேயே துரதிர்ஷ்டசாலி முன்னிதான். என்னைவிட இரண்டு வயது சின்னவள். இரண்டு, மூன்று வருடங்கள் முன்பு பதினாறு, பதினேழு வயதில் படிப்பைப் பாதியில் நிறுத்தி அவளைக் கல்யாணம் பண்ணிக் கொடுத்தோம். வீட்டுச் சாமான்கள் சிலவற்றை விற்றும், அண்ணாவுக்கு வரதட்சணையில் கிடைத்த சில பொருட்களைச் சேர்த்தும், வரதட்சணை கொடுத்தோம். அம்மம்மா! மாப்பிள்ளை வீட்டுக்காரர்கள், எங்களை இப்படி கவனிக்கவேண்டும், எங்களுக்கு இது வேண்டும், அது வேண்டும் என்று என்னமாய்ப் படுத்தி வைத்தார்கள்? புக்ககத்திலிருந்து முன்னி சோகமாகக் கடிதங்கள் எழுதுவாள். பிறந்தகம் வந்தாலும் தேம்பித் தேம்பி அழுவாள். மாமியாரும், கணவனும் சேர்ந்து செய்யும் கொடுமைகளை யாரிடம்தான் போய்ச்

சொல்ல முடியும்? கணவன் நடத்தை சரியில்லை என்பதும், இரவு எங்கெங்கோ சுற்றுவான் என்பதும் பிறகுதான் எங்களுக்குத் தெரிந்தது. ஒரு வருஷம், ஒன்றரை வருஷம் எப்படியோ வண்டி தட்டுத் தடுமாறிக் கொண்டு நகர்ந்தது. மாமியார் செத்த பின்பு ஒரே கஷ்டம்தான். இப்போது அவள் அருமைக் கணவனைத் தட்டிக் கேட்பவர் ஒருவரும் இல்லை. அவன் எவளோ ஒருத்தியை வீட்டில் கொண்டு வந்து வைத்துக் கொண்டான். யாரோ பாப்பாத்தியாம். தனக்கும், தன் வைப்பாட்டிக்கும் முன்னியை வேலைக்காரியாக நடத்தினான். இரண்டு நாள், மூன்று நாள் என்று பட்டினி போடுவான். இன்னும் எத்தனையோ சொல்ல முடிந்த, முடியாத கொடுமைகள். முன்னி சொல்வதும் இல்லை. முன்னியின் உள்ளங்கைகளில் கட்டில் கால்களை வைத்துக் கட்டிலின் மீது தன் காமக்களியாட்டங்களை நடத்தி அவளைச் சித்திரவதை செய்வான். ஒரு நாள் அதிகாலை வீங்கிக் கன்றிய பிரம்படிச் சுவடுகளுடன் முன்னி எங்கள் வீட்டுக்கு வந்து சேர்ந்தாள். அன்றிலிருந்து இங்கேதான் இருக்கிறாள்.

முன்னியின் கணவனை நினைத்தாலே ஒரு வேகம் தோன்றும். அவனைப் பிடித்து இழுத்து வந்து நாற்சந்தியில் நிறுத்தி நன்றாக உதைத்து “அடேய் ராட்சசா! பூ மாதிரி இருந்த எங்க தங்கச்சியை இதுக்காடா உனக்குக் குடுத்தோம்? காயம்பட்டா எப்படி வலிக்கும்னு இதோ தெரிஞ்சுக்கடா!” என்று சவுக்கால் விளாச வேண்டும் என்று தோன்றும். மனத்துக்குள் பல்லைக் கடித்துக் கொண்டு அவனது கற்பனை உருவத்தை அவனுக்கு வாயில் நுரை வரும்வரை உதைப்பேன். முன்னி ஏதாவது, யோசிக்கிறாளா என்பதே தெரியாது. கூடியவரை மௌனம் சாதிப்பதும், எதிலும் பட்டுக் கொள்ளாமல் இருப்பதுமே அவளது இயல்பாகிவிட்டது. எல்லாரும் கீழே இருந்தால் அவள் மாடியில் தனியே எதையாவது வெறித்துக் கொண்டிருப்பாள். கீழே வந்தால் அதிகம் யார் கண்ணிலும் படாமல் ஒதுங்கி நடப்பாள். என்னென்ன எண்ணாத எண்ணமெல்லாம் எண்ணுவாளோ! உள்ளுக்குள் உளுத்துப்போய்க் கொண்டேயிருந்தாள். நாளுக்குநாள் முகம் வெளுத்து மெலிந்து கொண்டே போனாள். முத்துப் போல ஒளிர வேண்டிய பதினெட்டு, பத்தொன்பது வயதில் வாடி வதங்கிக் காட்சி யளித்தாள். ஆனால் என்ன செய்வது? இனி வாழ்நாள் முழுவதும் அநேகமாக இங்கேதான் இருப்பாள். அப்பா அந்த ஆளுக்கு எவ்வளவோ எழுதினார். உற்றார் உறவினரைக் கொண்டு எவ்வளவோ எடுத்துச் சொல்லச் செய்தார். ஆனால் ஒன்றும் நடக்கவில்லை. ஏதாவது சம்பாதிக்கப்போகும் அளவுக்கு முன்னி படிக்கவும் இல்லை. இரவும் பகலும் கஷ்டப்பட்டுப் படித்தால் ஐந்தாறு வருடங்களில் முப்பது-முப்பத்தைந்து சம்பாதிக்கும் டீச்சரம்மா ஆகலாம். தையல் வேலை கற்றுக் கொள்ளவும் இரண்டொரு வருடங்கள் பிடிக்கும். இதற்

கெல்லாம் பணமும் ஒரு பிரச்சினை. இங்கேதான் பையன்களைப் படிக்க வைப்பதே உன்னைப்பிடி என்னைப்பிடி என்றிருக்கிறதே! முன்னி வந்த புதிதில் எல்லாரும் அவளிடம் இரக்கம் காட்டி ஆதர வாகப் பேசினார்கள். இப்போது எல்லாம் மறந்து போய்விட்டது. ஆனால் அவளுக்கு மட்டும், தான் வீட்டுக்கு ஒரு சுமை என்பது மறக்கவில்லை.

கல்யாணத்திற்குப் பிறகு வீட்டின் நிலையை வேண்டுமென்றே அனைவரும் அவ்வப்போது உணர்த்துவதாக ஏனோ எனக்குப்பட்டது. எனக்குக் கல்யாணம் ஆனது மாதிரியே தெரியவில்லை. கல்யாணம் வேறு யாருக்கோ நடந்தது என்று பட்டது. இப்போது யாரும் என் மனைவியின் பேச்சை எடுப்பதும் இல்லை. என் விருப்பமின்மைக்கு அனைவரும் தேவைக்கு அதிகமாகவே மதிப்புக் கொடுப்பதாகத் தோன்றியது. ஒருத்தி இந்த வீட்டுக்கு வந்ததையே அனைவரும் மறந்து போனார்கள். அண்ணி மட்டும் ஜாலியாக இருக்கும்போது எப்போ தாவது, "எல்லாம் சரிதான் தம்பி! அப்போதான் வழிக்கு வருவா! பொம்பளையை அடக்கி வச்சாத்தான் ஒழுங்கா இருப்பா. முன்னாடியே இவ்வளவு திமிர் இருந்தா எப்படி? பொண்ணுன்னா கோலெடுத்தா குரங்காடும்னு இருக்கணும்னு எங்க தாத்தா சொல்லுவாரு. கண்மண் தெரியாம தலையிலே தூக்கி வச்சுக்கக் கூடாது. எவ்வளவுதான் படிச்சிருந்தாலும், எவ்வளவுதான் அழகின்னாலும், புருஷனுக்கு அடங்கி நடக்க வேண்டியவதானே பொண்ணுங்கறவ? புருஷனுக்கு அழகுத்தோல் பிடிக்குமா, அடங்கி நடக்கறது பிடிக்குமா? ஆயிரம் புஸ்தகம் படிச்சு என்ன பிரயோஜனம்? ஒரு மண்ணும் வரல்லியே! என்னை எடுத்துக்க தம்பி, நடுராத்திரியிலே எழுப்பினாலும் கண்ணை மூடிக்கிட்டு உப்பு, மிளகாய் சரியாப் போடுவேன். கொஞ்சம் கூட கொறச்சு இருந்ததுன்னா ஒரு காதை அறுத்துக்கறேன்" என்பாள். பிறகு தன் பிறந்தகத்துக் கதையை ஆரம்பிப்பாள். "எங்க பெரியண்ணனுக்கும் இப்படித்தான் பெண்டாட்டி வந்தா. யாரையும் மதிக்கறதே கிடையாது. அண்ணனா பொறுத்துக்குவாரு? ரெண்டு நாள்லே எல்லாத் தலைக்கனத்தையும் எறக்கிட்டாரு. சிலபேர் அப்படித்தான் தம்பி, உதைக்காட்டி வழிக்கு வரமாட்டாங்க. இப்போ அண்ணி ஒழுங்கா இருக்கா. அண்ணன் கொஞ்சம் புருவத்தை நெறிச்சா போதும் வெடவெடன்னு நடுங்கறா," என்று கையால் நடுங்கும் சைகை செய்து காட்டுவாள்.

ஏனோ, என் மனம் கனத்து நோயுற்றது போல ஆனது, சே, என்ன எப்போது பார்த்தாலும் பணம், பணம்! எப்போது பார்த்தாலும் குடும்பத்திற்கு உதவி செய், உதவி செய் என்று அரிக்கிறார்கள்! எனக்கு இவர்கள் முன்னால் போகவே தயக்கமாக இருக்கிறது. ஒருநாள், "நான் எம்.ஏ. பரீட்சை எழுதறதா? இல்லையா?" என்று சத்தம் போட்டேன். "படிக்க வேணாம்னு யார் சொன்னா?" என்று அண்ணா கேட்டார்.

"பின்னே ஏன் ராத்திரியும் பகலும் தொணதொணக்கிறீங்க? படிக்க வைக்கிறதா பேரு, ஆனா படிக்க வுடறதுதான் கெடயாது" என்று சொல்ல நினைத்தேன், ஆனால் சொல்லவில்லை.

இவர்களையெல்லாம் மறந்து ஒதுக்கிவிட்டு இரவும் பகலும் படிப்பில் ஆழ்ந்துவிட வேண்டும், யார் என்ன வேண்டுமானாலும் உளறிக் கொண்டு கிடக்கட்டும் என்று அவ்வப்போது மனதில் துடிப்பு எழும். என் மனதில் இன்னொரு விசித்திரமான உணர்வும் உண்டாகி வந்தது. முன்பு எதற்கும் கவலைப்படாமல் துள்ளித் திரிந்த உற்சாகம் இப்போது வற்றிப் போய்க் கொண்டிருப்பதாகப் பட்டது. முன்பு என் உள்ளத்திலும் உயிரிலும் ஒளிர்விட்ட ஒளிமயமான உயர்ந்த எதிர்காலக் கனவுகள் மங்கலாகிக் கொண்டே போவதாகத் தோன்றின. நான் என்ன செய்யப் போகிறேன் என்பது எதிரே தெளிவாகப் புலனாயிற்று. ஒரு விசித்திரமான விரக்தியும், நிராசையும் இரும்பாய்க் கனத்துக்கிடக்க வீட்டு விஷயங்கள் சம்மட்டியாய் அதன்மேல் மோதிக் கொண்டிருப்ப தாகப் பட்டது. அதன் வெறுமையான ஒலியினால் உலகமே அமைதி குலைந்து காணப்படுவதாகத் தோன்றியது. வீட்டில் இருக்கவே பிடிக்கவில்லை. இரண்டு வேளை சாப்பாடும், தலை சாய்க்க இடமும் தான் ஒரு நிர்ப்பந்தம். நான் முன்பும் அதிகம் பேசியதில்லை. இப்போதும் அதிகம் பேசுவதில்லை. முன்பு அந்த மௌனம் ஒருவித ஆத்ம திருப்தியின் மிதப்பில் விளைந்தது. இந்த மௌனமோ வாள் கொண்டு உள்ளுக்குள் அறுப்பது. எந்த வேலையிலும் மனம் ஒட்ட வில்லை. போர்டு பரிட்சை டெமோக்ளோஸின் கத்தியாக தலைக்கு மேல் தலைகீழாகத் தொங்கிக் கொண்டிருந்தது மட்டுமல்லாமல் நிச்சலனமான குரூரத்துடன் மெல்லமெல்ல என் தலையை நெருங்கிக் கொண்டும் இருந்தது. அது நினைவுக்கு வந்தால் வெட்டப்படப்போகும் ஆடு போல காலோடு தலையாக நடுங்கி விடுவேன். கல்லூரியில் வகுப்பு இருந்தாலும் இல்லா விட்டாலும் காலை பத்து மணியிலிருந்து மாலை நான்கு மணி வரை நான் வெளியிலேயே போக்கி விடுவேன். சமயத்தில் விடுதியில் யாருடைய அறையிலாவது போய் உட்கார்ந்திருப்பேன், அல்லது யாருடைய வீட்டுக்காவது போய்விடுவேன். மனதில் என்ன இருந்து அது காணாமல் போய் வெறுமை படர்ந்துவிட்டது என்பது விளங்கவில்லை. எல்லாரும் என்னை வேலைவெட்டியில்லாமல் முகத்தைத் தொங்கப்போட்டுக் கொண்டு திரியும் ஆளாக நினைக்கிறார்கள் என்பதையும் உணர ஆரம்பித்து விட்டேன். அவர்கள் கண்ணில் தெரியும் அந்த அலட்சியமும், அவ மரியாதையும் என் பூ மனதில் சூட்டுக்கோலாய்க் கீறும்; பொறுக்க முடியாமல் போய்விடும்போது, எங்காவது வெளியே பூங்காப் பக்கம் போய்விடுவேன். மூன்று மணி நேரம், நான்கு மணி நேரம் என்று அங்கேயே விழுந்துகிடப்பேன். எழுந் திருக்கவே மனம் நாடாது. படுத்த

படியே என்னென்னவோ யோசிப்பேன். நிறைய யோசிப்பதால் நினைவில் நிற்பதில்லையோ, அல்லது ஒன்றுமே யோசிப்பதேயில்லையோ தெரியாது. ரொம்ப நேரமாகப் படுத்துக்கிடக்கிறோம் என்று திடீரென்று நினைவுக்கு வரும்போது எழுந்து வேண்டா வெறுப்பாக வீட்டுக்கு வருவேன். வீட்டுக்கு யார் வருகிறார்கள், யார் போகிறார்கள், வீட்டில் என்ன நடக்கிறது என்று எதையும் அறிந்து கொள்ளும் ஆர்வம் கிடையாது. என்னை நானே எவ்வளவோ கடிந்து கொண்டு பழைய கவலையற்ற நிலைக்கு மீளத்துடித்தாலும் அழுத்தும் சுமை அகலுவேனா என்கிறது.

வீண், எல்லாம் வீண், என் வாழ்க்கையே வீணாகிவிட்டது. நான் வாழ்ந்த கடந்த காலம் குறிக்கோளற்றும், பொருளற்றும் போயிற்று. வாழப் போகும் வருங்காலம் வழியே புலப்படாத பயங்கரமான இருட் சுவராக எதிரே நின்றது. எந்த வேலையைக் கையில் எடுத்தாலும் "இதைச் செய்து என்ன ஆகப் போகிறது? இதனால் என்ன பிரயோஜனம்" என்று விரக்திக் கேள்வி முன்னே வந்து நிற்கிறது. வாழ்க்கையில் எல்லாமே குறிக்கோளற்றதாகவும், வீணாகவும் தோன்றின. வாழ்க்கை ரசம் தோய்ந்து இருந்த பஞ்சை யாரோ குரூரமாக அழுத்திப் பிழிந்து விட்டதாகத் தோன்றியது. மனதிலும், கண்களுக்கு எதிரேயும் எப்போதும் ஒரு பனி மூட்டம், உயிர்ச் சூட்டை மங்கச் செய்யும் பனிமூட்டம்.

சிலந்தி வலையில் விழுந்த ஈயாக, நான் ஒரு சதியில் மாட்டிக் கொண்டதாகவும், அது என் ஜீவசக்தியை உறிஞ்சி, என்னை அணு அணுவாகச் சாகடித்துச் சக்கையாக மிச்சத்தை எறிந்துவிடும் என்றும் தோன்றியது. என் கண்களின் ஒளியும், உதட்டின் முறுவலும் மங்கி மறைவதைக் கண்டு கொண்டும், உணர்ந்து கொண்டும் இருக்கிறேன். ஆனால் தடுப்பது எப்படி? ஐயோ, இந்த வீட்டின் பிக்கல் பிடுங்கல்கள், ஏதோ குற்றம் செய்துவிட்ட பச்சாதாபம், கழிவிரக்கம், அரக்கு மாளிகையாக எரிந்து கரியாகும் என் லட்சியக் கனவுகள், இவைகளி னின்றும் எப்படித் தப்புவேன்?

கல்லூரி மாணவர்கள் எடுத்ததற்கெல்லாம் ஹா— ஹா... என்று சத்தம் போட்டு சிரிப்பதைக் காண்கிறேன். எதற்கும் கவலைப்படாமல் யார் காலையாவது வாரிக்கொண்டு, யாரையாவது கிண்டல் செய்து கொண்டு திரிகிறார்கள். இவர்கள் அனைவரும் எனக்கு அந்நியமாகத் தெரிந்தார்கள். வழியோடு போகும் பெண்களைக் கிண்டல் செய்வது, அவர்களைப் பார்த்து மட்டமான ஜாடைகள் செய்வது, அவர்களுடைய வண்டிகளின் பின்னாலேயே சுற்றுவது, தர்ம சத்திரங்களில் ஆதரவு நாடி வந்திருக்கும் அபலைகளுடன் தாங்கள் செய்ததாக அளக்கும் பொய்யும், மெய்யும் கலந்த லீலைகள், நடிக நடிகையர் பற்றி வம்பளப்புகள், கிரிக்கெட் வீரர்கள் பற்றிய வாக்குவாதங்கள், யாவும் எனக்குப் போலியாகவும், பொய்யாகவும் தோன்றின. இது என்ன, சில அறிவாளிப் பையன்கள் அரசியல் குறித்தும், கம்யூனிசத்தினால்

இந்தியாவுக்கு நேரக்கூடிய தீங்குகள் குறித்தும் பேசும் இடங்களுக்கும் கூட போக மனம் நாடவில்லை. இவர்கள் எல்லாரும் வாழ்க்கையோடு தொடர்பில்லாத விஷயங்களைப் பேசுகிறார்கள் என்று பட்டது. இவர்கள் எல்லாரும் சற்று வாயை மூடிக்கொண்டிருந்தால் என்ன, ஏன் இரவும் பகலும் வளவளவென்று பேசுகிறார்கள், ஏன் முட்டாள்களாகக் குதியாட்டம் போடுகிறார்கள், இவற்றால் என்ன பிரயோஜனம் என்று எரிச்சல் எரிச்சலாக வருகிறது. மதுபாலா உலகிலேயே அழகான நடிகையாக இருந்தால் இருந்துவிட்டு போகட்டுமே! அசோக்குமார் வயதான பிறகும் அற்புதமாக நடித்தால் அதற்கும் நமக்கும் என்ன சம்பந்தம்? விளையாட்டைவிட ரன்னிங் கமெண்ட்ரி விறுவிறுப்பானது, சரி. ஸ்டாலின் மகளுடைய லீலைகள் வெளிவர ஆரம்பிக்கின்றன, சரி. அதனால் நமக்கு என்னய்யா? உங்களுக்கு என்ன ஆகப் போகிறது? ஆக வெளியுலக வாழ்க்கை முழுவதுமே மகிழ்ச்சியற்றும். உள்ளீடற்றும், வீணாகவும் எனக்குத் தோன்றுகிறது. சமயத்தில் நானும் ஏன் இவர்களைப்போல மனம் திறந்து சிரிக்கக்கூடாது. துள்ளிக் குதித்துக் கொண்டு வழியில் கிடக்கும் சிகரெட் பாக்கெட்டை எற்றிக் கொண்டு திரியக்கூடாது என்று பொறாமையாக இருக்கிறது. ஆனால், நான் என்ன செய்வேன்? என் மனமே செத்துவிட்டதே! கல்லூரி மாணவர்கள் என்னை அழுமூஞ்சி அழுமூஞ்சி என்று சொல்லிச் சொல்லி எனக்கு இருபது வயது கூடி கிழவனாகிவிட்டது போலத் தோன்றியது. ஒரு ஆழமான விரக்தி, கண்ணுக்குத் தெரியாத, ஆனால் எங்கெங்கும் வியாபித்திருக்கும் ஒரு சோர்வு என் நாடி நரம்பெல்லாம் பரவிவிட்டது.

என் இலட்சிய மாளிகையின் உச்சியில் பறந்துகொண்டிருந்த. காவிக்கொடி (ஆர்.எஸ்.எஸ்.கொடி) என்னை விட்டு விலகிக் கொண்டே யிருந்தது. சினிமா பார்த்து வருடக் கணக்காகிவிட்டதுபோல் இருந்தது. கல்யாண சமயத்தில் ஒன்றிரண்டு பார்த்தது. கல்யாணத்திற்குப் பிறகு அப்பா அம்மாவிடம் காசு கேட்கும் உரிமை போய்விட்டதாக ஏனோ ஒரு அபிப்ராயம் மனதை ஆக்கிரமித்துக் கொண்டுவிட்டது. நிராசை, விரக்தி! நான் முற்றிலும் தனிமைப்பட்டுப் போனேன். சமயத்தில் கீதை படிக்கும்போது கண நேரத்திற்குச் சற்று அமைதி கிட்டுகிறது. கோவிலில் தனிமையில் அமர்ந்து சிந்திக்கும்போது சற்று அமைதி நிலவுகிறது. அப்போது மட்டும் எல்லாவற்றையும் மறந்துவிட்டதாகத் தோன்றும். கவலைகளினாலும், தொல்லைகளினாலும் புடைத்துத் தெறித்துவிடும் போலாகிவிடும் என் ரத்த நாளங்களைக் கோவிலின் அகிற்புகை வருடி அமைதிப்படுத்திவிடுகிறது. ஆனால் கோவிலிலிருந்து திரும்பும்போது மீண்டும் அதே செக்கடிக்குத் திரும்பி வருவதாகத் தோன்றும், மனிதனைப் பூட்டி ஓட்டும் செக்கடி! ஆனால் ஒரு நிகழ்ச்சிக்குப் பிறகு கோவிலுக்குப் போவதையே நான் விட்டுவிட்டேன், பைஜாமா குர்த்தா அணிந்த நடைப்பிணமான நோஞ்சான் பஞ்சாபி இளைஞன் ஒருவன் கோவிலுக்கு

வந்துவிட, அர்ச்சகர் வெளியே ஆலமரத் தடியில் எரியும் கொள்ளிக் கட்டையால் அவனை நாயைப்போல அடித்து விரட்டினார். என் மனதில் ஏதோ ஒன்று அறுந்துபோனது. நான் ஒன்றும் பேசவில்லை. ஏழடுக்கு மாடியின் உச்சியில் நின்று பார்ப்பவன் போலப் பார்க்க மட்டுமே செய்தேன். ஆனால் அதுவே நான் கோவிலுக்குப் போன கடைசி நாள்.

எல்லாரும் கூடிச் சதி செய்து என்னைத் தனியாக்கி விட்டதாகத் தோன்றியது. என்னிடம் நேரே ஒன்றும் சொல்லாமல் அவமரியாதை கலந்த அலட்சியம் காட்டுவது, ஜாடைமாடையாகப் பேசுவது எல்லாம் என்னை இரவும் பகலும் சித்திரவதை செய்தன. ஒவ்வொருவருக்கும் நான் வேண்டாதவனாகவும் வெறுப்பூட்டுபவனாகவும் இருப்பதாகத் தோன்றியது. அனைவரின் முகத்திலும் என்னைக் குறித்து ஒரு வெறுப்பு. எனக்கு அச்சமாக இருந்தது. வீடு நோக்கி வந்தாலே ஒரு விசித்திரமான பீதியில் மனம் படபடக்கிறது. என் கல்யாணம் உங்கள் ஆசைகளை நிறைவேற்றவில்லையென்றால் அதுவும் என் குற்றமா? அம்மா என்னைக் கூப்பிட்டு ஏன் ஒன்றும் கேட்கவில்லை என்று சமயத்தில் மனம் துடிக்கும். அண்ணனுக்கோ என்னை ஏறெடுத்துப் பார்க்கவும் ஒழிவில்லை. அப்பாவிடம் எனக்குள்ள பயம் 'நாளொரு மேனியும், பொழுதொரு வண்ணமுமாக' வளர்ந்து கொண்டேதான் இருக்குமோ!

நான் பிரபா பற்றி எண்ணமிடவும் விரும்பவில்லை. ஆனால் இப்போதெல்லாம் அவளைப்பற்றி ஏதாவது பொல்லாங்கு காதில் விழுந்து கொண்டேயிருக்கிறது. அப்போதெல்லாம் மனதில் ஒரு எதிர்ப்பு தோன்றுகிறது. இவர்களுக்கு வேறு வேலை கிடையாதா? நான்தான் என் கழுத்தில் இதை ஏன் கட்டுகிறீர்கள் என்று முன்பே சொன்னேனே! சரியான தலைக்கனம் பிடித்த எவளோ ஒருத்தியை என் தலையில் கட்டி விடப்போக, பாவமும், பழியும் என் தலையில் விடிகிறது. திரும்பத்திரும்ப அந்த நிகழ்ச்சி என் மனதில் விரிந்தது. ஒவ்வொரு முறையும் அன்று நடந்ததற்கெல்லாம் அடிப்படைக் காரணம் அவளது கர்வமே என்றுபட்டது. ஆனால் நடு நிலையில் நின்று யோசித்துப் பார்க்கும்போது என் மனைவி நான்கு நாட்கள் என் வீட்டில் இருக்க, நான் ஒரு வார்த்தையும் பேசவில்லை என்பது என்ன நியாயம் என்று என்னை நானே கேட்டுக் கொள்கிறேன்.

இவற்றையெல்லாம் தாங்க முடியாமல் போகும்போது தனிமையில் உட்கார்ந்து அழ வேண்டும், அழுது அழுது மீளா மூர்ச்சையடைந்து விடவேண்டும் என்று தோன்றும். ஆனால் அப்படி அழும்போது வீட்டின் அழுக்குத் தலையணையில் முகம்பதித்து அழக்கூடாது, கோவிலின் புல்வெளிகளில் காதில் புல்குத்த விழுந்து அழக்கூடாது என்றும் ஒரு பலவீனமாக ஒரு நினைவு. வேறு எப்படி அழுதால் அமைதி கிட்டும் என்று தெரியவில்லை.

# 5

ஒருநாள் சாப்பாடு வைக்கும்போது முன்னி, "அண்ணா, நீங்க அண்ணிகிட்டே சுத்தமா பேசவே இல்லியா?" என்ற கேட்டாள்.

நான் அவள் கேட்பதன் உட்பொருளைப் புரிந்து கொள்வதற்காக அவள் முகத்தை ஒருமுறை பார்த்துவிட்டு தட்டை என் பக்கம் நகர்த்திய வண்ணம், "இல்ல" என்று சுருக்கமாகப் பதில் சொன்னேன். குரல் சாதாரணமாகவே இருந்தாலும் முன்னிக்கு இந்தக் கேள்வி ஏன் திடீரென்று தோன்றியது என்று அறியும் ஆவல் என் மனத்தில் மூண்டது.

"இன்னொரு கல்யாணம் பண்ணிக்கப் போறீங்களா?" முன்னி அடுப்படியில் கரியால் தரையில் அர்த்தமின்றிக் கோடுகள் கிழித்த வண்ணம் கேட்டாள்.

"ஒருத்தியைப் பண்ணிக் குட்டிச்சுவராக்கியது போதாதா? இன்னொருத்தி வந்தா யார் பேரைச் சொல்லி மாரடிப்பா?" என்ற வார்த்தைகள் என்னையறியாமலே என் வாயில் வந்துவிட்டன. அப்போதுதான் முதன் முறையாகக் கணத்தின் ஒரு பகுதியில் "எங்கள் நடத்தையால் பிரபா எவ்வளவு கஷ்டப்படுகிறாளோ.. அவள் சார்பாக யாரும் யோசித்தும் பார்க்கவில்லை. அவள் செத்தேவிட்டாள் என்கிற மாதிரி இப்போது அநேகமாக அவளை மறந்தேவிட்டார்களா" என்ற எண்ணம் பளீரிட்டது. மிகுந்த துயரத்தில் தன்னைப் பிடிக்கவில்லையென்றால் வேறு கல்யாணம் செய்து கொள்ளும்படி எழுதிவிட்டாளோ என்று திடீரென்று தோன்றியது. இதுமாதிரி கேள்விப்பட்ட, படித்த விஷயங்கள் நினைவுக்கு வந்தன. பிரபா ஏதாவது எழுதினாளா என்று கேட்க விரும்பினேன். விழுங்கிய கவளம் எப்படியோ மீண்டு வந்தது. எனக்கு சாப்பிடப் பிடிக்கவில்லை. பசி மரத்துப் போனது. பொங்கி வந்ததைத் தண்ணீரை மடக்மடக்கென்று குடித்து அடக்கிக் கொண்டு, "உனக்கு யார் சொன்னது, அம்மாவா?" என்று கேட்டேன்.

"இல்லே.. சும்மா நானாதான் கேட்டேன்" என்று முன்னி தட்டிக் கழித்துவிட்டாள். பிறகு ஏனோ என் முகத்தை ஏறிட்டுப் பார்த்து, "ராத்திரி சாப்பிட்டப்புறம் அண்ணி அம்மாவுக்குக் கால் பிடிச்சுவிடு வாங்க இல்ல.. அப்போ இதையெல்லாம் பேசுவாங்க" என்றாள். அவள் ஒரு கையை உயர்த்தி மறு கையால் தன் வளையல்களை மேலும் கீழும் நகர்த்திய வண்ணம் பேசினாள்.

"முன்னி! நான் நெஜமாலுமே வீட்டை விட்டு ஓடிப்போயிடப் போறேன். நல்லாப் படிக்கணும்னு நெனச்சேன். படிப்பே ஓடலே. இதுலே இன்னும் நாலு கல்யாணமா?" என்று நான் அழாத குறையாகக் கேட்டேன்.

அவள் சிறிது நேரம் மௌனமாக இருந்தாள். பிறகு, "சரி அண்ணா, ஒரு விஷயம் சொல்லட்டுமா?" என்று ஒரு ரகசியத்தை வெளியிடும் தோரணையில் கேட்டாள்.

என் முகத்தில் கேள்விக்குறி படர்ந்தது. அதற்குள் வாயிற்படியில் அண்ணி தோன்றினாள். மீதி சமையலைச் செய்யவேண்டுமே என்று குளித்துவிட்டு நேராக வந்திருந்தாள். தோளில் ஏராளமான துவைத்துப் பிழிந்த துணிகள் கிடந்தன. எங்களைப் பார்த்தவுடன் "ஓஹோ இன்னிக்கு முன்னி சாப்பாடு வைக்கிறாளா? சாப்பாடு யார் வைப்பாங் கன்னு தம்பி ஒக்காந்திருப்பாருன்னுல்ல நான் ஓடியாந்தேன்.. எங்கே சாப்பிடாமலே போயிடப்போறாரோன்னு பயந்துகிட்டே வந்தேன். தம்பி என்ன செய்வாருன்னு யாருக்குத் தெரியும்?" என்று கூறியவாறு எனக்கெதிரே சுவற்றில் சாய்ந்து உட்கார்ந்தாள். களைப்பில் மூச்சு வாங்கியது. வாயும் வயிறுமாக இருந்தாள். தோளிலிருந்த துணிகளை முன்னியிடம் நீட்டி, நைச்சியமாக, "முன்னி.. நல்ல பொண்ணுல்ல.. கொஞ்சம் காயப்போட்டுடும்மா," என்றாள்.

"வேலை வாங்க நான்தான் கெடச்சேனா, நீங்களே காயப்போட்டுட வேண்டியதுதானே!" என்று முன்னி மக்கர் செய்தாள்.

"உன் மேலே ஆணை முன்னி, துவைச்சுத் துவைச்சு கையே இத்துப்போச்சு, உன் காலைத் தொட்டு கேட்டுக்கறேண்டியம்மா, கொஞ்சம் காயப்போட்டுடுடி கண்ணு." என்று மிகவும் களைத்த குரலில் சொல்லிவிட்டுப் பொருள் புதைந்த பார்வையுடன் அவளைப் பார்த்துவிட்டு, வெட்கத்துடன் சிரித்தாள். முன்னிக்கும் சிரிப்பு வந்து விட்டது. அவள் துணிகளை எடுத்துக் கொண்டு வெளியேறினாள்.

நான் சின்னச்சின்ன விள்ளல்களாக வாயில் போட்டுக் கொண் டிருந்தேன். சாப்பிடவே பிடிக்கவில்லை. நான் சாப்பிடுவதைக் கண்ட வுடன் ஏதோ நினைவுக்கு வரும் பாவனையில் அண்ணி நெற்றியில் கை வைத்த வண்ணம் ஏதோ யோசித்துக் கொண்டிருந்தாள். பிறகு தானாகவே, "இந்த முறை தீபாவளிக்கு முன்னாடியே குளிர் ஆரம்பிச் சுட்டுது. தீபாவளிக்கு இன்னும் எத்தினி நாள் இருக்கு தம்பி?" என்றாள்.

"பத்துப் பனிரண்டு நாள் இருக்குமா? இருக்கும்" என்று நான் அலட்சியமாகப் பதில் சொன்னேன்.

விரல் கணுக்களில் கணக்குப் பார்த்து, "இந்த தீபாவளி வந்தா உனக்கு கல்யாணம் ஆகி சரியா ஆறு மாசம் ஆவும்" என்றாள்.

'அட ஆறு மாதங்கள் ஆகிவிட்டனவா? ஒவ்வொரு நாளும் எவ்வளவு உளைச்சலில் கழித்திருந்தாலும், காலம்தான் எவ்வளவு விரைவில் ஓடிவிட்டது என்று தோன்றியது. பிரபா எப்படியிருக்கிறாளோ

தெரியவில்லை. ஏதாவது கடிதம் கட்டாயம் வந்திருக்கும். பிற்பாடு முன்னியிடம் கேட்போம் என்று நினைத்தேன். ஆனால் முன்னி என்னிடம் என்ன சொல்ல விரும்பினாள்? இன்று எல்லாருமே என் கல்யாணத்தைப் பற்றியே ஏன் பேசுகிறார்கள்? இப்போதெல்லாம் என் இயல்பிலேயே ஆர்வம், குதூகலம் இவையெல்லாம் காணாமல் போய் விட்டிருந்தன. எனவே, பிரபா பற்றிய ஆர்வம் இரண்டொரு முறை எழுந்து மரித்துப் போய்விட்டது. வீட்டில் ஏதாவது பேச்சு எழுந் திருக்கும், அதனால்தான் எல்லாரும் என் கல்யாணத்தைப் பற்றிப் பேசுகிறார்கள் என்று நினைத்துக் கொண்டேன்.

"என்ன தம்பி, நல்லாத்தான் கல்யாணம் பண்ணிக்கிட்டே போ" என்று விரக்தியும் பரிவும் கலந்த குரலில் நிராசைப் பெருமூச்சு விட்டாள். "என்னென்னவோ ஆசைப்பட்டோம். எல்லாம் மண்ணாய்ப் போச்சு, சீர், செனத்தியை விடு, ஆயுசுக்குமா இருக்கப்போவுது? அந்த மகாராணியை ஆயுசுக்குமில்லே கட்டிக்கிட்டோம்..? அவங்க அனுப்பி வைக்கிறோம்னு எழுதியிருக்காங்கன்னு நெனக்கிறேன்."

அவளுடைய கடைசி வாக்கியத்தைக் காதில் வாங்கிக் கொள்ளாமல், "நீங்கதானே ஒத்தக்கால்லே நின்னீங்க, பொண்ணு அப்படியிருக்கா, இப்படியிருக்கான்னு..?" என்றேன்.

"நல்லாயிருக்கு தம்பி நாயம்! நான் என்ன அவ மனசுக்குள்ளே பூந்து பாத்தேனா? நாலு பேரு சொன்னதை சொன்னேன்!" பிறகு பெருமூச்சு விட்டு, "ஆத்தாடி! கர்வத்துக்கும் ஒரு அளவு உண்டு, அதுக் குன்னு இப்படியா! ஒரு மண்ணும் தெரியலே, அதிலே இவ்வளவு மண்டைக்கனமா? சாமி மேல சத்தியமா சொல்றேன்—என் ஆயுசுக்கு இது மாதிரி தலைக்கனம் பிடிச்ச பொம்பளையை நான் பாத்ததில் லேப்பா! ஏதோ விஷயம் இருந்தாலும் கொஞ்சம் பொறுத்துக்கலாம். ஒண்ணுமில்லாமலேயே தலைக்கனம் பிடிச்சுத் திரிஞ்சா யார் பொறுத்துக்குவா? பெரிசா படிப்பு, அழகுன்னு பீத்திக் கிட்டாங்க. அப்படியொன்னும் ரம்பை, ஊர்வசியில்லே," என்றவள் என் முகத்தைக் கூர்ந்து கவனித்தாள். பிறகு ஏதோ நினைத்துக் கொண்டு, "கடியாரம் கட்டிக்கிட்டு சமைக்க வந்தாளே, அப்பதான் எனக்கு சிரிப்பு தாங்க முடியலே. வாயை மூடிக்கிட்டேன். அதைவிடு, பருப்பை நான் வாயிலே வச்சுப்பாத்தேன்னு சொன்னா பாரு, அதுக்கு அம்மா ரகளை பண்ணி யிருப்பாங்க, கொண்டவன் வாயிலே வைக்கறதுக்கு முன்னே நீ எப்படி வாயிலே வைக்கப் போச்சுன்னு சண்டை பிடிக்க இருந்தாங்க, நான்தான் போவட்டும் விடுங்க, தெரியாதவன்னு சொன்னேன்," என்றாள்.

எனக்கு சலிப்பாக இருந்தது. கல்லூரிக்கு நேரமாகிக் கொண்டிருந்தது, "அண்ணி கல்லூரிக்கு நேரமாவுது, எனக்குச் சாப்பாடு போதும், முன்னி நெறய வச்சுட்டா" என்று சொல்லிவிட்டு எழுந்து வந்துவிட்டேன்.

அண்ணியின் குரல் பின்னால் ஒலித்தது, "ஐயையோ! என்னப்பா

ஒண்ணும் சாப்பிடலியே, தம்பி... இந்த ஒரு ரொட்டியையாவது சாப்பிட்டுட்டுப்போ."

"இல்லை அண்ணி, வகுப்பை முடிச்சுட்டு வந்து சாப்பிட்டுக்கறேன்."

போகும்போது நமுட்டுச் சிரிப்பு தோய்ந்த குரலில், "வரத்தான் போறா தம்பி, ஆனா ஆரம்பத்திலேயே அடக்கி வச்சிரு. இல்லேன்னா அப்புறமா வருத்தப்படுவே" என்று அண்ணி சொன்னது பின்னாலிருந்து காதில் விழுந்தது.

ஆண்களின் மௌனமும் புரியவில்லை, பெண்களின் பேச்சும் புரியவில்லை. இதற்கெல்லாம் என்ன அர்த்தம்? எப்படியோ காலையிலேயே மனசு சரியில்லாமல் போய்விட்டது. இன்று ஏனோ, திரும்பத் திரும்ப, "ஆறு மாதம் ஆகிவிட்டதே, அவள் எப்படி இருக் கிறாளோ தெரியவில்லையே? என்ற கேள்வி, விரக்திக்கு இடையிலும் எழுந்து கொண்டேயிருந்தது. எனக்கு அவள் ஒரு கடிதம்கூட எழுதக் கூடாதா? நான் படிக்கிறேனோ, கிழித்து எறிகிறேனோ, அவள் எழுதி யிருக்க வேண்டாமோ? இப்போது எப்படியிருப்பாள் அவள்! அந்த அடிக்குப் பிறகு அவள் நிலை எப்படியிருக்கும், அவளைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும் என்கிற அரிப்பு அடக்க மாட்டாமல் பிடுங்கியெடுத்தது. அவள் வீட்டுக்குப் போய் என்னென்ன சொல்லி யிருப்பாள்?

சமயத்தில் நடுக்கமாக இருக்கும், 'இந்த கர்வம் பிடித்த பெண்ணுடன் வாழ்நாள் முழுவதையும் எப்படிக் கழிப்பது? எங்கள் இருவரின் எதிர் காலமும் என்ன ஆகும்? இதில் இரண்டாம் கல்யாணப் பேச்சு வேறு புதிதாக முளைக்கிறது! முன்னி இது பற்றித்தான் பேச நினைத்தாளோ?'

போர்டு பரிட்சைக்குப் பணம் கேட்க அம்மாவிடம் போனேன். இருபத்தைந்து ரூபாய் என்று காதில் விழுந்தவுடன் அவள் வாய் பிளந்து கொண்டுவிட்டது. "அம்மாடி!... எங்கிட்டே ஏது இவ்வளவு பணம்! அப்பாகிட்டேயே கேட்டு வாங்கிக்க" என்று சொல்லிவிட்டாள். அப்பாவிடம் போகக்கூடாது என்றுதானே அம்மாவிடம் வந்தேன்? இப்போது நெஞ்சு 'திக்திக்'கென்றது. ஒருமுறை அண்ணன் அண்ணியிடம் பணம் கேட்டது ஞாபகம் வந்தது. ஆனால் அண்ணியிடம் இருக்காது, அல்லது ஒரு அவசரத்திற்கு வைத்திருந்தாலும் எனக்குக் கொடுக்கப் போவதில்லை என்று எனக்குத் தெரியும்.

எப்படியோ, அப்பாவிடம் போய், "அப்பா, நாளைக்கு போர்டு பரிட்சைக்கு பணம் கட்டணும்" என்று சொல்லிவிட்டேன். அவரிடம் போய் முதலில் சும்மா தலையைக் குனிந்து கொண்டுதான் உட்கார்ந் திருந்தேன். பிறகுதான் ஏதோ தப்புக் காரியம் பண்ணப் பணம் கேட்கிற மாதிரி ஈனஸ்வரத்தில் கேட்டேன்.

மாலையாகிவிட்டது, அப்பா ஒரு கயிற்றுக் கட்டிலின் பின்னலை இறுக்கிக் கொண்டிருந்தார். முதலில் மௌனமாக என்னைப் பார்த்துக்

கொண்டிருந்தவர், பிறகு, "எவ்வளவு?" என்று உறுமினார். 'இருபத்தஞ்சு' என் பாக்கி மூச்சுகளின் எண்ணிக்கையைச் சொல்வதுபோல நான் உச்சரித்தேன்.

"ஊம்..." என்று உறுமலோடு ஒரு கயிறை இழுத்து முழங்கையில் அழுத்திப்பிடித்தவண்ணம், "எனக்குப் பென்ஷன் பணம் இருபத்தியஞ்சு ரூபாய் வந்திருக்கு, அதை நீ வாங்கி வாயிலே போட்டுக்க. நான் என்ன வாழ்நாள் எல்லாம் மாடா ஒழைக்கத்தானே பொறந்திருக்கேன்... ஒழைச்சுட்டுப்போறேன். பசங்க கோயில் காளையாட்டம் ஆவுற வரைக்கும் சோறுபோடணும்னு தலையிலே எழுதியிருக்கில்லே, போட்டுத்தான் ஆவணும். நேத்தி, முந்தாநாளு அமரும் பீஸ் கட்டணும்னு அழுதுகிட்டிருந்தான். தோ தீபாவளி வந்துட்டுது, செலவு ஆளை முழுங்குது- சம்பாதிக்கிறவன் ஒருத்தன்தான், அவனை உறிஞ்சி எடுத்துடப் போறீங்க, அவ்வளவுதான்." என்றவர் சட்டைக்குள் கைவிட்டு பனியன் பையிலிருந்து நோட்டுக்களை எடுத்து எண்ணாமலேயே கட்டிலின் மீது வீசி எறிந்தார். "எடுத்துக்கயேன், ஏன் மூஞ்சியைப் பாத்துக்கிட்டு நிக்கிறே_!"

எனக்கு அந்த நோட்டுக்களை எடுக்கத் துணிவு வரவில்லை. வந்த வாக்கில் திரும்பிப் போய் படிப்பு கிடிப்பு எல்லாவற்றையும் விட்டுவிட்டு ஏராளமாகப் பணம் சம்பாதித்து வந்து கொட்டி "இந்தாங்க, வேண்டியதை எடுத்துக்குங்க, எப்பப் பாத்தாலும் பணம், பணம், பணம்..." என்று கத்த வேண்டும் என்று தோன்றியது.

நான் அப்படி நிற்பதை ஒருமுறை பார்த்துவிட்டு அப்பா மீண்டும் தலையைக் குனிந்து கொண்டு வேலையில் ஈடுபட்டவராக, முற்றிலும் மாறிய குரலில், "எவ்வளவு தொல்லை பாரு சமர்! நீயே யோசிச்சுப் பாரு, என் கஷ்டம் எனக்குத்தான் தெரியும். நான் என்ன பண்றது, நீயே சொல்லு, எங்கியாவது போய்த்திரும்பவும் வேலை செய்ய உடம்பிலே தெம்பில்லே. உன் அண்ணன் பெண்டாட்டிக்கு பேறுகாலம் வேற நெருங்கி வந்துட்டுது. அது ஒரு கஷ்டம். அவளுக்கு இது தலைப் பிரசவம். செலவு கொஞ்சமாவா ஆகும்? எல்லாப் பசங்களும் படிக்கிற பசங்க! அவங்களுக்கும் நல்லா சாப்பாடு போட்டு, துணிமணியை எடுத்துக்கொடுத்து அனுப்பியாவணும். உங்கம்மா அடுப்பூதி, அடுப்பூதியே படுத்த படுக்கையாயிட்டா. அவளுந்தான் என்ன செய்வா, பாவம். எவ்வளவோ செஞ்சா, இப்ப வயசாச்சு, முடியலே. முப்பது வருஷமா மூச்சுக் காட்டாம செய்யலியா, நீ ஒண்ணும் செய்யாட்டியும் உன் பெண்டாட்டியையாவது போய் அழைச்சுக்கிட்டுவா. ஏதோ கூடமாட ஒத்தாசையாவது செய்வா. படிக்கப் போறவங்களுக்கும், வேலைக்குப் போறவனுக்கும் சாப்பாடாவது காலாகாலத்திலே கிடைக்குமில்லே. கொஞ்சம் முன்னி பாத்துக்குவா, ஹூம்... முன்னி இனிமே இங்கேதான் இருந்தாவணும், ஊரே காறித்துப்புது. என்ன செய்யறது, எல்லாம் போறாதகாலம்..." என்று பேசிக் கொண்டே போனார்.

நிலவரத்தை அப்பாவின் கண்ணோட்டத்தில் பார்க்கும்போது உண்மையிலேயே எனக்கு அவர்மீது இரக்கம் பிறந்தது. அவர் சிடுமூஞ்சி யாகவும், முன்கோபியாகவும் ஆகிவிட்டதற்கு அவரைக் குற்றம் சொல்லி என்ன பயன்? பாவம் அவரும்தான் எவ்வளவு செய்வார்? மிடறு விழுங்கிக் கொண்டு, “அமரை அனுப்புங்க அப்பா, அவளை அழைச்சுக் கிட்டு வர நான் போகலே” என்றேன்.

அவர் குரல் சட்டென்று மாறியது, “ஏன் அமரை அனுப்பணும்? பொண்டாட்டி பேச்சை எடுத்தாலே உனக்கு ஏன் கைகால் நடுங்குது? அவ என்ன பூதமா? பிசாசா? உன்னை முழுங்கிடுவாளா? நல்லாத்தான் மானத்தை வாங்கற. பிள்ளைங்க வந்து வாச்சாங்க. எல்லாருக்கும் ராஜா வீட்டுப் பிள்ளைங்கன்னு நெனப்பு- அவனவன் மனசுலே என்ன நெனச்சுக் கிட்டிருக்கான்னு தெரியலே! எவ்வளவு நாள்தான் பேசாம இருக்கேன்னு நானும் பாக்கறேன். அடுத்தவங்க வீட்டுலேர்ந்து வாழ வந்த பொண்ணுடா. என்ன நெனப்பா, வீட்டிலேபோய் என்ன சொல்லுவான்னு லட்சம் தடவை படிச்சுப் படிச்சு சொன்னேன், கேட்டியா? நாளைக்கு நாமும் கல்யாணம், கார்த்தி செய்ய வேண்டாம்? அவனவன் வாயிலே வந்தபடி பேசறான். ஊர் வாயை மூடமுடியுமா? நம்ம பிள்ளைங்க என்னன்னா திமிர் பிடிச்சு, நின்னே பேசமாட்டேங் குதுங்க. சுத்த ஆம்பளையா இருந்தா ஆயுசு பூராவுக்கும் பேசாம இருந்து காட்டடா பாப்போம்..” என்று சத்தம் போட்டார்.

-அண்ணி சொன்னது மனதில் பளிச்சிட்டது. “தம்பி, இன்னிக்கு உங்கப்பா உங்கம்மாகிட்டே என்ன சொல்லிக்கிட்டிருந்தார் தெரியுமா?” என்று ஆரம்பித்தவள், நான் சும்மா இருக்கவே தொடர்ந்தாள்— “வேணும்னா சமரை ஒரு டாக்டர்கிட்டே போகச் சொல்லு. நல்லா பரிசோதிக்கட்டும், பீஸ் கொடுத்துடுவோம் அப்படீன்னார்” எனக்கு விளங்கவில்லை, “ஏன், எனக்கு என்ன ஆச்சு?” என்று கேட்டேன். அண்ணி முந்தானையால் வாயை மூடிக்கொண்டு, ‘கெக்கே’ என்று சிரித்தாள். எனக்குக் கோபம் தலைக்கேறி விட்டது.

பிறகு அப்பா கயிற்றுக் கட்டிலைத் தேவையில்லாமலேயே மேலும் பல்லைக் கடித்துக் கொண்டு இறுக்க ஆரம்பித்தார். நான் பணத்தை எடுத்துக்கொண்டு ஒரு கணமும் அங்கு நிற்காமல் வந்து விட்டேன். “சீ இவர்கள் மூளை எங்கெங்கெல்லாம் போகிறது” என்று தோன்றியது. அப்பா இன்னும் முணுமுணுத்துக் கொண்டிருந்தார். அவர் முணுமுணுப்பு உள்ளுக்குள் என் கோபத்தை வளர்த்துக் கொண்டிருந்தது.

இவர்கள் சொன்னபடியெல்லாம் ஆடவேண்டுமா? கட்டிக்கொள் என்றால் கட்டிக்கொள்ள வேண்டும். கொண்டுபோய் விடு என்றால் கொண்டுபோய்விட வேண்டும். அழைத்துக் கொண்டு வா என்றால் அழைத்துக் கொண்டு வரவேண்டும். ஆயுசிலேயே இப்போதுதான்

முதல் தடவையாகக் கேவலம் இருபத்தி ஐந்து ரூபாய் கேட்டேன். அதற்கு இவ்வளவு பேச்சா? எப்படியோ அலைந்து திரிந்து மாதாந்திர பீஸைத் தள்ளுபடி செய்து கொண்டுவிட்டேன். இல்லையென்றால் மாதாமாதாம் ஒரு மகாபாரதம் நடக்கும். ஒழுங்காகப் படிக்க வைக்க முடியாது என்றால் ஏன் பெற்றுக் கொண்டார்கள்? நான் என்ன புஸ்தகம் நோட்டுக்கா பணம் கேட்டேன். உடையெல்லாம் கிழிந்து போய்விட்டது, எப்படியோ சமாளிக்கிறேன். அதை வைத்துக் கொண்டு தான் குளிர் காலத்தைத் தள்ளியாக வேண்டும். சினிமா போவதற்கோ, வாங்கித் தின்பதற்கோ ஒரு பைசா கேட்பதில்லை. அப்படியிருக்கும் போதே நிலவரம் இப்படி இருக்கிறது. கோவில் காளையாகி விட்டோமாமே, கோவில் காளை?

உங்களுக்கு வேண்டுமானால் மாட்டுப் பெண்ணை அழைத்துக் கொண்டு வாருங்கள், வேண்டாமென்றால் விட்டுவிடுங்கள். என்னைக் கேட்டுக் கொண்டா எல்லாம் செய்கிறீர்கள்? அப்படியென்றால் நான் முன்பே சொன்னதைக் கேட்டிருக்க மாட்டீர்களா? கல்யாணம் பண்ணி வைக்கும்போது என் பேச்சைக் கொஞ்சமாவது கேட்டீர்களா? அன்றைக்கு "உனக்கு என்ன தெரியும், சின்னப் பையன், சும்மாயிரு. ரொம்பச் பேசினா மண்டையை உடைச்சுடுவேன்" என்றார்கள். மண்டையை உடைக்கிற ஆளைப்பார்! இப்போது யார் மண்டையை உடைப்பார்களாம்! அவளை அழைத்துக் கொண்டு வர வீட்டில் நான் ஒருவன்தான் அகப்பட்டேனா? அமர் அழைத்துக் கொண்டு வந்தால் என்னவாம்? சின்னப் பையன், சின்னப் பையன் என்று அவனைக் குட்டிச்சுவராக்கியாயிற்று. எனக்கு என்ன, அவனுக்குத்தான் பிறகு கஷ்டம். நான் பேசவே மாட்டேன் என்கிறதை நிரூபிக்கிறேன் பாருங்கள். அது என் கையில்தானே இருக்கிறது? பேச எப்படிக் கட்டாயப்படுத்த முடியும்? இதென்ன கல்யாணமா, வலுக்கட்டாயமாகப் பண்ணி வைத்துவிட? என் இஷ்டம், பேசமாட்டேன், ஊரார் பழிப்பார்களாம்– ஹூக்கும்!'

# 6

கல்லூரியிலிருந்து திரும்பும்போது அமர் எதிர்ப்பட்டான். இரண்டு கைகளாலும் கால் பந்தை உருட்டிக் கொண்டே எங்கோ விளையாடப் போய்க் கொண்டிருந்தான். என்னைக் கண்டவுடன், "சமரண்ணா, அண்ணியை அழைச்சுக்கிட்டு வந்துட்டேன்" என்றான்.

தலைகுனிந்து நடந்து கொண்டிருந்த நான் திடுக்கிட்டு, "அப்படியா?"

என்று கேட்டேன். வீட்டை நோக்கி முன்னேறிய கால்கள் நின்று போயின. சிறிதுநேரம் அர்த்தமில்லாமல் அவனைப் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு "ஏதாவது விசேஷமா?" என்று கேட்டேன்.

"ஒரு விசேஷமும் இல்லே, ரொம்ப பிகு பண்ணிக்கிட்டு அனுப்பினாங்க. சின்னண்ணி வீட்டுக்காரங்க கொஞ்சங்கூட நாகரீகம் தெரியாத வங்க.. நான் இனிமே போகமாட்டேம்பா, இப்பவே சொல்லிட்டேன்."

"ஏன் உதைச்சு கிதைச்சிட்டாங்களா?" என்று நான் விஷமமாக ரகசியக் குரலில் கேட்டேன்.

"உதைச்சாதான் அநாகரீகமா? எடுத்ததுக்கெல்லாம், உங்க பெரியண்ணி இப்படி, உங்க அம்மா அப்பா அப்படிங்கறாங்க. ஆயிரம் தான் இருந்தாலும் நம்ம வீட்டு மனுஷங்களைப் பத்தி மத்தவங்க சொல்றதை நாம எப்படி கேட்டுக்கிட்டு இருக்கிறது?" அவன் என்னைப் பற்றிக் கவலைப்படாமல் படபடப்பாகப் பேசினான்.

"சமரண்ணன் எப்படியாம்?" என்று நான் விசாரித்தேன். குரலில் என்னையறியாமலேயே ஒரு மென்மை வந்துவிட்டது. என்னைப்பற்றி அவள் வீட்டில் என்ன சொல்லியிருப்பாளோ!

"அதானே சுவாரஸ்யம்! அங்கே உங்களைப் புகழ்ந்து தள்ளுறாங்க போங்க."

"புகழுறாங்களா?" எனக்கு எல்லையில்லாத ஆச்சரியம், "ஏதாவது புரியாம உளறாதே!"

"அப்படியும் இருக்கலாம்" என்று அவன் ஒப்புக்கொண்டான். "உங்களைப்பத்தி நெறயா ஒண்ணும் பேச்சு வரலே. இன்னும் எவ்வளவு படிக்கணும், இப்போ பிரபாவை அழைச்சுக்கிட்டுப்போனா படிப்புக்கு ஒண்ணும் இடைஞ்சல் இல்லியேன்னு கேட்டாங்க, அவ்வளவுதான். நீங்க எவ்வளவு படிச்சாலும் சந்தோஷந்தான்னும் சொன்னாங்க. ஆனா, மொதமொத அழைக்க நீங்க போறதுதான் மொறயாம், அதுக்குத்தான் வருத்தப்பட்டுக்கிட்டாங்க. நான் 'சாங்கியம் எல்லாம்தான் கல்யாணத் தோட முடிஞ்சுட்டுதே, அண்ணனுக்கு ரொம்ப படிக்கிற வேலை'ன்னு சமாதானம் சொல்லிட்டேன்."

"சரி, சரி வேற விசேஷம் ஒண்ணும் இல்லியே," என்று அவன் ஜம்பத்தை அடக்கிவிட்டேன். "புகழ்ந்தார்கள்" என்கிற வார்த்தையினால் உண்டான ஆவல் இந்த பேச்சுக்களினால் தணியப்போவதில்லை. "ஏதாவது புரியாம உளறாதே" என்று சீண்டி, விஷயத்தை உறுதிப்படுத்திக் கொள்ளப் பார்த்தேன். அது ஈடேறவில்லை. இனி என்ன என்று கேட்பது. பொங்கும் என் மனதில் இந்த வார்த்தை அலையாக மோதியது. 'பெண்ணே, நீ என்னைப்பற்றி என்ன சொன்னாய் என்பதை யாரிடம் கேட்டுத் தெரிந்து கொள்வது?' என்று உரக்கச் சத்தம் போட வேண்டும் போலத் தோன்றியது. அந்தக் கணத்தில் நான் அவளிடம்

நடந்து கொண்டது எவ்வளவு மோசம் என்று எனக்குப்பட்டது. இன்று என்னை நீதிமன்றத்தில் நிறுத்தி வைத்து, "நீ ஏன் முதலிரவன்று உன் மனைவியுடன் பேசவில்லை? அவள் உன்னைப் பார்த்தவுடன் நாணத்துடன் ஒரு மூட்டை மாதிரி ஒடுங்கி உட்கார்ந்து கொள்ளவில்லை என்பதாலா? அல்லது உன் இலட்சியங்கள் பெரியன, பெண்கள் அவற்றுக்கு இடைஞ்சல் என்று நீ நினைத்தாய், கல்யாணம் உன் விருப்பத்திற்கு மாறாக நடந்துவிட்டது என்பதாலா?" என்று கேட்டால் என் சார்பாக நான் என்ன சமாதானம் சொல்ல முடியும்? ஒரு உணர்ச்சி வேகம் என்பதைத் தவிர அன்று நான் நடந்து கொண்டதற்கு என்ன காரணம் சொல்ல முடியும்? நான் நடந்து கொண்டது தவறு மட்டுமல்ல, முட்டாள்தனமானது கூட என்று எனக்குப்பட்டது. என் மனத்தில் பச்சாதாபம் நிரம்பி வழிந்தது.

"வேற ஒண்ணும் இல்ல. எப்ப திரும்ப அனுப்பி வைக்கிறீங்கன்னு கேட்டாங்க. அண்ணி கொஞ்சம் பலவீனமா இருக்காங்க. அதுக்கு மருந்து ஏதாவது தேவைப்பட்டா கவனிச்சுக்கச் சொன்னாங்க" என்று சொல்லிவிட்டு அமர் போக யத்தனித்தான்.

"ஏன் உடம்பு சரியில்லியா?" என்று சட்டென்று கேட்டுவிட்டு என் பலவீனத்தைக் குறித்து நானே வெட்கப்பட்டுக் கொண்டேன்.

"இருக்கலாம்" என்று பெரிய வேதாந்தி மாதிரி சொல்லிவிட்டு பந்தை எறிந்து தாவிப் பிடித்தவண்ணம் அமர் போய்விட்டான்.

கவனித்துக் கொள்ள வேண்டுமாம். இங்கே அப்பா என்னாடா வென்றால் காலாகாலத்தில் சமைத்துப்போடுவாள் என்கிறார். மாட்டுப் பெண் மறுவீடு வந்தவுடனேயே எல்லா வேலையையும் அவள் தலையில் கட்ட இங்கே திட்டம் போட்டாகி விட்டது. அட இன்னும் இரண்டு - மூன்று முறை போய் வந்தபின் இதையெல்லாம் வைத்துக் கொள்ளக்கூடாது? ஆனாலும் எங்கள் வீடு மோசம்_ ஆக அவள் அங்கே என்னை உண்மையிலேயே புகழ்ந்து பேசினாளா? இல்லையில்லை... அமர் ஏதோ உளறுகிறான்.

வீட்டுக்குப் போகத் தயக்கமாக இருந்தது. ஆனால் கடந்த சில நாட்களாக இருந்த விரக்திப் பாசி விலகி தூய நீர் தென்பட்டது போல் இருந்தது. அவள் வீட்டுக்குப்போய் என்னைப்பற்றி ஒன்றுமே சொல்லவில்லை என்பதை மனம் நம்ப மறுத்தது. இருக்க முடியாது. ஏதாவது சொல்லியே இருப்பாள். சொல்லாமல் எப்படி இருக்க முடியும்? ஆனால் சொல்லியிருந்தால் மறைமுகமாகக் குத்தலாகவாவது அமரிடம் சொல்லியிருப்பார்களே! மற்றவர்களைப் பற்றியெல்லாம் சொல்லியிருக்கிறார்களே! கண்ணார அவளை ஒருமுறைகூடப் பார்க்காத என் முட்டாள் தனத்தின் மீது எனக்குக் கோபம் கோபமாக வந்தது. இப்போது அவள் முகத்தில் எப்படி விழிப்பது என்று சங்கடமாக இருந்தது. இந்தப் பேசாவிரதம் என்ன கூறுகெட்டத்தனம் என்று

பட்டது. அப்போது எனக்கு இழைக்கப்பட்ட பெரிய தவறையும் சிரித்து ஒதுக்கவோ, கவனிக்காமல் போய்விடவோ நான் தயாராக இருந்தேன். என்னிடம் இவ்வளவு புத்துணர்ச்சியும், சிறகடித்துப் பறக்கும் லேசான தன்மையும் இவ்வளவு நாள் எங்கே ஒளிந்திருந்தன என்று எனக்கே வியப்பாக இருந்தது.

இத்தனை நாள் என்னிடமிருந்த துயரங்களும், கவலைகளும் எங்கே போயின என்று எனக்கே வியப்பாக இருந்தது. நேற்று இந்நேரம் இதே பாலத்தின் வழியாகப் போய்க்கொண்டிருந்தபோது மன அழுத் தத்தில் என் நரம்புகள் வெடித்துக் கொண்டிருந்தன. இந்தப் பிரபா உண்மையிலேயே மிகவும் ஆழ்ந்த சிந்தனையும், கூரிய அறிவும் கொண்டவள். வேறு ஒருத்தி என்றால் வீட்டுக்குப்போய் எல்லாவற்றையும் சொல்லி முகத்தில் விழிக்க முடியாதபடி செய்துவிட்டிருப்பாள். படிப்பில் மூழ்கியிருக்கிறார், பரீட்சை நெருங்குகிறது என்று சொல்லி யிருப்பாள் போலிருக்கிறது. படித்த பெண்ணுக்கும், படிக்காத ஜடத் திற்கும் இதுதானே வித்தியாசம்' ஹூம், அன்றைக்குக் கொஞ்சம் உப்பைத் தூக்கலாகப் போட்டுவிட்டால் குடியா முழுகிவிடும்? அதற்காக அவளை வாழ்வு முழுவதும் மன்னிக்காமலேயே இருந்துவிட முடியுமா? பாவம்ப்பா, புதிதாக வந்த பெண், பயந்தே போயிருப்பாள்! புது இடம், புது மனிதர்கள், அதுவும் அம்மா, அண்ணி மாதிரி கண்ணில் எண்ணெய் விட்டுக்கொண்டு பார்ப்பவர்கள்! பாவம் வெலவெலத்துப் போயிருப்பாள். என்னையே எடுத்துக்கொள்ளுங்கள், வகுப்பில் எழுந்து நின்று ஒரு பக்கம் படிக்கச் சொன்னால் ஒரு வரி கூடப் படிக்க முடியாது, வேர்த்து விறுவிறுத்து திக்கிக் கொண்டுதான் நிற்பேன்.

பார்க்கப்போனால் நான் எப்போதுமே அவசரக்காரன். கண்டதே காட்சி, கொண்டதே கோலம் என்கிற வகைதான். இது என்னுடைய மிகப்பெரிய பலவீனம். இதை விட்டுவிட வேண்டும். நடந்த நிகழ்ச்சிகளில் எல்லாக் குற்றமும் என்னுடையதுதான். அவள் பேரில் எந்தக் குற்றமும் கிடையாது. நான் பாலத்தின் கைப்பிடிச் சுவரில் சாய்ந்து நின்றுகொண்டு கீழே வெகுதூரம்வரை ஓடும் ரயில் தண்டவாளங்களைப் பார்த்த வண்ணம், அந்தக் கோயிலின் மூலையில் உட்கார்ந்து நான் ஏன் தேம்பித்தேம்பி அழுதேன் என்று எல்லையில்லா வியப்படைந்தேன். மணிக்கணக்காகக் குழப்பிக்கொண்டு கண்ணீர் வடிக்கும்படி என்ன நடந்துவிட்டது? அப்போது அவள் காட்டிய அலட்சியம், கடிதம் எழுதாத திமிர் எல்லாவற்றையும் மறந்துவிட்டேன்.

வெகுநேரம் கழித்து வீடு திரும்பியபோது அண்ணி திடுதிப்பென்று தோன்றி, "என்ன சமர் தம்பி! சாப்பிடலியா? மாட்டுப்பொண்ணுவேற சாப்பிடாம காத்துக்கிட்டிருக்கா? வருவே வருவேன்னு பாத்துக் கண்ணே பூத்துப் போச்சு, போ. தம்பியை என்னன்னா காலையிலேருந்து

கண்ணிலேயே காணோம். காலையிலே போன ஆள் இப்போதுதான் வரே! கல்லூரி விட்டப்புறம் எங்கே போயாச்சாம்?" என்றாள். அவள் குரலில் கேலி பொங்கி வழிந்தது.

சில நாட்களாக நான் வீண் பேச்சுக்களைக் காதில் போட்டுக் கொள்வதேயில்லை. அவசியமான பேச்சு பேசுவதோடு சரி. பெரும்பாலும் அண்ணியின் கேலிகளுக்கு உற்சாகமில்லாமல் ஒற்றை வரியில் பதில் சொல்லி அத்துடன் முடித்து விடுவேன். யாருடனும் பேசவே மனம் நாடுவதில்லை. அதே போக்கைக் கடைப்பிடிப்பது, அப்போதுதான் என்னிடம் விளைந்த திடீர் மாற்றம் யாருக்கும் தெரியாது என்று நினைத்தேன். "ஆமாம், அண்ணி– கொஞ்சம் வேலையிருந்தது" என்று சாதாரணமான குரலில் பதில் சொன்னேன்.

"பிரபா வந்ததே தெரியாதா?" என்று அண்ணி கேட்டாள்.

அவள் என்ன சொல்கிறாள் என்பது விளங்காத மாதிரி அவளைப் பார்த்தேன். பிறகு சற்றுப் பதட்டம் காட்டி, "எனக்கு ஒண்ணும் தெரியாது. முதலிலே சாப்பாடு போடுங்க, பசிக்குது, படிக்கணும்" என்றேன்.

"சாப்பாடு அப்புறம், முதல்லே எங்களுக்கு இனிப்பு எங்கே?" என்று உள்ளேயிருந்து முன்னியின் குரல் கேட்டது.

பதிலுக்கு, "ஐயே, இவரா இனிப்பு தர்றவரு? மாமனார் வீட்டு இனிப்பை வேணும்னா திங்கப்பாய்வாரு!" என்று கூறி அண்ணி சிரித்தாள். அவள் சிரிக்கும்போது அழகாக இருக்கும்

"இனிப்பாவது ஒண்ணாவது. காஞ்ச ரொட்டியிருந்தா மொதல்லே குடு. அதுவே எனக்குப் பெரிசு. இனிப்பையெல்லாம் நீங்களும், மாமனார் வீட்டுக்காரங்களுமே சாப்பிட்டுக்குங்க." என்று நான் தீவிரமான குரலில் சொன்னேன். "சாப்பிட்டுப் படிக்கணும், போர்டு பரீட்சை வருது"

அண்ணி சந்தோஷப்பட்டதாகத் தோன்றியது. சாப்பிட்ட பின் லாந்தரை முன்னால் வைத்துக்கொண்டு படிக்க உட்கார்ந்தேன். குளிர் ஆரம்பித்து விட்டது. ஆனால் இன்னும் தீவிரமாகவில்லை. படிக்க உட்கார்ந்தால் தூக்கம் சீக்கிரம் வந்துவிடுகிறது. அதிகம் படிக்க முடிவதில்லை. அதனால்தான் நான் கட்டிலை ஒரு பக்கம் நகர்த்தி வைத்துவிட்டு என் அழுக்கு ரஜாயிகளையும், மெத்தைகளையும் அதன் மீது போட்டுவிட்டு தரையிலேயே படுக்கை விரிப்பேன். தினமும் பன்னிரண்டு, ஒருமணி வரை படித்துவிட்டு, காலையில் நான்கு - ஐந்து மணிக்கு எழுந்துகொண்டு விடுவது என்று தினம் சபதம் செய்து கொள்வேன். நடப்பதுதான் இல்லை. வீட்டிலேயே நான்தான் பெரிய படிப்புப் படிப்பவன். எனவே, எனக்கு தனி லாந்தர் உரிமை உண்டு. மற்ற இருவரும் ஒரே லாந்தரில் படிப்பார்கள். மீதம் இருக்கும் ஒரு லாந்தரில் வீட்டுக்காரியங்கள் எப்படி நடைபெறும் என்று ரகளை

நடக்கும். அதுவும் லாந்தரை எரியவிட்டுவிட்டு நான் தூங்கிவிடும் போது அண்ணா பார்த்துவிட்டாரானால் மண்ணெண்ணெய் குறித்து நடக்கும் கலாட்டாவை சொல்லி முடியாது!

லாந்தர் முன்பாகத் தலையைக் குனிந்து கொண்டு, பார்வையைப் புத்தகத்தில் நாட்டிக்கொண்டு உட்கார்ந்திருந்தேன். மாத்யூ ஆர்னால்டின் 'ஸோஹ்ராப்-ருஸ்தம்' புத்தகம். ஆனால் கண்களை எவ்வளவோ பதிய வைத்தும் படிக்க முடியவில்லை. கடைசியில் அந்த முயற்சியைக் கைவிட்டுவிட்டு எதிர்பார்த்திருக்கத் துவங்கினேன். நினைவுக்கு வரும்போது பக்கத்தைப் புரட்டுவேன். அவள் என்னதான் செய்து கொண்டிருக்கிறாள் என்று பார்க்க விரும்பினேன்.. வீட்டு வேலையெல்லாம் முடிந்து, அவர்கள் வீட்டு சமாச்சாரங்களையெல்லாம் அண்ணியிடமும், முன்னியிடமும் சொல்ல, அவர்களிடம் எங்கள் வீட்டு சமாச்சாரங்கள் எல்லாம் கேட்டு ஆன பின் வருவாள் என்று தெரியும். நான் அந்தக் கணத்திற்காகவே காத்திருந்தேன். எவ்வளவு விஷயங்கள் பேசவேண்டும்!

யாரோ வரும் காலடி ஓசை கேட்டது. கீழே இதுவரை கேட்டுக் கொண்டிருந்த பேச்சொலி நின்றுவிட்டது. அம்மா வாயே திறக்கவில்லை என்பதைக் கவனித்தேன். அவள் தன் அலட்சியத்தை வெளிப்படையாகவே காண்பித்துக் கொண்டிருந்தாள். அம்மாவுக்குக் குளிர் தாங்காது. எனவே, மௌனமாக ரஜாய் போர்த்திக்கொண்டு ஜபமாலையை உருட்டிக் கொண்டிருப்பாள் என்று நினைத்தேன். ஏன் தாமதம் என்று கீழே போய் எட்டிப்பார்ப்போமா என்று யோசித்தேன் ஆனால் அண்ணன் தன் அறையில் விழித்துக் கொண்டிருந்தால் பார்த்துவிடுவார். இன்னொன்று, மேலேயிருந்து பார்த்தால் அம்மா அறையோ, உட்காரும் அறையோ தெரியாது. அப்படியும் பயந்துகொண்டே நான் தண்டத்திற்கு மாடிக் கைப்பிடிச்சுவரை ஒட்டிய சாலவம் வரை போய்ப்பார்த்துவிட்டு வந்தேன். பிறகு 'முன்னி மூக்குவரை ரஜாய் போர்த்திக்கொண்டு தன் கட்டிலில் படுத்திருப்பாள். அண்ணி, அம்மாவுக்கு கால்பிடித்துக் கொண்டிருப்பாள். பிரபா முன்னியின் கட்டிலருகில் ஒடுங்கி உட்கார்ந்து கொண்டு மற்றவர்கள் சொல்வதைக் கேட்டுக்கொண்டிருப்பாள்...' என்று கற்பனை செய்ய ஆரம்பித்தேன். சீக்கிரம் இவர்கள் பேச்சு முடிந்தால் நாளெல்லாம் வேலை செய்த களைப்பு தீரப்போய் படுக்கலாம் என்று அவள் வேண்டிக்கொண்டு உட்கார்ந்திருப்பாள்.

கதவருகே வந்து யாரோ நிற்பதாகப்பட்டது. நிழலைப் பார்த்தவுடன் அவள்தான் என்று தெரிந்துவிட்டது. நான் படித்துக் கொண்டிருப்பதைப் பார்த்துகொண்டு நிற்கிறாளா, அல்லது உள்ளே வரத் தயக்கமா என்று தெரியவில்லை. சிறிதுநேரம் சென்று ஓசைப்படாமல் உள்ளே வந்து சத்தமின்றி பெட்டியைத் திறந்தாள். துணிமணிகள் எடுக்கிறாள் என்று தோன்றியது. சிறிதுநேரம் அப்படியே உட்கார்ந்து யோசித்துக் கொண்டிருந்

தவள் முழங்காலில் கையை ஊன்றி எழுந்து போய்விட்டாள். களைத் திருப்பாள், உடை மாற்றப்போயிருப்பாள் என்று நினைத்தேன். என் புலன்கள் அனைத்தும் காதுகளில் வந்து குவிந்தன. மெல்லிய வளையல் ஓசையும், உடைகளின் சரசரப்பும், ஆரோக்கியமான இளம் பெண்ணின் உடல் நறுமணமும் தென்றலாக வந்து மறைந்துவிட்டன. மனம் மயங்கியது. மீட்டிய வீணையில் கம்பிகளாக நாடி நரம்புகள் அதிர்வு கண்டன. என்னுள் பரவிய இந்த விசித்திரமான ஆனந்தச்சூட்டை என்னால் புரிந்து கொள்ள முடியவில்லை. ஆனால் அந்தச் சூடு என் இரத்தநாளங்கள் தோறும் பாய்ந்து என் ரோமக்கால்கள் ஒவ்வொன்றிலும் நிறைந்தது. பழைய விஷயங்கள் எல்லாம் மறந்து போயின. எத்தனையோ ஆனந்த மயமான எதிர்கால தாம்பத்தியக் கனவுகள் வண்ணச் சித்திரமாக மனதில் விரிந்தன. இரண்டாம் ஆட்ட சினிமாவில் பார்த்த காட்சிகளும், கதையில் படித்த நிகழ்ச்சிகளும், காதல் விளையாட்டுகளும் மனத்தில் தோன்றின. எப்படியெல்லாம் நாங்கள் விளையாடுவோம், ஒருவரையொருவர் தொந்தரவு செய்துகொள்வோம், கிச்சுகிச்சு மூட்டுவோம், ஊடல் கொண்டு சமாதானம் ஆவோம் என்றெல்லாம் எண்ணினேன். புத்தகத்தை மூடிவைத்துவிட்டு அவளுடன் பேச வேண்டும்... என்று என் புத்தகத்தைக் தூக்கிக்கொண்டு பிரபா ஓடி விடுவாள்... நான் பொய்க்கோபம் காட்டி அவள் பின்னே ஓடுவேன். அந்த சிரிப்பு-கும்மாளம், மின்னலாய் பளீரிடும் சிரிப்புகள், மழையாய்ப் பெய்யும் அந்த உல்லாசம்... எல்லாம் என் கண்கள் முன்னே தெளிவாகத் தெரிந்தன.

மெல்லடி எடுத்து வைத்துச் சென்ற அவள் பாதங்களைப் பின்பற்றி என் பார்வையும் வாசல்வரை போயிற்று. கால்களில் மருதோன்றி இட்டிருந்தாள். குதிகால்களின் சிவந்த மேல் பகுதியில் இருந்த வெள்ளிக் கொலுசு, காலடி வைத்து எடுக்கும்போது அவ்வப்போது புடவையில் மறைந்து தெரிந்து அசைந்தது. ஒரு எட்டு எடுத்து வைத்து என் அருகில் அவள் கடந்த போது "பிரபா, கொஞ்சம் நில்லேன்" என்று என் உள்ளிருந்து நாக்கு நுனிவரை வந்துவிட்ட வார்த்தைகளை நான் எப்படி நிறுத்தினேன் என்று எனக்கே இன்றுவரை தெரியவில்லை. அவள் உடைமாற்றப் போயிருக்கிறாள், இதோ வந்துவிடுவாள் என்று எனக்கு நானே மிகவும் பிரயாசைப்பட்டு சமாதானம் சொல்லிக் கொண்டேன். நோட்டு, புத்தகம், படிப்பு எல்லாம் என் முன்னாலிருந்து மறைந்தன. எண்ணப் புயலில் சிக்கி 'நான்' மட்டுமே தனியே இருந்தேன். வீடுவாசல் மறந்தேன். நான் இருந்த இடம் மட்டும் உலகத்தினின்றும் தனியே பிரிந்து நின்றதாகத் தோன்றியது.

அப்போது மாடியின் மறுபக்கத்திலிருந்து, அண்ணனின் அறை யிலிருந்தோ என்னவோ அண்ணியின் மெல்லிய குரல் கேட்டது. "வேண்டாம் பிரபா! அங்கேயே போய்த் தூங்கும்மா, கட்டில்

இல்லைன்னா நான் வந்து போட்டுடறேன். இங்கே உன் அத்தான் வந்துடுவாரு."

அதற்குள் அவள் ஏதோ மெல்லிய குரலில் சொல்ல அண்ணி உரத்த குரலில் பதில் சொன்னாள், "அங்கே ஏன்தான் தூங்க மாட்டேங் கறியாம்?" அந்தக் குரலில் இருந்த ஏதோ ஒன்று எனக்கு அந்த மருத்துவப் பரிசோதனை என்கிற விஷயத்தை நினைவுபடுத்தியது. அதைத்தொடர்ந்தே அண்ணி பரிகாசமாக ஏதோ சொன்னாள். பிரபாவின் மெல்லிய குரல் சற்று உயர்ந்தது. அவளுக்கு அந்தப் பரிகாசம் பிடிக்கவில்லைபோலும். சிறிது நேர அமைதிக்குப் பிறகு அண்ணி மீண்டும் புத்திமதி சொல்லும் குரலில், "இதோ பாரம்மா பிரபா, சொன்னாக் கேளு, இப்படிப் பிடிவாதம் பிடிக்கக்கூடாது. நீ புதுசா வந்த மருமக, ஆரம்பத்திலேயே இப்படிப் பண்ணினா எப்படி? நீ வாழ வேண்டிய பொண்ணு, இதையெல்லாம் பாத்துக்கிட்டிருந்தா முடியுமா?" என்று எடுத்துச் சொன்னாள். அதற்குப் பதிலாக பிரபா உரக்க, உறுதியாக தீர்மானமாக, "வலுக்கட்டாயமாக அங்கே போய்த் தூங்கச் சொல்றீங்களா? விரட்டியடிச்சாலும் வாலைக் குலைச்சுக்கிட்டுப் போறதும், உதைச்சாலும், கால் பிடிக்கறதும் என்னால் முடியாதுக்கா. அவருக்கு போர்டு பரிட்சை வருது. நாளைக்கு ஒண்ணு ஆச்சுன்னா எல்லாரும் என்னைத்தான் சொல்லுவாங்க. நான் இங்கே வந்ததே அவருக்குப் பிடிக்கலே, என்னை அங்கே போய்த் தூங்கச் சொல்றீங்களே-" என்று பதில் சொன்னாள்.

ஒவ்வொரு சொல்லிலும் கர்வமும், அகங்காரமும் அம்பில் தோய்ந்த விஷமாகத் தோய்ந்திருந்ததாகப்பட்டது. துப்பாக்கியின் ரவை போல் என் மூளை நரம்புகளில் ஏதோ பாய்ந்தது. ஏழடுக்கு உப்பரிகையி லிருந்து யாரோ கொடூரமாகப் பிடித்துத் தள்ளிவிட்ட மாதிரி இருந்தது. நான் நிமிர்ந்து விறைப்பாக உட்கார்ந்தேன். புருவங்கள் நெரிந்து இணைந்தன. அடிபட்ட சீற்றத்தில் "ஹூம்" என்று உறுமல் வெளிப் பட்டது. அதில் என் நாசி புடைத்துச் சிவந்துவிட்டது. 'அப்படியா சேதி!' என்று கூரிய பார்வையைப் புத்தகத்தில் நாட்டியவண்ணம் நினைத்தேன். இந்த வாக்கியம் கூண்டில் அடைபட்ட சிங்கமாக மனத்துக்குள் அங்கும் இங்கும் சுற்றி எதிரொலித்தது. 'அப்படியா சேதி-! அப்படியா சேதி!!!

"அம்மா, நூலிழையில் தப்பித்தேன்! என்ன அனர்த்தம் நடந் திருக்கும்! கூப்பிட இருந்தேனே! நாக்கு நுனிவரை வந்துவிட்டதே! வாக்கியமே மனத்தில் உருவாகிவிட்டிருந்ததே! என்ன மயக்கம்! உணர்ச்சிவசப்பட்டு என்ன செய்ய இருந்தேன்! கூப்பிட்டு மட்டும் இருந்திருந்தால் வாழ்நாள் முழுவதும் அவமானமாகப் போயிருக்கும்.

'அம்மம்மா, என்ன அகங்காரம்! ஒவ்வொரு சொல்லிலும் விஷம். அவள் உரத்துப் பேசுவதை இரண்டாவது முறையாகக் கேட்கிறேன்

*என்று நினைக்கிறேன். என்ன கர்ணகடூரமான குரல்! இந்த ஈட்டி மாதிரியான குரலுக்கு முன்பா நான் பணிய இருந்தேன்.! இவளுக்கு முன்பா? சரியான சமயத்தில் கடவுள் காப்பாற்றினார். இல்லாவிட்டால் வாழ்நாள் முழுவதும் அழவேண்டி வந்திருக்கும். இவளுடைய அகங் காரத்தின் அடிமுடி காணவேண்டும். இரண்டு எழுத்துப் படித்தவுடன் பெரிய ராணி என்று நினைப்பு. அப்படித்தான் என்ன படித்திருக்கிறாள்? ஒரு மண்ணும் இல்லை. படித்திருக்கிறோம், அழகு என்று ரொம்பவும் தான் மண்டைக்கனம் என்று அண்ணி சரியாகத்தான் சொன்னாள். என்னதான் சொல்லுங்கள், பாம்பின்கால் பாம்புதான் அறியும். ஒரு பெண்ணைப்பற்றி ஒரு பெண்ணுக்குத் தான் தெரியும். ஆண்பிள்ளைக்கு என்ன தெரியும்? அவளை அடக்கி வைக்கவேண்டும் என்று சரியாக சொன்னாள் அண்ணி.'*

*என் தோள்கள் துடித்தன. இப்போதே போய் செமத்தியாக உதைத்து எல்லா கர்வத்தையும் சிதைத்து விடவேண்டும் என்று வந்தது. உதைக்கிற உதையில் படித்த படிப்பெல்லாம் மறந்துவிடவேண்டும். சமயத்தில் அண்ணன் அண்ணியை இழுத்து அறைந்து விடும்போது எனக்கு ரொம்ப நேரத்திற்கு மனசே ஒரு மாதிரி ஆகிவிடும். ஆனால் இப்போது அவர் செய்வதுதான் சரி என்று தோன்றியது. சும்மா இலட்சியவாதம் பேசிப் பயனில்லை. துளசிதாசர் பெண்களைப்பற்றி எழுதியது[1] எத்தனையோ ஆயிரம் வருட அனுபவத்தின் சாரம். பெண்ணா? அவள் பெரிய பெரிய ஆட்களையெல்லாம் ஆட்டிப்படைத் திருக்கிறாள். ஆனால் அந்தக் குரங்கு கோலெடுத்தால் சொன்னபடி ஆடும்.*

*சே, நானும் என்னென்னவெல்லாமோ மடத்தனமாக யோசித்து விட்டேன்! எதிர்கால தாம்பத்திய இன்பங்கள், விளையாட்டுகள், சிரிப்புகள் என்று என்னென்ன யோசித்து விட்டேன். அதுவும் இந்தப் பெண் பிள்ளையுடன்! முடியவே முடியாது. இன்று எல்லா தேவதைகள் சாட்சியாகவும், கடவுள் சாட்சியாகவும் நான் பிரதிக்ஞை செய்கிறேன். இந்தப் பெண்ணுடன் எனக்கு எந்த உறவும் கிடையாது, சமாதானமாகப் போவது என்பதே கிடையாது. சமாதானம் செய்து கொள்வது என்பது முடியவே முடியாத காரியம். உலகத்திலேயே பெரிய புத்திசாலி என்று தன்னை நினைத்துக் கொண்டிருப்பவளுடன் எப்படி ஒத்துப்போக முடியும்? முடியாது, முடியவே முடியாது.*

*உண்மையிலேயே என்னைப்போல் முட்டாள் தேடினாலும் கிடைக்க மாட்டான். என்னவோ அமர் சொல்லிவிட்டான் (அதுவும்*

---

1 துளசிதாசர் மேளம், வேலைக்காரன், பெண்கள், மிருகங்கள் இவர்கள் நால்வரும் அடிக்கப்பட வேண்டியவர்கள் என்று எழுதியிருக்கிறார். இதற்கு வேறு வியாக்கியானம் கூறுபவர்களும், இதையே இடைச் செருகல் என்பவர்களும் உண்டு.

உண்மையோ, பொய்யோ யார் கண்டது?) என்று வானத்திற்கும் பூமிக்குமாக கும்மாளம் போட ஆரம்பித்து விட்டேனே! அவனுக்குக் கிண்டலைப் புரிந்துகொள்ளத் தெரியவும் தெரியாது. ஆஹா- இந்த உலகம் எவ்வளவு மோசம்! சரியான வழுக்குப்பாறை, சற்று ஏமாந்தாலும் தீர்ந்தோம்! பிறகு வெள்ளத்தோடு போக வேண்டியதுதான். சமாளிக்க முடியாது. அதனால்தான் நம் முன்னோர்கள் பெண்ணென்னும் மாயப்பிசாசு என்று பாடி வைத்திருக்கிறார்கள்.

மீண்டும் மெல்லிய காலடியோசை, கொலுசு ஒலி, உடையின் சர சரப்பு கேட்டது. என் சிந்தனை தடைப்பட்டது. யாரோ வருகிறார்கள். வேறுயார், மகாராணியாகத்தான் இருக்கும். ஒருவேளை அண்ணிதான் எனக்கு புத்திமதி சொல்ல எழுந்து வருகிறாளோ! அண்ணியாக மட்டும் இருக்கட்டும், சண்டப் பிரசண்டமாக மூன்று மணிநேரம் பிடிபிடியென்று பிடித்துவிடுவேன்- இன்று மும்மூர்த்திகள் வந்தாலும், உலகத்தின் எந்த சக்தி வந்தாலும் சமாதானம் என்பதே கிடையாது, கிடையாது, கிடையாது. அவள் பணியப்போவதில்லை. அவள் அகங்காரம் அவளைப் பணியவிடாது. நான் மட்டும் சளைத்தவனா? அவள் கல் என்றால் நான் இரும்பு. யார் உடைகிறார்கள் என்று பார்த்துவிடுவோம்.

அதற்குள் அவள் வாயிற்படியருகே வந்துவிட்டாள். அண்ணியல்ல, அவள்தான். தயக்கமின்றி அவள் அருகாலைத் தாண்டினாள். வேறெதையும் பார்க்காமல் நேரே தன் சாமான்களிடம் போனாள். நான் சற்றும் கவனிக்காத மாதிரி விறைப்பாக உட்கார்ந்திருந்தேன். பெட்டியைத் திறந்து, மூடியைத் தூக்கி என்னென்னத்தையோ எடுத்தாள், வைத்தாள், பிறகு மூடினாள். எல்லாவற்றையும் கடைக்கண்களால் பார்த்துக்கொண்டோ, ஓசையினால் ஊகித்துக் கொண்டோ உட்கார்ந் திருந்தேன். அறையின் மறுகோடியில் நிறுத்தி வைக்கப்பட்ட கட்டிலுக்கு அருகே பூமியில் ஏதோ விரிக்கப்பட்டது. ஒரு பழைய புடவையைச் சுருட்டித் தலைக்குக் கீழ் வைத்துக்கொண்டு அவள் எனக்கு முதுகைக் காட்டிப் படுத்துக் கொண்டாள்.

'படுத்துக்கொள்ளேன், எனக்கென்ன?' என்று தலையை உதறிக் கொண்டு அவளை அலட்சியப்படுத்தி மீண்டும் ஸோஹ்ராப்-ருஸ்தம் காவியத்தில் மனத்தை நாட்ட முயன்றேன். இவளுக்குத் தன்னைப்பற்றி மனதில் என்னதான் நினைப்பு? அழகில் ரம்பை, அறிவில் சரஸ்வதி என்று நினைப்பா? கர்வம் தலை கொள்ளவில்லையே! நான் யார் என்று ராணியம்மாவுக்கு சீக்கிரமே புரிந்துவிடும். கொஞ்சம் சூடு பட்டால் உருகிவிட நான் ஒன்றும் மெழுகு பொம்மையில்லை. இல்லாவிட்டால் முதலிரவு அன்றே இவ்வளவு உறுதியாக மனத்தை அடக்கியிருப்பேனா! உலகத்தில் இதுமாதிரி வேறு உதாரணம் யாராவது காட்ட முடியுமா? அன்றைக்கே இவள் கர்வம் எல்லாம் தவிடுபொடியாகி

யிருக்கும். புருஷனை அடக்கி வைத்துக் கொள்வோம், வாலைக் குழைத்துக் கொண்டு கிடப்பான், என்று நினைத்துக் கொண்டு வந்திருப்பாள். நடக்கவில்லை என்றவுடன் இரண்டு-மூன்று நாளில் குழைந்து கொண்டு வருவான் என்று நினைத்திருப்பாள். ஹூம்... இந்த ஜன்மம் இல்லை, ஏழேழு ஜன்மம் நான் இப்படியே இருந்துவிடுவேன், தெரிந்து கொள். இரண்டு எழுத்து படித்துவிட்டாளாம். பெரிய கொம்பு என்று நினைத்துக் கொண்டுவிட்டாள். எப்படி விடைத்துக் கொண்டு படுத்துக்கிடக்கிறாள் பார்! கிட, ராத்திரிபூரா கிட, வாழ்நாள் முழுக்க கிட... ஏன் இப்படிக் கிடக்கிறாய் என்றுகூடக் கேட்கமாட்டேன், பார்த்துக்கொள். கிடந்து செத்துப்போய்விட்டால் தூக்கிக் கடாசி விடுவேன் அவ்வளவுதான். நான் பெற்ற தகப்பன் சற்று ஏறுமாறாகப் பேசினாலே பொறுத்துக் கொள்ள மாட்டேன், நீ எந்த மூலை... பிச்சாத்து.

'நீ வேண்டும் என்று யார் அழுதார்கள்? இவர்கள் எல்லாம் பிடித்து மாட்டிவைத்து விட்டார்கள். இல்லாவிட்டால் இந்த நிலையே வந்திருக்காது. அங்கேயே சௌக்கியமாக இருந்திருக்கலாம். நானும், சரி ஏதோ புத்திசாலியாக இருப்பாள் என்று எண்ணிவிட்டேன், புத்திசாலி யாவது, வெண்டைக்காயாவது; புத்திசாலித்தனம் என்றால் கிலோ என்ன விலை என்று கேட்பாள். கோபுரத்தைத் தான்தான் தாங்குகிறோம் என்று பொம்மை நினைக்குமாம். அப்பா என்ன மாதிரி வம்பில் இழுத்துவிட்டார் பார், இல்லாவிட்டால் விளையாட்டும், அதுவுமாக ஜாலியாக இருந்தேன். சரி ஆனது ஆயிற்று, இதையும் ஒரு கை பார்த்து விடுவோம்.'

இரவு வெகுநேரம் ஆகிவிட்டது. இரவுக் காவல்காரனின் ஒலி அவ்வப்போது ஒலித்தது. அதன் எதிரொலியும் எழுந்து அடங்கியது. சமயத்தில் தூரத்தில் ரயிலின் ஒலிகள் ஒலித்தன. அவற்றுக்கிடையே நாயின் குரைப்புகள் கொல்லன் உலையிடையே எலிக்குஞ்சுகள் ஓடுவதைப் போல அற்பமாகத் தோன்றின. எப்போதாவது ரிக்ஷா, அல்லது டாங்கா மணிகள் ஒலிக்க கடகடவென்ற ஓடி மறைந்தது. பிறகு மீண்டும் மௌனம் புரண்டு படுத்துத் தூங்கத் துவங்கிவிடும். ஆனால் நான் எதையும் கவனிக்காமல். என் முன்னால் பிரபாவின் கற்பனை உருவத்தை வைத்துக் கொண்டு வாக்குவாதம் செய்த வண்ணம் இருந்தேன். எனக்கு சொற்பொழிவுகள் ஆற்றும் வெறியே பிடித்திருந்தது. அவள் சார்பாகக் கற்பனை செய்து வைத்திருந்த கோபக் கூற்றுகளின் வீணான தன்மையையோ, என் முட்டாள்தனத்தையோ குறித்து வசவுகள், பிறகு அதை விடுத்து அடுத்த விஷயத்தை எடுத்துக் கொள்ளுதல். அவ்வப்போது ஆவேசத்திலும், செய்வதறியாச் சினத்திலும் பல்லைக் கடித்துக்கொண்டு, 'பிரபா! இன்னும் நான் யாருன்னு உனக்கு தெரியலே. தெரிஞ்சப்புறம் நான் எப்படிப்பட்ட ஆள்னு புரிஞ்சுக்குவே'

என்று உறுமுவேன். பிறகு எல்லையில்லாத இறுமாப்புடன் இதற்கவே எழுதப்பட்டது போன்று ஸோஹ்ராப்-ருஸ்தம் வரிகளைச் சொல்லிக் கொள்வேன். அது ருஸ்தமுக்கு ஸொஹ்ராப் அறைகூவல் விடும் கட்டம். ஸொஹ்ராப் சொல்கிறான்– "இன்றுவரை ஆயிரக்கணக்கான யுத்த களங்களைக் கண்டிருக்கிறேன். புறமுதுகு காட்டியதும் இல்லை, பகைவன் பிழைத்தான் என்பதும் இல்லை." 'பிரபாஜி, நினைவு வைத்துக் கொள்ளுங்கள் - நெவர் த ஃபீல்ட் வாஸ் லாஸ்ட், நாட் த ஃபோ ஸேவ்ட்"

நான் முதல் நாள் நடந்து கொண்டது முற்றிலும் சரிதான். அதில் தவறே கிடையாது. இப்படிப்பட்டவளிடம், இப்படித்தான் நடந்து கொள்ள வேண்டும். இனிமேல் இவள் கர்வத்தை ஒடுக்குவதே என் முதல் லட்சியம்.

இரவென்னும் மலைகளினின்றும், இருளென்னும் நதி பிரவகித்துக் கொண்டேயிருந்தது. அதன் அலைகளாகக் கணங்கள் நகர்ந்தன. இரவு சென்று கொண்டேயிருந்தது. வெகுநேரம் எரிந்ததால் லாந்தர் திரி ஒரு பக்கமாகத் தீய்ந்து ஒரு பக்கம் உயரமாக எரிந்தது. நான் மௌனமாக யோசித்துக் கொண்டிருந்தேன். தூங்க வேண்டும் என்கிற நினைவே யில்லை. எதிரே முடங்கியிருக்கும் பிரபாவை சமயத்தில் வெறுப்புடன் பார்த்துவிட்டு மீண்டும் சிந்தனையில் மூழ்கிவிடுவேன். "நான் அங்கே போக மாட்டேன்" என்று அவள் கூறியதைப் பழிப்புக்காட்டி சொல்லி விட்டு, 'பின் ஏன் வெட்கங்கெட்டுப் போய் வந்தாயாம். அவ்வளவு ரோஷம் இருந்தால் அப்படியே ஆற்றிலே குளத்திலே விழுந்து சாவது தானே!' என்று நினைத்துக் கொள்வேன். லாந்தர் திரி சமனமற்றுப் போய்ப் புகைவிட ஆரம்பித்தது. அதன் மேற்பக்கத்தில் கரி முடிச்சாகத் திரண்டது. கண்ணாடிகளில் கருமை படர்ந்தது.

# 7

மறுநாள் காலை ஏதோ பூர்வ ஜன்ம புண்ணியத்தினால் மிகப்பெரும் அபாயத்திலிருந்தோ, பெரும் குற்றம் இழைப்பதிலிருந்தோ தப்பிய மகிழ்ச்சி எனக்குள் பரவியிருந்தது. உணர்ச்சி வசப்பட்டுப் பெரும் தவறு செய்ய இருந்த நான் தெய்வாதீனமாக எப்படித் தப்பினேன் என்று நினைத்து சந்தோஷப்பட்டுக் கொண்டேன். ஏதோ கடவுள் கிருபைதான். இல்லா விட்டால் குடி மூழ்கிவிட இருந்தது. ஆனது ஆயிற்று, இனிமேல் இவளை ஒரு கை பார்த்துவிட வேண்டியதுதான், பிரபா நினைவு வரும்போதெல்லாம் பற்கள் நறநறத்தன. இப்போதுதான் கண்டதுபோல

"இவ்வளவு திமிரா?" என்று உறுமுவேன். சாப்பிடும்போது அண்ணியிடம் போர்டு பரிட்சை என்று சொல்லிவிட்டேனாம், அதற்கு ஒரு குத்தலா? இருக்கட்டும் பார்த்துக் கொள்கிறேன். நேற்றைய விஷயங்கள் பொல்லாத சொப்பனமாகவும், அதன் பயத்தில் இன்னும் நெஞ்சு 'திக்திக்' என்று அடித்துக் கொள்வதாகவும் தோன்றியது.

சாப்பிடும்போது அண்ணியிடம், "அண்ணி நான் பாஸ் செய்யணுமா, வேண்டாமா?" என்று கேட்டேன். அண்ணி உப்பிய ரொட்டியை அடுப்பிலிருந்து சிமிட்டாவால் எடுத்து அப்பள மணையில் இட்டு ஆவியைப் போக்கிக் கொண்டிருந்தவள் திடுக்கிட்டு, "என்ன தம்பி, நான் என்ன பண்ணினேன்?" என்று கேட்டாள்.

"பண்றதுக்கு உங்களைவிட்டா வேற ஆளா இல்லே, நீங்கல்லாம் மனசிலே என்னதான் நெனச்சுக்கிட்டு இருக்கீங்க?"

"என்ன சொல்றே, நேரா கேட்டால்ல பதில் சொல்ல? புதிர் போடாம சொல்லு." அவள் தட்டில் பிசைந்து வைத்த மாவிலிருந்து ஒரு விள்ளலை எடுத்துக் கொண்டே தலைகுனிந்த வண்ணம் கேட்டாள். அவளுக்கு நான் என்ன சொல்கிறேன் என்று புரிந்துவிட்டிருக்க வேண்டும்.

"உங்களுக்குத் தெரியாதா, நான் சொல்றதுக்கு என்ன இருக்கு? என்னை இதிலே மாட்டாதீங்க, மாட்டாதீங்கன்னு முன்னயே சொன்னேன். உங்க காதிலேயே ஏறலே, இப்ப பெயிலாயிட்டேன்னா இந்தக் காலத்துப் பசங்க அப்படி, இப்படின்னு ஒப்பாரி வைப்பீங்க. கொஞ்சம் படிக்க வசதியா இருக்கணும்தானே தனி அறை ஒழிச்சு கிட்டேன். இப்ப அதிலே யார் யாரையே அனுப்பி ஊரையே நிரப்பினா எப்படிப் படிக்கிறது, இன்னும் மூணுமாசம்தானே, அது வரைக்கும் பொறுக்கக் கூடாதா?" நான் உரக்கவே பேசினேன். அக்கம் பக்கத்தில்தான் எங்காவது இருப்பாள் என்று தெரியும், அப்போது நினைக்காவிட்டாலும், பிற்பாடு ராத்திரிப் பேச்சுக்கு சரியான பதிலடி கொடுத்துவிட்டோம் என்று சந்தோஷப்பட்டுக் கொண்டேன்.

"அது ஏன் பொறுக்கலேன்னா தம்பி..." என்று கிழவி மாதிரி அண்ணி ஆரம்பித்தாள், "என்னால முடிஞ்சதுன்னா உனக்கில்லாம யாருக்கு செய்யப்போறேன்? உனக்குப் பிடிக்காத வேலையை நான் செய்வனா? என் நிலைமைதான் உனக்குத் தெரியுதே! முடிஞ்சவரை தான் செய்ய முடியும். அப்புறம் கல்லூரிக்கு நேரமாச்சுன்னா உனக்குத் தானே கஷ்டம். முன்னியோட இப்பவே கூடமாட வேலை செய்ய ஆரம்பிச்சா சமாளிச்சுடலாம். மகாராணிகிட்டே வேற ஒண்ணுந்தான் எதிர்பார்க்க முடியாது. இவ்வளவு செஞ்சாலே பெரிய காரியம், என்னைக்கேட்டா அதிலேயே ஆயிரம் குத்தம் இருக்கும்," பிறகு சிறிது மௌனத்திற்குப் பிறகு, "எப்படி ஆக்கிப்போடறான்னு பாப்போம்," என்றாள்.

“நீங்க சொல்றது எல்லாருக்கும் உள்ளதுதானே! அப்புறம் என்னை மட்டும் தனியா ஏன் வாட்டறீங்க? இதிலே என் படிப்பில்லே முழுசா வீணாப்போவுது?”என்று நான் புருவங்கள் நெரியக் கேட்டேன்.

“அம்மாவுக்கு மட்டும் சந்தோஷமா? அங்கே இவ போய் வச்ச வத்தியெல்லாம் அமர் தம்பி வந்து சொல்லிச்சு. நாம பணத்தாசை பிடிச்சவங்களாம்– அப்படியாம், இப்படியாம். இனிமே இது உன் வீடு! உன் வீட்டைப் பத்தியே தூத்திப் பேசினா அது யாருக்கு அவமானம்? பணம் யாருக்குத்தான் வேணாம்? உங்கப்பனுக்கு வேணாமா? ஒரே பொண்ணு, ஒண்ணே ஒண்ணு, கண்ணே கண்ணு– உனக்காவது ஒழுங்கா செஞ்சாரா? அட வரும்போது சுமந்துகிட்டா வந்தோம். போகும்போது அள்ளிக்கிட்டுப் போகப் போறமா? வெறுங்கையா வந்தோம், வெறுங்கையாப் போகவேண்டியதுதான்– கல்யாணம், காட்சியிலே, செலவு செய்யாத பணம் என்னத்துக்கு? ஏதோ இந்த மாதிரி சில சந்தர்ப்பத்திலே செய்யறதுக்குத்தானே பணம்–” என்றவள் சட்டென்று மௌனமானாள். பையன் பிறந்தால், அவள் பிறந்தகத்திலிருந்து என்ன சீர் வரும் என்கிற கவலை நினைவுக்கு வந்துவிட்டது என்பது எனக்குப் புரிந்துவிட்டது. அதனால்தான் அண்ணி சட்டென்று நிறுத்தி விட்டாள். அவள் மாவை எடுத்து ரொட்டி செய்வதில் மும்முரமாக ஆழ்ந்து விட்டாள். நான் சாப்பாட்டில் ஈடுபட்டேன். பொம்மனாட்டிகளின் இம்மாதிரி பேச்சுக்களில் எனக்கு ஆரம்பம் முதலே ஈடுபாடு கிடையாது. சற்றுப் பொறுத்து, “அதெல்லாம் சரி, நான் என்ன செய்ய, அதைச் சொல்லுங்க” என்று கேட்டேன்.

“நீயே சொல்லு தம்பி, வேற எங்கே படுக்கச் சொல்றது, இருக்கறது ரெண்டே அறை.”

“எனக்கென்ன, எங்கியாவது போகட்டும், என்னை ஆளை விடுங்க, நான் படிக்கணும்.” என்று எரிந்து விழுந்தேன்.

“என்ன தம்பி இப்படிப் பேசறியே–” என்று அண்ணி பரிவு காட்டினாள், “பொண்ணு இப்பதான் மறுவீடு வந்திருக்கா, நீ இப்படிப் பேசறியே!”

“மொத தடவை வந்தா என்ன? மறுதடவை வந்தா என்ன? எனக்கும் அவளுக்கும் சம்மந்தமே இல்லேங்கும்போது ஏன் அவளை என் தலைல கட்டறீங்க–?”

“ஐயையோ, இவ்வளவு சத்தம் போடாதே தம்பி. நான்தான் உனக்கு சொல்லிக்கொடுக்கிறேன்னு முன்னி சொல்லிடுவா.” சிறிது மௌனத்திற்குப் பிறகு குரலில் பரிவையும், மென்மையும் காட்டி, “உனக்கு ஏன் அவளைக் கண்டாலே பிடிக்கலே தம்பி?” என்று விசாரித்தாள்.

“சொல்லட்டுமா” என்று தயக்கமில்லாமல் ஆரம்பித்தேன். “மொதல்லே நான் இப்ப கல்யாணம் செஞ்சுக்கவே விருப்பப்படலே.

வலுக்கட்டாயமா என் கழுத்திலே கட்டிட்டீங்க. அப்புறம் எனக்கு அவ மூஞ்சியே பிடிக்கலே. பிறத்தியார் வலுக்கட்டாயப்படுத்தினா ஆசையுமா வந்துடும்? உங்களாலே ஆனதை நீங்க செஞ்சுட்டீங்க. அதுக்குமேலே எல்லாத்துக்கும் நீங்களேவா குத்தகை?"

"உனக்கு ஏன் பிடிக்கலேன்னு தெரியலே. அம்மாவுக்கும், முன்னிக்கும் அவ மேல வருத்தம் இருந்தாலும் இதுவரைக்கும் இவ்வளவு அழகான மாட்டுப்பொண்ணு வரலேன்னுதான் சொல்றாங்க."

"இருக்குமா இருக்கும். ஆனா எனக்கொண்ணும் பெரிய அழகியா தெரியலே!" என்று எங்கோ யோசனையுடன் நான் சொன்னேன்.

"பெத்தவரு என்னமோ இவ படிக்கிறதுக்கு இருபதாயிரம் ரூபாய் செலவழிச்சுட்டேன், ஹார்மோனியம் கத்துக்குடுத்திருக்கேன், பாட்டு கத்துக் கொடுத்திருக்கேன். பிரமாதமா தையல், பின்னல் வேலை கத்துக் கொடுத்திருக்கேன். ரொக்கமா பணம் தரலேன்னா என்னான்னு சொன்னாரு- இங்கே என்ன பெரிசா ஆபீஸ் வேலை வெட்டிப்புரட்ட றான்னு பாப்போம்" என்றவள் கிண்டலாக, "இல்லேன்னா ஒருவேலை செய்வோமா, காலைலே எழுந்திருச்சவுடனே, "பள்ளியெழுந்தருளாயே" என்று பாடச் சொல்லுவோமா?" என்று சொல்லி வெகுநேரம் அதை நினைத்து சிரித்துக் கொண்டிருந்தாள்.

டம்ளரிலிருந்து மீதித் தண்ணீரை ஒரு மடக்கில் குடித்த நான், "போதும் கிண்டல். உங்களைக் கையெடுத்துக் கும்பிடறேன், என்னைப் படிக்க விடுங்க" என்று சொன்னேன்.

"சரி, அப்போ அம்மாகிட்டே பேசிப் பாக்கறேன். எனக்கு வேற இடம் தெரியலே."

"அம்மாகிட்டே பேசுங்க, அண்ணன்கிட்டே பேசுங்க, என்னை ஆளை விடுங்க."

புத்தகங்களை எடுத்துக் கொண்டு கல்லூரிக்குப் போகும்போது ஒரு விஷயம் மனத்தில் தோன்றியது "எல்லோரும் அவளை அழகு அழகு என்கிறார்களே, நாம் ஒருமுறையாவது அவள் முகத்தைப் பார்க்கத்தான் வேண்டும்," அதற்குள், 'கூடாது, கூடவே கூடாது' என்று எனக்குள்ளிருந்து ஒரு குரல் கேட்டது. இப்படி ஒரு பலவீனத்திற்கு இடம் கொடுக்கவே கூடாது. கொஞ்சம் இடம் கொடுத்தால் எங்கே போய்விடுவோம் என்று தெரியாது. நாள் முழுவதும் 'நடந்ததே நல்லது' என்று மனதில் தோன்றியது. 'வீண் தொல்லையிலிருந்து தப்பினோம், இல்லாவிட்டால் பெரிய பிராண சங்கடம். இனிமேல் கவலையில்லாமல் படிக்கலாம். என்னை நானே உருவாக்கிக் கொள்ள இதுவல்லவோ தருணம்! உலகத்தில் அவனவன் பாடு அவனவனுக்கு. மற்றவர்களைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொண்டிருக்க முடியுமா? அதோடு என் வழி சாதாரண ஜனங்களுடைய வழியல்ல, ஒன்றை சாதிக்கிற வழி என் பதையும் மறந்துவிடக்கூடாது. எல்லாவற்றையும் மறந்துவிட்டு நன்றாகப்

படிப்பேன். நன்கு உழைப்பேன். உலகம் எப்படிப் போனாலும் சரி.'

இன்றைக்கு நாள் முழுவதும் ரொம்ப சந்தோஷமாக இருக்கிறது. ஆனால் உள்ளுக்குள் அவளுடைய அலட்சியம் உறுத்திக் கொண்டேயிருந்தது. இதுவரை நான் யாருடைய அலட்சியத்தையும் சகித்துக் கொண்டதில்லை.

இரவு அவள் என் அறையில் தூங்கவில்லை. முன்னியிடம் தூங்கினாளா, அண்ணியிடம் அல்லது அம்மாவிடம் தூங்கினாளா தெரியவில்லை. நான் பார்க்கவும் இல்லை. முன்னி பட்டுக்கொள்ளாமல் இருந்ததும், அம்மாவின் மௌனமும் உண்மையில் எனக்கு ஆச்சரியத்தை விளைவித்தன. அப்போதும் முன்னி பிரபா பக்கம் என்று எனக்குத் தோன்றியது. அவள் முன்னியிடம்தான் தூங்கியிருப்பாள், எங்கே தூங்கினால் என்ன? அவளுக்கு எப்படிப் பாடம் கற்பிக்கலாம் என்று வெகுநேரம் யோசித்துக் கொண் டிருந்தேன். நான் அவளை சந்தேகத்துக் கிடமின்றி அலட்சியப்படுத்தி அவமானமும் படுத்திவிட ஒரு வாய்ப்பை இழக்க சற்றும் தயாராக இல்லை. யோசித்ததில் அவளிடம் பாராமுகமாக இருப்பது சரியாக இருக்காது என்று பட்டது. தனக்கு எதற்குத் தண்டனை கிடைக்கிறது என்று அவளுக்கு எப்படித் தெரியும்? நான் அவள் திமிரையல்லவா அடக்க வேண்டும். தோள் தட்டிக்கொண்டு களத்தில் இறங்கிவிட்டதாக நான் உணர்ந்தேன்.

காலையில் குளித்து முடித்து ஆனபின் அண்ணியிடம், "அண்ணி, ஏன் ரொம்ப கஷ்டப்படறீங்க. இப்போ நீங்க ஓய்வா இருக்கணும். வீட்டிலே முன்னி இருக்கா, மத்தவங்களும் இருக்காங்க. நீங்க ஒண்டிதானா ஆளு? எல்லாரும் சாப்பிடறாங்கல்லே, வேலை செய்ய வேணாம்? அதுக்கு வெளியிலேர்ந்து ஆளா வைக்க முடியும்?" என்றேன்.

ராத்திரி எச்சில் பாத்திரங்கள் குவியல்களுக்கு இடையே பிரபா ஒவ்வொரு பாத்திரமாக விளக்கிக் கொண்டிருப்பதை நான் பார்த் திருந்தேன். மனத்தில் ஒரு குரூர திருப்தியுடன் சிரித்துக் கொண்டேன். "ஒரே பெண்ணாம்! அவள் இதுமாதிரி பத்துப் பாத்திரங்களைத் தொட்டே இருக்கமாட்டாள். இப்போது படட்டும்."

அதன்பின் வீடு முழுவதற்கும் சாப்பாடு தயார் செய்யும் வேலை அவளுக்குக் கொடுக்கப்பட்டுவிட்டது. அண்ணி இதற்கே காத்திருந்த மாதிரி எல்லா வேலையையும் அவள் தலையில் போட்டுவிட்டாள். இரண்டு நாள் கூடமாட இருந்துவிட்டுப் பிறகு முன்னியும் ஒதுங்கிக் கொண்டுவிட்டாள். உண்மையில் அவளுக்குத் தனிமையில் உட்கார்ந்து அழுவதும் யோசிப்பதுமே மிகவும் பிடித்த காரியம். ஆனால் பேச்சளவில் எப்போதும் பிரபாவுக்குப் பரிந்துகொண்டுதான் வருவாள். எப்போதாவது சாப்பாட்டையோ, ரொட்டியையோ குறைசொன்னால் அவள் பிரபா பக்கம் பேசுவாள். "நாளெல்லாம் அடுப்படியிலே வேகறாங்க. அவங்களும் மனுஷிதானே! அதிலே நொட்டை சொல்றீங்களே!" என்பாள். இரண்

டொரு தடவை இது தொடர்பாக முன்னிக்கும் எனக்கும் பலத்த சண்டையே வந்துவிட்டது. "அப்படீன்னா நீயும் இருந்து வேலை செய்யறதுதானே" என்று கேட்டுவிட்டேன்.

ஒருமுறை "அண்ணி, பையன் பொறந்தா எனக்கு முழுசா ஒரு உடை எடுத்துக் குடுத்துடணும். அப்புறம் அப்படி இப்படின்னு சொல்லக் கூடாது. இப்பவே சொல்லிவிட்டேன், ஆமாம்." என்று முன்னி அண்ணியிடம் சொல்லிக் கொண்டிருந்தது காதில் விழுந்தது. நான் தென்பட்டவுடன் "நான் அண்ணிகிட்டே பந்தயம் கட்டியிருக்கேன்." என்றாள். என்னைப் பார்த்ததும் அண்ணிக்கு முகம் சிவந்துவிட்டது. அண்ணி முகம் வெளுத்துக் காணப்பட்டாலும் ஒரு ஆழ்ந்த பொலிவுடன் விளங்கினாள். இவ்வளவு அழகாக அவள் எப்போதும் தோன்றியதில்லை.

அவள் முன்னியை ஒரு தள்ளுதள்ளி வெட்கப்பட்டுக் கொண்டே, "சீ போ, எப்பப் பாத்தாலும் இதே பேச்சு. ஆம்பளைங்களுக்கு முன்னாடி இப்படியெல்லாமா பேசறது? கொஞ்சமாவது யோசிச்சுப் பேசறதில்லை!" என்றாள்.

என்ன விசித்திரமான வீடு. தங்கை, புடவை-ரவிக்கை வாங்க முன்ன தாகவே அடிபோட்டுவிட்டாள். வருகிறவர்கள் அனைவரும் இதுபற்றியே பேசுகிறார்கள். எல்லோருக்கும் பையன் பிறக்கவேண்டும் என்றுதான் ஆசை. அதனால்தானோ என்னவோ எப்போதும் 'பையன் பையன்' என்றே பேசினார்கள். ஆனால் அம்மாவிடமும், அண்ணி யிடமும் இப்படிப் பேசினால், அந்த இனிய கற்பனைக்குக் கண்பட்டு விடப்போகிறதே என்றோ என்னவோ அவர்கள் அதை மறுத்து, "எல்லாம் கடவுள் செயல் அம்மா. பொண்ணு பொறந்தா தடுக்கவா முடியும்!" என்பார்கள். இப்படிச் சொல்லிச் சொல்லி ஒருவேளை பெண் பிறந்துவிட்டால் அப்போது அதிகம் கஷ்டப்படாமல், அதைத் தாங்கிக் கொள்ளத் தங்களைத் தாங்களே பழக்கப்படுத்திக் கொள்கிறார் களோ என்று தோன்றும். வீட்டில் முதல்முதல் பேரன் பிறக்கப் போகிறான் என்பதில் அப்பா, அம்மா எல்லோருக்கும் சந்தோஷம்தான் என்றாலும் பையன் பிறந்தால் ஏற்படக்கூடிய செலவுகளை யோசித்துக் "கடவுள்தான் இருக்கிறார்." என்பார்கள். பையன் பிறந்தால் ஊர்ப்பட்ட செலவுகள் வரும். பெரிய விருந்து ஒன்று வைத்தாகவேண்டும். ஆக பையனா, பெண்ணா என்று நம்பிக்கையிலும் அவநம்பிக்கையிலுமாக நாட்கள் கழிந்தன. அண்ணி தொளதொளப்பான உடையில் அதிகம் நடக்காமல் வேலை செய்யாமல் அவ்வப்போது ஏதோ கற்பனை செய்து தனக்குத்தானே புன்சிரிப்பு பூத்துக் கொண்டு இருந்து வந்தாள்.

கடைசியாக ஒருநாள் இரவு இரண்டு மணிக்கு ஏக ரகளைக்குப் பிறகு அண்ணா ஒரு பெண் குழந்தைக்குத் தந்தையானார். அம்மா தலையில் அடித்துக் கொண்டு 'முதலில் பொண்ணுதானா' என்றாள். எதிர்பார்த்த மகிழ்ச்சி கிடைக்காவிட்டாலும் அனைவரும் மகிழ்ச்சியாக

இருக்க முயல்வதாகத் தோன்றியது. மருத்துவச்சி எவ்வளவோ கிடைக்கும் என்று எதிர்பார்த்து வந்திருந்தாள். அவள் முகம் தொங்கிப் போய்விட்டது. செவிலிப் பெண் குழந்தையைக் குளிப்பாட்டி சுத்தம் செய்வதில் மும்முரமாக இருந்தாள். கேஸ் சிக்கலாக இருக்கும் என்று மருத்துவச் சிக்குத் தோன்றியதால் செவிலிப் பெண்ணைக் கூப்பிட வேண்டியதாகி விட்டிருந்தது. வீடு பூராவும் கார்பாலிக் நெடி. "தண்ணீர் சுட வை," "அதை எடுத்துப்போ, இதை எடுத்துப் போ" என்று வீடே அல்லோல கல்லோலப்பட்டது. ஒருவரும் தூங்கவில்லை. அண்ணிக்கு எப்படி இருந்ததோ தெரியாது. ஆனால் அப்பா, இப்போதைக்கு செலவில்லையே என்று உள்ளூர நிம்மதிப் பெருமூச்சுவிட்டார். இப்போது ஊரார் கேட்டால், "பொண்ணு பொறந்ததுக்கு யாராவது விருந்து வைப்பா ளாய்யா!" என்று சொல்லிவிடலாம், மேலுக்கு "மொதல் வெலங்கு விழுந்தாச்சு" என்று சொன்னார்.

"சித்தப்பா ஆயிட்டீங்களே! இனிப்பு எங்கே" என்று முன்னி என்னைச் சீண்டினாள். எனக்கு சித்தப்பா ஆனதில் மகிழ்ச்சியோ, இல்லையோ வீட்டில் வேலை நிறைய ஆகிவிட்டதில் பரம சந்தோஷம், எல்லாம் பிரபா தலையில்தானே விழும்? இப்போது அண்ணியை கவனித்துக் கொள்ளவே ஒரு ஆள் தனியாக வேண்டும். வயசான சீக்காளி அம்மாவால் என்ன செய்ய முடியும்? ஜபமாலையை உருட்டிக் கொண்டு "முன்னி அந்த வேலை ஆச்சா, இந்த வேலை ஆச்சா" என்று உட்கார்ந்தபடியே கேட்பதோடு சரி. இல்லாவிட்டால் நாவிதன் வீட்டுக்காரிக்கு ஏதாவது வேலை சொல்வாள். அண்ணியின் காரியங்களை கவனிக்க, நாலைந்துநாள் நாவிதன் வீட்டுக்காரி வீட்டில் இருப்பாள். முன்பெல்லாம் ராத்திரி சாப்பாட்டை முடித்துவிட்டு அண்ணிதான் அம்மாவுக்கு கால் பிடித்துவிடுவாள். அப்போதுதான் வீட்டு நிலவரம் பற்றி அன்றாட ரிப்போர்ட், ராமாயணம் எல்லாம். அம்மாவும் அப்பாவும் முன்னி கையால் சமைத்ததைச் சாப்பிட மாட்டார்கள். எனவே பிரபாதான் எல்லாம் செய்தாக வேண்டும்.

பிரபா காலையில் எப்போதோ எழுந்து மருந்து எல்லாம் தயார் செய்ய ஆரம்பித்துவிடுவாள். காலையில் ஆறு மணிக்குள் அண்ணி வேலைகளை முடித்துவிடுவாள். பிறகு பற்றுப்பாத்திரங்கள் விளக்கி, முற்றத்தைக் கழுவிவிட்டு குளித்து முடித்து, கல்லூரிக்குப் போகிறவர் களுக்கு நேரமாகி விடக் கூடாதே, அண்ணா சாப்பிடாமல் போய்விடக் கூடாதே என்று பரக்கப்பரக்க சமையலறைக்குள் நுழைவாள். சமையல் வேலை ஒழிய பனிரெண்டு மணி ஆகிவிடும். பற்றுச்சாமான்களை சடுதியில் விளக்கி வைத்துவிட்டு கொஞ்ச நேரம் பருப்பு, கோதுமை சுத்தம் செய்து வைப்பாள். அல்லது அமர், கும்வர் துணிமணிகளின் தையல் வேலை இருந்தால் அண்ணி பக்கத்தில் உட்கார்ந்து செய்வாள். பெயர் வைக்கும் அன்று முப்பது - நாற்பது பேருக்கு சாப்பாடு

போடவேண்டும். சத்தியநாராயண கதாகாலட்சேபத்திற்கு[1] ஏற்பாடு செய்யப்படும். அதற்கு வேண்டிய பருப்பு, மசாலா சாமான்கள் ஆயத்தப்படுதத வேண்டும். மாலை மூன்று மணிக்கெல்லாம் மீண்டும் அடுப்பு புகைய ஆரம்பித்துவிடும். முந்தானையில் கண்களைத் துடைத்துக் கொண்டு அவள் குனிந்து குனிந்து அடுப்பு ஊதிக் கொண்டே இருப்பாள். முகம் சிவந்துவிடும். ராத்திரி எட்டு - ஒன்பது மணிவரை இது நடக்கும்... அப்புறமும் அண்ணி வேலைகள் இருக்கும். நான் திவாகர் வீட்டிலிருந்து இரவு தாமதமாக வரும்போது அவள் அம்மாவின் கால்மாட்டில் அமர்ந்து அவளுக்குக் கால் பிடித்துக் கொண்டிருப்பாள். இதிலேயே மணி பதினொன்று பனிரெண்டு ஆகிவிடும்.

இவ்வளவு வேலைகளையும் அவள் மௌனமாக அலட்டிக் கொள்ளாமல் ஒன்றும் சிரமமே இல்லாததுபோல இயந்திரம்போல செய்தது தான் எனக்கு இதில் பெரிய ஆச்சரியம். எந்த வேலை புதிதாக வந்தாலும் அலுப்பு சலிப்பு இல்லாமல் இயல்பாக ஏற்றுக் கெண்டு செய்வாள். எனக்கு இதைக்கண்டால்தான் எரிச்சல். அவள் சிறிது அலுப்பு சலிப்பு காட்டினால் நான் சந்தோஷப்பட்டுக்கொண்டு, "என்னம்மா மகாராணி, இப்ப எப்படி இருக்கு!" என்று மனத்திற்குள் கேட்டுக் கொள்ளலாம்.

முதலில் தலையைக் குனிந்து கொண்டு வேலை செய்து கொண் டிருந்த வரை யாரும் கவனிக்கவில்லை. பிரபா முக்காடிட்டுக் கொள்வ தில்லை என்பதை இப்போதுதான் எல்லாரும் உணர்ந்தார்கள். அப்பா உள்ளே வரும்போது ஒரு இருமல் இருமிவிட்டுத்தான் வருவார். முதலில் பிரபா முக்காடிட்டு முகம் மறைக்காமல் இருப்பதைக் கண்டு தன் சத்தத்தை அவள் கவனிக்கவில்லையோ என்று நினைத்தார். பிறகுதான் பிரபா முக்காடு இடுவதில்லை, வெறுமனே தலையைக் குனிந்து கொள்கிறாள் என்று புரிந்தது. அவர் அம்மாவிடம், "மகளுக்கும் மருமகளுக்கும் ஒரு வித்தி யாசம் வேண்டாம்? பொண்ணும் தலையைப் பரத்திப் போட்டுக்கிட்டு மூஞ்சியைக் காட்டிக்கிட்டு நிக்கிறா, மாட்டுப் பொண்ணுக்கும் முந்தானை பத்திய ஞாபகமே கிடையாது." என்று சொன்னார். இதுபற்றி முதலில் ஏக ரகளை நடந்தது. அண்ணியின் குத்தல்கள் ஒரு பக்கம் இருக்கவே, அம்மாவும் தன் பங்குக்கு ஜபமாலை உருட்டுவதை விட்டு, "இந்தாடியம்மா, உங்க வீட்டிலே முக்காடு போடமாட்டாங்களா இருக்கும். இந்த வீட்டு வழக்கத்தை மாத்தாதே. அட என்கிட்டே முக்காடு போட வேணாம், பெரியவங்க கிட்டேயாவது ஒரு மட்டுமரியாதையா நடந்துக்க வேணாம், இதென்னாடி அக்கிரமம், எங்கேயும் கண்டதுமில்லே கேட்டதுமில்லே, ஊரே சிரிக்குது.

---

1. இது ஒரு புராணக்கதை, நேர்ந்துகொண்டோ, விசேஷ சந்தர்ப்பங்களிலோ வீட்டில் இந்த கதாகாலட்சேபத்திற்கு ஏற்பாடு செய்வார்கள்.

காறித்துப்புறாங்க. நீங்க உங்க வீட்டிலே அவுத்துப்போட்டு ஆடுவீங்களா இருக்கும், இங்கே அதெல்லாம் நடக்காது". என்று சத்தம் போட்டாள், அண்ணன் ஓரிருமுறை என்னையும் கண்டித்தார். "ஏண்டா சமர், உன் பொண்டாட்டியைக் கண்டிச்சு வைக்கக் கூடாதா? அம்மா-அப்பா எல்லாருக்கும் வருத்தமாக இருக்குபாரு. இவங்க இருக்கற வரைக்கும் மரியாதையாவது வச்சுக்கணுமில்லே. முக்காடு போட்டுக்கறது அவசியம்னு எனக்கும்தான் படலே, ஆனா வீட்டுப் பழக்கமாச்சே. உன் பொண்டாட்டி என்னன்னா காதிலேயே போட்டுக்க மாட்டேங் கறாளே, அம்மா இவ்வளவு பேசறதுக்கும், என்னமோ தெருநாய் குலைக்குதுங்கற மாதிரி இருக்கிறாளே, இவ எப்படிப்பட்டவாளா இருப்பா?" அவர் சொன்னது உண்மைதான். அவள் வாய்திறந்து ஒன்றும் சொல்லவில்லை. ஆனால் இவ்வளவு ஏச்சுப் பேச்சுகளுக்குப் பிறகும் முக்காடு மட்டும் போடவேயில்லை. காதிலேயே வாங்கியதாகத் தெரியவில்லை. வாயைக்கூடத் திறக்கமாட்டேன் என்கிறாளே என்று அம்மாவுக்கு எரிச்சல். அவள் இதில் கல் மாதிரி இருந்தாள். அம்மா அடிக்கடி, "என்னம்மா, இப்படி வெக்கங்கெட்டு நடந்தா எப்படி! தலைல முக்காடு போட்டா நீ என்ன குறைஞ்சா போயிடுவே! இன்னிக்குவரைக்கும் தாவாக்கட்டை வரைக்கும் முக்காடு போட்டுத் தான் இந்த வீட்டிலே வழக்கம்மா." என்பாள்.

சித்தாந்த ரீதியாக நானும் பர்தாமுறைக்கு எதிரிதான். சரித்திர மாணவன் என்கிற முறையில் முஸ்லீம்கள் வந்த பிறகே இந்த பர்தா முறை பரவிற்று என்று எனக்குத்தெரியும். ஆனால் பர்தாவைக் கை விடுவது நடைமுறைக்கு வந்தபோது அதிர்ச்சியாக இருந்தது. அப்பா, அம்மா எல்லாருக்கும் முன்பாக முக்காடில்லாமல், தலையையும், முகத்தையும் காட்டிக்கொண்டு பிரபா நடமாடுவது பழக்கமில்லாத தாகவும், ஒரு மாதிரியாகவும் இருந்தது. மாமனார், மாமியார், பெரியவர்களுக்கு மரியாதை காண்பிக்க வேறு என்ன தான் வழி? அட, நீ தலையைக் குனிந்து கொண்டு நடக்கிறாய் என்பது வாஸ்தவம்தான். ஆனால் தலையையும், பார்வையையும் நட்டுக்கொண்டால் மரியாதை என்று ஆகிவிடாதே! ஆனால் அவளிடம் நான் எப்படிச் சொல்வது? ஓரிருமுறை அவள் காதுபட முன்னியிடம் உரக்க, "முன்னி, உன் சின்ன அண்ணிக்கு மரியாதையே தெரியலியே, யாரும் கத்துக் குடுக்கலியா!" என்று சொல்லியும் விட்டேன். அவள் இந்தக் காதால் வாங்கி அந்தக் காதால் விட்டுவிட்டாள். ரொம்ப ரகளை செய்து பார்த்துவிட்டு என் வீட்டினர், தாமே சமாதானத்திற்கு இறங்கி வந்துவிட்டனர். இப்போது யாராவது வேற்று மனிதர்கள் வந்தால்தான் கொஞ்சம் உறுத்தல். அப்போது பிரபா அங்கே வராமல் இருந்தால் தேவலையே என்று அம்மா நினைப்பாள். வேற்று மனிதர்கள் முன்பாக ஒன்றும் சொல்லவும் முடியாதே!

ஆரம்பத்தில் பிரபா இவ்வளவு வேலை செய்வதைப் பார்த்து எல்லாரும் பிரமித்தார்கள். பிறகு அதிலும் குற்றம் குறைகாண ஆரம்பித்தார்கள். முன்னிகூட உரிமையுடன், "அண்ணி இவ்வளவு போடாதீங்க, அப்புறம் காணாது." என்று சொல்ல ஆரம்பித்தாள். புதிதாக மருமகள் வந்ததில் பொருளாதார நிலைமை இன்னும் நலிவுற்றது. அப்பா அடிக்கடி தலையைத் தடவிக்கொண்டு அம்மாவின் கட்டிலுக்கு அருகே உலாத்துவார். 'செலவு ரொம்ப ஆவுது, பாவம் தீரஜ் என்னதான் பண்ணுவான்? மாடாதான் உழைக்கிறான். அவன் மேல குறை சொல்றதுக்கில்லே. நம்ம குடும்பமும் பெரிசில்லே! சமர் எப்படியாவது இன்டர் முடிச்சு ஒரு வேலைக்குப் போனா அவனுக்கு கொஞ்சம் நிம்மதியாக இருக்கும். பாவம் அவனைக் கண்கொண்டு பாக்க முடியலே... வேலைப்பளுவிலேயும், கவலையிலேயும் எலும்புக்கூடா இளைச்சுப் போயிட்டான். சரியாப் பேசறதுமில்லே, ஒரு சினேகிதக்காரன் வீட்டுக்குப் போனான் வந்தான்னு கெடயாது. உடம்பு என்னத்துக்கு ஆவும். சாப்பிட்டு சந்தோஷமா இருக்க வேண்டிய நாள்லே இப்படி அலையறான். என்ன கஷ்டகாலம்பார்! இந்த பாழாய்ப்போற முன்னி வேற நம்ம தலைல வந்து விடிஞ்சிருக்கா. எப்படியாவது அவளை அனுப்பிட்டாத்தான் தேவலை. நாலு பெரிய மனுசங்ககிட்டே சொல்லிதான் வச்சிருக்கேன். நம்பிக்கையும் கொஞ்சம் இருக்கு. ஆனா யாரும் முகம் கொடுத்து சரியாப் பேசமாட்டேங்கறாங்க. முதல்லே தனக்கு என்ன கிடைக்கும்னு பாக்கிறாங்க." பிரபா கண்ணில்பட்டால் தானே வேறுபக்கம் திரும்பிக் கொண்டு, "அம்மா கொஞ்சம் பார்த்து செலவு செய்யம்மா! இதே வீட்டிலே ஒரு காலத்துலே மூட்டை மூட்டையா பணம் இருக்கும். நாலுநாலு டின் நெய் செலவாகும், இப்ப என்ன இருக்கும்..." என்பார்.

இந்த தொணதொணப்புக்கிடையில் என் காரியங்கள் மட்டும் இடையூறின்றி நடந்தேறி வந்தன. நான் கல்லூரியிலிருந்து வந்தாலோ, நண்பர்கள் வீட்டுக்கு சுற்றப்போய்விட்டு வந்தாலோ, என் அறை சுத்தமாக வைக்கப்பட்டிருப்பதைக் காண்பேன். ஆங்காங்கே இறைந்து கிடைக்கும் பொருட்கள் ஒழுங்காக அதனதன் இடத்தில் எடுத்து வைக்கப்பட்டிருக்கும். லாந்தர் துடைத்துப் பளபளக்கும். பார்த்தால் மனத்தில் ஒரு வலி உண்டாகும். ஆனால் அதை நான் படிப்பினால் விளைந்த சோர்வு என்று நினைத்துக் கொள்வேன்.

சமயத்தில் எனக்கு என் மீதே எரிச்சலாக வரும். என்ன எப்போது பார்த்தாலும் பிரபா பிரபா என்று அவள் சிந்தனையாகவே இருக்கிறது! அவள் என்ன சாப்பிடுகிறாள், எங்கே இருக்கிறாள், என்ன செய்கிறாள், ஏதாவது ஓய்வாக இருக்கிறாளா என்று அதே சிந்தனை. நல்ல சமையலில் அநாவசியமாக உப்பு-காரம்கூட இருக்கிறது, குறைவாக இருக்கிறது என்று ஏதாவது சொல்லுவேன். அநாவசியமாக

முன்னியிடமோ, அண்ணியிடமோ, அம்மாவிடமோ அவள் காதில் விழும்படி அவளைக் குத்தலாகப் பேசுவேன், கடுப்படிப்பேன். அதாவது, எப்படியோ என் கவனம் எப்போதும் அவள்மீதே கவிந்து நிற்கிறது. எனக்கு உலகில் வேறு வேலையே கிடையாதா? நான் படிக்க வேண்டும், இவ்வளவு கவனம் அதிலே போகிறதாகக் காணோமே! இந்தத் தடவை பெயிலாகிவிட்டால் அவமானத்துக்கு அவமானம், அத்தோடு எதிர் காலமும் அடைபட்டுப் போய்விடும். அவளைப் பற்றி கவனிக்கவே வேண்டாம் என்கிறபோது அவளைப் பற்றியே குழப்பிக் கொண் டிருந்தால் என்ன அர்த்தம்? அவள் ஒவ்வொரு கணமும் என்ன செய்கிறாள் என்று கணக்கு வைப்பதே என் வேலையாகிப் போய்விட்டது. அவளுக்கு நான் முக்கியத்துவம் எதற்காகக் கொடுக்க வேண்டும்? வீட்டில் நாய், பூனை இருப்பதில்லையா, அதுபோல் அவளும் ஒரு பிராணி, இவ்வளவுதானே. இனி அவளைப் பற்றி அதிகம் யோசிப்ப தில்லை என்று பலமுறை தீர்மானித்துக் கொண்டிருக்கிறேன். ஆனால் ஒன்றில்லாவிட்டால் ஒன்றை வைத்து மனம் அவளிடமே போயிற்று. பனியன் அழுக்காகிவிட்டது என்று நினைப்பேன். மாலையில் துவைத் திருக்கும், அது மாலையில் கயிற்றில் காய்ந்துக் கொண்டிருப்பதைப் பார்த்துவிட்டுப்போயிருப்பேன். திரும்ப வரும்போது ஒழுங்காக மடித்து வைக்கப்பட்டிருக்கும். ஆக படிப்பை விட்டுவிட்டு இப்போது பிரபா ஞாபகமாகவே இருக்கிறது.

இன்னொரு மாற்றமும் விளைந்தது. முன்பெல்லாம் ஏதாவது கடினமாக வேலை புதிதாக பிரபா தலையில் விழுந்தால், ‘சரி, மாட்டினாள்’ என்று மனசுக்குத் திருப்தியாக இருக்கும். இதற்கு என்ன செய்கிறாள் பார்ப்போம் என்று பார்ப்பேன். இவ்வளவு கொடுமைகளைப் பார்த்து அவள் எங்கே எப்போது அழுகிறாள் என்று பார்ப்போம் என்றும் உள் மனம் நினைக்கும். அந்த சமயம் அவளைப் பிடித்து மானம் போகிறமாதிரி நாலு கேள்வி கேட்கவேண்டும் என்று காத்திருப்பேன். இரவிலோ, அதிகாலையிலோ குளிரில் உடம்பு வெடவெடக்கும்போது, இப்போது பாத்திரம் விளக்கிக்கொண்டோ, முற்றம் கழுவிக் கொண்டே இருக்கும் பிரபாவுக்கு எப்படி இருக்கும் என்று தோன்றும். ஆனால் எல்லா வேலைகளையும் எவ்வித சலனமும் இல்லாமல் அவள் ஏற்றுக் கொண்டே போக எனக்கு அவள் என்ன செய்கிறாள என்று பார்ப்போம் என்கிற ஆவல் மடிந்தே போய்விட்டது. முன்பு இருந்த திருப்திக்குப் பதிலாக ஒரு விசித்திரமான அமைதி யின்மையும், மனச்சஞ்சலமும் உள்ளுக்குள் நிலவ ஆரம்பித்தது. ஒரு அஸ்திரம் பயனற்றுப் போனால் அடுத்து என்ன செய்யலாம் என்று யோசிக்கிறது மாதிரி ஒரு அமைதியின்மை. சும்மா தோல்வியை ஒப்புக் கொண்டுவிட முடியுமா?

சாப்பிடும்போது சமயத்தில் அண்ணா, “ஏம்மா, எப்போதாவது

அவன்கிட்டேயும் போய் உட்காருவியா மாட்டியா? தனியா வேலை செஞ்சுகிட்டேயிருந்தா உனக்குந்தான் எப்படியிருக்கும், ஏதாவது வேண்டியிருந்தா அவன்கிட்டே கேளும்மா" என்று அவளிடம் சொல்லியும் இருக்கிறார். பிரபா பர்தா அனுசரிப்பதில்லையே தவிர அண்ணனிடமும், பேசுவதில்லை. தலையைக்குனிந்தபடி மௌனமாக வேலைகளை மட்டும் செய்துவிடுவாள். மத்தியானம் தினமும் அண்ணியிடம் உட்கார்வாள். அவள் உதடுகள் ஏதோ சொல்லத் துடிக்கும். ஏதோ சொல்ல முற்படுபவள் போல தலையை உயர்த்திவிட்டு மீண்டும் குனிந்து கொள்வாள்.

பெயர் சூட்டும் தினம் சாயந்திரம் வந்தபோது வீட்டில் ஒரே களேபரமாக இருப்பதைக் கண்டேன். அம்மா, ஒரேயடியாக இரைந்து கொண்டிருந்தாள், "வாயைத்திறந்தா வந்து ஏர்றாளே! உலகத்திலே, எல்லாம் நீ நினைக்கிறபடித்தான் நடந்தாகணுமா? நாங்க என்ன ஒண்ணும் தெரியாத முண்டங்களா? நீ ஒருத்திதான் பெரிய அறிவாளியா? ஒரு நாள் கிழமை எதுக்கு பாக்கறது, எங்களுக்கு ஒண்ணுமே தெரியலே, அங்கே எல்லாம் முடிஞ்சே போச்சு, என்னத்தை சொல்றது?"

எல்லாரும் மிரண்டு போய் நின்றிருந்தனர். அறையில் தன் கட்டிலில் உட்கார்ந்திருந்த அண்ணி வெடித்து அழுது கொண்டிருந்தாள். "இந்தப் படிப்பிலே கொள்ளி வைக்க! படிச்சிருந்தா அவளோட! ஏன் பிறத்தியார் பிராணனை வாங்கறா? ஐயோ கடவுளே, என்ன ஆவுமோ தெரியலியே!" என்று புலம்பினாள். முன்னி ஒரு பக்கம் மௌனமாக நின்று கொண்டிருந்தாள். ஏதோ பெரிதாக நடந்துவிட்டது என்று மட்டும் தெரிந்தது. பயந்து வெடவெடத்துக் கொண்டு ஒரு மூலையில் பிரபா நிற்பதைப் பார்த்தவுடனேயே இவள்தான் ஏதோ தவறு செய்திருக்கிறாள் என்று தெரிந்து விட்டது. கொஞ்சம் சமாளித்துக் கொண்டு அவள் தொண்டை அடைக்க, "அம்மா, எனக்குத் தெரிஞ்சிருந்தா நெஜமாலுமே செஞ்சிருக்கமாட்டேன். நான் ஏதோ சாதாரண மண்கட்டின்னு நெனச்சுட்டேன்" என்றாள்.

"சாதாரண மண்கட்டிதான்!" என்று அம்மா வெடித்தாள். "பதிலுக்கு பதில் சொல்லிக்கிட்டே போறா பார்! நீ என்னத்தைடி கண்ட! உனக்குத்தான் கண் அவிஞ்சு கிடக்கே! குருட்டுப் பொணம்தானே. அதிலே காப்பு கட்டியிருந்தது எங்கேருந்து தெரிஞ்சிருக்கப் போவுது? வார்த்தைக்கு வார்த்தை பிலுபிலுன்னு பதில் சொல்லத்தானே தெரியுது? உன்னைப் பெத்தவங்க பெரியவங்ககிட்டே வாயடிக்க நல்லாதான் சொல்லிக் குடுத்திருக்காங்க போ! தாடகையாட்டம் மூஞ்சியைக் காட்டிகிட்டு வரே... யார் வந்தாலும், போனாலும் ஒரு வெக்கம், மரியாதை கெடயாது. அதுலே வெஷம் மாதிரி நாக்கு வேற. என் பொண்ணா இருந்தா இவ்வளவு வாய்க்கு நாக்கை இழுத்து வச்சு அறுத்து உயிரோடு வெட்டிப் புதைச்சிருப்பேன்." அம்மா அளவில்லாமல்

இரைந்துகொண்டே போனாள். கடைசியில் பதிலுக்கு பதில் பேசுகிறாள் என்று சொல்லும்போது தன்னையே அவமதித்துவிட்டதாக நினைத்து அழ ஆரம்பித்துவிட்டாள்.

எனக்கு விஷயம் அரைகுறையாக விளங்கிற்று. ஆயினும் முன்னியிடம் உரக்க, "முன்னி, என்ன விஷயம்?" என்று சத்தம் போட்டேன். என் கோபத்தைக் கண்ட முன்னி வாயைத் திறக்கவில்லை. கும்வர் "காலைலே புரோகிதர் புள்ளையார் பிடிச்சு வச்சு பூஜை பண்ணினார்ல, அதை எடுத்து அண்ணி பற்றுபாத்திரம் தேச்சுட்டாங்க" என்று சொன்னான். உடனே திரும்ப நினைவு வந்துவிட்டது போல அண்ணி பெரிதாக அழ ஆரம்பித்தாள்.

எனக்கு திக்கென்றது, அம்மா இன்னும் தேம்பிக் கொண்டிருந்தாள். அண்ணி "என் குழந்தைக்கு ஒண்ணுகிடக்க ஒண்ணு ஆயிட்டா என்ன பண்றது? இவளுக்கு என்ன போவப்போவுது? சாமி! எல்லாத்தையும் பாத்துக்கிட்டுதானே இருக்கே! நீதான் கேக்கணும். ஐயோ, ஊரே சிரிக்குதே.. கடவுளே?" என்று புலம்பிக்கொண்டிருந்தாள்.

நான் கோபத்துடன் மூச்சை உள்ளேயிழுத்து, பல்லைக் கடித்துக் கொண்டு ஒரு உறுமலுடன் நேரே அவளிடம் போனேன். அவளைக் கண் கொட்டாமல் பூனை எலியை முறைப்பதுபோல முறைத்தேன். வலக்கை சட்டையை மேலே ஒரு கணம் மிரட்டும் பாவனையில் ஏற்றிக் கொண்டு அடுத்த கணம் என் முழு ஆற்றலையும் பயன்படுத்தி 'பளார்'-என்று ஒரு அறைவிட்டேன். பிரபாவின் கன்னத்தில் ஐந்து விரல்களும் பதிந்து விட்டன. அவள் மோதுண்டு விழ இருந்து சமாளித்துக் கொண்டு தொப்பென்று கீழே உட்கார்ந்தாள், "அறிவுகெட்ட முண்டம், ஒழுங்கா இருந்தா இரு, இல்லாட்டி எங்கே வேணுன்னாலும் ஓடுடி நாயே... நாஸ்திகமா பேசற நாஸ்தீகம்!" என்று சத்தமிட்டேன்.

பெரிய வீரன் மாதிரி கழுத்தைச் சாய்த்து அவளை முறைத்த வண்ணம் நான் என் இடத்திற்குத் திரும்பினேன். அனைவரும் அசை வற்று நின்று விட்டனர். அம்மாவின் கோபமும், கண்ணீரும் போன இடம் தெரியவில்லை. அண்ணியும் வாயடைத்து உட்கார்ந்துவிட்டாள்.

ஆனால், அறைந்தவுடனேயே என்ன காரியம் செய்துவிட்டோம் என்று உள்ளுக்குள் ஒரு குலுங்கு குலுங்கிவிட்டேன். என்னால் அங்கு நிற்க முடியவில்லை. உடனே திரும்பிவிட்டேன். அறை விழுந்தவுடன் யார் என்ன சொன்னார்கள், அவள் அழுதாளா, இல்லையா, அங்கேயே கிடந்தாளா, யாராவது தூக்கி உள்ளே போட்டார்களா ஒன்றும் எனக்குத் தெரியாது. பலம் முழுவதையும் பிரயோகித்து அறை விழுந்தது என்று மட்டும் தெரியும். என் விரல்கள் ஜிவ்வென்று இருந்தன.

அறை வாசலைத் தாண்டும்போது யாரோ எனக்குள் திரும்பத் திரும்ப 'இது என்ன நான் செய்தது?' 'இது என்ன நான் செய்தது?' 'எனக்கு என்ன ஆகிவிட்டது?' 'என்ன ஆகிவிட்டது?' என்று

சொல்வதுபோல இருந்தது. வாழ்க்கையிலேயே முதல் தடவையாக ஒரு பெண் பிள்ளையின்மீது கையை ஓங்கிவிட்டேன். என் கை ஜீவனற்றுக் கரைந்து போவதாகத் தோன்றியது. அண்ணியின் மீது கை ஓங்கியதற்காக அண்ணனை எத்தனைமுறை நான் கடுமையாக விமர்சித்திருக்கிறேன்! அவையெல்லாம் ஒவ்வொன்றாக என் மனதில் வந்தன. என்ன ஆவேசத்தில் குருடாகிப் போனேன். ஏழெட்டு மாதங்கள் கழித்து முதல் முறையாக அவளிடம் பேசினேன், அதுவும் வசவாகத்தான் இருக்க வேண்டுமா? முதல் தடவை பேசியதே அறைந்துதான் பேசவேண்டுமா? என்ன நடந்துவிட்டது என்பது வெகுநேரம்வரை எனக்கு விளங்கவே யில்லை.

திடீரென்று எனக்குள் நஞ்சில் தோய்த்த கணைகளாக யாரோ சாடினர், "நீசனே! ஒரு பெண்பிள்ளை மீது கையை ஓங்கும் பேடிப்பயலே, அற்பனே! இதுதான் உன் இலட்சியவாதமா? இதுதான் உன் மாபெரும் மனிதனாகும் கனவா? இன்டர் படிக்கிறானாம்! உலக விஷயம் எல்லாம் பேசித்திரிகிறானாம்!" அதிகம் யோசிக்கவில்லை. எப்போதோ சேர்த்து வைத்த அழுகையெல்லாம் சேர்ந்து முட்டிக்கொண்டு வந்தது. என்னால் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை. இது என்ன புயல் மாதிரி என்னை நிலைகுலையச் செய்துவிட்டது? பிறகு நான் கட்டுக் கடங்காமல் குலுங்கிக் குலுங்கி அழ ஆரம்பித்தேன். அழுதே நான் கரைந்துபோய்விட வேண்டும் என்று தோன்றியது. பச்சாதாபத்தில் இரண்டு கைகளாலும் கைவிரல்கள் பதிய அறைந்து கொள்ள வேண்டும் என்று தோன்றியது.

# 8

"அண்ணா, உங்க பரிட்சை எப்ப ஆரம்பிக்குது" என்று முன்னி கேட்டாள்.

"பரிட்சையா?" என்று நான் தலையைச் சொறிந்து கொண்டேன். பரிட்சை எப்போதிருந்து என்று நினைவுக்கு வரவில்லை. இத்தனைக்கும் தினமும் பரிட்சைத் தேதியையும், அதன் முக்கியத்துவத்தையும் நான் மனதில் பதிய வைத்துக் கொண்டுதான் இருந்தேன். முன்னி என்ன கேட்கிறாள் என்பதும் முதலில் அர்த்தமாகவில்லை. அதுமட்டுமல்ல, எதிரே என் முன் நின்று பேசுவது யார் என்றும் அர்த்தமாகவில்லை. பிறகு பரிட்சை என்கிற விஷயம் புலனானவுடன், அதிலேயே கவனம் போய் விட்டது. முன்னி நிற்பதையும், அவள் கேட்டதையும் மறந்து போனேன்.

மெல்ல மெல்ல எனக்குப் பைத்தியம் பிடித்துக் கொண்டிருக் கிறதோ! இந்த நினைவு வந்தால் நான் தலையை உலுக்கிக்கொண்டு, "இல்லையில்லை, நான் ஒன்றும் பைத்தியக்காரத்தனமாகச் செய்வ தில்லை. நான் செய்வதில் ஒழுங்குமுறை இருக்கிறது. ஒழுங்காகத்தான் எல்லாரிடமும் பழகிக் கொண்டிருக்கிறேன்." என்று திரும்பத் திரும்ப சொல்லிக்கொள்வேன். எவ்வளவுக்கு எவ்வளவு நான் பைத்தியம் இல்லை என்று சொல்லிக்கொண்டேனோ அவ்வளவுக்கு அவ்வளவு அடிமனத்தில் நிஜமாகவே நான் பைத்தியமாகத் தான் ஆகிக் கொண்டிருக்கிறேன் என்கிற எண்ணம் வேர் பிடித்து வந்தது. அது உண்மைதான் என்று வைத்துக்கொண்டால் எப்போதிருந்து ஆக ஆரம் பித்தேன்?

பலம் முழுவதையும் பிரயோகித்து விட்ட அறை, தாக்குதலில் மறுபக்க சுவரில் மோதிய தலை, தடுமாறிச்சரியும் உடல். இந்தக் காட்சிகள் மின்னலாய் வெட்ட, நெஞ்சம் மேகமாய் உடைந்தது. பதிந்த விரல்களின் நினைவுகள் என்னைப் பச்சாதாபத்தில் அழுத்தி நான் இப்படிச் செய்திருக்கக் கூடாது என்று கசிந்துருக வைத்தன. நான் எப்படி அவள் மீது கையை ஓங்கப்போயிற்று? நான் அவ்வளவு காட்டு மிராண்டித்தனமாக எப்படி நடந்துகொண்டேன்? அவையெல்லாம் உண்மையிலேயே நடந்ததா? என் கற்பனையோ, கனவோ அல்லவே?

ஆனால் அவளும்தான் அப்படி நடந்து கொண்டிருக்கக்கூடாது. மண்கட்டிக்கும், பிள்ளையாருக்கும் கூடவா அவளுக்கு வித்தியாசம் தெரியவில்லை? ஒருவர் வீட்டில் இந்த மாதிரி நம்பிக்கைகள் இருந்தால் அவள் எப்படி அதை அவமதிக்கலாம்? படித்ததற்கு இதுதான் இலட்சணமா? நானும்தான் படித்திருக்கிறேன். எல்லாவற்றையும்விடப் பெரிய விஷயம் என்னவென்றால், நம் கலாச்சாரத்தையும், ஆராதனைக் கடவுள்களையும் அவமதிப்பதை எந்தவிதத்திலும் பொறுத்துக்கொள்ள முடியாது என்பதுதான். அவளுக்கு ஒரு பாடம் கற்பித்ததே நல்லதாயிற்று. இவ்வாறு அவளுடைய குற்றத்தை மிகைப்படுத்தி நான் நடந்துகொண்டது சரிதான் என்று என்னை நானே சமாதானப்படுத்திக்கொள்ள முயற்சி செய்வேன். நாளைக்கு அமங்கலமாக ஒன்று நடந்துவிட்டால், அதற்கு யார் பொறுப்பு? சத்யார்த்த பிரகாஷ்[1] படித்ததிலிருந்து இந்த சில்லறைத் தேவதைகள் மீது எல்லாம் எனக்கு நம்பிக்கை போய்விட்டது. ஆனால் மற்றவர்கள் நம்பிக்கையை நான் மதித்தே வந்தேன். ஒன்றை நாம் ஆராதிக்காமல் இருக்கலாம், ஆனால் ஏன் அவமதிக்க வேண்டும்? என்னென்னவோ சொல்லி சமாதானப்படுத்திக் கொண்டாலும், உள்ளே யிருந்து ஒரு குரல், "எப்படியிருந்தாலும் கையை ஓங்கியது சரியல்ல"

---

1 கடவுள். பக்தி ஆகியவை பற்றி தயானந்த சரஸ்வதி எழுதிய தர்க்க நூல் ஏறத்தாழ ஆர்ய சமாஜிகளின் வேதம்.

என்று சொல்லிக்கொண்டேயிருந்தது.

அந்த நிகழ்ச்சி நடந்ததற்கு மறுநாள் எனக்கு அறையைவிட்டு வெளியே வரத் துணிவே வரவில்லை. தூங்கியெழுந்தவுடன் நாட்பட்ட சீக்காளியாக என்னை நானே உணர்ந்தேன். உடம்பின் ஒவ்வொரு அணுவும் வலித்தது. யாரையும் எப்படி ஏறிட்டுப்பார்ப்பது, இவ்வளவு பெரிய குற்றம் செய்தபின் வெளிச்சத்தில் எப்படி வருவது, அவளே எதிர்ப்பட்டுவிட, அவள் கன்னத்தில் அடியின் சுவடு என் கண்ணில் பட்டுவிட்டால்? அந்தக் காட்சியை நான் எப்படித் தாங்குவேன்? இந்தத் தடுமாற்றத்திலேயே திருடனைப்போல் நான் வெளியே எழுந்து வந்தேன். பகல் முழுவதும் அர்த்தமில்லாமல் எங்கெங்கோ சுற்றிக் கொண்டிருந்தேன். பூங்காவில் மரத்தடியில் அமர்ந்து, "இப்படி நாள் முழுவதும் தனிமையிலேயே மூழ்கியிருப்பது, எடுத்ததெற்கெல்லாம் எரிந்து விழுவது, மற்றவர்களைத் துன்பப்படுத்தி அதில் இன்பம் காண்பது, வீணாகத் தன் வசமிழந்து அடிதடியில் இறங்குவது. பிறகு அழுவது இதெல்லாம் என்ன?" என்று யோசித்தேன். நான் என்னைப்பற்றி என்னதான் நினைத்துக்கொண்டாலும் மற்றவர்கள் என்னைப் பைத்தியம் ஆகிக்கொண்டிருப்பதாக நினைக்க மாட்டார்களா? நன்றாக ஒரு கல்யாணம் பண்ணித் தொலைத்தேன்! என்ன கஷ்டம் இது!

பல நாட்கள் கழித்து இன்று மீண்டும் கோவிலுக்குப்போய் (உள்ளே போகவில்லை) என் இடத்ததில் வெகுநேரம் உட்கார்ந்திருந்தேன். சே! எவ்வளவு மட்டமாக நடந்துகொண்டுவிட்டேன்.. கடவுளே, என்ன செய்வேன்?

திடீர் திடீரென்று இது என்ன வேண்டாத தலைவலி என்று எனக்கு என்மேலேயே எரிச்சலாக இருந்தது. எப்போது பார்த்தாலும் பிரபா அல்லது பிரபாவிடம் நான் நடந்துகொண்ட முறை! இதையே அசைபோட்டுக் கொண்டிருப்பதா? இதில் எனக்கு நானே எவ்வளவு நஷ்டம் விளைவித்துக் கொண்டிருக்கிறேன்! உலகத்தில் இது ஒன்றுதான் வேலையா? வகுப்பில் போய் பிரமை பிடித்தவன்போல் உட்கார்ந் திருப்பதும், பிறகு முகத்தைத் தொங்கப் போட்டுக்கொண்டு எழுந்து வருவதும், எப்போதும் இதே வேலை தானா? கனவிலும் நனவிலும் இதே சிந்தனைதானா? ஏழெட்டு மாதங்களாகவே மனம் விட்டுப் பேசுவது, சிரிப்பது எல்லாம் மறந்தே போய்விட்டது.

'ஆனது ஆயிற்று, இனிமேல் வீடு, வாசல் எல்லாவற்றையும் மறந்து பரிட்சையைப் பற்றி மட்டுமே யோசிப்போம்" என்று மீண்டும் சங்கற்பம் செய்துகொண்டேன். 'வேறெதையும் கவனிக்கவும் மாட்டேன், நடந்ததைப் பற்றி நினைத்து மண்டையைக் குழப்பிக்கொள்வது தவறு. எனக்கு உலகில் யாரைப்பற்றியும் கவலை கிடையாது. உலகில் எனக்கு சொந்தபந்தம் என்று யாரும் கிடையாது. யாருக்கும் நான் தவறு இழைக்கவில்லை. யார் பொறுப்பும் எனக்குக் கிடையாது. எல்லாம்

அவரவர் தலைவிதி. அவரவர் வாழ்க்கை. கடவுளே ! நீயே சாட்சி. நான் இன்றுவரை செய்த தவறுகளை மன்னித்துவிடு. இனிமேல் நான் உண்டு என் படிப்பு உண்டு என்று இருப்பேன்.'

அதன்பிறகு உண்மையிலேயே என் மனத்தில் ஒரு மாற்றம் விளைந்தது. முன் என்னைத் தொல்லைசெய்து மணிக்கணக்காக நிம்மதியைக் குலைத்த வீட்டு விஷயங்களையும், வெளிவிஷயங்களையும் இப்போது கண்டும், காணாமலும் என் படிப்பையும், பரிட்சையையும் மட்டுமே யோசித்தேன். படிப்பு என்னும் பூதத்தை மட்டுமே முன்னிறுத்தி அதனோடு போராடிக் கொண்டிருந்தேன். வீட்டில் இருந்தால் கவனம் சிதையும் என்று பெரும்பாலும் வெளியில்தான் இருப்பேன். வீட்டில் ஒன்றில்லாவிட்டால் ஒன்று நடந்து கொண்டேதான் இருக்கும். வெளியில் சுற்றும்போது கடைக்காரன் எவனிடமாவது பேப்பர் வாங்கிப் பார்த்துக்கொள்வேன். பெரும்பாலான நேரத்தை திவாகருடன் கழித்துவிடுவேன். அவ்வளவாக வம்பளப்பது கிடையாது. எப்போதாவது அவன் ஏதாவது ஆரம்பித்துப் பேசினால்தான் உண்டு. சமயத்தில் ஷிரீஸ் என்று யாரோ ஒருவரைப்பற்றி மிகவும் பக்தியுடன் நாத்தழுதழுக்க விவரிப்பான். வந்தால் அழைத்துப் போகிறேன் என்பான். எனக்கு ஒன்றும் அக்கறை கிடையாது. வந்தால் பார்ப்போம் என்று படிக்க ஆரம்பித்துவிடுவேன். இதென்ன படிப்பு படிப்பு என்று மூழ்கியிருக்கிறானே என்று எல்லாருக்கும் ஆச்சரியம்.

அன்றைய நிகழ்ச்சிபற்றி யாரும் ஒன்றும் பேசவேயில்லை. அப்பா, அண்ணன், எல்லாருமே பின்னால் கேள்விப்பட்டார்கள். ஆனால் ஒன்றும் சொல்லவில்லை. அண்ணி அநேகமாக சந்தோஷமே பட்டாள். தம்பிகள் கூடியவரை என்முன் வருவதில்லை. நான் மிக பயங்கரமாகத் தோன்றுகிறேனோ என்று எனக்கே சந்தேகமாகிவிட்டது. 'இருக்கலாம்' என்று தலையை உலுக்கிக்கொண்டு என் வேலையில் ஆழ்ந்துவிடுவேன். வீட்டிலும் அவரவர் தத்தம் வேலையில் ஆழ்ந்திருப்பார்கள். அண்ணி இப்போது அதிகம் எதிர்ப்படுவதேயில்லை. நான் வீட்டுக்குப்போகும் போதெல்லாம் அவள் எங்காவது ஒரு மூலையில் குழந்தையைக் கவனிப்பதில் மும்முரமாக இருப்பாள். பாலூட்டிக்கொண்டிருப்பாள். குழந்தை பிறந்தவுடன் அவள் வீட்டு வேலைகளை விட்டேவிட்டாள். முன்னி நினைத்தால் செய்வாள், இல்லாவிட்டால் செய்யமாட்டாள். பெரும்பாலும் அண்ணியின் குழந்தைக்கு விளையாட்டு காண்பித்துக் கொண்டிருப்பாள். வீட்டு வேலை முழுவதும் இப்போது பிரபா தலையில்தான். ஆனால் எனக்கு இதில் ஏதும் விசேஷமாகவோ, கவனிக்கப்படவேண்டியதாகவோ தோன்றவில்லை. இவள் எப்போது சாப்பிடுகிறாள், எப்போது ஓய்வெடுக்கிறாள் என்கிற விஷயங்களை யெல்லாம் நான் எப்போதோ மறந்துவிட்டேன். அவளுக்கு எப்போதாவது கடிதம் வந்தால் எங்கள் வீட்டில் யாராவது ஒருவர் அதை முதலில்

பிரித்துப் படித்துவிட்டுத்தான் அவளிடம் கொடுப்பார்கள். அதேபோல் அவள் கடிதம் எழுதி தபாலில் சேர்த்துவிடச் சொன்னாலும் படித்து விட்டுத்தான் தபாலில் சேர்ப்பார்கள். கவரை ஈரமாக்கிப் பிரித்துப் படிப்பார்கள். எங்கள் வீட்டைப்பற்றி ஏதாவது ஏடாகூடமாக எழுதி யிருக்கக் கூடாதே! அதனால் அவள் கடிதம் எழுதுவதையே ஏறத்தாழ நிறுத்திவிட்டாள்.

ஒருநாள் அம்மா, "ஏண்டியம்மா, நீ ஒண்ணும் கடிதாசி கிடிதாசி எழுதறது கெடயாதா? இவருக்கு உங்கப்பாகிட்டேயிருந்து 'என்ன சேதி? உடம்பு கிடம்பு சரியில்லியா'ன்னு காயிதம் வந்திருக்கு?" என்று கேட்டாள்.

"எழுதறதுக்கு என்னங்க அம்மா இருக்கு. எல்லாம் சரியாத்தானே இருக்கு" என்று சட்னி அரைப்பதை நிறுத்திவிட்டு பிரபா பதில் சொன்னாள்.

"அது சரிம்மா, ஆனாலும் ரெண்டு வரி எழுதிப் போடும்மா. பெத்தவங்க மனசில்லே, அஞ்சாறு கடிதம் எழுதியும் நீ பதில் போடலேன்னு எழுதியிருக்காங்க" எவ்வளவோ காலம் கழித்து பிரபா அம்மாவின் குரலில் மென்மையைக் கண்டாள்.

நான் சாமான் வாங்க பையை ஒழித்துக் கொண்டிருந்தபோது அவள் கண்களில் நீர் ததும்புவதைக் கண்டேன். அவள் துயரத்தை விழுங்கிக் கொண்டு சொல்வது போல "எழுதறேம்மா" என்று மெதுவாக சொன்னாள்.

நான் யாரையும் ஏறெடுத்தும் பார்க்காமல் அங்கிருந்து கிளம்பி வந்துவிட்டேன். இதுபற்றி மேற்கொண்டு என்ன பேச்சு நடந்தது என்று தெரியாது. மீண்டும் மீண்டும் அந்த விஷயம் நினைவுக்கு வந்தது. ஆனால் நான் என் மனதைப் படிப்பில் பலமாக ஆழ்த்திக் கொண்டு விட்டேன்.

உண்மையில் இப்போதெல்லாம் என் பரிவுணர்ச்சியும், பிறர் உணர்ச்சிகளை உணரும் ஆற்றலும் மடிந்துகொண்டோ, மரத்துக் கொண்டோ போவதுபோலத் தோன்றுகிறது. சிந்திக்கும் அளவுக்கு முக்கியமானதாக எனக்கு எதுவுமே படவில்லை. உதாரணமாக இப்போதும் என் வேலைகள் அனைத்தையும் அவள்தான் செய்துவந்தாள், ஆனால் நான் எதையும் கண்டு கொள்வதேயில்லை. இரவில் செம்பு நிறைய தண்ணீர் கொண்டுவந்து வைத்துவிட்டுப் போவாள். எப்போ தாவது அண்ணன், அல்லது அப்பா விரும்பினால் வெல்லம் போட்ட டீ தயாரித்தால் எனக்கும் ஒரு டம்ளரிலோ கிண்ணத்திலோ தானே வந்துவிடும். யார் கொண்டுவந்தது என்று கூடப் பார்க்காமல் எடுத்துக் குடித்து விடுவேன். பெரும்பாலும் அடுப்படியில் அவள்தான் இருப்பாள். எனவே சாப்பிடும்போது சிரமம் ஏற்படும். ரொட்டி வேண்டும் என்றால் முன்னிக்குக் குரல் கொடுப்பேன். இப்போதெல்லாம் அவளே

பரிமாறுகிறாள். தட்டை இழுத்து வைத்துக்கொண்டு கடவுளுக்குப் படைத்துவிட்டு விறுவிறுவென்று சாப்பிட ஆரம்பித்து விடுவேன். மேலும் ரொட்டி வேண்டும் என்றால் தட்டை அந்தப் பக்கம் நகர்த்துவேன். தட்டில் ஏதும் குறைந்தால் வைக்கப்படும். முதலில் இது விசித்திரமாக இருந்தது. சிரிப்புகூட வந்தது. பிறகு பழகிவிட்டது. இப்பொழுது தயக்கம் என்பது சற்றும் இல்லை. இப்படியே வாழ்நாள் முழுவதையும் கடத்திவிட முடியும் என்று தோன்றியது. ஒரு இயந்திரத்தில் வேலையை முடித்துவிட்டுத் திரும்பிப் பாராமல் போய்விடுவதுபோல, குழாயில் தண்ணீர் குடித்துவிட்டுக் குழாயைப்பற்றிச் சிந்திக்காமலே போய்விடுவதுபோல் நான் என் காரியம் ஆனவுடன், மற்ற வேலை களில் ஆழ்ந்துவிடுவேன். சொல்லப்போனால் பேசுவதைத்தவிர மற்ற எல்லா வேலைகளும் நடந்தேறி வந்தன. பிரபாவும் உணர்வுள்ள நடமாடும் ஒரு பெண் என்பதையும், அவளுக்கும் எனக்கும் ஒரு உறவு உண்டு என்பதையும் நான் மறந்தே போனேன். எனக்கும் இந்த விஷயத் திற்கும் சம்பந்தமேயில்லை என்பது போலவே நான் நடந்து கொண்டே யிருந்தேன். நான் அனைத்தையும் மறந்து கொண்டேயிருந்தேன்.

இந்த மறந்துபோகும் முயற்சி படுவேகமாக நடப்பதைப் பார்க்கும் போது எனக்குப் பயமாகவும் இருந்தது. இது பைத்தியம் பிடிக்க ஆரம்ப நிலையோ ! ஒவ்வொரு நாளும் கனவுபோல மங்கலாகவும், பொய்யாகவும் மறுநாள் தோன்றும். வரும்நாளைப்பற்றி ஒரு விரக்தி நிலவும். நான் உலகத்தையும், சுற்றப்புறத்தையும் மட்டுமல்ல, என்னையுமே மறக்கிறேன் என்று தோன்றும். குளிக்கவும், சாப்பிடவும்கூட கவனம் இருப்பதில்லை. கிறுக்குப் பிடித்தாற் போல் இருந்தால் சமய சந்தர்ப்பம் இல்லாமல் எல்லாவற்றையும் போட்டது போட்டபடி விட்டுவிட்டு கீதை படிக்க உட்கார்ந்துவிடுவேன். என் உடைகளையும், பொருட்களையும்கூட கவனிப்பதில்லை. படிக்கும் புத்தகத்தை எங்காவது வைத்துவிட்டுப் பிறகு மணிக்கணக்காகத் தேடுவேன். அது புத்தகக் குவியலிலேயே பெரும்பாலும் கிடைத்துவிடும். தலையில் அடித்துக் கொள்வேன். பேனா, பென்சில், சாவி, காசு-பணம் காணாமல் போய்க் கொண்டே யிருக்கும், அதாவது வைத்த இடம் தெரியாது. காலையில் படித்தது மாலையில் நினை வில்லாமல் போகும் அளவுக்கு நிலைமை மோசமாகிக் கொண்டிருந்தது. எந்தப் புத்தகத்தை எடுத்தாலும் புதிது மாதிரி இருந்தது. எப்போதும் எதையோ பறிகொடுத்தவன்போல் இருந்து வந்தேன். என்னுள் இருந்த ஜீவசக்தி பிரிந்து கொண்டிருப்பது போலத் தோன்றியது. ஏரியாக அலைமோதிக் கொண்டிருந்த உள்ளம் இப்போது உறைந்து, அசைவற்ற ஜடமாகிக் கொண்டிருந்தது. அதன்மேல் விழுவது எதுவும் சலனம் எதையும் ஏற்படுத்தாமல் தெறித்து தூரமாகப் போய் விழுந்து கொண்டிருந்தது.

நான் மறக்காத ஒரே விஷயம் நான் பரிட்சை எழுதவேண்டும் என்பது ஒன்றுதான்.

உணர்வற்ற பாறாங்கல்லாக நான் இருக்க, காலமானது இரவும், பகலுமாக அலைமோதிக் கொண்டு என்னைக் கடந்து சென்ற வண்ணம் இருந்தது.

மணி பத்தடிக்க இருந்தது. பருப்பில் இன்னும் கொதியே வரவில்லை. பிரபா அவசரம் அவசரமாக மாவு பிசைந்து கொண்டிருந்தாள். நான் ஒருமுறை சமையல் அறையை எட்டிப் பார்த்துவிட்டு வந்தாயிற்று. கிளம்பி விடலாமா என்று யோசித்துக்கொண்டிருந்தேன். அதற்குள், "சின்னண்ணி, சின்னண்ணி... பெரியண்ணிக்குப் பால் தரலியா? அவங்க சத்தம் போடறாங்க" என்றவண்ணம் முன்னி ஓடி வந்தாள்.

பிரபா மாவு பிசைந்துகொண்டே மென்மையாக, "முன்னி, பால் காய்ச்சியாச்சு அம்மா. ஆனா இதோ பாரு பருப்பு கொதிவரப்போகுது, சாப்பிடறவங்க வர்ற நேரமாச்சு! ஒவ்வொரு ரொட்டிக்கும் காத்திருக்க வச்சா நல்லாயிருக்காது. இரண்டு மூணு இட்டு வச்சுகிட்டா சமாளிக்கலாம்." என்றாள். பிறகு கெஞ்சும் குரலில், "அம்மாடி, நீதான் கொஞ்சம் கொண்டு போய் குடுத்துடேன். அடுப்புக்குப் பக்கத்திலே கிண்ணம் போட்டு மூடி வச்சிருக்கேன் பாரு!" என்று கூறினாள்.

முன்னி, போய்ப் பார்த்தவள் திகைத்துப்போய், 'ஐயையோ, சின்னண்ணி, பால் கவுந்துகிடக்கே!" என்று கூறினாள்.

"கவுந்து போச்சா?" பிரபா முகம் வெளுத்தாள். கைவேலையை விட்டு அங்கே பாய்ந்தாள்," நான் நல்லாதானே மூடிவச்சேன்..."

"போச்சு, பெரியண்ணி ரகளை பண்ணிடுவாங்க."

இன்னொரு பக்கம் அமர் அம்மாவிடம் புகார் சொல்லிக் கொண்டிருந்தது காதில் விழுந்தது. "நீயே பாத்துக்கம்மா, மணி பத்தாவுது இன்னும் சாப்பாடு தயாராகலே, எப்போ சாப்பிடறது, எப்போ ஸ்கூல் போறது?"

"உனக்கு நேரமானா அவளுக்கு என்னடா, அவ தன் இஷ்டத்துக்கு சாவகாசமாதான் செய்வா" என்று அம்மா குத்தல் பேசினாள். இது மாதிரி பேச்சுக்களுக்காக அவள் பூஜையைப் பாதியில் நிறுத்திவிடுவாள். பேசி முடித்தவுடன் பூஜை மறுபடியும் தொடரும். "இன்னிக்குத்தான் புதுசா செய்யறான்னா நேரமாவுறது சகஜம். தினப்படி வேலையையே உன்னால சமாளிக்க முடியலேன்னா..."

"அண்ணி இப்போதான் மாவு பிசையறாங்க. இப்போதான் பருப்பு வேகுதுன்னு நெனைக்கிறேன்." என்றவன் அடுப்படியைப் பிரிக்கும் சிறிய சுவருக்கு மேலாகப் பருப்பு ஆகிறதா என்று எட்டிப் பார்த்தான். புகையினால் அவன் கண்களில் கண்ணீர் தளும்பியது. முன்னி கீழே கொட்டிக் கிடந்த பாலுக்கு அருகில் திகைப்புடனும், பயத்துடனும் நின்று கொண்டிருந்தாள். பிரபா மாவுக் கையாலேயே பாலைத் தரையிலிருந்து வழித்துக் கொண்டிருந்தாள். அமர் அங்கிருந்தே கத்தினான்— "இங்கே பாலை ஊத்தி மொழுவியாவுது."

அம்மா தன் பூஜையை மறந்தே போனாள். வெடி மருந்தில் தீ வைத்த மாதிரி ஆகிவிட்டது. "கொட்டிக் கவுத்தியா? ரொம்பசந்தோஷம். அவளுக்கு என்ன? அவ அப்பன் சீர்ல சுருட்டை எருமை அனுப்பி வச்சிருக்கான்ல! ஒருநாள் கவுரும், ஒருநாள் பொங்கி அடுப்பிலே போகும், என்ன கவலை! பருப்பு பொங்கி வழியுது, அத யார் பாக்கறா? கண்ணு அவிஞ்சு போச்சா? 'சண்டப்பிரசண்டன் போன வழி - காடு மலையெல்லாம் தவிடு பொடி'ன்ன மாதிரி நடந்து போனாலே இதைத் தட்டி, அதைக் கவுத்துகிட்டேதான் போவா.. கை காலுலே சொரணை கிரணை இருக்குமா இல்லியா தெரியலியே! மூஞ்சைத் துருத்திக்கிட்டு வேலை செய்யறதைப் பாரேன்! கொழுப்பு! ரெண்டரை சேர் பாலை இவ மட்டும் முக்கிமுக்கிக் குடிச்சிட்டா. அவ இப்ப பட்டினியா கிடக்கறதா? ஒண்ணா ரெண்டா சொல்றதுக்கு? இவ படிப்பிலே கொள்ளியைத் தான் வைக்கணும். பத்தாவது படிச்சிருக்காளாம்... பத்தா...வது... இது என்ன சமையல் அறையா? ரணகளமா? மணை இங்கே கிடக்கு, குழவி அங்கே கிடக்கு, சாப்பிட ஒக்காந்தா வாந்தி வந்துடும் போலிருக்கே! அட ராமா! நல்லாதான் எங்க தலைல வந்து விடிஞ்சா! இங்கே கரடியா கத்தறேன், அங்கே என்ன எருமை மாட்டு மேலே மழை பெஞ்ச மாதிரி நிக்கறியே!..."

மேலே என்ன நடந்தது என்று பார்க்காமல் நான் புத்தகங்களை எடுத்துக்கொண்டு படிக்கக் கிளம்பிவிட்டேன். முன்பானால் என்ன சொல்லியிருப்பேன், என்ன செய்திருப்பேன் என்று தெரியாது. இப்போது இதெல்லாம் கவனிக்க வேண்டிய விஷயங்களாகவே தெரியவில்லை. பிரபா செய்தது அல்லது செய்வது நல்லதா கெட்டதா என்று யோசிக்க வேண்டிய அவசியமே இருப்பதாகத் தோன்றவில்லை. நடப்பது சர்வ சாதாரணமான ஒன்று என்று எடுத்துக் கொண்டேன். பிரபாவுடனோ, வீட்டினருடனோ எனக்கு சம்பந்தம் எதுவும் கிடையாது என்றே இப்போதெல்லாம் தோன்றியது.

இடையே இரண்டொரு வகுப்புகள் இல்லையென்பதால் வீடு வந்தேன். என் அறையிலேயே எனக்கு சாப்பாடு மூடிவைக்கப்பட்டிருந்தது. அவசரம் அவசரமாக விழுங்கிவிட்டு ஓடினேன். ஒன்றும் விசேஷமாகத் தெரியாவிட்டாலும், வீட்டின் இறுக்கத்திலேயே பெரிய மகாபாரதம் நடந் திருக்க வேண்டும் என்பது புரிந்தது, "ஹூம்.. நமக்கென்ன, நடப்பது நடந்துவிட்டுப் போகட்டுமே.."

பிப்ரவரி பிறந்துவிட்டது. பயங்கரக் குளிர். மார்ச் ஆரம்பத்திலேயே பரிட்சை. எனவே இப்போது படிப்பதற்காக விடுமுறை. நான் பெரும் பாலும் திவாகர் வீட்டுக்குப் படிக்கப் போய்விடுவேன். வீட்டில் மத்தியான நேரத்திலும், மாலை நேரத்திலும் இடைஞ்சல் இல்லாமல் படிக்க வசதியாக இடம் எதுவும் இல்லை. ஏதாவது வேலை வரும் அல்லது களேபரம் நடக்கும், "ஒரு ஓட்டம் ஓடி மில்லிலேர்ந்து மாவை

எடுத்துக்கிட்டு வந்துடுங்களேன்" என்பாள் முன்னி. அல்லது அண்ணி, "தம்பி, வைத்தியர் கிட்டே சொல்லி ஒரு மருந்து வாங்கிட்டு வாயேன்" என்பாள். அது மட்டுமின்றி, சேர்ந்து படிப்பதால் பல விஷயங்கள் நன்றாகப் புரியும். நாங்கள் இருவரும் சமயத்தில் சந்தேகம் கேட்க யாராவது பேராசிரியர் வீட்டுக்குப் போய்விடுவோம். தனியாகப் போக எனக்குத் துணிச்சல் கிடையாது. திவாகர் வீட்டில், வீட்டிலிருந்து முற்றிலும் தனியாக அவனுக்கே அவனுக்கு என்று ஒரு அறை இருந்தது. எனவே சமயத்தில் இரவிலும் அங்கேயே தங்கிவிடுவேன். உண்மையைச் சொன்னால் அவன் வீட்டில் படிப்பதிலும், படுத்துக் கொள்வதிலும் எங்கள் வீட்டைவிட அதிகம் நிம்மதி. எங்கள் வீட்டில் எப்போது போனாலும் ஒன்று—சண்டை நடந்து கொண்டிருக்கும். அல்லது சண்டை முடிந்து அவரவர் முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டு நிற்பார்கள். ஒன்று—அம்மா ஒப்பாரி வைத்துக் கொண்டிருப்பாள், அல்லது அண்ணி கோபத்துடன் முணுமுணுத்துக் கொண்டிருப்பாள். ஒரு விஷயம் எப்போதும் நெஞ்சில் ஓங்கிக் குத்துவது போல இருந்தது. பிரபாவின் முகம் என்றும் மாறாமல் உணர்ச்சியற்றுக் கல்லால் செய்தது போல் இருக்கும். எப்போதும் ஒரு அழுத்துடனும், சற்று சோகத்துடனும் அவள் முகம் காணப்படும். கண்களைச் சுற்றிக் கருவளையம், பனியில் வெடித்த உதடுகள், குதிகால்கள் கருத்து சிறுவெடிப்புகள் எட்டிப்பார்க்கும்.

காலையில் திவாகர் வீட்டிலிருந்து வந்தபோது அம்மா செல்லமாக அதட்டிக் கொண்டிருந்தாள்—"ஏண்டி, எப்ப தலை குளிச்சது? பத்துப் பதினஞ்சு நாளைக்கு ஒரு தடவையாவது தலைக்குக் குளிக்கக்கூடாதாடி கட்டையிலே போறவளே! பாரு காட்டேரி மாதிரி! வாயேன் இங்கே நெருப்புக்குச்சி காட்டிடறேன்! பிரச்சினையே முடிஞ்சுடும் பாரு! ஐயோ– எவ்வளவு பேன் இருக்கோ, எவ்வளவு சாப்பாட்டோட உள்ளே போவுதோ."

அம்மாவின் குரலில் கோபமோ குத்தலோ இல்லை. இதனால் தானோ என்னவோ பிரபா வாயைத் திறந்து, "எனக்கு நேரம் எங்கே இருக்கு; நீங்களே சொல்லுங்க" என்று சொல்லித் தொலைத்துவிட்டாள்.

அம்மாவுக்கு எப்போது கோபம் வரும் என்று சொல்லமுடியாது. அவள் உரக்கச் சீறினாள்— "ஓஹோ, ரொம்ப வேலைன்னு சொல்லிக் காட்டுறியாக்கும்! நல்லாயிருக்குடி, உன் வேலையைப் பாருடின்னா, வீட்டு வேலையை சாக்குசொல்றியே! கொட்டிக்கவாவது ஒழியுதா, அதுவும் இல்லியா? அப்படி என்னா என்னா வேலை செய்யற விரலை... மடக்குடி பார்ப்போம், ரெண்டு வேளை சமையல்! அது ஒண்ணுதானே! அதை வேண்ணா பொழுதேனியும் இழுத்தடிப்பே! வேற என்ன செய்யிற? ஆமாம், தெரியாமதான் கேக்கறேன், எந்த வீட்டுலேடி வாழ்க்கைப்பட வந்த பொண்ணு ஆக்கிப் போடாம

இருக்கா? உங்கப்பன் வீட்டிலே பத்து வேலைக்காரங்க வச்சிருப்பீங்களா இருக்கும். இங்கே மாட்டுப்பொண்ணு தான் எல்லா வேலையையும் செஞ்சாவணும், தெரியுதா?"

நான் குழாயடியில் கரியால் பல் விளக்கிக் கொண்டு இருந்தேன். அழும் குழந்தையை சமாதானம் செய்தவாறு, அண்ணி சொன்னாள். "கொஞ்சம் வேலை வந்துட்டுதாம், என்ன ரகளை பண்றா பாரு.. தெனமும் நான் செஞ்சிட்டிருக்கலே! அம்மாகிட்டே வாய் திறந்து ஒரு வார்த்தை சொல்லியிருப்பேனா? கொஞ்சம் செய்ய ஆரம்பிச்சதும் சொல்லிக்காட்டறா பாரு. என் வேலைக்கு ஒண்ணும் சொல்லிக்காட்ட வேண்டாண்டியம்மா, வட்டியும் முதலுமாத் திருப்பிடறேன். நாளைக்கு.."

அண்ணா அங்கிருந்தே கர்ஜித்தார், "என்ன எப்ப பாத்தாலும் ராத்திரியும் பகலும் ஒரே ரகளை! வேற வேலை இல்லியா? மணி ஒன்ப தாகப் போவுது?"

ஆனால் அவர் பேச்சை யாரும் காதிலேயே வாங்கிக் கொள்ள வில்லை. அம்மா தனக்குத்தானே சொல்லிக்கொண்டாள்— "ரகளை நடத்தறதுக்கே தான் இந்த நெலமை. அதுவும் நடத்தலேன்னா குடியே முழுகிடும். இங்கே எல்லாம் கோலெடுத்தா ஆடற குரங்குதானே! சொல்லாம யாராவது துரும்பையாவது எடுத்துப் போடறேங்கறாங்களா? சொல்லாட்டி போனா இந்தப் புடவையைத் தைப்பாளா? பூராவும் கிழிஞ்சாலும் தைக்க மாட்டா. பாரேன், என்ன அழுக்குக் கந்தலாக்கி வச்சிருக்கான்னு புடவையை! ஏண்டி இது அழுக்காத் தெரியலே? சொல்லப்போனா வலிக்குது. உடம்பு வணங்கி யார் தொவைக்கிறது? பொறந்த வீட்டிலேன்னா படுக்கையிலே படுக்க வச்சு கையிலே புஸ்தகம் கொடுப்பாங்க.."

கண்ணில் தண்ணீரை எடுத்து அடித்துக் கொண்டே அவள் புடவையைப் பார்த்தேன். புடவை சல்லடை மாதிரி இருந்தது. அதைத் துவைக்கவோ, தைக்கவோ வழியிருப்பதாகத் தெரியவில்லை. ஆங்காங்கே கிழிந்த இடங்கள் வழியாக நுழைகின்ற குளிரை வரவேற்க ரோமக்கால்கள் குத்திட்டு நின்றன. "ஹும், நமக்கென்ன," என்ற எண்ணம் எழுந்தது. கைகால் கழுவி, முகத்தையும், கழுத்தையும் துண்டால் துடைத்துக் கொண்டே வந்தேன். சண்டை எப்படித் தொடர்ந்தது, எப்படி முடிந்தது என்று பார்க்க சற்றும் ஆர்வம் இல்லை. யோசிக்கவோ, உணரவோ எனக்கு சக்தியே இல்லையென்று தோன்றியது.

மதியம் திரும்பியபோது அப்பா முன்னியைக் கோபித்துக் கொண் டிருந்தார். "அட பர்தாதான் கெடயாது. தொலை, பொறுத்துக்கிட்டுப் போவோம். அதுக்குன்னு இப்படியா வெக்கங்கெட்டுத் திரியறது. மொட்டை மாடிலே தலைக்குக்குளிச்சா ஜனங்க என்ன சொல்வாங் கன்னு கூடவா தெரியலே? குளிர்காலத்திலே எல்லாரும் வெயில்காய மொட்டை மாடிக்கு வந்துடறாங்கல்ல.. குளிக்கறதைப் பாக்க

மாட்டாங்க? உனக்குத்தான் இத்தனை வயசாச்சே முன்னி! உனக்குக் கூடவா தெரியலே, ஒக்காந்து மொண்டு மொண்டு ஊத்திக்கிட்டு இருந்தியா?"

முன்னி முகம் சிணுங்கி, "நீங்களும் புதுசாதான் பேசறீங்கப்பா! எவ்வளவு குளிர், பாக்கலே? நீங்க ராமாராமான்னு ரெண்டு சொம்பைக் கவுத்துகிட்டு குளிச்சதா பேர் பண்ணிட்டு வந்துடறீங்க. நாங்க தலை குளிக்கிறது அப்படியா? ரெண்டு மணிநேரம் ஆவும். அவ்வளவு நேரம் கீழே குளிர்லே ஒக்காந்திருக்க முடியுமா? தண்ணியிலே கையை வச்சாலே கை துண்டாயிடும் போல இருக்கு, மொட்டை மாடியிலே வெயில் இருக்குதுன்னு போனா என்ன குடிமுழுகிப் போச்சாம்?" என்றாள்.

முன்னி பரிந்து வந்தவுடன் அப்பா சற்று அமைதியாகி, "குளிர் இருந்துகிட்டுத்தான் இருக்கும்" என்று அத்துடன் விட்டுவிட்டார். "குண்டு மூணு ரூபாய்னு விறகு வாங்கி வென்னி வைக்க பணம் என்ன எங்கிட்ட கொட்டியா கிடக்கு. ஒருத்திக்குன்னா வைக்கலாம். பூரா பட்டாளத்துக்கும் ரெண்டு குண்டு விறகுல்ல வென்னி போட வேணும்" என்றாள் அம்மா.

அம்மாவின் பேச்சாற்றல் இப்போதெல்லாம் அதிசயிக்கத்தக்க அளவு வளர்ந்துவிட்டது. அண்ணி எப்போதும் குழந்தையைத் தூக்கி வைத்துக் கொண்டிருப்பாள்.

யாரோ அபின் ஊசி போட்ட மாதிரி என் உடல் மரத்துக் கிடந்தது. என்னைச் சுற்றிக் கடினமாகக் காங்க்ரீட் சுவர் எழுப்பியிருப்பது போலவும், யாரும் என்னைத் தொட முடியாது போலவும், எந்த ஓசையும் என்னை வந்து எட்டாது போலவும் சமயத்தில் தோன்றியது. எனக்கு மனச்சாட்சி இருக்கிறதா, அது எதுவும் சொல்கிறதா என்றே எனக்குத் தெரியவில்லை. என் பரிவுணர்ச்சிகள் உள்ளுக்குள்ளேயே முடங்கிவிடுகின்றன அல்லது என் பரிவுணர்ச்சிகளே மடிந்துவிட்டன. உள்ளேயும், வெளியேயும் ஒரு சூன்யம். நான் புறத்தே மட்டுமன்றி அகத்தேயும் கரடுதட்டி ஜடமாகிக் கொண்டிருந்தேன். நான் உள்ளும், புறமும் வெறும் கல்லாகிவிடுவேனோ?

கூடாது.. இப்படியெல்லாம் யோசிக்கக் கூடாது. பரிட்சைக்கு இன்னும் ஐந்தாறு நாட்களே இருந்தன.

# 9

கடைசி பரிட்சையை முடித்துவிட்டு வெளியே வந்தேன். மனம் லேசாகவும், மகிழ்ச்சியாகவும் இருந்தது. பரிட்சைகள் நன்றாக

எழுதியிருந்தேன். ஒரு பெரிய சுமை தலையிலிருந்து இறங்கியது. இதுவரை ஒரு வேலை இருந்தது. முழுமூச்சாக ஈடுபட்டோம், இனிமேல் என்ன செய்வது? இதை யோசிக்க ஆரம்பிப்பதற்குள் திவாகர், "வாடா, இன்னிக்கு சினிமாவை ஒரு கை பாத்துடுவோம்.. சினிமாவுக்குப் போய் வருஷாந்திரம் ஆச்சு." என்றான். மேற்கொண்டு தானாகவே பேசியிருக்கா விட்டால் எனக்கு தர்ம சங்கடமாகிப் போயிருக்கும். "சினிமாவுக்கு நான் அழைச்சுகிட்டுப் போறேன்டா. அம்மா சரின்னா கிரணையும் அழைச்சுகிட்டுப் போவோம், பாவம் அவளும் சினிமாப் பார்த்து எவ்வளவு நாளாச்சு? நல்லா ஜெயில்லே வந்து மாட்டினோம்னு நெனச்சுகிட்டு இருப்பா."

நாங்கள் பிரியும்போது சரியாக ஐந்து மணிக்கு வந்துவிடும்படியும், வேதாந்த விசாரத்தில் மூழ்கிவிடவேண்டாம் என்றும் மீண்டும் அவன் ஞாபகப்படுத்திவிட்டுப் போனான். எனக்காக என் வீட்டில் என்ன தொல்லை காத்திருக்கிறது என்று பாவம், அவன் என்ன கண்டான்?

ஒரு யுகம் கழித்து திடுதிப்பென்று முன்னியின் கணவனார் எழுந் தருளியிருந்தார். அந்த ஆள் முகத்தைக் கண்டாலே எனக்குப் பிடிப்ப தில்லை. வீடே ஒரே ரகளையாக இருந்தது. அனைவருக்குமே வியப்பு, அவனை வெளியறையில் உட்கார்த்தி வைத்திருந்தார்கள். அங்கேதான் அப்பாவும், அண்ணாவும் உட்கார்ந்திருப்பார்கள். வேறொன்றும் புரிய வில்லையென்றாலும், முன்னியை அழைத்துப்போக வந்திருக்கிறான் என்பதை மட்டும் சொல்லிவிட்டார்கள். இரண்டு-இரண்டரை வருடங் களாக ஒரு கடிதமோ ஒரு தகவலோ இல்லாமல் இருந்தவன், முன்னி உயிரோடிருக்கிறாளா, செத்துவிட்டாளா என்று திரும்பியும் பார்க்கா தவன், அப்பாவின் டஜன் கணக்கான கடிதங்களை வாங்கிக் கிழித்துப் போட்டுவிட்டவன், ஊரார் - உறவினர் பேச்சுக்கு சற்றும் அசைந்து கொடுக்காதவன், இன்று திடுதிப்பென்று வந்தவுடன் அனைவரும் திகைத்து நின்றுவிட்டனர். அவன் முன்னியை அழைத்துப்போக வந்திருக்கிறான் என்று தெரிந்தவுடன் நான் அசைவற்று நின்றுவிட்டேன். வீட்டில் அனைவரும் திகைப்பில் ஆழ்ந்தவர்களாக ஒருவரையொருவர் ஆவலுடன் கிசுகிசுத்து விசாரித்துக் கொண்டு நடமாடிக் கொண்டிருந் தனர். பிரபாவும், முன்னியும் அடுப்படியில் மௌனமாக உட்கார்ந்திருந் தனர். அம்மாவும், அண்ணியும் கிசுகிசு என்று பேசிக் கொண்டும் விதம் விதமாக ஊகங்களைச் செய்து கொண்டும், அவ்வப்போது "மாப்பிள்ளையும் உங்க அப்பாவும் என்ன பேசிக்கிறாங்கன்னு சத்தம் காட்டாம போய்க்கேட்டுகிட்டு வா" என்று கும்வரை விரட்டிக் கொண்டிருந்தனர். அண்ணிதான் அவ்வப்போது முன்னங்கால்களில் ஓசைப்படாமல் நடந்துபோய் மறைந்து நின்று கதவில் காதை வைத்து ஒட்டுக்கேட்டு ஓடிவந்து அம்மாவிடம் விவரம் சொல்லுவாள்— கேட்டது கொஞ்சம், ஊகத்தின் பேரில் கூட்டிக்கழித்தது கொஞ்சம்.

அனைவரும் இந்த எதிர்பாராத மனமாற்றத்திற்கான காரணத்தை அறிய விரும்பினர். வெளியறையில் மிகவும் தீவிரமாகப் பேச்சு நடந்து கொண்டிருந்தது.

ராத்திரி சாப்பாடு எல்லாம் ஆன பின்பு அப்பா அம்மாவிடம், "முன்னி நாளைக்குப் போறா, காலம்பற பத்து மணி வண்டிக்குப் போறா" என்று அறிவித்தார். வீடு நிசப்தத்தில் ஆழ்ந்தது.

என்ன விஷயம் என்று தெரிந்து கொள்வதற்காக நாங்கள் அனைவரும் நெருங்கி வந்தோம். இவ்வளவு நேரம் விஷயத்தைத் தெரிந்து கொள்ளக் காத்திருந்ததில் எரிச்சலடைந்து போய் அம்மா, "மொதல்லே ஒக்காருங்க, முன்னி போறான்னு அப்புறம் தண்டோரா போடலாம், பாடையிலே போறவனுக்கு இப்ப என்ன ஆயிடுச்சாம், ரெண்டு வருஷமா எந்தப் பூனை குறுக்கால போச்சாம்?" என்று வெளியே கேட்டுவிடாதபடி குரலைத் தாழ்த்திக் கொண்டு கேட்டாள்.

அப்பா அம்மாவின் கட்டிலின் கால்மாட்டிலேயே உட்கார்ந்து கொண்டார். தரையில் சின்ன லாந்தர் வைத்திருந்தது. நாங்கள் அனைவரும் குளிருக்கு அடக்கமாகக் குத்துக்காலிட்டு மோவாயை முழங்காலில் வைத்துக் கொண்டு விஷயத்தை அறிந்து கொள்ளும் ஆவலில் வட்டமாகக் கீழே உட்கார்ந்திருந்தோம். முன்னி ஒரு பக்கம் சுவரோரமாக முன்பேயே உட்கார்ந்திருந்தாள். வலுக்கட்டாயமாகக் குழந்தையைத் தூங்கப் பண்ணி விட்டு நீளமாக முக்காட்டை இழுத்து விட்டுக்கொண்டு அண்ணியும் வந்து விட்டாள். பிரபாவைக் காணோம். எங்களிடையே இருந்த ஒரே வெளிச்சம், அண்ணா, நான், அமர், கும்வர் எல்லோரும் கவிந்து உட்கார்ந்ததில் பெரும்பாலும் மறைக்கப்பட்டு விட்டது. கும்வர் யாராவது இந்நேரத்தில் விளையாட்டு என்று தட்டி விடக்கூடாதே என்று பயந்து கொண்டே லாந்தர்கள் மேல் கையைக் காட்டி சூடு பண்ணிக்கொள்ள முயன்று கொண்டிருந்தான். ஆனால் அவனை யாரும் கவனிக்கவேயில்லை.

அப்பா அமைதியாக, "முன்னியை அழைச்சுக்கிட்டுப் போவலாம்னு வந்திருக்கான், ரொம்ப மன்னிப்பு கேட்டுக்கிட்டான். தப்புப் பண்ணிட்டேன், இனிமே செய்யமாட்டேன், இனிமே அது மாதிரி கேள்விபட்டா ஏண்டான்னு கேளுங்கங்கறான். அப்படி ஆச்சுன்னா, ஜாதி சனம் சொல்ற தண்டனையை ஏத்துக்கறேன்னு தொண்டை அடைக்கச் சொல்றான், என்னை என்ன பண்ணச் சொல்றே!" என்று சொன்னார்.

"அட, ஏன் திடீர்னு தொண்டையடைக்குதுன்னுல்லே தெரியலே! புதுசா அறிவு எங்கேருந்து வந்து மொளச்சுது? அந்தச் சிறுக்கி என்ன ஆனாளாம்?" மாப்பிள்ளையை அம்மா புதிது புதிதாக அர்ச்சித்துக் கொண்டிருந்தாள்.

"அந்த சிறுக்கியாலதான் அறிவே வந்திருக்கு. எல்லாத் துணிமணி

யையும், நகை நட்டுகளையும் எடுத்துக்கிட்டுத் தலைமறைவாப் போய் அஞ்சாறு மாசம் ஆச்சாம். போலீஸ்லேகூட புகார் கொடுத்தானாம். ஆனா கிடைக்கவா போவுது? இப்பதான் புத்தி வந்துதாம்."

ஆனால் நிலைமையின் தீவிரத்தில் அவன் பேச்சுக்கு யாரும் முக்கியத்துவம் கொடுக்கவில்லை. அண்ணா, "அவ என்னை நாசமாக்கிட்டான்னு இப்ப சொல்றான். முன்னாடி குருடனா, நல்லது கெட்டது தெரியாம அவ சொன்னபடி ஆடினப்போ மூளை எங்கே போச்சுன்னு தெரியலே..." என்றார்.

"ஹூம், போச்சு மாமியார் வீட்டுக்கு..." என்று எரிந்து விழுந்தாள் அம்மா. பிறகு பொறுத்து நீண்ட பெருமூச்சுவிட்டு, "இப்படிப்பட்ட ஆளை எப்படி நம்பறது? நாளைக்கு இன்னொரு சிறுக்கி பேச்சைக்கேட்டு ஆடுவான். நம்ம குட்டியை நாம ஒண்ணும் அனுப்பவேண்டாம்பா. மொதல்லியே குலை உயிரும், குத்துயிருமாதான் ஆக்கி அனுப்பினான். இனிமே கொன்னே போட்டாலும் போட்டுடுவான்" என்றாள்.

"அவன் சத்தியம் பண்றான். தலையில அடிச்சு சொல்றான்" என்று அப்பா எடுத்துச் சொல்லும் தோரணையில் சொன்னார். "அவன் பேச்சைக் கேட்டா திருந்திட்டான்னுதான் தோணுது, ஏதோ ஒரு தடவை தப்பு பண்ணிட்டான். வாழ்நாள் பூராவும் அதையேவா செஞ்சுக்கிட்டு இருப்பான்? எல்லாம் வயசுக்கோளாறு- நான் எல்லாம் நல்லா எடுத்துச் சொல்லியிருக்கேன்."

அம்மா சம்மதப்படவில்லை, "உங்களுக்கென்ன, அவன் சொன்னதைக் கேட்டுக்கிட்டு வந்துட்டீங்க" என்று அலட்சியமாகச் சொன்னாள்.

"இதுதான் உங்கிட்டே எனக்குப் பிடிக்கறதில்லை. அப்புறம் எனக்கு கோபம் வந்துடுது. சொன்னாப் புரிஞ்சுக்க மாட்டேங்கறே, நீ பாட்டுக்கு சொன்னதையே சொல்லிக்கிட்டு நிக்கிறியே! பிறத்தியார் சொல்றதையும் கேளு." என்று எரிச்சலுடன் தோற்ற குரலில் அப்பா சொன்னார். "இப்போ சுயநலத்தாலதான் வந்திருக்கான்னே வச்சுக்குவோம், தானாதானே வந்திருக்கான்? ஒரு தடவை மண்ணைக் கவ்வினப்புறம் புத்தி வந்துட்டுது. அவன் பேச்சைக் கேட்டாலே, ரொம்ப வருத்தப் படறான். இனிமே ஒண்ணும் கஷ்டப்படுத்தமாட்டான்னு தெரியுது. அப்படியிருக்கப்போ அனுப்பிவச்சா என்ன தப்புன்னு நீயே சொல்லு. இல்லேன்னா அவளை இப்படியே வாழாவெட்டியா வீட்டிலே வச்சுக்கப் போறியா? அவளைப் படிக்க வைக்கவோ, ஒரு தொழில் கத்துக்கொடுக்கவோ, நம்மகிட்டே வசதி கிடையாது. ஆம்பளைப் பசங் களையே கவனிக்கமுடியலே. அப்புறம் அவனவனுக்கு அவனவன் குடும்பம், அவனவன் பிரச்சினைன்னு ஆயிடும். நாம எவ்வளவு நாள்தான் வச்சுக் காப்பாத்த முடியும்? இல்லேன்னா அவளுக்கு இரண்டாம் கல்யாணம் பண்ணிடுவோமா?"

அம்மா பட்டென்று வெடித்தாள், "உங்க வாயிலே கொள்ளி வைக்க! பசங்களுக்கு முன்னாடி இதையெல்லாம் பேச வெக்கமாயில்ல? ரெண்டாம் கல்யாணம் பண்ணப்போறாராம். ஜாதி சனம் காறித்துப்பனு மாக்கும்! மொதல்லியேதான் கௌரவம் கொடிகட்டிப் பறக்குது. ஆர்ய சமாஜக்காரர்களோட சேந்து சேந்து உங்களுக்கு மூளையே கெட்டுப் போச்சு."

"அப்ப என்னதான் செய்யணும்னு நீயே சொல்லு. நல்லது சொன்னா உனக்கு ஏறமாட்டேங்குது! இன்னொண்ணு செய்யலாம்னா நீயே சொல்லு. எனக்குத் தெரிஞ்சவரை இது நல்ல சந்தர்ப்பம். தானா வந்திருக்கான். முன்னி இங்கியிருந்துக்கிட்டு என்ன பண்ணுவானு நீயே யோசி. அங்கே அவளுக்குன்னு குடும்பம், குழந்தை குட்டின்னு இருப்பா, இல்லேன்னா அப்புறம் தும்பைவிட்டு வாலைப் பிடிக்கிற கதையாயிடும்."

அம்மா ஏதோ சொல்ல வாயெடுத்தாள். திடீரென்று முன்னி தேம்பித் தேம்பி அழும் குரல்கேட்டு அனைவரும் திடுக்கிட்டோம். இதுவரை அவளும் சாய்ந்து குத்துக்காலிட்டுக் குளிருக்காகவோ, முகத்தை மறைப்பதற்காகவோ கைகளால் முழங்கால்களைக் கட்டிக்கொண்டு உட்கார்ந்திருந்தாள். அவள் குனிந்த தலை அழுகையில் குலுங்கியது. நான் மற்றவர்களை விட அவளுக்கு அருகில் இருந்தேன். அவள் தலையை நிமிர்த்தி, "முன்னி என்னம்மா ஆச்சு, ஏன் அழுவுறே!" என்று கேட்டேன்.

அவள் பலவந்தமாகத் தலையை அப்புறப்படுத்திக் கொண்டு, இன்னும் பலமாக அழ ஆரம்பித்தாள்.

"வாயைத் திறந்து சொல்லும்மா, எதுக்கு அழுவுறேன்னு எங்களுக்கு எப்படிம்மா தெரியும்" என்று அண்ணன் பரிவுடன் கேட்டார்.

அவள் பதில் சொல்லாமல் அழுதுகொண்டே இருந்தாள். சிறிது நேரம் கழித்து அழுதுகொண்டே விம்மல்களுக்கிடையே வெகு பிரயாசைப்பட்டு, "அப்பா நீங்க உங்க கையால எனக்கு வெஷம் கொடுத்துக் கொன்னுடுங்க. இல்லேன்னா, கழுத்தை நெறிச்சுக் கொன்னுடுங்க, என்னை அங்கே அனுப்பாதீங்கப்பா-என்னை அங்கே அனுப்பாதீங்க- நான் அங்கே செத்துடுவேன். உங்களைக் கையெடுத்துக் கும்பிடறேன்! உங்க கால்லே விழறேன். என்னை எங்கேயும் அனுப்பிச் சுடாதீங்கப்பா!" என்று சொன்னவண்ணம் அப்பா கட்டிலில் தொங்கப் போட்டு உட்கார்ந்திருந்த கால்களைக் கட்டிக்கொண்டு குலுங்கிக் குலுங்கி அழுதாள்.

எங்கள் அனைவரின் கண்களிலும் கண்ணீர் வந்துவிட்டது. அம்மா கண்ணீரைத் துடைத்துக்கொண்டு விம்மலாக மூக்கை உறிஞ்சினாள்.

"அடடே என்னம்மா இது" என்று அப்பா பலவந்தமாக அவளைத்

தூக்கி மேலே மடியில் இழுத்துக் கொண்டார். அவள் அரைகுறையாக மடியில் சாய்ந்து அவரைக் கட்டிக்கொண்டு அறுபடும் பசுவைப் போல அழுதாள். அழுகையின் விம்மல் ஒலிகளைத் துணியை வாயில் வைத்துத் திணித்து அடக்க அவள் பெரிதும் முயன்றாள். ஆனால் விம்மலோ அவளது விலா எலும்புகளை உடைத்துக்கொண்டு வந்து விடும்போல இருந்தது. அவளுடைய தோள்கள் மட்டுமல்ல, உடல் முழுவதுமே அழுகையில் குலுங்கியது. குலுங்கும் அவள் தலையில் தலை சாய்த்துத் தந்தையும் அழுதார். பெரிய பெரிய கண்ணீர்த் துளிகள் அவர் கன்னங்கள் வழியே உருண்டோடி முன்னியின் கரிய முடிகளில் மறைந்தன. அலைகின்ற தன் மனத்தை அவளுடைய முதுகில் வருடி தேற்றிக்கொள்ள முயன்றார். நாங்களும் மௌனமாகக் கண்ணீர் வடித்தோம். சமயத்தில் அது உதடுகள் வழியாக வாயில் வந்து கரித்தது. உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக்கொள்ளவும், மூக்கிலிருந்து கசியும் தண்ணீரைத் தடுக்கவும் அவ்வப்போது மூக்கை உறிஞ்சிக் கொண்டோம். கும்வரால் தாங்கிக் கொள்ளமுடியாமல் போனது. அவன் வந்து அம்மாவைக் கட்டிக்கொண்டு "அம்மா, முன்னியக்காவை அனுப்ப வேண்டாம்– அனுப்பாதீங்கம்மா" என்று அழ ஆரம்பித்தான்.

இவ்வளவு பரிதாபத்திற்குரிய பெண்ணை நாம் எவ்வளவு அலட்சியப் படுத்தியிருக்கிறோம், சமயங்களில் மேலும் துன்பப்படுத்தி யிருக்கிறோம் என்பதை யோசித்துப் பார்க்கும்போது மேலும் வேதனையாக இருந்தது. முன்னியை நான் வைத்துக் காப்பாற்றுவேன்– என்ன ஆனாலும் சரி– என்று நான் உறுதி செய்து கொண்டேன். ஒரு பெண்ணுக்கு இரண்டு வேளை சாப்பாடு, ஒரு ஜோடி புடவை கூடவா எங்களால் தர முடியாது. ஏழெட்டு நிமிடங்களுக்குப்பிறகு உணர்ச்சி சற்று கட்டுப்பட்டதும், முன்னியே, "அம்மா நான் பாத்திரம் பண்டம் தேச்சு, வீட்டுவேலை செஞ்சு பிழைச்சுக்குவேன். என்னை அங்கே அனுப்பாதீங்க" என்று சொன்னாள்.

அப்பாவும் அதற்குள் சுதாரித்துக்கொண்டார். "என்னம்மா பைத்தியம் பிடிச்சமாதிரி பேசறே! நாங்க என்ன அந்நியமா? அப்படி இப்படி தோணுச்சுன்னா நடுராத்திரின்னாலும் நீ இங்கே வந்துடு. இது மொதல்லே உன் வீடு. அப்புறம்தான் எங்களுக்கு. இந்த ஒரு தடவை ஒத்துக்கம்மா, இனிமே அப்படியெல்லாம் நடக்காது."

"வேண்டாம், வேண்டாம்" என்று ஏதோ பயங்கர அரக்கனைக் கற்பனையில் கண்டவளாக அவள் பதறினாள், "என்னை அந்தப் பாழுங் கிணத்திலே தள்ளாதீங்கப்பா". அப்பா அடிபட்ட வேதனையுடன் ஈனஸ்வரத்தில் "உனக்கு இதுதான் நல்லதும்மா, அது உன் வீடுல்ல? அதை நீ விளங்க வைக்காம யாரு விளங்கவைப்பா? உனக்கு நல்ல துக்குத்தாம்மா சொல்றேன். ஜாதிசனம் கண்டபடி பேசுது. அவனவன் வாய்க்கு வந்தபடி பேசறான். ஊர் வாயை மூடமுடியுமா அம்மா!"

"என்னைப் பத்தி அப்படி ஒரு அவதூறு வந்துச்சின்னா என்னை எதுவும் வச்சுக் கொன்னுடுங்கப்பா"என்று முன்னி அழுதாள். எவ்வளவு முயன்றும் அவளால் அழுகையைத் தடுக்க முடியவில்லை.

அப்பா மீண்டும் கண்ணீர் வடித்தார். இப்போது அவரால் சுதாரித்துக்கொள்ள முடியாது போலவும், சற்றுநேரத்தில் தேம்பித் தேம்பி அழ ஆரம்பித்து விடுவார் போலவும் தோன்றியது. அவர் கீழ் உதடு உணர்ச்சி வேகத்தில் கிடந்து துடித்தது. பிறகு அவர் முன்னியை சற்று நகர்த்திக் கட்டிலில் கிடத்திவிட்டு எழுந்து போய்விட்டார்.

அதன் பிறகு நாங்கள் அப்படியே மௌனமாகச் செயலற்று சுமார் ஒரு மணி நேரம் உட்கார்ந்திருந்தோம். பிறகு குளிர் அதிகமாகவும், தூக்கமும் வரவும் ஒவ்வொருவராக எழுந்து போக ஆரம்பித்தோம். முன்னி மட்டும் அம்மாவின் கட்டிலில் விம்மிக் கொண்டும், தேம்பிக் கொண்டும் இருந்தாள்.

காலையில் முன்னியை அனுப்பி வைத்துவிட்டோம்! போகும்முன் அவள் உரக்க அழுதாள், தேம்பித்தேம்பி அழுதாள், ஒவ்வொருவரையும் கட்டிப்பிடித்து அழுதாள். அப்போது அவள் வாய் திறந்து எதுவும் சொல்லவில்லை. ஹிஸ்டீரியா நோயாளி போல அழுதுகொண்டே இருந்தாள். பிரபாவைக் கட்டிக்கொண்டு பல ஜன்மங்களுக்கு சந்திக்கப் போவதில்லை என்பதுபோல அழுதாள். ஒருவர் மற்றொருவரை விடுவ தாகவே தெரியவில்லை. வண்டிக்கு நேரமாகிவிட்டது. எனவே, மிகவும் கஷ்டப்பட்டு இருவரையும் பிரித்தோம். அப்பா ஏதோ வேலையாக வெளியே போய் விட்டிருந்தார்.

முன்னி எனக்கு அடுத்தவள். எனவே, வீட்டிலேயே எனக்குத்தான் அவள்மீது அதிக பாசம். என் கழுத்தைக் கட்டிக்கொண்டு அவள் மிகவும் கேவிக்கேவி அழுதாள். எனக்குத் தொண்டை அடைத்தது. எனக்கு இதயமே பிளந்துவிடும் போலவும், நான் சுக்குநூறாக உடைந்து விடுவேன் போலவும் இருந்தது. முன்னி எவ்வளவோ முயன்று, "அண்ணா, அண்ணிகிட்டே பேசுங்க, அவுங்க ஒரு பாவமும் அறியாத வங்க" என்று மட்டும் திக்கித்திணறி சொன்னாள்.

அதன்பின் அவள் போய்விட்டாள்- அவள் உணர்விழந்தவளாக அழுதவண்ணமே சென்றாள். வண்டி கண்ணைவிட்டு மறையும்வரை நான் பார்த்துக்கொண்டே நின்றேன். பிறகு என் அறைக்கு வந்து, ஜன்னலை சாத்திக் கொண்டு உட்கார்ந்துவிட்டேன். கண்ணீர் இடை விடாமல் கன்னங்கள் வழியே மடியில் விழுந்த வண்ணம் இருந்தது. நான் அசைவற்று உட்கார்ந்திருந்தேன். என் மனத்தில் ஏதோ இனம் புரியாத இரைச்சல்.

வீட்டில் சாவுக் களை பரவியது. ஒருவர் விம்ம, இன்னொருவர் முகத்தைத் தொங்கப்போட்டுக் கொண்டு உட்கார்ந்திருக்க ஏதோ இழவு விழுந்த வீடுபோல இருந்தது. சுவர்களும்கூட அழுவதுபோலவும், எங்களை நெருக்குவது போலவும் தோன்றியது.

# 10

திவாகர் வீட்டில் சாப்பாட்டை எல்லாம் முடித்துக்கொண்டு திரும்பிய போது மணி பதினொன்று அடித்துவிட்டது. வீட்டில் சொல்லிவிட்டுக் கூட வரவில்லை. வீட்டுக்குப் போனால் "எங்காவது போனால் சொல்லிவிட்டாவது போய்த்தொலை" என்று செமத்தியாகக் கிடைக்கும். நடுராத்திரியில் கதவைத்தட்டி திறக்கச் செய்வதே ஒரு பிரச்சினைதான். யார் திறந்தாலும், தன்னுடைய கஷ்டங்களையும், என் பொறுப்பு களையும்பற்றி ஒரு உடனடிச் சொற்பொழிவு ஆற்றுவதைத் தன் தலையாய கடமையாகக் கருதப்போவது நிச்சயம். ஒவ்வொரு அடியாக எடுத்து வைக்கும்போது மனம் 'தடக்தடக்'கென்று அடித்துக் கொண்டது. ரோட்டிலும், அக்கம்பக்கச் சந்துகளிலும் எங்கும் ஜனசந்தடியே இல்லை. வீடுகள் உயரமாக இருந்ததால் நிலவொளி ஆங்காங்கே பொக்கையும், போரையுமாக பரவியிருந்தது. பனிமூட்டம் புகையாகப் படர்ந்திருந்தது.

மனதில் பெருத்த சஞ்சலம், உள்ளூர வேதனை. முன்னி விஷயத்தால் அன்று சினிமாவுக்குப் போகவில்லை. இரண்டு மூன்றுநாள் கழித்துப் போகத் திட்டம் போட்டோம். ராத்திரி பத்து மணிக்கு சினிமா முடிந்தது. படம் ஒன்றும் பிரமாதமாக இல்லை. ஆனால் கதா நாயகன்–கதாநாயகியின் சில காதல் காட்சிகள் கண் முன்னாலேயே நின்றன. இவையெல்லாம் என் வாழ்விலும் வராதா என்று ஏக்கம் பிறந்தது. பல காலம் கழித்து சினிமா பார்த்தேன். நடந்தே திரும்பினோம். நானும் திவாகரும் சேர்ந்தாற்போல நடந்தோம். கிரண் சற்றுத் தள்ளி நடந்து வந்தாள், இன்னும் முகம் தெரியாத பல ஆண்களும், பெண்களும் சினிமாவின் ஏதாவது ஒரு அம்சத்தைப் பற்றிப் பேசிக்கொண்டே நடந்து கொண்டிருந்தனர். கிரண் என்னுடன் மட்டுமல்ல, என் முன்னாலேயே அநேகமாகப் பேசமாட்டாள். சினிமாவுக்கு வந்தபோது எழுந்த என் சங்கோஜ உணர்வு, இப்போது மீண்டும் தலை தூக்கியது. என் உடைகள் அவர்களைவிட மிகவும் சாதாரணமானவை. சின்னதாகிப் போன கசங்கிய பேண்ட்டும் சட்டையும், கிழிந்த பழைய செருப்பு. என் முடித்திருந்த சிண்டைக் குறித்து முன்னெப்போதும் இல்லாத வெட்கம் சூழ்ந்ததுதான் பெரிய ஆச்சரியம். யாருக்கும் தெரியாதபடி அதை அவிழ்த்து மற்ற முடிகளில் அமுத்திவிட்டுக் கொண்டேன்.[1] அது தனியே

---

1 வட இந்தியாவில் கிராப்புடனேயே பின்னால் சிறிதாக ஒரு சிண்டு வளர்த்து முடிந்து வைத்திருப்பது உண்டு. இது பழைமையை விட விரும்பாதவர்கள் செய்துகொள்வது.

தெரியவில்லையே என்று அவ்வப்போது தடவித் தடவிப் பார்த்துக் கொண்டேன். இதை வெட்டியே விட்டால் என்ன என்று எண்ணம் எழும். பிறகு, "சீச்சீ, இதென்ன.. இப்போதெல்லாம் என்னென்னவோ எண்ணங்கள் மனதில் வருகின்றன!" உடனே கடிந்து கொள்வேன்.

திவாகர் சற்று நெருங்கி வந்து, "என்னப்பா, வாழ்க்கை எப்படிப் போகுது? இப்போ வீட்டிலே என்ன செய்யறே?" என்று சற்றுக் கேலியாகக் கேட்டான்.

எனக்குக் காலையில் அண்ணா பேசியது நினைவுக்கு வந்தது. "பரிட்சையெல்லாம் முடிஞ்சிடுச்சில்ல, இனிமே என்ன செய்யறதா அபிப்ராயம்?" என்று காலையிலேயே உட்காரும் அறையில் கேட்டார்.

"என் அபிப்ராயம் என்ன, நீங்க என்ன சொல்றீங்களோ, அப்படி தான்" ஏதாவது வேலைக்குத்தான் போகச் சொல்கிறார் என்று புரிந்து விட்டது.

"எங்கியாவது முயற்சி பண்ணேன். உன்னோட அந்த சினேகிதன் இருக்கானே, அவன்கிட்டே சொல்லி வையேன்."

"ரிஸல்ட் வரட்டுமே, இப்ப அப்ளை பண்ணினாலும் என்னன்னு எழுத முடியும்?"

"ரிஸல்ட் வர ரெண்டு மூணு மாசம் ஆவுமே, அதுவரைக்கும் ஏதாவது செய்யப்போறியா, இல்லே சும்மா வெட்டியா சுத்தப் போறியா?" என்றவர் கவலை தோய்ந்த குரலில், "வீட்டு நெலமை உனக்கு தெரியாததில்லே. நான் கொண்டாற தொண்ணூறு-நூறு ரூபாய், கடல்லே பெருங்காயம் கரைச்ச மாதிரிதான். ஏதாவது செஞ்சாகணும். எப்படியாவது அமரையும், கும்வரையும் நாமரெண்டு பேருமா சேர்ந்து நல்லாப் படிக்க வச்சுட்டம்னா அவங்களுக்கு ஒரு நல்ல வேலை கெடச்சுடும்" என்றார்.

"ஊம்.. முயற்சி பண்றேன்" என்று பட்டுக்கொள்ளாமல் சொன்னேன்.

"உன்னோட அந்த சினேகிதன்கிட்டே சொல்லேன். எங்கியாவது பார்த்துச் சொல்லுவான், அவனுக்கு எத்தினியோ பேரைத் தெரியுமே!" என்று அவர் மீண்டும் திவாகரைக் குறித்து நினைவூட்டினார்.

"கேட்டுப்பாக்கறேன்" என் கவனம் அப்பா உள்ளே போட்ட உரத்த சப்தத்தின்பால் சென்றது. பேச்சை மாற்றுவதற்காக, "அப்பா ஏன் சத்தம் போடறாரு!" என்று கேட்டேன். எனக்கு உண்மையில் அதுபற்றி சற்றும் அக்கறையும் இல்லை. யாரையாவது சத்தம் போட்டுக் கொண்டிருப்பார். அவரவர் வேலை அவரவருக்கு. இதிலே நான் கவலைப்பட என்ன இருக்கிறது? ஆனாலும் பேச்சை மாற்ற வேண்டுமே!

"வா, போய்ப் பார்ப்போம், யார் மேலேயோ கோவிச்சுக்கிட்டு சத்தம் போடறாப்பலே இருக்கு!" நானும், அண்ணனும் உள்ளே வந்தோம். அவர் மீண்டும் நினைவு படுத்தினார்— "ஆனா அவன்கிட்ட

சொல்ல மறந்துடாதே, எதுக்கும் காதிலே போட்டு வைக்கறது நல்ல தில்லே!"

இப்போது திவாகர் கேட்டவுடன் அண்ணாவின் பேச்சுக்கள் நினைவுக்கு வந்தன. "சும்மாதான் இருக்கேன். என்ன செய்யலாம், சொல்லேன்" என்றேன்.

"அடபோப்பா, என்ன செய்யறதாவது! நல்லா குறட்டைவிட்டு தூங்கு, ஜாலியா இருக்கணும்பா, நல்லா போத்திகிட்டுத் தூங்கு." என்று சர்வ அலட்சியமாகச் சொன்னவன், சட்டென்று "ஆனா நீயாவது ஜாலியா இருக்கறதாவது. அதுக்குள்ளே அடுத்த வருஷ புஸ்தகத்தை யெல்லாம் கடம் அடிக்க ஆரம்பிச்சிருப்பியே! இல்லாட்டி இந்திய வேதாந்தம் ஏதாவது படிச்சுக்கிட்டிருப்பியே!"

நான் வருத்தத்துடன், "இல்லே திவாகர், நான் அநேகமா மேற்கொண்டு படிக்கமாட்டேன்" என்றேன்.

"படிக்கமாட்டியா, என்ன சொல்றே!" என்றவன் சிரித்து, "கேட்டியா கிரண், ஐயா சினிமா வசனம் பேசறாரு!" என்றான்.

கிரண் முறுவலித்தாள். இதுவரை சற்றும் பட்டுக்கொள்ளாமலேயே நடந்து வந்து கொண்டிருந்தாள்.

"நான் படிக்கறது கஷ்டம்தான்" என்று விட்டேற்றியாகச் சொல்லிவிட்டு, "சரி விடு, அதுக்கு இன்னும் ரொம்ப நாள் இருக்கு. சரி, நீ என்ன செஞ்சுகிட்டிருக்கேன்னு சொல்லு" என்று கேட்டேன்.

"நானா? நான் செய்யறதுக்கு என்ன இருக்கு? கிரண், நான் அவ்வளவுதான், நடுவிலே படிப்பு படிப்புன்னு என்னை கவனிக்கறதே யில்லை என்று ரொம்ப கோபிச்சுக்கிட்டா. இப்போ எல்லாத்தையும் இவ கையிலே கொடுத்தாச்சு" என்றவன் "ஹோஹோ" என்று பெரிதாக சிரித்தான். ஆனால் உடனே கேலிப்பேச்சு எல்லை மீறியதையும், அந்தரங்க விஷயத்தைப்போட்டு உடைத்ததற்காக கிரணின் புருவம் நெறிந்ததையும் உணர்ந்தவனாக, ஆக இப்போ நீ அம்மாகிட்டே மாட்டணுமில்லே? அம்மா ரொம்பக் கோபமா இருப்பாங்க. அப்போ கோபத்திலே சரி, போன்னு சொல்லிட்டாங்க. இப்ப அடுப்பூதி அடுப்பூதி கண்ணு எரிச்சல் கண்டிருக்குமில்லே, திட்டற திட்டிலே நிமித்திடுவாங்க நிமித்தி." என்று பேச்சை மாற்றினான்.

"ஹுக்கும்- ஆமா- ராத்திரியும் பகலும் ஓய்வு ஒழிச்சலே கெடயாதா? ஆறு மாசம் கழிச்சு இப்போதான் ஒரு சினிமாவுக்கு வந்திருக்கோம், அதுக்கு ஒரு திட்டுதிட்டினா என்னதான் பண்றதாம்?" என்றாள் கிரண் அலட்சியமாக. "அம்மாகிட்டே இதை சொல்லிப் பாக்கறதுதானே!" என்று திவாகர் சீண்டினான்.

எனக்கு இந்தப் பேச்சு பிடிக்கவில்லை. சே- இந்த திவாகர் ரொம்ப மோசம். பெற்ற அம்மாவைப் பற்றி பெண்டாட்டி இப்படிப் பேசுவதைக் கேட்டுக்கொண்டு சும்மா நிற்கிறானே! இந்த கிரண், தாயாகப் போற்ற

வேண்டிய மாமியாரை இப்படி மரியாதையில்லாமல் பேசுகிறாளே, அதுவும் என் முன்னால். இப்படி பிரபா மட்டும் பேசியிருந்தால், எல்லா பிரதிக்ஞையும் மறந்து பளார் என்று அறைந்திருப்பேன். இப்படி நினைத்தவுடனேயே பிரபாவை நான் அறைந்த காட்சி பளிச்சிட்டது. கிரணின் அநாகரீகம் எனக்குச் சற்றும் பிடிக்கவில்லை.

"ஒரு விஷயம் சமர்," என்று திடீரென்று திவாகர் ஆரம்பித்தான், "நீ ஏன் உன் மனைவியை வீட்டுக்கே அழைச்சுகிட்டு வரலைன்னு இவ நெறயா தடவை என்னைக் கேட்டுட்டா. கிரண்! ஒருவேலை செய், ஒருநாள் இவுங்களை சாப்பிடக் கூப்புடு. அப்போ இவன் மனைவியை அழைச்சுக்கிட்டு வருவான்."

எனக்குத் தர்மசங்கடமாகிவிட்டது. நான் என்ன பதில் சொல்கிறேன் என்று கிரண் என்னை ஆவலுடன் பார்த்தாள். தட்டுத்தடுமாறி, அவ.. அவ வீட்டுலேல்ல இருக்கா, வந்தா அழைச்சுக்கிட்டு வந்து அறிமுகப்படுத்தி வைக்கிறேன்" என்றேன்.

பேச்சு முடிந்துவிட்டது. ஆனால் பனியாக உறைந்த என் இதயத்தின் உள்ளேயும் உயிர்ச் சூட்டுடன் ஒளிந்து தப்பித்திருந்த ஒரு பகுதியிலிருந்து நீண்ட பெருமூச்சு வெளிவந்தது. 'ஆகா.. நானும் இப்படி என் மனைவியுடன் சினிமாவுக்குப் போகமுடிந்தால்..' சினிமா பார்க்கும் போது இவர்கள் இருவரும் எப்படி ஒட்டிக்கொண்டு சினிமா பற்றிப்பேசிக் கொண்டிருந்தார்கள் என்பது எனக்கு நினைவு வந்தது. கூடவே சினிமாவில் பார்த்த காட்சிகள் உள்ளுக்குள் கிளுகிளுப்பை ஊட்டின. ஆனாலும் மனைவி என்ற சொல் பிரபா என்கிற ஜீவனையும் குறிக்கும் என்றோ, இதுமாதிரி எழும் கனவுகளில் அவளுக்கு ஒரு இடம் இருக்கக் கூடும் என்றோ நான் நினைக்கத் தயாராக இல்லை. பிரபாவை இவற்றில் எல்லாம் நான் சேர்க்கவேயில்லை. என் மனைவி என்பவள் வேறு எவளோ போலவும், என் வசத்தில் இல்லை போலவும், அது பிரபா இல்லை போலவுமே எனக்கு நினைப்பு.

திவாகர் பிடிவாதம் பண்ணியதால் அங்கேயே சாப்பிட்டேன். திரும்பியபோது ஐந்து மணிநேரம் முன்பு இருந்த சமர் மீண்டும் வந்துவிட்டான். எந்த உளைச்சலையும், குமைச்சலையும்விட்டு ஓடினேனோ அவை மீண்டும் புது வேகத்துடன் சூழ்ந்து கொண்டன. இதுவரை ஏதோ கனவுலகில் சஞ்சரித்துக் கொண்டிருந்ததாகவும், இப்போது நனவுலகுக்கு வந்துவிட்டதாகவும் தோன்றியது.

காலையில் விவரித்த நிகழ்ச்சியைப் பாதியில் விட்டுவிட்டேனே! நானும் அண்ணனும் உள்ளே போனோமா, பிரபா குற்றம் செய்தவளைப் போலத் தலையைக் குனிந்துகொண்டு நின்றிருந்தாள். அப்பா துர்வாசர் மாதிரி எதிரே கையை உயர்த்தி உயர்த்தி கர்ஜித்துக் கொண்டிருந்தார். அம்மாவும் அவருடன் அவ்வப்போது ஒத்து ஊதினாள். யானைத் துதிக்கை போன்ற முக்காட்டுடன் அண்ணி கதவுக்குப் பின்னால் நின்று கொண்டிருந்தாள்.

"பருப்பு பொறுக்க வேற எடமாயில்லே..?" என்று கத்திக் கொண்டிருந்த அப்பா எங்களைப் பார்த்ததும் எல்லாவற்றையும் மீண்டும் ஒருமுறை புதிதாகக் கொட்டித் தீர்த்தார். "பருப்பை மொட்டை மாடியில் ஒக்காந்துதான் பொறுக்கணுமா? இப்படித்தான் அன்னிக்கு வாளியிலே தண்ணி கொண்டு போய் வச்சுகிட்டு மொட்டை மாடியிலே தலைகுளிச்சாகுது- அன்னிக்கு முன்னி சொன்னாளேன்னு சும்மா விட்டேன். இனிமே சாப்பாடு, தூக்கம் எல்லாம் மொட்டை மாடியிலே தானா? எப்பப் பாத்தாலும் ஊமச்சி மாதிரி தலையைத் தொங்கப் போட்டுக்கிட்டு சுத்தி வர்றா, நிமிந்து பாக்கறாளா பார்! ராணியம்மா என்னதான் நெனச்சுக்கிட்டு இருக்காங்கன்னு புரியலியே! அப்படி மொட்டைமாடியிலே என்னதான் வச்சிருக்கு, அதையும்தான் கொஞ்சம் எங்களுக்கு சொல்லேன். தோ பாரு- இன்னிக்கு நான் சொல்றேன், இதெல்லாம் எனக்கு சுத்தமா பிடிக்காது. நல்லாக்கேட்டுக்க. குளிர் நாளு. ஊர்ப்பசங்க அத்தினி பேரும் மொட்டைமாடியிலேதான் நோட்டம் உட்டுகிட்டுத் திரியறானுங்க. மருமகளா, லட்சணமாக இருந்துக்க."

"யாருக்கும் தெரியாம மொட்டை மாடியிலே ஒக்காந்துகிட்டா தானே அக்கம்பக்கத்திலே கண்ணடிக்கலாம்" என்ற அம்மா எங்களைப் பார்த்ததும் மேலும் விளாசினாள். "இல்லாட்டி மொட்டைமாடிக்கு ஏன் ஓடி ஓடிப் போறாளாம்?"

பிரபா தலையைக் குனிந்து மௌனமாகக் கேட்டு கொண்டிருந் தவள் இது கேட்டு சட்டென்று தலைநிமிர்ந்து அம்மாவைக் கூரிய பார்வை பார்த்தாள். பிறகு மெதுவாக மீண்டும் தலையைக் குனிந்து கொண்டாள். கண்களிலிருந்து இரண்டு கண்ணீர்த்துளிகளும் உருண்டு விழுந்தனவோ என்னவோ?

"நல்லா சொன்னே! பாண்டே பொண்ணாட்டம் யாரோடவாவது ஓடிடப் போறா!" என்றவண்ணம் அப்பா தலையைக் குனிந்து கொண்டு வெளியே உட்காரும் அறைக்குப் போனார்.

அம்மா திடுக்கிட்டு, "எந்த பாண்டேயோட பொண்ணு? நம்ம தெரு பாண்டேயோட பொண்ணா? எந்த பொண்ணு, பெரியவளா? ஆனைக் குட்டியாட்டம் இருப்பாளே, அவளா?" என்றாள், பிறகு இரண்டு கைகளாலும் தலையில் அடித்துக் கொண்டாள். "ஐயோ கடவுளே! காலம் என்ன இப்பிடிக் கெட்டுப் போச்சே! தர்மம் நியாயம் ஒண்ணுமில்லாமல் போயிட்டுதே!" அப்பா போனபின்பு, அண்ணா விடம், "ஏண்டா தீரஜ்! யாரோடடா ஓடிப்போயிட்டா?" என்று விசாரித்தாள்.

"வேற யாரோட ஓடியிருக்கப்போறா? ட்யூஷன் சொல்லிக் குடுக்க வந்தானே, அந்த வாத்தியோடத்தான் ஓடியிருப்பா. இனிமேதான் போய் விசாரிக்கணும்." என்றார் அண்ணா.

“அடப்பாவமே! பாத்துக்கிட்டிருக்கும்போதே எல்லா அக்கிரமும் பண்ணிடறாங்களே! நமக்கு தெரியவே மாட்டேங்குதே! கடவுளே, இந்த உலகம் என்னதான் ஆவுமோ!” என்று அம்மா முகத்தில் மிகவும் கவலையைக் காட்டியவண்ணம் அங்கலாய்த்தாள்.

அண்ணனும் திரும்பி வெளியில் செல்ல ஆரம்பித்தார். முக்காட்டை உயர்த்திவிட்டுக் கொண்டு அண்ணி வெளியே வந்து, “இந்த நாலு எழுத்து படிச்ச பொண்ணுங்க எதுவும் செய்வாங்கம்மா” என்று அம்மாவிடம் சொன்னாள்.

திடீரென்று அம்மாவுக்கு அசல் விஷயம் ஞாபகத்திற்கு வந்தது. “அட, ஊர் எப்பிடியாவது போவுட்டும். இவ ஏன் அங்கே ஓடிஓடிப் போறா? அங்கே எவன் உக்காந்திருக்கான் இவளுக்கு?” என்றாள். பிறகு என்னைப் பார்த்து, “தோ பார்ரா– இனிமே அவ அந்தப் பக்கம் காலை எடுத்து வச்சா நான் ரொம்ப பொல்லாதவளா இருப்பேன்.”

“அட, நீங்க ஏம்மா அனாவசியமா தொண்டை தண்ணி காயக் கத்தறீங்க, இவளைப் பாருங்க, பாட்டிகிட்டே வரா” என்று அண்ணி குழந்தையைப் பாட்டியிடம் கொடுத்தாள்.

நானும் திரும்பி நடக்க ஆரம்பித்தேன். பின்னால் அம்மாவின் குரல் ஒலித்தது. “தொண்டைத் தண்ணி காயக் கத்தாம என்ன பண்றது? இதையெல்லாம் பாத்துத்தான் சமர் அவளை நிமிந்தும் பார்க்க மாட்டேங்கறான். மருமகளுக்கு என்னன்னா வாலிபம் திமிறுது. பாவம் பையன் இளைச்சு துரும்பா போறான். அவனுக்கு என்ன ஓடம்புக் குன்னும் புரிஞ்சு தொலைக்க மாட்டேங்குது. நல்ல சனியன் வந்து நம்ம தலைல விடிஞ்சுது. செத்துத் தொலைஞ்சாலும், பீடை விட்டுதுன்னு இருக்கலாம். இப்போ விடவும் முடியலே, தொடவும் முடியலியே! பையன் வாழ்க்கை பாழாப் போகுதே! இவ செத்து ஒழிஞ்சா இன்னொரு கல்யாணமாவது பண்ணி வைப்பேனில்லே!” அம்மாவுக்குத் தொண்டை அடைத்தது.

நான் முற்றத்திற்கு வந்து என் அறைக்கு படியேறத் துவங்கினேன். இங்கே தினம் ஒரு சண்டைதான், எதை எதைக் கவனிப்பது? ஆனால் அப்போதும் போகும்போது முன்னி சொன்னது காதில் ஒலித்தது. அவள் சொன்னதன் உட்பொருள் புரியவில்லை. ஆனால் உள்ளுக்குள் ஒரு அமைதியின்மை பரவியது.

பிறகுதான் நான் சினிமா போனது.

சினிமாவிலிருந்து திரும்பி நான் பயந்து கொண்டே ஒருமுறை கதவைத் தட்டிய பிறகும், அந்த அமைதியின்மை உள்ளே பொங்கிற்று. இதிலிருந்து தப்புவதற்காகத்தானே நான் திவாகர் வீட்டுக்குப்போய் இதுவரை அதை மறந்திருந்தேன். இப்போது மீண்டும் அனைத்தும் முன்னே வந்தன. நல்லகாலம், கதவைத் திறந்தது அமர். இல்லாவிட்டால் நான் எல்லாத் திட்டுக்களுக்கும் தயாராக இருந்தேன். அவன், “அண்ணா,

எங்கே போயிட்டீங்க? எல்லாருக்கும் ஒரே கோபம். எல்லாருக்கும் எங்கே போயிட்டீங்களோன்னு கவலையா போயிட்டுது” என்றான். “எல்லாரும் தூங்கிட்டாங்கல்ல?” என்று நான் மெதுவாகக் கேட்டேன். அவன் “ஊம்” என்றதும் சத்தம் போடாமல் மாடிப்படியேறி நான் என் அறையை அடைந்தேன். எனக்கு சாப்பாடு மூடிவைத்திருக்கப் போகிறதே என்று பயந்தேன். நல்ல காலமாக இல்லை. நிம்மதிப் பெருமூச்சு விட்டேன். உடைமாற்ற ஆரம்பித்தேன்.

மார்ச் முடியும் தருவாயில் இருந்தது. குளிர் பெரிதும் குறைந்து விட்டது. நாங்கள் கதவைத் திறந்து வைத்துக் கொண்டு உள்ளேயே தூங்கிவந்தோம். மணி பதினொன்றரை, பதினொன்றே முக்கால் இருக்கும். வெளியே ஏகாதசி சந்திரன் ஒளி வீசிக் கொண்டிருந்தது. அந்த நிலவொளி பனி மூட்டத்தில் சற்று மங்கியும், அடர்ந்தும் காணப்பட்டது. எனக்குத் தாகமாக இருந்தது. நான்கு பக்கமும் பார்த்தேன். தண்ணீர் எங்கும் வைத்திருக்கவில்லை. இது என்ன, இன்று சாப்பாடும் இல்லை, தண்ணீரும் இல்லை! பிரபா தன் வேலையை மறக்கவே மாட்டாளே? மறந்துவிட்டாளோ? போய்த் 'தொலையட்டும் என்றுதான் முதலில் நினைத்தேன். ஆனால் தேவை நெட்டித் தள்ளியது. மாடியில் அந்தக் கோடியில் சுவரில் நீண்டிருக்கும் ஒரு கல்மீது தண்ணீர் சற்று மறைவாக வைத்திருக்கும். அங்கேவரை போக அலுப்பாக இருந்தது. பனிபெய்து கொண்டிருந்தது. தண்ணீரை அணுகும்போது திடுக்கிட்டுப் போனேன். எதிரே சுவரைஒட்டி ஒரு வெள்ளை உருவம் உட்கார்ந்திருந்தது. பகீர் என்றது, “கடவுளே, இது யார்? பூதமா, பிசாசா, திருடனா” என்று மனம் பலவிதமாகவும் பதறியது. துணிவை வரவழைத்துக் கொண்டு கவனித்துப் பார்த்தேன். இன்னும் இரண்டு எட்டு எடுத்துவைத்தேன். பிரபா! பிரபா என்றவுடன் நிம்மதியுடன் அளவில்லாத ஆச்சரியமும் அடைந்தேன். இங்கே ராத்திரி பன்னிரெண்டு மணிக்கு இந்த பயங்கரத் தனிமையிலும் பனியிலும் இவள் அங்கே உட்கார்ந்துகொண்டு என்ன செய்கிறாள்? பிரபாதான் என்று உறுதியானவுடன் நான் தெளிவுடன் தண்ணீரை அணுகினேன். வழியெல்லாம் இவள் இங்கே இந்நேரத்தில் என்ன செய்கிறாள் என்ற கேள்வி மனத்தில் மோதியவண்ணம் இருந்தது. உட்கார்ந்தவாக்கில் தூங்கிவிட்டாளோ என்று ஒரு கணம் யோசித்தேன். ஆனால் அருகில் நடந்தபோது கேட்ட விம்மல்களிலிருந்து அழுகிறாள் என்று தெரிந்தது.

தண்ணீர் குடித்துவிட்டு அவளைக் கவனித்துப் பார்த்தவாறே திரும்பி வந்துவிட்டேன் நான். ஆனால் படுக்கையில் படுத்துப் புரண்ட வண்ணம் இருந்தேன். இருந்தாற்போலிருந்து “ராத்திரி பன்னிரெண்டு மணிக்கு இப்படித்தனியாக ஏன் அழுது கொண்டிருக்கிறாள்” என்கிற கேள்வியை என்னுள் யாரோ கேட்டுக்கொண்டே இருந்தார்கள். அழுவதற்கு வேறு இடம் கிடைக்கவில்லையா? அட, படுக்கையிலே

அழுது கொள்வதுதானே! வெளியிலே—அதுவும் அர்த்த ராத்திரியில் ஏன் அழுகிறாள். ஆனால் என்ன ஆச்சரியம் என்றால் என்னென்னவோ நடந்திருக்கிறது. அதற்கெல்லாம் அவள் அழுது நான் பார்த்ததுமில்லை, அழுததாக யாரும் சொல்லிக் கேட்டதுமில்லை. எப்போதுமே மௌன மாக நிச்சலனமான முகத்துடனேயே இருப்பாள். இன்று என்னவாகி விட்டது?

ஆனால் இதையெல்லம் போட்டு நான் ஏன் மண்டையைக் குழப்பிக் கொள்ள வேண்டும்? ஆனால் இந்த நினைவு தோன்றியவுடனே மனதின் ஆழத்திலிருந்து, "சீ— கீழ்மைக்கும் ஒரு எல்லை உண்டு" என்று ஒரு குரல் சீறியது. பிறகு ஏதேதோ கன்னாபின்னாவென்று விஷயங்கள் மனதில் ஓடின. சினிமாவில் வெடி வைத்து மலையைத் தகர்க்கும் காட்சி ஒன்றைப் பார்த்திருந்தேன். அது தெளிவாக அப்படியே மனதில் தோன்றியது. உள்ளே ஒரு வெடிகுண்டு விழுந்து அக்கம்பக்கத்து வீடுகள் எல்லாம் சிதறி, ஆண்களும் பெண்களும் காயமுற்றும், பீதிகொண்டும் அங்கும் இங்கும் ஓடுவதாகவும் தோன்றியது. ஏற்பட்ட இரைச்சலில் யார் பேசுவதும் காதில் விழவில்லை. ஒரே இரைச்சல், ஒரு ஒட்டு மொத்த இரைச்சல், ஒரு குருட்டுத் தனமான இரைச்சல் மண்டையில் வெடிகுண்டின் ஓசையாக நிறைந்தது. வெகுநேரம் கழித்து ஓரிரு குரல்கள் தெளிவாகின. ஒரு பெரிய உத்தரத்திற்கு அடியில் சிக்கிக் கொண்ட முன்னி, "அண்ணா, அண்ணிகிட்டே பேசுங்க.." என்று கத்து கிறாள். இன்னொன்று என் குரல். அது எங்கேயோ அமுங்கிக் கேட்டது, "இல்லே, இப்ப அவ தன்னோட வீட்டிலே இருக்கா, வந்தா அழைச்சுக் கிட்டு வந்து அறிமுகப்படுத்தறேன்." இந்த இரைச்சலுக்கு நடுவே எங்கோ உயரத்து மணியோசையாக ஒரு இடைவிடாத குரல், 'வெளியே பனியில் இரவு பனிரெண்டு மணிக்குத் தனிமையில் யாரோ அழுது கொண்டிருக்கிறார்கள்' என்று ஒலித்துக் கொண்டிருந்தது. இந்த ஒலி வெடி குண்டு வெடித்த இடத்திலிருந்து குபீர் என்று எழும் புழுதியாக எழுந்து கேள்விக்குறியாக மாறுவதாகத் தோன்றியது. இந்த வெடியோசை என் மூளையின் நரம்புகளை சம்மட்டி கொண்டு தாக்குவது போல இருந்தது. அதனால் என் ரத்தநாளங்கள் அதிர்ந்தன. இவற்றையெல்லாம் மறந்து நான் தூங்கிவிட இரண்டொரு முறை முயன்றேன். ஆனால் ராட்சசச் சிலந்தி போல ஏதோ ஒன்று என் நெஞ்சைப் பற்றியிருப்பதாகவும், அதை அகற்றாத வரை தூங்க முடியாது, முடியவே முடியாது போலவும் தோன்றியது.

இந்த மனப்போராட்டமும், உளைச்சலும் புயலில் வீசும் பேரலை களாக வீசிக் கொண்டிருந்தன. அவற்றுடன் எவ்வளவு நேரம் போராடிக் கொண்டிருந்தேன் என்று எனக்கே தெரியாது. சமயத்தில் அரைத்தூக்கம், சமயத்தில் முழு விழிப்பு. தாங்கிக்கொள்ள முடியாமல் போய்விட்டபோது நான் மெதுவாக எழுந்தேன். எழுந்தவுடனேயே என் தன்மானம் பூதமாக

வழிமறித்தது. ஒரு கணம் தயங்கினேன். பிறகு மந்திரத்திற்குக் கட்டுப் பட்டவன்போல அதை ஒதுக்கித் தள்ளிவிட்டு வெளியே வந்தேன். மிகவும் தயக்கமாக இருந்தது. நேரே அவளிடம் போகத் துணிவு வரவில்லை. பிறகு நேரே தண்ணீர்ப் பாத்திரத்திற்கு அருகே போனேன். நிலவு இன்னும் அப்படியே பாலாகக் காய்ந்து கொண்டிருந்தது. பனியும் இன்னும் அப்படியே பெய்து கொண்டிருந்தது. பிரபாவும் இன்னும் அப்படியேதான் உட்கார்ந்து அழுதுகொண்டிருந்தாள். என் நெஞ்சை யாரோ அமுக்குவதுபோல இருந்தது. ஒரு மணிநேரம் ஆகியிருக்குமே, இன்னும் அழுது கொண்டிருக்கிறாளே! தாகமில்லாமலே சற்று தண்ணீர் குடித்துவிட்டுத் திரும்பினேன். பிரபாவுக்கு எதிரே நடக்கும்போது சற்றுத் தயங்கி நின்றேன். அவள் சற்றுத் திடுக்கிடுவாள் அல்லது சற்று அழுகையை நிறுத்தி நிமிர்ந்து உட்காருவாள் என்று எதிர் பார்த்தேன். ஆனால் எதிரே யாரும் நிற்பது தெரியாததைப்போல அவள் அப்படியே ஆடாமல் அசையாமல் உட்கார்ந்து மௌனமாக அழுது கொண்டேயிருந்தாள். என்ன செய்வது என்று எனக்கும் புரிய வில்லை. இருமி நான் வந்திருப்பதைக் காட்டிக் கொள்ளலாமா? கடைசியில் ஒன்றும் தோன்றாமல் நடந்தேன். ஆனால் கால்கள் நகர மறுத்தன. முழங்கால் வரை சேற்றில் புதைந்திருப்பதாகத் தோன்றியது. மிகுந்த பிரயாசைப்பட்டுத் திரும்பி வந்தேன். யாரோ என்னைப் பின்னாலிருந்து இழுத்துப் பிடிப்பதாகத் தோன்றியது. கடைசியாக நான் திரும்பி அவள் முன்னால் மீண்டும் போய் நின்றேன். அவள் கல் மாதிரி அமர்ந்திருந்தாள். கொஞ்சநேரம் அப்படியே பார்த்துக் கொண்டிருந்து விட்டு, தொண்டையில் சிக்கிய வார்த்தைகளை மிகுந்த பிரயாசையுடன் எடுத்து வெளியே விட்டேன், "நடுராத்திரியிலே இங்கே ஒக்காந்து என்ன பண்ணிக்கிட்டிருக்கே?"

அவள் தலை நிமிர்ந்து வாழ்க்கையில் முதல்முறை பார்ப்பதுபோல என்னைப் பார்த்தாள். பிறகு முந்தானையால் முகத்தை மூடிக் கொண்டாள். நிலவொளியில் அவள் கண்களின் கண்ணீர் ஒரு கணம் மின்னல்போல் மின்னி மறைந்தது. அழுகையின் வேகம் இரண்டு மடங்காகிவிட்டது. நான் சிறிது நேரம் நின்றிருந்தேன். இனியும் நின்றிருப்பது வீணாகவும், அநாவசியமாகவும், அவமானகரமானதாகவும் எனக்குப்பட்டது. கசப்புடன், ஆனால் இம்முறை தெளிவாக "விடிஞ்சு அழுதுக்கறது. பனியிலே ஒடம்பு கெட்டுடும். ராத்திரி ரொம்ப நேரமாயிடுச்சி" என்றேன். எப்படியோ சொல்லிவிட்டேனே தவிர, யோசிப்பதற்கும் யோசிப்பதைப் பேசுவதற்கும் எவ்வளவு வித்தியாசம் என்று தோன்றியது. இதைப் பேசுவதற்குள்ளேயே எனக்குத் தொண்டை அடைத்தது. உள்ளே ஏதோ திரவமாகிவிட்டது போலவும், நெஞ்சை அடைப்பது போலவும் இருந்தது.

"ஒங்களுக்கென்ன, நீங்க போய் தூங்குங்களேன்" என்றவண்ணம்

முந்தானையை முகத்திலிருந்து அகற்றி பளீரென்று கேட்டாள். "ஒரு வருஷமா செத்தாளா, பொழச்சாளான்னு பாத்தீங்க? இப்ப என்ன வந்துட்டுது? போய் தூங்குங்களேன்!" அவள் என் கண்களை நேருக்குநேர் பார்த்துக் கேட்டாள். கண்களில் கண்ணீர் ததும்பி நின்றது.

அந்தப் பார்வை என் ஒவ்வொரு அணுவையும் துளைத்தது. அந்தக் கூரிய பார்வை என் சக்தி அனைத்தையும் ஒரே மூச்சில் உறிஞ்சி விட்டதாகத் தோன்றியது. என் ஆற்றல் அனைத்தும் ஏதோ மந்திரத்தால் வற்றிவிட்டதாகப் பட்டது. வலுவிழந்து உடைந்துபோய் நான் வருடக் கணக்காக நோய்வாய்ப் பட்டவன்போல தொப்பென்று அவள் முன்னால் தரையில் உட்கார்ந்தேன். வலுவிழந்து நடுங்கும் கைகளை நான் அவள் தோள்மீது வைத்துத் தொண்டை அடைக்க சிதைந்த குரலில், "பிரபா... நீ என் மேல... கோபமா இருக்கியா...?" என்று கேட்டேன். என்னுள்ளேயிருந்து பேசுவது யார் என்று கூடவே ஆச்சரிய மாகவும் இருந்தது.

மேற்கொண்டு நான் சொல்லும்முன், தன் கரங்களால் என் தோள்களைப் பற்றிக் குலுக்கி ஏதோ உன்மத்தம் பிடித்தவள் போல், "நான் ஒங்களுக்கு என்ன கெடுதல் பண்ணினேன், நான் என்னதான் தப்பு பண்ணிட்டேன்? நான் உங்களுக்கு ஏத்தவ இல்லே, என்னைப் பிடிக்கலேன்னா உங்க கையால என்கழுத்தை நெரிச்சுப் போட்டுடுங்க. நான் வருத்தமே படமாட்டேன். நீங்க இன்னொரு கல்யாணம் பண்ணிக்குங்க. எது வேண்ணாலும் பண்ணிக்குங்க. ஆனா நான் என்ன தப்பு பண்ணினேன்னு..." அடக்க முடியாத அழுகையில் அவள் ரோமக் கால் ஒவ்வொன்றும் அழத்துடித்தன. தன்னை மறந்து அவள் என் தோள்களைப் பற்றி என்மீது சரிந்தாள். அவள் வாய்மட்டும் அழாமல் சாட்டையடிபட்டுத் துடிக்கும் தசைகள்போல அவள் உடம்பு முழுவதும் துடித்து அழுவதாகப்பட்டது. விம்மலின்போது உடலே விலுக்கியது. அவளையும்விட அதிகமாக நான் எப்போது அழ ஆரம்பித்தேன் என்று எனக்குத் தெரியவில்லை. இவ்வளவு நாள் அமுங்கியிருந்த எரிமலைக் குழம்பு இப்போது வெடித்து ஓடியது. பாறைபோல் இறுகியிருந்த எனக்குள் ஒரு ஊற்று பொங்கிப் பெருகியது. பனிப்பாறை உருகிக் கண்ணீர் அருவியாக ஓடிற்று. ஒருவர் ஒருவரைக் கட்டியணைத்து நாங்கள் தன் நினைவின்றி அழுதுகொண்டேயிருந்தோம்.

ஒரே மகளாகப் பாசத்துடன் வளர்க்கப்பட்ட ஒரு அப்பாவி அபலையை இங்கே கொண்டுவந்து அடைத்து என்னென்ன கொடுமைகள் இழைத்தேன். என்னென்ன கொடூரங்கள் புரிந்தேன், எவ்வளவு வேதனைகள் கொடுத்தேன்– பாவம். அவளுக்கு இங்கு யார் இருக்கிறார்கள் என்கிற நினைவு வரும்போதெல்லாம் ஓராயிரம் ஈட்டிகள் என் நெஞ்சில் இறங்கின. என் அழுகை இரு மடங்கு, நான்கு மடங்கு ஆகிப் பொங்கிக் கொண்டிருந்தது. மௌனமாக அழுது

கரைவதைத் தவிர அவளால் என்ன செய்ய முடியும்? பச்சாதாபத்தையும், மனதின் உளைச்சலையும், துடிப்பையும் இதயத்தைப் பிளக்கும் வேதனையையும், வெளிக்கொண்டுவரும் ஆற்றல், கண்ணீருக்கோ, விம்மலுக்கோ, துடிப்புக்கோ கிடையாது என்று அப்போது தோன்றியது. பைத்தியம் போலக் கையை உயர்த்தி உரக்க அழுது கொண்டு ஊரெங்கும் ஓட வேண்டும், உணர்விழந்து விழும்வரை ஓட வேண்டும், அப்போதுதான் மனம் சற்று லேசாகும் என்று தோன்றியது.

இவளுக்கும் உயிரும் உணர்வும் இருக்கிறது என்று நான் நினைத்துப் பார்க்கவாவது முயன்றேனா? இவளுக்கும் ஆசைகள் உண்டு, கனவுகள் உண்டு, இன்பதுன்பங்கள் உண்டு என்று யோசித்திருக்கிறேனா? இல்லை. இல்லவே இல்லை. யாரை நம்பி இங்கே வேலைக்காரியாக உழலுகிறாள் என்று நினைத்தும் பார்க்கவில்லை. அவள் ஒன்றும் விலைகொடுத்து வாங்கிய அடிமையல்லவே! நான் அறைந்த கன்னத்தை, இதோ இன்னும் அங்கே என் விரல்கள் பதிந்திருக்கின்றன, இன்றும் அங்கே ஜிவ்வென்று இருக்கிறது என்பதுபோல நான் நடுங்கும் விரல்களால் வருடினேன். ஒரு பைத்தியக்காரத்தனத்துடன், அந்தக் கன்னத்தை நான் நிலவொளியில் திருப்பி, என் விரல்கள் இன்னும் பதிந்திருக்கின்றனவா என்று உண்மையிலேயே பார்த்தேன். மாடியிலிருந்து குதித்து உடனே தற்கொலை செய்து கொள்ள வேண்டும் என்று தோன்றியது. நான் செய்ததற்கு எப்படியாவது பிராயச்சித்தம் செய்ய முடியாதா? செய்ததைத் துடைத்து எறிய வழியே இல்லையா? ஆனால் நகர முடியாதபடி அவள் தன் கைகளால் கழுத்தைக் கட்டிப் பிடித்திருந்தாள், என் கைகளும் அவளைக் கட்டியணைத்துக் கொண்டிருந்தன.

இப்படி நாங்கள் இருவரும் எவ்வளவு நேரம் அழுது கொண்டிருந்தோமோ தெரியாது. வாய் திறந்து பேசவே அவகாசம் கிடைக்கவில்லை. சிறிது நேரம் ஓய்வதும், பிறகு மேலும் வேகமாக அழ ஆரம்பித்து விடுவதுமாக இருந்தோம். அவள் உணர்விழந்து மயக்கமாகி வெகுநேரம் ஆகிவிட்டது போல இருந்தது. உணர்விழந்த அவளைத் தூக்கி அறைக்குக் கொண்டு வந்தபோது எரியும் கட்டிடத்தின் இடிபாடுகளுக்கிடையே தூக்கி வருவது போலவும், என் உடலும் ஆங்காங்கே பொசுங்கிவிட்டது போலவும், என் கைகள் தீய்ந்து போய்விட்டது போலவும் இருந்தது.

நிலவு மறைந்து, வானத்தில் கருமை படர்ந்தது.

இரவு முழுவதும் நாங்கள் ஒரு கணமும் தூங்கவில்லை. ஒரு வார்த்தையும் பேசவில்லை. ஒரு கணமும் பிரியவும் இல்லை. ஒரு வருட ஆற்றாமையை இன்றே தணித்துக் கொள்பவர்கள் போல ஒரு கணம் விலகி ஒருவரை ஒருவர் பார்ப்பதும், மீண்டும் இரு மடங்கு வேகத்துடன் இறுகக் கட்டிக் கொள்வதுமாக இருந்தோம்.

"கா... கா...!" எங்கோ காகம் கூவியது.

காலையில் மற்றவர்கள் எழும் முன் அவள் எழுந்து போய்விட்டாள். போகும் முன் திரும்பிப் பார்த்து, "எனக்கு ஒரு கார்டு கொடுங்க. ரொம்ப நாளா அம்மாவுக்கு எழுதணும்னு நெனச்சுக்கிட்டிருக்கேன். காசில்லே," என்றவள் முந்தானையால் கண்களைத் துடைத்துக்கொண்டு போய்விட்டாள். எனக்கு சுவரில் முட்டிக்கொண்டு சாகவேண்டும் போல மறுபடியும் இருந்தது.

ஐயோ, வெளிச்சத்தில் அவள் முகத்தை எப்படி ஏறிட்டுப் பார்ப்பது?

வெளியே சூரியக் கதிர்கள் குறுக்கும் நெடுக்குமாக நெய்ய ஆரம்பித்தன.

# 1

வானம் துடைத்து வைத்த கரும்பலகையாக இருக்க, ஒரு முனையிலிருந்து மறுமுனை வரை பரவிய கத்தரிப்பூ நிறம் கிழக்கேயிருந்து மெல்லமெல்ல பொன் வண்ணம்பெற, பனித்திரை விலக்கி ஒளி முகமாக சூரியன் தோன்ற, காற்றில் மெல்லிய குளிர் படர, அதில் அருகேயிருக்கும் மரத்தின் இலைகள் சிலுசிலுக்க, மெல்லமெல்ல ஊர் விழித்தெழ, ஒரு காலை மாடிக்கைப்பிடிச் சுவர் மீது ஊன்றி, அந்த பொழுதைக் காண்பதும், மனதின் மூலைமுடுக்குகளில் எல்லாம் அதை உணர்வதும் எவ்வளவு இன்பமானது என்பதை நான் முதன் முறையாக உணர்ந்தேன். முதன்முறையாக சூரியன் மெல்லமெல்ல எப்படி வருகிறது என்று பார்த்தேன். சமயத்தில் சூரியக்கோளம் பம்பரம்போல வேகமாகச் சுழன்று மேலே எழுவதாகவும், சமயத்தில் அலையில் ஆடும் பந்தாக மெதுவாக எழுவதாகவும் தோன்றியது. ஒவ்வொன்றையும் பார்க்கும் போது மனத்தில் 'அட, சூரியன் உதிக்கும்போது இப்படியிருக்கும் என்று தெரியாதே', என்று யாரோ சொல்வதுபோல இருந்தது. சூரியன் எழும்போது கதிர்கள் ஊற்றாகப் பொங்குமா! இந்த எதிரேயிருக்கும் மூன்றுமாடிக் கட்டிடத்தின் ஏரியல் கம்பத்தை முதலில் தொடுமா? புதிதாகப் பார்ப்பதுபோல எல்லாம் இருந்தது. யாராவது அருகேயிருந்தால் இதையெல்லாம் சொல்லலாம். சூரியோதயத்தைக் காட்டலாம் என்று தோன்றியது.

வாழ்க்கையில் நான்தான் முதன்முதலாக சூரியோதயத்தைப் பார்க்கிறேன் என்பது மாதிரி இருந்தது. முன்பெல்லாம் ஏதோ இருண்ட சிறையில் அடைபட்டிருந்த மாதிரி இருந்தது. என்னைச் சுற்றி நடப்பதைப் பார்ப்பதேயில்லை. இப்போது திடீரென்று வெளிச்சத்திற்கு வந்தவுடன், கண்கள் கூசின. உண்மையிலேயே இந்த வெளிச்சத்தில் பிரபாவுடன் எப்படிப் பேசுவேன்? அவள் முகத்தை எப்படி ஏறெடுத்துப் பார்ப்பேன், குற்றம் சாட்டிக் குத்துவது போன்றிருக்கும் விழிகளை எப்படி ஏறெடுத்துப் பார்ப்பேன்? அனைவருடனும் எப்படிப் பேசுவேன்? இப்போது வீட்டினரும், அப்பாவும் சந்தோஷப்படுவார்கள் என்று நினைக்கிறேன். இனிமேல் அண்ணி டாக்டரிடம் போகவேண்டும் என்று மறைமுகமாகச் சொல்லமாட்டாள். ஜாடையாக அதைச் சொன்னாலே எனக்குப்

பற்றிக் கொண்டு வரும். இப்போதோ அதுகுறித்துப் புன்முறுவலே படர்ந்தது.

சிறிது நேரம் முன்புதான் பிரபா எழுந்து போனாள். என்னாலும் அவள் கண்களைச் சந்திக்க முடியவில்லை. அவளாலும் என் கண்களை நேராகப் பார்க்க முடியவில்லை. பிறகுதான் நான் எழுந்து வந்து இங்கு நின்றேன். வெகுநேரம் நின்றபடி பார்த்துக் கொண்டிருந்தேன். என்ன செய்வது என்று தெரியவில்லை. யாரும் என்னைப் பார்க்கும் முன்பே சத்தம் போடாமல் நழுவிவிட விரும்பினேன். அப்போதுதான் பிரபா போஸ்ட் கார்டு கேட்டது நினைவுக்கு வந்தது.

தெருக்களில் தோட்டிகள் பெருக்கிக் கொண்டிருந்தனர். வீடுகளின் முன்பாகப் பால்காரர்கள் சைக்கிளில் பால்கேன்கள் தொங்க நின்றிருந் தனர். வயதானவர்கள், போர்வை போர்த்திக் கொண்டு குழந்தைகளுடன் பால் பாத்திரத்தை நீட்டிய வண்ணம் நின்றிருந்தனர். ஒரு இடத்தில் கேனிலிருந்து குவளையில் பாலை எடுக்கும்போது பால் விரல் வழி யாகவோ, குவளையிலிருந்தோ சொட்டாக விழுவதை உண்மையாகவே திரும்பி நின்று பார்த்தேன். இது ஒரு அதிசயமாகவும், முன்னெப்போதும் பார்த்ததில்லை போலவும் தோன்றியது. எதிரே வருபவர்கள் ஒவ்வொரு வருக்கும் நான் எனக்குள் பொங்கும் மகிழ்ச்சியை அடக்கிக் கொண்டிருக் கிறேன் என்று தெரியும்போல இருந்தது. எந்த நிமிடமும் அது கட்டை உடைத்துக் கொண்டு வந்துவிடும் போலவும், பைத்தியம் போலத் தெருக்களில் "நான் ரொம்ப ரொம்ப சந்தோஷமா இருக்கேன்" என்று கத்திக் கொண்டு ஓட ஆரம்பித்து விடுவேன் போலவும் தோன்றியது. இந்த மகிழ்ச்சியை எப்படி வெளிப்படுத்துவது என்று தெரியவில்லை. பிரபாவுக்கு இப்போது எப்படி இருக்கும் என்கிற நினைவே என்னை மெய்சிலிர்க்கச் செய்தது. வறண்ட மணல் போலிருந்த என் மனத்தில் ஏதோ மதுக்குடம் ஒன்று கவிழ்ந்து ஒவ்வொரு துகளையும் நனைத்து பூராப் பரப்பையுமே ஈரமாக்கி விட்டிருந்தது. எவ்வளவு பயங்கரமான பொசுக்கும் அனல்காற்று மற்றும் கோடை வெப்பத்திற்குப் பிறகு எனக்குக் கட்டாற்றுப் பாயும் குளிரருவி கிடைத்திருக்கிறது! நான் அதை யுகம்யுகமாகத் தண்ணீரையே காணாதவனாக அள்ளிப்பருகிக் கொண்டிருந்தேன்.

மிகவும் சப்தம் போட்ட பின்பு திவாகர் ஐயா கொட்டாவி விட்டுக் கொண்டே ஒரு வழியாகக் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தார். "என்னப்பா, ராத்திரி பதினோரு மணிக்குப் போய்ச் சேர்ந்தே! காலங்காத்தாலே ஏழு மணிக்கு வந்து நிக்கிறே?" என்றவன் யாரும் வரவில்லையே என்று ஒருமுறை உள்ளே பார்த்துக் கொண்டு, "ஏண்டா பாவி, உன் பெண்டாட்டி அம்மா வீட்டுக்குப் போயிருக் கான்னா, பெண்டாட்டி வீட்டிலே இருக்கறவங்ககிட்டே ஏண்டா உன் வயித்தெரிச்சலைக் காட்டறே?" என்று விஷமமாகக் கேட்டான்.

மனைவியைக் குறித்துச் சொன்ன இந்த கிண்டல் உண்மையிலேயே எனக்குள் கிளுகிளுப்பு ஊட்டியது. "என் பெண்டாட்டி அம்மா வீட்டுக்குப் போயிருக்கான்னு எந்த மடையன் சொன்னது..." என்று ஆர்ப்பரிக்க வேண்டும் என்று தோன்றியது. ஆனால் முகத்தைத் தீவிரமாக வைத்துக் கொண்டு, "அப்ப போயிடவா? மடையா, வெளியே வந்துபாரு, வெயில் எவ்வளவு ஏறிட்டதுன்னு தெரியும்" என்றேன்.

"இருக்கட்டுமே, வெயில் வேலையை வெயில் செய்யுது. அதனாலே எனக்கென்ன? நான் இப்போதான் நீ போட்ட கூச்சல்லே தூக்கம் கலைந்து எழுந்திரிச்சேன். இனிமேதான் கைகால் கழுவுறதைப்பத்தி யோசிக்கணும். ஏம்பா பரிட்சையோட இவ்வளவு நாள் மாரடிச்சோமே, கொஞ்சம் விச்ராந்தியா படுக்கக் கூடாது? நான் என்ன, உன்னை மாதிரி கடவுள்கிட்டே விடியறதுக்கு நாலு மணிநேரம் முன்னாடி எழுந்திருச்சு பச்சைத் தண்ணியிலே முங்கிட்டு அப்புறம் ஊர் உலகத்தையெல்லாம் கூட்டி யெழுப்பறதுக்குக் கௌம்புவேன்னு சொல்லிட்டா வந்திருக்கேன்? இங்கே நான் வச்சதுதான் சட்டம்" என்றவன், வரவேற்பறையின் கதவுகளை முழுவதுமாகத் திறந்து, "எழுந்தருளித் தொலை" என்றான்.

"சரி.. போக வேண்டியதுதான். ஐயா சீவி சிங்காரிச்சுக்கிட்டுத் தயா்ராக இன்னும் ரெண்டு ரெண்டரை மணிநேரம் ஆகாதா" என்ற வண்ணம் உள்ளே போய் நன்றாக வசதியாக உட்கார்ந்து கொண்டேன்.

"என்ன மூஞ்சி ஒரேயடியா மின்னுது? என்ன சேதி? பர்ஸ்ட் கிளாசிலே பாஸ் ஆகறமாதிரி கனவுகினவு கண்டியா? காலையிலே பாத்த கனவு பலிக்கும்பாங்க-!" மறுபடியும் சோம்பலாகக் கொட்டாவி விட்டுக் கொண்டே அவன் கிண்டல் செய்தான்.

"அப்பா, இந்தப் பரிட்சை நெனப்பை மட்டும் மூட்டாதே! வெட வெடங்குது. பாஸ் ஆவேனான்னு தெரியலே. பெயிலாயிட்டா தூக்கு மாட்டிக்க கயிறுகூட கெடைக்காது" அது உண்மைதான். ரிஸல்ட் நினைவு வந்தால் மற்றதெல்லாம் மறந்துபோய், என்ன ஆகுமோ என்று திகில் கவ்வும். பிறகு தலையை ஒரு உலுக்கு உலுக்கிக் கொண்டு அந் நினைவுகளை ஒதுக்கியவண்ணம், "விடப்பா, இதைப்பத்திப் பேச்செடுக்காதே. ரிஸல்ட் வரும்போது பாத்துக்கலாம். இப்பவே எதுக்கு அவஸ்தைப் படுத்திக்கணும்?" என்றேன். எதிர்காலத்தைப் பற்றி இப்படி ஒரு அலட்சியம் முன்னால் என்னிடம் இல்லையே என்று ஆச்சரியமாக இருந்தது.

கொஞ்சம் நேரம் சும்மாயிருந்துவிட்டு, "நேத்தைய விஷயத்தை வைச்சுகிட்டு அம்மா இன்னும் மூஞ்சியை உம்முன்னு வச்சுகிட்டு இருக்காங்க. ஒரு நாள் பெண்டாட்டியோட சினிமாவுக்குப் போனா குடியா முழுகிடும், நீயே சொல்லு. இவங்க சொல்றது ஒண்ணும் புரியவே மாட்டேங்குதுப்பா.. சொன்னா நம்புவியோ மாட்டியோ!

மருமககிட்ட மாமியார் சந்தோஷமா இருக்கிற வீடு ஒண்ணக்கூட நான் பாத்ததில்லே. நாலுபசங்க இருந்தாலும் அதே கதைதான், ரெண்டுபேர் இருந்தாலும் அதே கதைதான். இன்னியோட இந்த சண்டை முடிஞ்சுடணும்னு பாக்கிறேன்-" என்றான் அவன்.

"இன்னும் தகராறு நடக்குதா?" என்றேன். ஆனால் இந்த வாக்கியத்தை எனக்கு நானே சொல்லிக் கொண்டது மாதிரி ஏனோ எனக்குத் தோன்றியது. சுவரை ஒடுங்கி உட்கார்ந்திருக்கும் பிரபா ஒரு பக்கமும் மறுபக்கம் அண்ணியும், அம்மாவும் நினைவுக்கு வந்தனர். கண்கள் சட்டெனப் பனித்தன. நாடி நரம்பெல்லாம் துடிக்க "அண்ணா, அண்ணிகிட்டே பேசுங்க" என்று அழுத முன்னியின் குரல் என் காதில் ஒலித்தது. முதலில் கேட்டபோது இதை நான் இந்தக் காதால் வாங்கி அந்தக் காதால் விட்டுவிட்டேன். இப்போதோ அதன் எதிரொலி என் அணுக்கள் தோறும் ஒலித்தது. முன்னியைக் கட்டிக்கொண்டு 'உன் அண்ணியோட நான் பேசினேன், பேசினேன்' என்று ஆனந்தக் கூக்குரல் இடவேண்டும் என்று தோன்றியது. ஆனால் முன்னி எங்கேயிருக்கிறாள்? அவளைத்தான் பாழுங் கிணற்றில் தள்ளி மூடியாயிற்றே! முன்னி விடுபடக் கிடந்து துடிப்பதாகப்பட்டது. அவள் என்னைக் கரையேற்றினாள். ஆனால் தான் அதல பாதாளத்தில் விழுந்துவிட்டாள். அவள் என்னைச் சற்று முன்னதாகக் கரையேற்றியிருந்தால் அவளை நான் அந்த நரகத்தில் விழாமல் காப்பாற்றியிருப்பேன்.

திவாகர் ஏதோ சொல்ல நான் திடுக்கிட்டு நிமிர்ந்தேன். நான் என்ன யோசித்துக் கொண்டிருக்கிறேன் என்று புரிந்துகொண்டு விட்டானோ என்று எண்ணினேன். பேசிக் கொண்டிருக்கும்போதே யோசனையில் சூழ்ந்து விடுவது என்னிடம் ஒரு கெட்ட பழக்கம். திவாகர், "சமர்! நாளைக்கு என் சித்தப்பா பையன் வராரு, இன்னிக்கே அம்மா கோபம் சரியாயிட்டா நல்லாயிருக்கும். இதுக்கு முந்தி வந்தப்போ எனக்கு அறிமுகம் செஞ்சு வைக்கல. எவ்வளவு சுத்தியிருக்காரு தெரியுமா! அடேயப்பா ஒரு ஊர் பாக்கியில்லே. ஆனா அவரை சந்திக்கறபோது இந்த சிண்டுகிண்டு எல்லாத்தையும் வெட்டிக்கிட்டு வரணும், புரியுதா! அவரு கிண்டல் பண்ணித் தொலைச்சா உனக்கு கோபம் வந்துடும். அவரு கொஞ்சம் அதுமாதிரிதான், அவருக்கு இந்த வெளிவேஷமெல்லாம் அவ்வளவா பிடிக்காது" என்றான். நான் வாதத்தை வளர்க்க விரும்பாமல், "இது வெளிவேஷமா? அவங்க அவங்க நம்பிக்கை" என்று சொன்னேன்.

"ஓஹோ- நம்பிக்கைன்னு ஒதுங்கிக்கலாம். தனியே ஹிந்துத்துவக் கொடி பறக்க விட்டுக்கலாம்னு நெனப்பா? ஆனா இது ஒண்ணுக்குப் பயன்படும். சண்டைகிண்டை வந்தா பிடிச்சுக்கலாம். அவனால ஒண்ணும் செஞ்சுக்கிட முடியாது. அப்புறம் பரிட்சைக்குப் படிக்கறப்போ ஆணியிலே கட்டி வச்சுட்டுப் படிச்சா தூங்கி விழ முடியாது" என்று அவன் சிரித்தான்.

"நல்லா சாப்பிட்டுத் தூங்கி சுகபோகத்திலே திளைக்கிற ஆள் நீ, உனக்கு என்ன தெரியும் நம்பிக்கை, ஆத்மா இதெல்லாம் பத்தி?"

"நீ என்ன வேணும்னாலும் சொல்லிக்க, உலகத்திலே இதைத்தவிர வேற என்னதான் இருக்கு? நானும் எப்போதாவது நீ சொல்ற கோயிலுக்குப் போறேன், அங்கே என்ன இருக்கு! சும்மா வாய்ஜாலத்தைத் தவிர அங்கே புதுசா என்ன இருக்கு?"

நான் கோவிலுக்குப் போய்ப் பல காலமாயிற்று என்பது நினைவுக்கு வந்தது. "தோபாரு திவாகர், இதெல்லாம் நம்பிக்கை. ஒவ்வொரு நாட்டுக்கும் நடை, உடை, பாவனை, நம்பிக்கைன்னு ஒரு கலாச்சாரம் இருக்கு. நாம நம்ம கலாச்சாரத்தைப் பற்றி ஆராய்ச்சி செய்யறதில்லே. அதனாலதான் நம்ம நாடு இப்படி ஆகிக்கிட்டிருக்கு. நாம கீழே போய்க்கிட்டே இருக்கோம். நமக்கு நம்ம நாட்டுக் கலாச்சாரம், கடவுள்னாலே இளப்பம், வெளிநாட்டு விஷயம்னா அது பின்னாலே ஒடுவோம்" என்று நான் சொன்னேன். பேச்சை ஆரம்பித்தபோது பெரிய சொற்பொழிவு செய்து அவனுக்கு விளங்கவைப்பது என்றுதான் ஆரம்பித்தேன். ஆனால் நடுவிலேயே மண்கட்டி என்று பிள்ளையார் உருவத்தை பிரபா எடுத்துப் பாத்திரம் தேய்த்துவிட்டது ஞாபகம் வந்து விட்டது. பிரபா செய்தது சரி என்று நான் இன்றும் நினைக்கவில்லை. ஆனால், நான் நடந்துகொண்டது மகா தவறு, ஒரு வகையில் மனிதத் தன்மையே அற்றது என்பது அவ்வப்போது என்னைக் குத்திக் கொண்டே யிருந்தது. இன்று பிரபா நான் செய்த ஒவ்வொன்றையும் பற்றிக் கேள்விகேட்டால் அவளுக்கு என்ன சமாதானம் சொல்லுவேன் என்று ஒரு கணம் நினைத்தேன். உண்மையாகச் சொல்லவேண்டும் என்றால் நான் பலசமயம் நடந்து கொண்டதற்குச் சமாதானம் சொல்ல என்னிடம் ஒன்றுமேயில்லை.

திவாகர் சற்று வேகத்துடன், "நம் நாடோ, வெளிநாடோ எனக்குத் தெரியாது. ஆனா நாடு நாடுன்னு கோணங்கி வேஷம் போடறது எனக்குப் பிடிக்கலே! நான் சொல்றேன்னு தப்பா எடுத்துக்காதே! இஸ்திரி போடாத பேண்டும், கசங்கின சட்டையும், இங்கிலீஷ்காரன் மாதிரி வச்சுக்கிற கிராப்பிலேர்ந்து தொங்கற சிண்டு முடிச்சும்தான் தேசபக்தின்னா, அதுக்கு தூரத்திலேருந்தே ஒரு கும்பிடு. இந்த நாட்டிலே கொஞ்சம் ஒழுங்காத் துணிமணி கட்டிக்கிட்டா அவன் வெளிநாட்டு ஆளா எப்படி ஆயிப்போயிடுவான்னு எனக்குச் சொல்லு பாப்போம். இதெல்லாம் கூடாதுன்னா, ஒட்ட முடிவெட்டிக்கிட்டு தடிக்கதர் வேட்டி, சட்டை போட்டுக்கிட்டுக் காத்திலே வேட்டி சுதந்திர தினக் கொடி மாதிரி பறக்க அதை இழுத்துப் பிடிச்சு கிட்டுப்போ" என்றான்.

எனக்கு முகம் சிவந்துவிட்டது. என்னைப் பார்த்து இப்படி எத்தனையோ முறை சொல்லியிருக்கிறான். ஒவ்வொரு முறையும் இது தனிப்பட்ட விருப்பு வெறுப்பு, நம்பிக்கை என்று தட்டிக் கழித்திருக்கிறேன்.

சில சமயங்களில் மௌனமாகவும் இருந்துவிடுவேன். என்னிடம் வேறு உடைகள் கிடையாது என்று இந்த மரமண்டையில் எப்படி ஏற்றுவது? எனக்குப் பிரபாவின் கிழிந்த நைந்த புடவை நினைவுக்கு வந்தது. பிரபாவின் முகம் நினைவுக்கு வந்தவுடன் திவாகரின் பிதற்றல் எல்லாம் மறந்துவிட்டது. "சரிப்பா விடு, கல்லூரி பட்டிமன்றமா என்ன? காலங் கார்த்தாலே என் மூடை அவுட்டாக்காதே."

"சரி. உன்னோட திடீர் சந்தோஷத்துக்குக் காரணம் சொல்லலியே!"

உண்மை என் உதடுகள் வரை வந்துவிட்டது. பிறகு அதை மறைத்து, "சும்மாதான், ஒண்ணும் விசேஷமில்லை. சரி, நீ குளிக்கிற வேலையைப்பாரு, நான் போறேன், நான் யார் யாருக்கோ கடிதம் எழுதணும், ஒரு நாலு கார்டு இருந்தா குடு." என்றேன்.

சட்டென்று என் மேனி நடுங்கியது. பிரபா கார்டு கேட்டவிதம் நினைவுக்கு வந்தது.

"யார் யாருக்கப்பா எழுதப்போறே, கொஞ்சம் எனக்குந்தான் சொல்லேன். என் ரோல் நம்பரையும் நினைவு வச்சுக்கப்பா, யார்கிட்டே பேப்பர் போவுதாம்?" என்று சிரித்தவன் பிறகு, "அப்பா, நெஜமாத்தான் சொல்றேன், யாரையாவது பிடிக்கமுடியுமான்னு பாரேன். அவனவன் தொடையைத் தட்டிக்கிட்டு கௌம்பிட்டானாம், முன்னேபின்னே தெரியாதவங்ககிட்டேகூட போய்க் காரியத்தை சாதிச்சுக்கிட்டு வந்துடுறானாம். இந்தத் தடவை ஏதாவது கோல்மால் பண்ணலேன்னா பிழைக்கமுடியாது போலிருக்கு" என்றான். அவன் நெற்றியில் கவலைக் கோடுகள் தோன்றின.

அவன் முகத்தைப் பார்த்ததும் பரிட்சையில் பாஸ் ஆவோமா, மாட்டோமா என்கிற பீதியில் மனம் மீண்டும் ஊசலாடியது. பெயிலாகி விட்டால் என்ன ஆகும் என்று மீண்டும் என்னுள் ஆழ்ந்துபோனேன். "நீ மேலே என்ன செய்யப்போறே? மூணாவது வருஷம் சேரப்போறியா, இல்லே வேற லைன்லே போகப்போறியா?" என்றேன்.

"அட போப்பா.. மொதல்லே பாஸாகற வழியைப் பாப்போம். அப்புறமில்லே மத்ததெல்லாம்! பெயிலாயித் தொலஞ்சா இன்னொரு வருஷம் மாரடிக்கணும். தெனம் கோயிலுக்குப் போய்க் கும்பிட்டதும், ஊர்ப்பட்ட வேண்டுதல் வேண்டிகிட்டதும் வீணாய்ப்போயிடும். உனக்கு என்ன பர்ஸ்ட் கிளாஸ்லே பாஸ் பண்ணுவே, பிரச்சினை எனக்குலல!"

திவாகர் என்னைப் பற்றி இப்படி நினைக்கிறான் என்பதை அறிந்து சந்தோஷமாக இருந்தது. ஆனால் மனத்தின் மகிழ்ச்சியை அடக்கிக் கொண்டு, "யப்பா, பர்ஸ்ட் கிளாசும் வேணாம், ஒண்ணும் வேணாம், பாஸ் பண்ணினாலே அனுமாருக்கு ஒண்ணேகால் ரூபாய்க்கு[1]

1 வட-இந்தியாவில் 1¼, 11, 21, 51, 101 ரூபாய் கணக்கில் தட்சிணை கொடுப்பதும், பொருட்கள் வாங்கிப் படையல் இடுவதும் சாதாரணம்.

வாங்கிப் படைப்பேன்" என்றேன். எனக்கு உள்ளுக்குள் நான் பர்ஸ்ட் கிளாஸில் பாஸ் செய்வேன் என்று முழு நம்பிக்கை இருந்தது. வீட்டில் மட்டும் கொஞ்சம் ஒத்துழைத்தால் பர்ஸ்ட் கிளாஸ் என்பது என்ன என்பதைக் காட்டிவிடலாம்.

"சும்மாதான் அலட்டாதேப்பா! மேலே என்ன செய்யப்போறேன்னு சொல்லு. எங்கப்பா மேலே படிச்சு என்ன பண்ணப்போறேன்னு என் உயிரை வாங்கறாரு. வயசிருக்கு, இன்ஸ்பெக்டரா போங்கறாரு. அதிகாரத் துக்கு அதிகாரம், மேல்வரும்படிக்கு மேல்வரும்படிங்கறாரு. ஆனா எனக்குப் பிடிக்கலே சமர்! எங்கே ஊர் ஊரா அலையறது. எங்கியாவது தண்ணியில்லாக் காட்லே தூக்கிப்போட்டான்னா வாழ்க்கையே வெறுத்துடும். கிரண் அழுது அழுது உயிரையே விட்டுடுவா." என்றவன் பெருமூச்சுவிட்டு, "ஹூம்- மேல்வரும்படியாம், அப்பாவுக்கு எப்போதும் பழைய ஞாபகம்தான்," என்றான்.

திவாகரின் பேச்சு என் மனத்தைத் தொட்டுவிட்டது. ஆயினும் "உனக்கென்னப்பா, ராஜாவீட்டுப்பிள்ளை, பிரச்சினை எனக்குல்லே? மேலே என்ன செய்யறதுன்னு தெரியலே. என் படிப்பு நின்னு போச்சுன்னே வச்சுக்க, எங்கியாவது நூறு, நூத்தம்பது ரூபாய்க்கு ஒரு வேலை கெடச்சா போதும்" என்றேன்.

"பைத்தியமா பிடிச்சிருக்கு உனக்கு! தோபார், இவங்கல்லாம் என்ன வேணா சொல்லிக்கிட்டுப் போகட்டும், நாம தேர்ட் இயர் ஜாயின் பண்றோம், தெரியுதா!" என்று தெம்பளிக்கும் குரலில் திவாகர் சொன்னான்.

"இல்லே திவாகர், அளவோடதான் ஆசைப்படணும் எங்க வீட்டு நெலமை அப்படியில்லே. இந்த தடவை ஏதாவது வேலைக்குப் போயே ஆவணும். மேற்கொண்டு படிக்கிறதுக்கு ஒண்ணும் வழி இருக்கறதா எனக்குத் தெரியலே. நான் இப்போ பிடிச்சே வேலை கிடைச்சா சேரலான்னு தேடிக்கிட்டு இருக்கேன். உன்னால ஏதாவது ஆகும்னா சொல்லேன்" எனக்கு அண்ணா சொன்னது நினைவுக்கு வந்தது.

"நான் மட்டும் என்ன சொல்றேன்? நல்ல டிகிரி இருந்தா நல்ல வேலை கெடைக்கும்னுதானே சொல்றேன். இதையெல்லாம் விடு. இல்லேன்னா மளிகைக் கடையிலே மாசம் முப்பது ரூபாய்க்கு கணக்கு எழுது. இன்டரை ஒருத்தனும் சீண்டமாட்டான்."

இதற்கு என்ன பதில் சொல்வது என்று எனக்குத் தோன்றவில்லை. உண்மைதான், வெறும் இன்டராகிய எனக்கு யார் வேலை தருவார்? இந்த யதார்த்தம் என்னை அச்சுறுத்தியது. "சரி விடுப்பா, மொதல்லே ரிசல்ட் வரட்டும்" என்று பேச்சைத் தட்டிக் கழித்து விட்டு எழுந்து நின்றேன். 'தினமும் வேலைவேலை என்று பாவம், இவன் உயிரை ஏன் வாங்க வேண்டும். இருந்தால் அவனே வேண்டியதைச் செய்ய மாட்டானா?' உட்காரும் அறையைவிட்டு வெளியேறியவண்ணம், "சரி

நீ போய்க் குளிக்கிற வேலையைப் பாரு" என்றவன், சட்டென்று நினைவுக்கு வந்தவனாக, "ஆங்.. போஸ்ட் கார்டு கேட்டேனே.." என்றேன்.

"குளியல்தானே, ஆடிக்கொருதரம், அமாவாசைக்கொருதரம்தான் நான் குளிக்கிறது.." என்று சொல்லிக்கொண்டே கார்டு கொண்டுவர அவன் உள்ளே போனான். இவனுக்கும் கவலைகள் இல்லாமல் இல்லை. ஆனால் எவ்வளவு ஜாலியாக இருக்கிறான். ஒரு போஸட்கார்டு கேட்க வெட்கமாக இருந்ததால், நாலைந்தாகக் கேட்டுவைத்தேன். கார்டுகளை வாங்கிக் கொண்டு, "திருப்பிக் குடுத்துடறேன்" என்றேன்.

"அடடா, அதை எழுதி வாங்கிக்க ரசீது கொண்டாரலியே" என்று சிரித்தவன், "சரி இப்போதாவது சொல்லு, என்ன இவ்வளவு சந்தோஷம்? என்று கேட்டான்.

"பிரபா வந்துட்டா" என்று நான் புன்முறுவலுடன் கூறிவிட்டு சட்டென்று வெளியேறி விட்டேன்.

"ஆகா.. அப்படியா சேதி?" என்று திவாகர் சொன்னது பின்னாலிருந்து கேட்டது.

ஆனால் காலையிலிருந்து யார் முகத்திலும் விழிக்கத் துணியாமல் ஒடி ஒளியவைத்த என் தயக்கம் மாலைக்குள் அகன்றது. என் முகத்தில் ஒரு இனம் புரியாத உறுதி பரவியது. 'நான் என் மனைவியுடன் பேசினேன். இதில் யாருக்கு என்ன? இதிலே வெட்கப்படவும், மனம் கூசவும் என்ன இருக்கிறது?' என்று என் மேலேயே எனக்கு எரிச்சலாக வந்தது.

திவாகர் வீட்டிலிருந்து திரும்பியபோது, நினைவெல்லாம் தேனாக இனித்தது. பல வருடங்கள் கழித்து மனம் லேசாக இருந்தது. பல வருடங்கள் சிறையில் இருந்துவிட்டு வந்தவன் போல உணர்ந்தேன். இருந்தாற் போலிருந்து திடீர் திடீர் என்று ஒரு பரிவுணர்ச்சியில் மனம் உருகி ஒடியது. பாவம், என்னென்ன அனுபவித்து விட்டாள் அதற்குள். முன்னியைத் தவிர அவள் மீது பரிதாபப்பட்டவர்கள் வேறுயார்? வீட்டிலே ஒரு கார்டு கேட்பதற்கு துணிவில்லாமல் கிடந்திருக்கிறாள், பாவம்! சீ.. எதற்கும் ஒரு அளவு உண்டு. எல்லாரையும்விட எனக்கு அண்ணியை நினைக்கும்போதுதான் ஆச்சரியமாக இருந்தது. அவள் இப்போதே இப்படியிருந்தால் மாமியார் ஆனபிறகு என்னென்ன கொடுமைகள் செய்வாளோ! தானும் பிரபாவைப்போல ஒரு மருமகள் தானே என்று அவள் சற்றும் நினைப்பதில்லை. அவள் தூண்டுதலால் நான் செய்தவை என்னைத் தலைகுனியச் செய்தன.

அங்கும் இங்கும் அலைந்து திரிந்துவிட்டு வீடு போனபோது மணி இரண்டு அடித்துவிட்டது. குழாயடியில் கால்களை ஒன்றோடு ஒன்று தேய்த்துக் கழுவிக்கொண்டிருந்த அப்பா, "மாகாராஜா எங்கே ஊர்கோலம் போயிட்டு வராரு, சாப்பாடு தண்ணி நெனப்பில்லாம?" என்று கேட்டார்.

எனக்கு அவர் அப்படிக் கேட்பது பிடிக்கவில்லை. பிரபா காதில் விழுந்தால் என்ன நினைப்பாள். ஆனாலும் வாய்கொடுத்தால் நான் வெட்டியாக இருக்கிறேன் என்று கடைசியில் என்மேல்தான் வரும் என்று பயந்து, அடங்கிய குரலில், "திவாகர்கிட்டே போயிருந்தேன், வேலை விஷயமா பேசிக்கிட்டிருந்ததுலே நேரமாயிட்டுது" என்றேன்.

அப்பாவின் குரலில் சட்டென்று மென்மை தோன்றியது, "ஆமாம்பா, ஏதாவது செய். இல்லாட்டி கதை எப்படி ஓடும்?" என்றார்.

உள்ளே நுழைந்ததும் அம்மாவிடம் மாட்டினேன். "படிப்பை முடிச்சப்புறமும், ஒரே ஊர் சுத்தல்தானா? மணி ரெண்டாச்சு, இதான் சாப்பாடு சாப்பிடற நேரம், ராத்திரியும் எத்தினி மணிக்கு வந்தியோ தெரியலே".

நனைந்த பூனை மாதிரி சமையல் கட்டுக்கு வந்தேன். சத்தம் போடாமல் மணையை எடுத்துப்போட்டுக்கிட்டு உட்கார்ந்து கொண்டேன். பிரபா சாப்பாட்டைக் கொண்டுவந்து வைத்தபோது ஒரு மாதிரி துணுக்கென்று இருந்தது. தலை நிமிர்ந்து பார்த்தேன். அவளது வதங்கிய முகத்தில் ஒருவித தெளிவும், கம்பீரமும் காணப்பட்டன. கண்கள் தாழ்ந்திருந்தன. இதழ்களில் மெல்லிய புன்னகை தவழ்ந்தது. முகம் வறண்டிருந்தாலும் பழைய கண்ணாடியைத் துடைத்து வைத்த மாதிரி அலாதியாக ஒரு ஒளி வீசிற்று. பார்த்துக்கொண்டேயிருக்க வேண்டும் போலிருந்தது. அவளிடம் ஏதாவது பேசவேண்டும் என்று அடங்காத ஆசை உண்டாயிற்று. ஆனால் என்ன பேசுவது என்று தெரியவில்லை. பிரபாவின் குரலைக் கேட்கவேண்டும் என்றும், அவள் குரலைச் சரியாகக் கேட்டதே இல்லையென்றும் தோன்றியது. அவள் குரலை அநேகமாக எனக்கு அடையாளம்கூட தெரியாது. எப்படித் தெரியும், அவள் பேசுகிறாளா இல்லையா என்றே நான் கவனித்தது இல்லையே! எப்போதும் இறுகிய முகத்துடன் வேலையில் ஈடுபட்டிருப்பாள்.

சாப்பாட்டை வைத்துவிட்டு அவள் போக முற்பட்ட போது அவள் எவ்வளவு அழுக்குப்புடவை கட்டியிருக்கிறாள் என்று தோன்றியது. சாணுக்கு சாண் கிழிந்தும் தைத்தும் இருந்தது. இதையா உடுத்துவது, இதை ஏன் சுற்றிக்கொண்டு நிற்கிறாள்? வேறு இல்லையா? கல்யாணத்தின்போது நிறைய எடுத்திருப்பார்களே! எங்கே போய் விட்டன? வரட்டும், இதுபற்றிப் பேசுகிறேன். நான் விட்டதோடு வீட்டினரும் இவளுக்கு என்ன தேவை என்று கவனிக்கவேயில்லை. அம்மா இவளுக்கும் தாய் ஸ்தானத்தில் இருப்பவள் அல்லவா? அவள் இப்படியா பாராபட்சம் காட்டுவது, அண்ணிக்குக் குழந்தை பிறந்ததோ இல்லையோ, ராணி மாதிரி செங்கோலோச்ச அனுமதி கொடுத்து விட்டாள். தன் அறையிலேயே பெரும்பாலும் இருப்பாள். சாப்பாடும் அங்கேயே போய்விடுகிறது. அம்மாவுக்குத் தெரியாமல் எப்படியும்

ஐந்தாறு புடவை வைத்திருப்பாள் என்று எனக்குத் தெரியும். ஆனால் அவள் ஏன் கொடுக்கப்போகிறாள்? ஜனவரி, பிப்ரவரி குளிரும் இந்தப் புடவையிலேயே கழிந்தன என்று நினைவுக்கு வந்தபோது நான் தலையோடு காலாக அதிர்ந்தேன். பாவம், எவ்வளவு கஷ்டப்பட்டிருப்பாள் அப்போதெல்லாம்? யாரும் ஆதரவு இல்லை, யாரிடமும் தன் தேவைகளைச் சொல்லவும் முடியாது, யாருடனும் மனம்விட்டுப் பேசக்கூட முடியாது- ஐயோ என்ன குளிர், வெளியே கையையும் நீட்ட முடியாத குளிர்...!

மீண்டும் கண்களில் கண்ணீர் துளிர்த்தது. பிரபா அடுப்படியில் அந்தக் குட்டைச் சுவரின் மறைவில் உட்கார்ந்திருந்தாள். இவ்வளவு நாள் கழித்துக் கல்யாணம் ஆன புதிதில் நடந்த அந்த விஷயம் நினைவுக்கு வந்தது. இதேபோல்தான் அன்றும் அடுப்படியில் உட்கார்ந்திருந்தாள். கை இவ்வளவுதான் வெளியே தெரிந்தது. அன்று நான் தட்டை உதைத்துக் தள்ளிவிட்டு தடதடவென்று போய்விட்டேன். அன்று கரியபட்டையில் கட்டியிருந்த சிறிய வாட்ச் இதே சிவந்த மணிக்கட்டில் எவ்வளவு அழகாக இருந்தது? இன்று பார்த்தவுடன் திடுக்கிட்டேன். அன்று கவனிக்காவிட்டாலும், கையின் தோற்றம் அப்படியே நினைவு வந்தது. சமையல், பாத்திரம் தேய்ப்பது, வீட்டு வேலைகள் ஆகியவற்றால் தோல் கருத்து, வறண்டு சொரசொரத்துக் கிடந்தது. எலும்பின் மீது தோலை இழுத்துக் கட்டிவிட்ட மாதிரி இருந்தது. பார்வை கால்களின் மீது சென்றது. அழுக்கினாலும், கவனிப்பின்மையினாலும் இரண்டு பாதங்களும் கருத்துக் குதிகால்களில் நீண்ட வெடிப்புகள் காணப்பட்டன. எவ்வளவு சந்தோஷமாகக் கனவுடனும் அபிலாஷைகளுடனும் வளர்ந்த இந்தப் பெண்ணை எவ்வளவு மேளதாளத்துடன் இங்கே கொண்டு வந்தோம்? இன்று..?

பிரபாவுக்கு வருத்தம் ஏற்படாதவண்ணம் தட்டை மிக மெதுவாக நகர்த்தி வைத்துவிட்டு நான் எழுந்தேன். பிரபா திடுக்கிட்டாள். கேள்விக் குறியுடன் என்னைப் பார்த்தாள். இரவு பார்த்தாளே அதே பார்வை. கபடமற்ற, குழந்தைத்தனமான பெரிய பெரிய கண்கள்! ஆனால் சுற்றிக் கருவளையம், அதைப் பார்க்க எனக்கு அச்சமாக இருந்தது. நான் சட்டென்று பார்வையைத் திருப்பிக் கொண்டேன். பிரபாவின் குரல் மிகுந்த தயக்கத்துடன் ஒலித்தது— "ஏன்_?"

நெஞ்சு காரணமின்றிப் பொங்கிற்று, பேசினால் அழுதுவிடுவேன் என்று தோன்றியது. கீழ் உதட்டைக் கடித்துக்கொண்டு மிகவும் பிரயாசைப்பட்டு எப்படியோ, "திவாகர் வீட்டில் சாப்பிட்டுவிட்டேன்_ பசியில்லை_" என்று சொன்னேன். பிறகு சட்டென்று வெளியேறி விட்டேன்.

வெளியே அம்மா சிக்குப் பலகையின் மீது ஏதோ புராணப் புத்தகம் வைத்துத் தன் தடித்த மூக்குக் கண்ணாடி வழியாகப் படித்துக்

கொண்டிருந்தாள். நான் என் அறைக்குப் போக மாடிப்படியேறினேன். மாடிப்படிக்கு மேலே சிறிய ஜன்னல் ஒன்று திறந்திருந்தது. அது அண்ணி அறை. அண்ணியின் குரல் கேட்கவே தயங்கி நின்றேன், "இரண்டு பேரும் இப்பப் பேச ஆரம்பிச்சுட்டாங்க" என்று அவள் சொல்லிக்கொண்டிருந்தாள்.

"யாரு?" என்று அண்ணன் குரல் ஒலித்தது. இன்று ஞாயிறு என்பது நினைவுக்கு வந்தது.

"சமர் தம்பியும், புமருமகளும்தான்" அண்ணியின் குரலில் லேசாகக் கிண்டல் தொனித்தது.

"அப்படியா?" என்று அண்ணா ஆச்சரியப்பட்டார். "உனக்கெப்படித் தெரியும்?" என்று கேட்டது, புரண்டு படுத்துக்கேட்ட மாதிரி இருந்தது.

"சாப்பிட்ட பிறகு ஏலக்காய் வாங்கிக்கிட்டுப் போக குப்பர் தம்பி வந்தது. அதுதான் சொல்லிச்சி_"

நான் மீதிப் பேச்சைக் கேட்காமலேயே மேலே வந்துவிட்டேன். அறையைச் சாத்திக் கொண்டு குப்புறப்படுத்து அழ ஆரம்பித்தேன்.

மாலை திருடனைப்போல மீண்டும் வெளியே கிளம்பிக் குறிக் கோள் இல்லாமல் திரிந்தேன். காலையிலிருந்து மனத்தில் பரவி நின்ற போதை இறங்கிவிட்டிருந்தது. இப்போது மனம் கண்டனத்திற்கும், குற்றச்சாட்டிற்கும் ஆளாகியிருந்தது. அந்தர்யாமியாகிய இறைவனிடம் "கடவுளே, எனக்குத் தண்டனை கொடு" என்று கெஞ்சினேன். "நான் ஒரு அப்பாவி அபலையைக் கொடுமைகள் செய்தேன், அவளைச் சித்திரவதை செய்ய நான் மௌனமாகப் பார்த்திருந்தேன். என் கண்கள் எங்கே போய்விட்டன? சரி, நானாவது சின்னவன், இந்த அப்பா அம்மாவுக்கு என்ன ஆகிவிட்டது?"

பிராயச்சித்த உணர்வு என்னைக் கோவிலுக்கு இழுத்துச் சென்றது. அங்கே நான் வெறுமை படர்ந்த கண்களுடன் வெறித்துக் கொண்டு வெகுநேரம் உட்கார்ந்திருந்தேன். வெகுநாள் வெளிநாடு சென்ற ஒருவன் திரும்பி வந்து, தான் இல்லாதபோது என்ன என்னவெல்லாம் நடந்து விட்டது என்று பார்ப்பதுபோல ஒவ்வொன்றையும் பரிசீலித்தேன். இந்தப் பிராயச்சித்தம், பரிவுணர்ச்சி, ஒவ்வொன்றையும் புதிதாகப் பார்ப்பது அனைத்துக்கும் இடையே இரவைத் துடிப்புடன் எதிர் பார்த்துக் கொண்டும் இருந்தேன். மனம் எங்கும் ஒட்டாது போகவே எழுந்து வந்துவிட்டேன்.

இதற்குள் என்னை அனைவரும் பார்க்கும் பார்வையே மாறி விட்டது என்பதைக் கண்டேன். பிரபா சமையல் அறையில் இருந்தாள். அம்மாவிடம் உட்கார்ந்து அண்ணி ஏதோ 'குசுகுசு'வென்று பேசிக் கொண்டிருந்தாள். வீட்டில் நுழைந்தவுடனேயே நானும் பிரபாவும் பேசிவிட்டது வீடு முழுவதும் தெரிந்துவிட்டது என்று எப்படியோ புரிந்துவிட்டது. ஏதோ வினோதப் பிராணியைப் பார்ப்பதுபோல

அனைவரும் என்னைப் பார்த்தனர். எல்லாருக்கும் தெரிந்துவிட்டால் எனக்கு எவ்வளவு நாணமாக இருக்கும், அவர்கள் முகத்தில் எப்படி விழிப்பேன் என்று முதலில் பெரிய யோசனையாக இருந்தது. ஆனால் இப்போது இவர்கள் வெறிப்பதைப் பார்த்து மனதில் எரிச்சலே மண்டியது. 'அட, பிரபாவுடன் பேச ஆரம்பித்துவிட்டேன் என்று வைத்துக் கொள்வோம், இதில் பெரிய நூதனம் என்ன இருக்கிறது? இதை ஏன் பெரிய சர்ச்சைக்குரிய விஷயமாக்க வேண்டும். இது என்ன தமுக்கடித்துப் பறைசாற்ற வேண்டிய விஷயமா? புருஷனும், பெண்டாட்டியும் நேற்று பேசவில்லை, இன்று பேசுகிறார்கள், அவ்வளவுதானே! இதில் என்ன எல்லாருக்கும் இவ்வளவு அக்கறை!"

சூழ்நிலை மொத்தத்தையும் அலட்சியப்படுத்திவிட்டு என் வாழ்க்கையில் ஒன்றுமே நேராததுபோல நடந்துகொள்ள நான் முயற்சித்தேன். சாப்பிட்டு எழுந்தவுடன் அம்மா, "டேய் சமர், கொஞ்சம் அப்பாவையும் கூப்பிட்டுக்கிட்டு வா, அவரும் கூடா சாப்பிடுவாரு, அப்புறம் ஆறிடும்" என்றாள். "அப்பா எங்கே போயிருக்காரு?" என்று கேட்டேன்.

"குழந்தையைப் பராக்கா தூக்கிவிட்டுப் போயிருக்காரு, நவல் கிஷோர் வீட்டிலே ஒக்காந்திருப்பார், குழந்தையும் பசியா இருப்பா, போடா".

நான் ஏதோ மறத்துவிடுவேன் என்கிற மாதிரி அம்மா சொன்னாள். எனக்குக் கோபம் வந்தது. பிறகு என் கோபத்தின் மீது சிரிப்பும் வந்தது. 'எனக்கு என்ன ஆகிவிட்டது.?'

அப்பா நாற்காலியில் இரு கால்களையும் மேலே தூக்கி வைத்துக் கொண்டு சாவகாசமாகப் பேசிக் கொண்டிருந்தார். தீராத நோயாளியான நவல்கிஷோர் பண்டித்ஜீ ஒருக்களித்துப் படுத்து அவர் பேசுவதைக் கேட்டுக் கொண்டிருந்தார். அக்கம்பக்கத்தைச் சேர்ந்த இன்னும் சிலரும் உட்கார்ந்து கேட்டுக் கொண்டிருந்தனர். அப்பா பலமுறை ஆற்றியிருந்த சொற்பொழிவை மீண்டும் அதே சொற்களில் ஆற்றிக் கொண்டிருந்தார். "நம்ம இந்திய நாகரீகம் மாதிரி எதுவும் ஆகுமா? குட்டிக்கரணம் போட்டாலும் முடியாதுங்கறேன். இந்த ஒலகம் எந்த அதலபாதாளத்திலே போய்விழப்போவுதுன்னு தெரியலே. அண்ணாச்சி, யாரைக் கொறை சொல்லி என்னா பிரயோஜனம்? எல்லாம் நம்ம செய்வினைப்பயன்தான்! ஆயிரம் ஆயிரம் வருஷம் யோசிச்சு நம்ம ரிஷிகள் ஏற்படுத்தின வழியை இந்தக் காலத்துப்பசங்க காட்டுமிராண்டி நாகரீகம் அப்படிங்கறாங்க. உன்னோட மூதாதையர்களைக் காட்டு மிராண்டின்னு சொல்ல உனக்கு வெக்கமாயில்லே! ஆகா, அவங்களுக்குத்தான் என்ன மூளை என்ன மூளை... சும்மா சொல்லக்கூடாது. ஒண்ணொண்ணையும் என்னமா யோசிச்சு வந்திருக்காங்கன்னு பாத்தா மூக்கிலே வெரலை வைக்கணும். ஜாதியாப் பிரிச்சு, அவுங்களுக்குத் தனித் தனியா தொழில்

விதிச்சு- அப்பப்பா- அவங்க அவுங்க அந்த சட்ட திட்டப்படி நடந்துக் கிட்டிருந்தா இந்த மாதிரி-"

நவல்கிஷோர் பண்டித்ஜீக்கு இது பற்றிப் பேசுவது தன் உரிமையல்லவா என்று தோன்றியது. பொறுமையிழந்து "பகவான் மனு மனுஸ்மிருதியிலே என்ன சொல்லியிருக்கார்னா-" என்று குறுக்கிட்டார். அப்பா பேச்சு தடைப்பட்டால் கூப்பிடலாம் என்று காத்திருந்த நான், "அப்பா, உங்களைக் கூப்பிடறாங்க," என்று கோபித்துக் கொண்டுவிடப் போகிறாரே என்ற தயக்கத்துடன் சொன்னேன்.

"தோ வர்றேன், உள்ளே போய் குழந்தையை தூக்கிகிட்டு வா" என்று அசிரத்தையாக அப்பா சொன்னார்.

நான் பண்டித்ஜீ வீட்டுக்கு ஆரம்பத்திலிருந்தே வருவது போவது உண்டு. பண்டித்ஜீயின் மருமகள் குழந்தைக்கு ஏதோ ஊட்டிக் கொண் டிருந்தாள். இவள் கணவர்தான் அன்று கோவிலில் ஒருவனை ஓடஓட விரட்டியது. "அண்ணி, அப்பா குழந்தையைத் தூக்கிக்கிட்டு வரச் சொல்றாரு" என்றேன் நான், பண்டித்ஜீயின் மனைவி என் குரலைக்கேட்டு வெளியே வந்தாள். "யாரு, சமரா ? என்ன இந்த பக்கமே இப்பல்லாம் வர்றதில்லே ! பரிட்சையெல்லாம் முடிஞ்சுதோல்லியோ ? ஆமா சமர், நீ உன் பொண்டாட்டி கூடப் பேசாத இருந்து இப்ப பேச ஆரம்பிச்சிட் டியாமே ! நல்லதாப் போச்சு போ.. உன் பொண்டாட்டிகிட்டே நீ பேசலைன்னாக்க வேற யாருப்பா பேசுவா ? புருஷன் பெஞ்சாதின்னாக்க ஏதாவது வர்றதுதான், போறதுதான். அதுக்காக பேசறதை நிறுத்திண்டுட முடியுமோ ? பேசின வரையிலும் சரிப்பா ! ஆனா எங்காத்து விஷ்ணுப் பய செய்யற மாதிரி செய்ய ஆரம்பிச்சுடாதே. கோயில்லே கெடக்கிற பிரசாதத்தையெல்லாம் பொண்டாட்டிக்கே வந்து கொட்டறான். ஒம்மேல சத்தியமா சொல்றேன் சமர், ஒரு பைசா கண்ணிலே காட்டற தில்லே. நல்லநல்ல பண்டத்தையெல்லாம், புருஷனும் பொண்டாட்டியும் கூடித் தின்னுப்பிட்டு மிச்ச மீதியை நேக்குப் போடறா- இந்தத் தள்ளாத வயசிலே ராத்திரி பகல்ன்னு இல்லாம இந்த கூட்டேலே போறவங்களுக்கு ஒழைக்கிறேன். ராத்திரியும் பகலும் ஓடாத்தேஞ்சாலும் இவாளுக்கு அக்கறை கெடயாது. கோயில்லே என்ன வந்தது, என்ன போச்சுன்னு தம்பி, எனக்குக் கொஞ்சமானும் தெரிய விடறாளான்னா அது கெடயாது. பகவானே என்னை அழைச்சுண்டுடுப்பான்னுதான் நான் ரெண்டு வேளையும் பிரார்த்தனை பண்ணிண்டிருக்கேன். ஆனா தம்பி, ஒண்ணு சொல்றேன் ஞாபகம் வச்சுக்கோ. தோ இன்னிக்கு ரெண்டு வேளையும் பாலும் பாயசமுமா கோவிலுக்குப் படைக்கிறாளே, இது எங்காத்து பிராமணர் புண்ணியத்திலேதான் நடக்குது. அதுக்கப்புறம் ஒரு பைசா பெயராதுன்னேன். அப்புறமில்லே இவாளுக்கு சேதி தெரியும் ! இப்ப எல்லாம் நன்னாதான் இருக்கும்." என்றவளுக்கு 'அவாளாத்து பிராமணரின்' எதிர்கால மரணத்தைக் குறித்த நினைவு

வந்ததாலோ, வேறு எதனாலோ தொண்டை அடைத்தது. கண்களை முந்தானையால் மூடிக் கொண்டு தேம்ப ஆரம்பித்தாள்.

விஷ்ணுவின் மனைவி மாமியாருக்குப் பழிப்புக் காட்டிவிட்டு, சிரித்துக் கொண்டே குழந்தையை என்னிடம் கொடுத்தாள். குழந்தையைத் தூக்கிக் கொண்டு வரும்போது ஏனோ என்னை டாக்டரிடம் காண்பிக்க வேண்டும் என்று அண்ணி சொன்னது எனக்கு நினைவு வந்தது. என் உதடுகளில் இளநகை அரும்பியது.

# 2

"நீயே பாத்தியா!" என்று ஆச்சரியத்துடன் கண்கள் விரிய நான் கேட்டேன்.

பிரபா வேறுபக்கம் பார்த்துக்கொண்டு, "நானே பாக்கலே, முன்னி பாத்ததா சொன்னா. உங்ககிட்டகூட சொல்லுவேன்னு சொன்னா... நான் கறிகாயை அடுப்பிலே வச்சிட்டு கொஞ்சம் நகர்ந்தவுடனேயே அண்ணி ஒரு கைப்பிடி உப்பைப் போட்டுட்டாங்களாம்," என்றாள்.

முழங்கைகளை ஊன்றிக் கைகளில் முகத்தைத் தாங்கிப் படுத்திருந்த நான் "ஹூம்" என்று தீவிர யோசனையில் ஆழ்ந்தேன். அதே நினைவில், "முதல் நாளே நீ என்கிட்டே ஏன் பேசலே? வந்த அன்னிக்கே அவ்வளவு அவமரியாதையா ஏன் நடந்துக்கிட்டே?"

பிரபா ஒரு காலை மடித்து, இரண்டு கைகளாலும் அந்த முழங் கால்களைச் சுற்றி மோவாயை முழங்கால் மீது வைத்துக் கொண்டு அமைதியாக, சலனமில்லாமல் என் கேள்விகளுக்கு பதில் சொல்லிக் கொண்டிருந்தாள். அறைக்கு வெளியே நேற்றுப்போலவே நிலவு காய்ந்து கொண்டிருந்தது. அந்தப் பால்நிலவின் ஒரு செவ்வகத்துண்டு எங்கள் கட்டிலுக்கருகில் பளிச்சிட்டது. மிகவும் பிரயாசைப்பட்டே அவளைப் பழைய விஷயங்கள் பற்றிப் பேச வைத்திருந்தேன்.

சலனமில்லாமல், "அவமரியாதையா நடக்கலியே! அவமதிச்ச மாதிரி பட்டுதா?" என்றவள் நீண்ட பெருமூச்சு விட்டு, "விடுங்க, அதைப்பத்திப் பேசி என்ன பிரயோஜனம்? விதிப்படி நடக்க வேண்டியது நடந்து போச்சு" என்றாள்.

"விதியாவது, ஒண்ணாவது, பிரபா! ஏன் பேசலைன்னுதான் சொல்லேன், தெரிஞ்சுக்கணும்னு தானே இவ்வளவு கெஞ்சறேன்" என்று வற்புறுத்திய வண்ணம் அவளது கைகளில் ஒன்றைக் கையில் எடுத்துக் கொண்டேன். அவளுடைய மென்மையான கை உயிரற்று சில்லிட்டு இருந்தது எனக்கு மயிர் கூச்செறிந்தது.

அவள் கையை விடுவித்துக் கொள்ளவில்லை. பெரிய பண்டிதை போலவும், நூற்றுக்கிழவி போலவும், "இவ்வளவு கஷ்டப்பட்டப்புறம், கொஞ்சம் கொஞ்சிட்டா என்ன ஆயிடப்போவுது?" என்று லேசாகச் சிரித்தாள். பிறகு எனக்குப் பதில் சொல்ல அவகாசம் தராமலேயே, "பல வாரமாக் கண்முழிச்ச களைப்பு, அசதி படுத்திச்சி. மனசும் சரியில்லே, ஒரே வீட்டு ஞாபகம், முன்னி வேற அவ கதையை சொன்னா. மனசு ஒரு மாதிரியா இருந்தது, இன்னும் ஜாஸ்தியாயிருச்சு. அவளைத் தவிர என்கூடப் பேசறதுக்கு யார் இருந்தா? போதும் போதாததுக்கு அன்னிக்குப் பாத்து ஜன்னலுக்கு எதிர்த்தாப்பலே இருந்த வீட்டிலே அந்தப் பாழாய்ப்போற சாமல் மனைவி செத்துப்போயிட்டா. அழறதைத் தவிர வேற ஒண்ணும் செய்யத் தோணலே. உங்களுக்கும் கல்யாணம் பண்ணிக்க இஷ்டமில்லன்னு சொன்னாங்க. எனக்கு கதிகலங்கிப்போச்சு, இன்னும் ரெண்டு மூணு விஷயமும் நடந்துபோச்சு... உங்ககிட்டே என்ன பேசறது?" என்றாள்.

"தோபாரு பிரபா... சொல்ல ஆரம்பிச்சப்புறம், எதுக்கு ஒண்ணை மறைக்கிறே? நான் நெஜமாவே தெரிஞ்சுக்கணும்தான் கேக்கறேன். எல்லாத்தையும் சொல்றேன்னு சொல்லிட்டு இப்ப நழுவுறே பாத்தியா," என்று மென்மையான குரலில் வற்புறுத்தினேன். என்னையறியாமல் உணர்ச்சி வேகத்தில் என் குரல் நடுங்கியது. சற்று முன்னே நகர்ந்து அவளுடைய தொடையில் தலையை வைத்துக்கொண்டு நன்றாக மல்லாந்து படுத்துக் கொண்டேன். அவள், "இப்ப வந்து அன்பைக் காட்டறீங்களோ?" என்று என் தலையைத் தள்ளி விடுவாள் என்று ஏனோ தோன்றியது. மிருதுவான சதைப்பகுதியின் மென்மையான கத கதப்பில் என் மூளையின் ரத்தநாளங்கள் அதிர்ந்தன.

"போகட்டும் விடுங்க" என்றவளின் முகம் இருண்ட அறையில் நிழலாகவே தோன்றியது. என் முகத்தில் இரு சூடான கண்ணீர்த்துளிகள் விழவே துணுக்குற்றேன். விரல்களால் அவளது மோவாயை என் பக்கம் திருப்பி "சீ பைத்தியம், எப்பப் பாத்தாலும் அழுதுக்கிட்டு" என்று செல்லமாக அவள் கன்னத்தில் ஒரு தட்டுத் தட்டினேன். அவள் இதழ்களில் வெட்கம் கலந்த புன்சிரிப்பு படர்வதை என் மனக் கண்களில் கண்டேன். ஆனால் உடனே நான் என் கையை சட்டென்று இழுத்துக்கொண்டும் விட்டேன். இதே கன்னத்தில் இதே கையால் அவளை அறைந்து நிலைகுலையச் செய்தேன் என்று நினைவுக்கு வந்தது. அதுவும் போயும்போயும் புரோகிதர், பிள்ளையார் என்று பிடித்து வைத்த மண் பிண்டங்களுக்காக! வெளிச்சம் மட்டும் இருந்தால் அடிபட்ட சுவடு இன்னும் இருக்கிறதா என்று பார்த் திருப்பேன். பிரபாவுக்கு அது நினைவு வந்துவிட்டதாகத் தோன்றவே, திடுக்கிட்டுப் பேச்சை மாற்றிவிட்டேன். 'அது சரி பிரபா! அண்ணிக்கும், அம்மாவுக்கும் ஏன் உன்னைக் கண்டாலே ஆகலே?"

பிரபா சற்று நேரம் ஒன்றும் பேசவில்லை, பிறகு எச்சில் கூட்டி விழுங்கிக்கொண்டு, "எனக்கெப்படித் தெரியும். என் தலையெழுத்தாதான் இருக்கும், வேறென்ன?" என்றாள்.

"தோபாரு பிரபா! நான் கேக்கறதுக்கு ஒழுங்கா பதில் சொல்லு... அப்போதுலேர்ந்து விதி, தலையெழுத்துன்னு சொல்லிக்கிட்டே யிருக்கியே! விதி, கிதியெல்லாத்தையும் கொண்டு உடைப்பிலே போட்டுட்டு, ஒழுங்கா, பதில் சொல்லு, என் மேல ஆணை!" வாழ்க்கையிலேயே முதல் முறையாக நான் விதியை எதிர்த்துப்பேசினேன்.

"இது என்ன இது! பேச ஆரம்பிச்சவுடனேயே எடுத்ததுக்கும் ஆணை விட்டுக்கிட்டு" என்று அவள் செல்லமாகக் கடிந்து கொண்டாள். என் சூடான நெற்றியில் அவள் தன் கரங்களை வைத்து பிறகு மெல்ல என் முடியை வருட ஆரம்பித்தாள். எனக்கு ஏற்பட்ட போதைக்கு அளவே கிடையாது. வருடிக்கொண்டே அவள் சொன்னாள், "உங்க அம்மா, அப்பாவுக்கு என்னைப் பிடிக்காததுக்குக் காரணம் எல்லாருக்கும் தெரிஞ்சதுதான். சீர் செனத்தி அவுங்க மனசு மாதிரி நடக்கலே. பாத்திரம், பண்டம், நகை-நட்டு, பணம், பவுசு எதுவுமே நான் கொண்டாரலியே! அதிலே ரெண்டு எழுத்துப் படிச்சிட்டது வேற. இத்தினிக்கும் ஒண்ணும் கொண்டாராட்டியும் பெரிய மாட்டுப் பொண்ணைவிடப் பார்க்க ரொம்ப அழகுன்னு அப்பப்ப அம்மா சொல்லியிருக்காங்க. முன்னியும் ரொம்ப தமுக்கடிச்சா, உங்க அண்ணிக்கு என்னைப் பிடிக்காமபோக இந்த ரெண்டு- மூணு காரணமே போதும். ராத்திரியும், பகலும் அவுங்க அம்மாவுக்கு ஓதிக்கிட்டேயிருந்தாங்க. எனக்குத் தெரிஞ்சும் நான் சும்மா இருந்தேன். யார் கிட்டேபோய் சொல்றது. நீங்களும்தான் கோபமா இருந்தீங்க. சாமல் மனைவி மாதிரி நானும்..." தொண்டை அடைத்து, இன்னும் சில கண்ணீர்த் துளிகள் உருண்டு விழுந்தன.

நான் அவள் வாயைப் பொத்தினேன். செல்லமாக அதட்டி, "இனிமே இது மாதிரி பேசினே- ஜாக்கிரதை" என்று கழுத்தை வளைத்து அவளது வெடித்து வறண்ட உதடுகளை முத்தமிட்டேன். என் நாடி நரம்புகள் தோறும் சூடான போதை பரவியது. தொண்டை அடைக்க நடுங்கும் குரலில், "பிரபா, இந்த ஒரு தடவை என்னை மன்னிச்சுடு. எனக்கு ஏதோ பேய்தான் பிடிச்சிருந்ததுன்னு நெனைக்கிறேன். இதான் என் வாழ்க்கையிலே செஞ்ச கடைசித்தப்பு, பெரிய தப்பு. இன்னியிலிருந்து சண்டையே போட்டுக்க மாட்டோம், போட்டுக்கவே மாட்டோம்னு சபதம் செஞ்சுக்குவோம், வா! யாரு என்ன சொன்னாலும் சரி..." என்றேன்.

பிரபா தன் கன்னங்களால் என் வாயை மூடினாள். மீண்டும் கண்ணீர் பெருகியது. நான், "மறுபடியும் பாரு... நீ ரொம்ப பலவீனம் பிரபா" என்று அதட்டினேன். ஆனால் சட்டென்று என் நாக்கு நின்றது.

இந்தப் புயலிலும், சூறாவளியிலும் அசையாது தாக்குப்பிடித்தவளா பலவீனமானவள்? அவள் நேற்று அழுது கொண்டிருந்தது திடீரென்று அப்போது எனக்கு ஞாபகம் வந்தது. அவள் அழுவதை நான் முதன் முறையாக அப்போதுதான் பார்த்தேன். எனக்குள் அப்போதிருந்தே எழுந்து கொண்டிருந்த கேள்வியைக் கேட்க ஆரம்பித்தேன். "ஆமாம் பிரபா, உன்னை இன்னொன்னு கேக்கட்டுமா?"

"உம்" என்று எங்கோ ஞாபகமாகச் சொன்னாள்.

"நேத்து நீ ஏன் அழுதுக்கிட்டிருந்தே? இவ்வளவு நாளா நீ அழுது நான் பாத்ததில்லே. நான் அறைஞ்சப்பக்கூட நீ அழலேன்னு நெனைக்கிறேன்."

இம்முறை பிரபாவின் குரல் சற்று தீவிரமானது. "நான் என்ன? யாருமே நல்லா அழுதிருப்பாங்க. இவ்வளவு நாளா என் நடத்தையைப் பத்தி யாரும் ஒரு வார்த்தை சொன்னதில்லே. நேத்திக்கு–" என்று மௌனமானாள். பிறகு உணர்ச்சி பொங்க, "என்னிக்காவது நீங்களும் என் நடத்தையைப் பத்தி சந்தேகப்பட்டீங்க, அன்னிக்கு நான் விஷம் குடிச்சு செத்துடுவேன்," என்றாள்.

நான் மௌனமானேன், அவளது உறுதிக்கு முன்பு நான் கூனிக் குறுகிப் போனேன். கவலையுடன் "எங்க வீட்டுச் சூழ்நிலை வரவர மோசமாகிக்கிட்டு இருக்கு. என்ன செய்யறது" என்று சொன்னவன், அவளிடம் பரிவுடன், "பாவம், இவ்வளவு படிச்சுட்டு இந்தப் பாழுங் கிணத்திலே வந்து விழுந்தேன்னு நெனச்சிருப்பே இல்லே." என்றேன்.

பிரபா உடனே பதில் சொல்லவில்லை. வெகுநேரம் மௌனமாக இருந்துவிட்டு, எங்கிருந்தோ பேசுபவள் போல் "கஷ்டம் எப்போதைக்குமா இருக்கப்போவுது? நீங்க நல்லா படிங்க, பாத்துக்கலாம். நீங்க கூட இருந்தீங்கன்னா எதையும் சமாளிச்சுடுவேன். தனியா இருந்தாதான் பயமா இருக்கு." என்றாள். அவளது துயரம் தோய்ந்த குரல் என் மனத்தின் ஆழத்தைச் சென்று தொட்டது.

"சரி, நீங்க இவ்வளவு கேட்டீங்க, இப்ப நான் கேக்கட்டுமா?"

"வேண்டாம் பிரபா, என்னால உன்னோட ஒரு கேள்விக்குக்கூட பதில் சொல்ல முடியாது. அப்போ எனக்குப் பைத்தியம் பிடிச்சிருந்தது. மூளை சரியில்லைன்னு வச்சுக்க" பிரபா சரளமாகப் பேச, கேள்வி கேட்க ஆரம்பித்தது எனக்குப் பிடித்தது.

விடியும் தருவாயில், "பிரபா, நடந்ததை மறந்துடு, அதெல்லாம் என் தப்பு. என்னைப் புரிஞ்சுக்க முடிஞ்சுதுன்னா மன்னிச்சுடு. எங்க வீட்டு நெலமையைத்தான் நீ பாக்கிறியே! நீ புத்திசாலி. இந்த சூழ்நிலை யிலே நாம எப்படி நடந்துக்கணும்னு நாமதான் தீர்மானிக்கணும்" என்றேன். இவ்வளவு அக்கறையாக இவ்வளவு முக்கிய விஷயத்தை என்னால் யோசிக்க முடியும், பேசமுடியும் என்பதைக் காணும்போது எனக்கே பெருமையாக இருந்தது.

"இதிலே நான் சொல்றதுக்கு என்ன இருக்கு? நீங்க என்ன சொன்னாலும் எனக்கு சம்மதம். இன்னிவரைக்கும் உங்களுக்கு எதிரா ஏதாவது நான் பண்ணியிருக்கேனா?" என்று அவள் என் தோள்களில் தலைவைத்து முகட்டைப் பார்த்த வண்ணம் சொன்னாள்.

"இல்லே நீ எதிர்க்கணும்னுதான் நான் சொல்றேன். நாம விவாதிச்சு, நல்லா சிந்திச்சு ஒரு முடிவுக்கு வரணும்னுதான் நான் சொல்றேன்." என்றேன். சொல்வதற்கு என்னவோ வக்கணையாகச் சொல்லிவிட்டேன். ஆனால் மனத்திற்குள் ஒரு குரல்-"எதிர்த்துச் சொன்னால் உன்னால் தாங்கிக்கொள்ள முடியுமா?" என்று கேட்டது. நான் அவசரமாக,"உன்னோட கலக்காம நான் எதுவும் செய்யமாட்டேன். ஒக்காந்து யோசிக்க வேண்டிய விஷயமா எங்கவீட்டு நெலமை உனக்குப்படலியா? ஏதாவது யோசனை சொல்ல ஏன் பயப்படேறே? நீயும் படிச்ச புத்திசாலிப் பொண்ணுதானே." என்றேன்.

"மறுபடியும் என் படிப்பைக் குத்திக்காட்டறீங்களே," என்று சற்று உரக்கக் கூறியவள், "நீங்களும் உங்க வீட்டுக்காரங்க மாதிரி பேசறீங்க பாத்தீங்களா.. இந்த படிச்சவ படிச்சவங்கற பட்டத்தை எப்படி தூக்கி யெறியறது? அம்மா, அப்பா படிக்கவச்சதுக்கு நான் என்ன செய்யறது? படிச்சதெல்லாம் மறந்தும் போச்சு, நான் யார்கிட்டேயாவது அப்படித் திமிரா நடந்துக்கிட்டேனா?" என்றாள். குரலில் கோபமும், அழுகையும் கலந்திருந்தன.

எனக்கு என் தவறு புரிந்தது. பாவம், இவளுக்குப் பதில் கூற வாய்ப்பே தராமல் இவ்வளவு குத்தல் மொழிகள் பேசப்பட்டுள்ளன. இப்போது இவளால் தன்னைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை. அன்புடன் அவள் முகத்தை என் பக்கம் திருப்பி, "அம்மாடி, நான் அப்படியெல்லாமா சொன்னேன்? இத்தினிநாள் பாக்கியையும் தீத்துடற துன்னு கங்கணம் கட்டிக்கிட்டு வந்திருக்கியா? பேச ஆரம்பிக்கறதுக் குள்ளே பிலு பிலுன்னு பிடிச்சுக்கிறியே! பழைய கள்ளு மாதிரி சுள்ளுங் கறியே" என்றவன், "கொஞ்சம் குடிச்சா, ஜென்மத்துக்கும் போதை தெளியாதுன்னு நெனக்கிறேன்" என்று சீண்டினேன்.

அவள் வறண்ட குரலில், "எனக்குப் புரியுது" என்றாள். பிறகு மிகவும் கடுமையைக் காட்டிவிட்டோம் என்று நினைத்து வெட்கத்துடன் "ரெண்டு நாள்லேயே சினிமா நடிகரை மிஞ்சிட்டீங்க. எக்ஸ்பெர்ட்டா யிட்டீங்க. நல்லா டயலாக் பேச ஆரம்பிச்சுட்டீங்க. பேச ஆரம்பிச்சதை விட்டுட்டுப் பேத்த ஆரம்பிச்சுட்டீங்க பாத்தீங்களா?" என்றாள்.

"எக்ஸ்பெர்ட்" என்கிற வார்த்தை சுருக்கென்றது. பிரபா படித்தவள் என்று மீண்டும் மீண்டும் சொல்லி சொல்லி அது தன் அர்த்தத்தையே இழந்து போய்விட்டிருந்தது. இந்தச் சொல்லினால் முதன்முறையாக, பிரபா ஒரு பட்டிக்காட்டுப்பெண் அல்ல, நகரத்தில் ஒரே பெண்ணாக செல்லமாக வளர்ந்த படித்த பெண், என்பது உறைத்தது. கிரணின்

நடையுடை பாவனை, பேச்சு எல்லாவற்றையும் பார்த்தபோது, "ஆகா எனக்கும் இப்படி நாகரிகமான புத்திசாலி மனைவி இருந்தால்..."என்று தோன்றியதுண்டு. ஆனால் அந்த சந்தர்ப்பத்தில் எனக்குப் பிரபா நினைவு வரவில்லை. வீட்டு வேலை செய்யும் ஒரு அற்ப ஜீவன் என்பதற்கு அதிகமாக அவளை நான் கண்டதேயில்லை. சினிமா பார்ப்பது என்ன, சினிமா போஸ்டர் பார்ப்பதற்கே அவள் எங்கள் வீட்டில் தவித்துப்போயிருப்பாள், பாவம்! கதை, புஸ்தகம் என்று ஒரு வரி படிக்கத் தவியாகத் தவித்திருப்பாள். நகரத்துப் பெண்கள் எத்தனையோ கனவுகளை வளர்த்துக் கொண்டிருப்பார்கள். என்னென்னவோ பொழுது போக்கு சாதனங்களைப் பழகியிருப்பார்கள். பாவம், இங்கே வந்து இவள் எல்லாவற்றையும் குழிதோண்டிப் புதைத்துவிட்டாள். எனக்கு திவாகர் வீட்டுக்கும் எங்கள் வீட்டும் உள்ள வேறுபாடு புலப்பட்டது. அவன் வீட்டில் படித்தவள் என்பது குறைந்த பட்சம் ஒரு வசவல்ல. எங்கள் வீடும் என்றாவது அப்படி ஆகுமா? "உலாவப் போவோமா" என்று சாயங்காலத்தில் என்றாவது நானும் செல்வேனா? "திவாகரையும், அவனுடைய மனைவியையும் டீ சாப்பிட அழைத்திருக்கிறேன். அவர் களுடன் டீ சாப்பிட வேண்டும்" என்று என்றைக்காவது என்னாலும் சொல்ல முடியுமா? நீண்ட பெருமூச்சு வெளிக்கிளம்பிற்று.

என் பெருமூச்சைக்கேட்ட பிரபா என்னை உலுக்கி, "என்ன பலத்த யோசனை?" பிறகு என் முகத்தை நோக்கிக் குனிந்து, "நடிகர்னு சொன்னதிலே கோபமா, சரி என்ன சொல்ல வந்தீங்க சொல்லுங்க" என்று என் தலையை வருடியவாறு கேட்டாள்.

நான் மௌனமாக இருந்தேன். என்மீது கவிந்திருந்த முகத்தை ஊன்றிப்பார்த்தேன். இவள் சொல்வதும், செய்வதும் முழு மனதுடன் இல்லை என்று ஏனோ தோன்றியது. கட்டிக்கொண்டாயிற்று, எப்படி யாவது வாழ்ந்து தான் ஆகவேண்டும் என்றுதான் மனதில் நினைப்பாள் என்று தோன்றியது. இவள் தன் மனத்தின் ஒரு மூலையில் இவன் தனக்கு ஏற்றவனல்ல என்றே நினைப்பாள்.

"சொல்லுங்கன்னா..." என்று மீண்டும் அவள் வற்புறுத்தினாள். "பாருங்க, நீங்க சொல்றதையெல்லாம் நான் செய்வேன். நீங்க நான் சொல்றது ஒண்ணே ஒண்ணைக் கேளுங்க. நான் கொஞ்சம் வாய்த்துடுக்கு, வாயிலே வர்றதைப் பேசிடுவேன். உங்களக் கையெடுத்துக் கும்புடுறேன். நான் சொல்றது எதையும் தப்பா எடுத்துக்காதீங்க. என்ன பேசலாம், என்னப் பேசக்கூடாதுன்னு எனக்கு சுதிமதியே இருக்கறது கெடயாது. அப்புறமா வருத்தப்படுவேன். இவ்வளவு நாள் பேசாமலேயே வேற இருந்தேனா ஏதாவது பேசத்துடிக்குது. ரமா கூட நான் ரொம்ப வாயடிக்கிறேன்னு சொன்னா..."

நான் அவள் சொன்னதைத் தவறாக எடுத்துக்கொள்ளவில்லை. ஆனால் எனக்குள் தானாகவே மிகவும் விரக்தி பரவிற்று. உண்மையிலேயே

இவளுக்கு நான் எப்படி ஏற்றவனாவேன்? மேலுக்கு, "அது யார் ரமா?" என்று கேட்டு வைத்தேன்.

"என்னோட க்ளாஸ்மேட்", எல்லாவற்றையும் மறந்துவிட்டு படு உற்சாகமாக அவள் ரமாவைப் பற்றிப் பேச ஆரம்பித்தாள். கடைசியாக "இந்த தடவை போயிருந்தப்ப உங்களைப்பத்தி ரொம்பக் கேட்டா. எங்க கிளாசிலியே நாங்க ரெண்டு பேரும்தான் மகா வாலுங்க. எனக்கு உயிர்ச் சினேகிதி. பொண்ணுங்க அவ்வளவு சினேகம் பண்ணிக்கறதில்லே. நாங்க கல்யாணமே பண்ணிக்காம, நெறயா படிச்சு கிராமங்களுக்குப் போய் அங்கே பெண்களுக்கெல்லாம் கல்வி புகட்டணும்னு பேசிக்கிட்டிருப்போம். சமயத்தில் கொஞ்சமா லக்கேஜ் வச்சுக்கிட்டு இந்தியா பூராவும் கால்நடையா சுத்தணும், விரிவா டைரி எழுதணும்னு பேசிக்குவோம். புது ஊர்கள்லே புது மனுஷங்களைப் பாப்போம் என்றெல்லாம் நினைப்போம். காட்டு மிருகங்கள் கிட்டேயிருந்தும், ரௌடிப்பசங்க கிட்டேயிருந்தும் தப்பிக்க சிலம்பம், கத்தி வீச்சு எல்லாம் கத்துக்கறதுன்னு திட்டம் போடுவோம். இதுமாதிரி எத்தினியோ பேச்சு, வம்பளப்பு. அப்படி என்ன முடியவே முடியாத பேச்சுன்னு வீட்டிலேயும், வெளியிலேயும் எல்லாருக்கும் கடுப்பாயிடும். நாங்க என்னடான்னா அவுங்களை இன்னும் சீண்டி வேடிக்கை பாப்போம்."

நான் சட்டென்று நடுவில் குறுக்கிட்டு, "அது சரி பிரபா, உனக்குக் கல்யாணம் பண்ணிக்கிட்டதிலே வருத்தமா?" என்று கேட்டேன்.

பிரபா திடுக்கிட்டாள், "இல்லியே, நான் அப்படியா சொன்னேன்?" என்றவள் கலகலவென்று சிரித்தாள். "தோபாருங்க! நான்தான் சொன்னேனில்ல, எனக்கு சளசளன்னு பேசற பழக்கம்னு. என்னைத் தடுத்து நிறுத்துங்க. பேச்சை நிறுத்தற ஞாபகமே எனக்கு வர்றதில்லே, என்ன செய்யறது, இப்ப பாருங்க மாட்டிக்கிட்டேன்." அவள் வெகுநேரம் சிரித்துக் கொண்டேயிருந்தாள். அவள் மனம் விட்டுச் சிரிப்பது எனக்குப் பிடித்திருந்தது. கூடவே இவ்வளவு நடந்த பின்னும் கலகல வென்று சிரித்து சளசளவென்று பேசிக்கொண்டே போகிறாளே என்று ஆச்சரியமாகவும் இருந்தது. எனக்கு நினைவு தெரிந்து நான் இப்படி சிரித்ததில்லை. அவள் திடுதிப்பென்று என் கண்களின் பக்கவாட்டுகளில் முகத்தைப்பிடித்துத் திருப்பி என் கண்களைப் பார்த்து, "நான் சொன்னதையெல்லாம் மறந்துடுங்க. இப்ப நீங்க நல்லா படிக்கணுங்கறதுதான் என் ஒரே ஆசை. நீங்க சொன்னபடியெல்லாம் நான் கேப்பேன்" என்றாள்.

எனக்கு அப்பா சொன்னதும் திவாகர் சொன்னதும் நினைவுக்கு வந்தது. 'பிரபா, ஒரு விஷயத்திலே யோசனை சொல்லு...' என்று ஆரம்பித்தேன்.

"எங்கிட்டே யோசனை கேக்காதீங்கன்னு சொன்னேனில்லே. என்ன வேணுன்னாலும் சொல்லுங்க செய்யறேன்".

"அட, மொதல்லே சொல்றதைக் கேளேன்! ரொம்பத்தான் கீழ்ப்

படிஞ்ச மாதிரி காட்டிக்கிறே" என்று நான் செல்லமாக அதட்டினேன். "எனக்கு திவாகர்னு ஒரு சினேகிதன். அவனும் நான் தேர்ட் இயர் சேந்தாலே ஆச்சுன்னு பிடிவாதம் பிடிக்கிறான். இன்னொரு பக்கம், அப்பாவும் அண்ணனும் நான் ஏதாவது வேலைக்குப்போய்க் குடும்பத் துக்கு உதவியா இருக்கணும்னு நெனைக்கிறாங்க. எனக்கு என்ன செய்யறதுன்னே புரியலே, நீ ஒரு யோசனை சொல்லேன்."

நான் மேலும் ஏதாவது சொல்வேன் என்று அவள் சற்று சும்மா யிருந்துவிட்டு, "இதில் நான் சொல்றதுக்கு என்ன இருக்கு. உங்களுக்கு உசிதம்னு படறதைச் செய்யுங்க" என்றாள்.

அவள் சொல்ல விரும்பியதைச் சொல்லவில்லை என்பது எனக்குத் தெளிவாகத் தெரிந்தது."எனக்கு உசிதம்னு தெரிஞ்சா உன்னை ஏன் கேக்கறேன்? நான் தீர்மானிக்கிறது என்னை மட்டுமா பாதிக்கும்? இதுவரைக்கும் படிப்பு ஒரு சாக்கா இருந்தது. வீட்டிலேயும் பையன் படிக்கிறான்னு பேசாம இருந்தாங்க. இப்ப அதுவும் முடிஞ்சு போச்சு. இனிமே மேற்கொண்டு படிக்கிறதுக்கு வழி இருக்கிற மாதிரி தெரியலே. இவ்வளவு நாள் இழுத்துப் பறிச்சதே பெரிசு. இப்ப வீட்டுக்கு உடனே ஏதாவது பண்ணியாகணும், வேற வழி இருக்கிற மாதிரி தெரியலே".

பிரபா ஒரு கொட்டாவி விட்டு,"சரி , ஏதாவது வேலைக்குப்போங்க" என்றாள்.

"ஏன் வேண்டா வெறுப்பா சொல்றே" என்றவன்,"நான், சொல்றது உனக்குப் பிடிக்கலேன்னு எனக்குத் தெரியும். ஆனா என்ன பண்றது? அப்புறம், வேலைக்குப்போன்னு எல்லாரும் சுலபமாக சொல்லிடறாங்க. வெளியே கிளம்பிப் பாத்தால்ல தெரியும். வேலை எவ்வளவு சுலபமா கிடைக்குதுன்னு? அவனவன் இண்டர், பிஏ., படிச்சிட்டு சுத்தி வர்றான். சீந்த ஆள் கெடயாது. ரொம்ப முயற்சி பண்ணினா நாப்பது அம்பது ரூபாய் சம்பளம் கெடைக்கிற மாதிரி வேலை கெடைக்கலாம். அதுக்கே நாள் பூரா கையொடிய எழுதணும். ராத்திரிக்கும் பைல் கட்டை வீட்டுக்கு கொண்டு வரணும். உட்காரவோ, பேசவோ ஓய்வு ஒழிச்சல் கெடைக்காது. ராத்திரி பூரா உக்காந்து வேலை செஞ்சு கண்ணை அவிச்சுக்கணும். அண்ணனுக்கு உலகப் போர் நடந்த போது வேலை கெடச்சுட்டுது. இப்பவும் அப்படி சுலபமா கெடச்சுடும்னு நெனைக் கிறார். அந்தக் காலம் மலையேறிட்டுது. ஆனா இதையெல்லாத்தியும் யார்கிட்டே சொல்றது? என்ன செய்யறதுன்னே தெரியலே. ஏதோ ஒரு டிகிரி இருந்தாலும் ஏதாவது முயற்சி பண்ணிப் பாக்கலாம். நான் இண்டர் பாஸ் பண்ணியிருக்கேன்னு யார்கிட்டேபோய் சொல்றது. சொன்னா, பாவம் அவனுந்தான் என்ன வேலை தருவான்? என்ன சொல்றே நீ?" என்றேன்.

"நான் என்னத்தை சொல்றது, நீங்களே சொல்லுங்க, வேணும்னா ஏதாவது ஸ்கூல்லே வாத்தியாரம்மாவா ஆகட்டுமா?" என்று பரிகாசம் தொனிக்கக் கேட்டாள்.

“அம்மா, அண்ணி காதுலே இது விழுந்ததுன்னா வேற வினையே வேண்டாம்,” என்றேன். எனக்கு என் கையறுநிலை மீது கோபம் வந்தது. “நெஜமாலும் சொல்றேன் பிரபா, எங்காவது ஓடிடலாமான்னு இருக்கு. என்ன, ஒரு வெட்டிப்பயகிட்டே வந்து மாட்டிக்கிட்டோம்னு உனக்கும் தோணும், இல்லே? நெஜமாலுமே உன் நிலையை என்னால கண்கொண்டு பார்க்கமுடியலே பிரபா! சௌக்கியமா வச்சுக்கறதை விடு, ஒழுங்கா ஒரு துணிமணி உண்டா? என்கிட்டேயே இல்லே.”

“நீங்க என்னைப் பத்திக் கவலைப்படாதீங்க, என்கிட்டே நிறைய இருக்கு.”

நான் அவள் கூறியதைக் காதில் வாங்கி கொள்ளாமல், “திவாகர் மனைவி உன்னை அழைச்சுக்கிட்டு வரச்சொல்லி தெனமும் அரிக்கிறா. ஆனா எப்படி அழைச்சுக்கிட்டு போறது நீயே சொல்லு. அவ என்னிக்காவது இங்கே வந்துடப்போறாளேன்னு இப்போ பயமாயிருக்கு” என்றேன். பிரபா வந்துவிட்டாள் என்று திவாகரிடம் ஏன் சொன்னேன் என்று வருத்தப்பட்டேன். வந்து தொலைத்துவிட்டால் அவர்களை எங்கே உட்காரச் சொல்வது, எங்கே சாப்பிடச் சொல்வது?

பிரபா சட்டென்று, “ஐயையோ, ஆமாங்க, அழைச்சுக்கிட்டு கிழைச்சுக்கிட்டு வந்துடாதீங்க, இங்கே நடக்கறதைப் பாத்துட்டு என்ன சொல்லுவாங்க? அவங்களை எப்படி உபசரிக்கிறது?” என்றாள்.

“எனக்கும் அதே கவலைதான். உண்மையைச் சொன்னா சமயத்தில் கோபம் வருது. எல்லாத்தையும் உதறித்தள்ளிவிட்டு யார் என்ன வேணுன்னாலும் பேத்திக்கிட்டு போகட்டும்னு படிப்பிலே கவனம் செலுத்தலாமா, நல்லாப் படிச்சு பெரிய வேலைக்குப்போய் ஜாலியா இருக்கலாமான்னு தோணுது. இப்ப எவ்வளவு பணம் சம்பளமா கெடைக்குமோ அவ்வளவு பணத்தை ரொம்ப சுலபமா நாம வீட்டுக்கே தனியா கொடுக்க முடியும்” என்று கனவு காண்பவன்போல் சொன்னேன், “யாரு யாருக்காகக் கவலைப்படமுடியும், அவனவன் தலைவிதி அவனவனுக்கு, அவனவன் பாடு அவனவனுக்குன்னு நெனைக்கத் தோணுது. ஆனா மனசு கேட்க மாட்டேங்குது. அப்பா அம்மாவுக்கு ஏதாவது செய்யவேண்டிய கடமை எனக்கும் இருக்கில்லே?”

விடியலின் வெளிச்சம் வானில் தோன்ற ஆரம்பித்தது. பிரபா சோம்பல் முறித்துக் கொட்டாவி விட்டு, போகவேண்டும் என்பதை சொல்லாமல் சொன்னாள். எழுந்து கொண்டே “ஆனா நல்ல வேலை கிடைச்சா கடமையை இன்னும் நல்லா செய்ய முடியாதா?” என்று கேட்டாள்.

அவள் என்ன சொல்கிறாள் என்ற கேள்விக்குறியுடன் நான் அவளைப் பார்த்தேன்...

# 3

வழியே இல்லை, பிரச்சினைக்குத் தீர்வே இல்லை. குமைந்து குமைந்து சாகவேண்டியதுதான். தூணில் சாய்ந்து அழுது கொண்டிருக்க வேண்டியது தான். வீணாக உளுத்துப் போய்க்கொண்டிருக்க வேண்டியது தான். இதையெல்லாம் ஒரேயடியாக உதறித்தள்ள வழியில்லையா? எதையும் கண்டுகொள்ளாமல் போய்விட்டால்? சே- என்னென்ன வெல்லாம் இன்று தோன்றுகிறது? இப்போது என்னுடன் இன்னொருத்தி யின் எதிர்காலமும் பிணைக்கப்பட்டிருக்கிறது என்றாவது நினைத்துப் பார்க்க வேண்டாமா? இப்போது தனியாக நான் ஒரு முடிவு எடுக்க முடியாதே! சரி ஏதாவது நடக்காமல் போகாது. ஏன் அதற்குள் மனதைத் தளரவிட வேண்டும்.

இவ்வளவு நேரம் கழித்துத் திரும்புவதற்கு வீட்டில் திட்டுக்கிடைக்கும் என்று உள்ளூர உதறலாக இருந்தது. இதற்குள் வீட்டில் இன்னும் என்ன ரகளை நடந்திருக்கிறதோ, போய்ப் பார்த்தால்தான் தெரியும். எம்ப்ளாய் மெண்ட் எக்சேஞ்ச் பில்டிங் பின்தங்கிப்போனது. அந்த இரைச்சல் மங்கியது.

என்ன நடந்தது என்றால், இரண்டு நாள் கழித்து நான் பயந்து கொண்டே, அண்ணியிடம், "அண்ணி, உங்ககிட்டே சும்மா சாதாரணமா ஒரு புடவை இருக்குமா?" என்று கேட்டேன்.

"உனக்கெதுக்கு தம்பி புடவை?" என்று அண்ணி கேட்டாள். தெரிந்தும் தெரியாதமாதிரி கேட்கிறாள் என்று புரிந்துவிட்டது.

"இருந்தா பிரபாவுக்குக் கொடுங்களேன். யாராவது பாத்தா என்ன சொல்லுவாங்க, பாத்தா வெக்கமாயிருக்கு" என்று குரலைக் கட்டுப்படுத்திக் கொண்டு அமைதியாகச் சொன்னேன்.

அண்ணியின் கண்களில் விஷயத்தைப் புரிந்துகொண்ட திருப்தியும், விஷமமும் மின்னின. நான் அவளுடைய சிரிப்பிலிருந்து விஷமத்தைக் கண்டும் காணாதது மாதிரி இருந்துவிட்டேன், "சத்தியமா தம்பி- என் கிட்டே ஒண்ணுகூட இல்லே. வேணும்னா வந்து பெட்டியைப் பாத்துக்க" என்றவள் குழந்தையைத் தொட்டிலில் ஆட்டிக் கொண்டே, "அம்மாகிட்டே ஒண்ணு இரண்டு இருக்கும், கேட்டுப் பாரேன்" என்றாள்.

அம்மாவிடம் போகத் துணிவில்லாமல்தானே அண்ணியிடம் வந்தேன்! இப்போது சற்று தைரியத்தை வரவழைத்துக் கொண்டேன். "இதில் பயப்பட என்ன இருக்கிறது, நான் பேச ஆரம்பித்துவிட்டேன் என்றுதான் அம்மாவுக்குத் தெரியுமே" என்று எனக்கு நானே சொல்லிக் கொண்டேன். சற்று அங்கும் இங்கும் போய்வந்து கொண்டிருந்துவிட்டு அம்மாவிடம் போய் நின்றேன். "அம்மா, உங்ககிட்டே ஏதாவது புடவை

இருக்கா?" என்றேன். அம்மா முகத்தை ஏறிட்டுப் பார்க்கத் துணிச்சல் வரவில்லை.

"ஏன்? உனக்கெதுக்கு" என்று கேள்வியுடன் என்னைப் பார்த்தாள் அம்மா."

"எனக்கில்லே, பிரபாவுக்காகக் கேட்டேன். அவ புடவை ரொம்ப கிழிஞ்சு போச்சு, கண்ணால பாக்கச் சகிக்கல."

"ஓஹோ, பொண்டாட்டிக்கு வேணும்னு நேரே கேளேன். ஏன் சுத்தி வளைக்கிறே?" பிரபா என்றவுடன் அம்மா முகம் சிறுத்துவிட்டது. கடு கடுப்பான முகத்துடன் தலையணைக்கடியிலிருந்து சாவிக்கொத்தை எடுத்து என் முன்னால் விட்டெறிந்து, "இந்தா வீட்டுச் சாவிக்கொத்து இருக்கு, எங்கியாவது இருந்தா எடுத்துக்க. எனக்கு ஒண்ணும் இருக்கறதா தெரியலே, இருந்தா நானே குடுத்திருக்கமாட்டேனா? வர்றமாசம் பணம் மீந்துச்சுன்னா வாங்கித்தரேன், ஏன் அவகிட்டே ஒண்ணுரெண்டு இருக்குமே!" என்றாள்.

நான் மௌனமாக இருந்தேன். என்ன பதில் சொல்வது? போகும்போது ஈனஸ்வரத்தில், "அவ கல்யாணத்திலே எடுத்ததிலேதான் ஒண்ணுரெண்டு இருந்தா குடுங்களேன்" என்றேன்.

அம்மாவுக்கு குபீர் என்று கோபம் வந்துவிட்டது. "கல்யாணத்திலே என்ன எழவு வந்தது? நீ எங்கே காசிக்கா போயிருந்தே? கல்யாணத்திலே என்னத்தை வாரிக்கிட்டு வந்தா? அதுவுமில்லாம கல்யாணம் ஆயி ஜன்மாந்தரம் ஆச்சு, இப்ப வந்து கேக்கறே! ஏண்டா அன்னிக்கு வந்தது அப்படியேவா வச்சிருக்கும்? போகும்போது முன்னிக்குக் கொஞ்சம் குடுக்கலே? இவ அம்மா வீட்டுக்கு சீராடப்போனாளே, அப்ப குடுக்கலே?" அம்மாவின் கோபம் எகிறிக்கொண்டேயிருந்தது. அவள் இரைய ஆரம்பித்தாள், "நல்லாதான் பொண்டாட்டிகிட்டே பேச ஆரம்பிச்ச. எடுத்ததுக்கும் தலை மேல ஏறிக்குதிக்கிறியே! ஏன் உன் பெண்டாட்டிதான் மருமகளா? இன்னொருத்தி மட்டும் மருமகள் இல்லியா? ஓதியனுப்பினான்னு சொல்லேன். அவளை எனக்குல்ல தெரியும்? எப்பேர்ப்பட்ட கைகாரின்னு? வேறென்ன? இஸ்கூல்லே படிச்சிருக்கா, மத்தவங்க எப்படி போனாலும் நாம மட்டும் வாழ்ந்துடணும்னுதானே படிச்சிருக்கா."

அம்மாவின் சொற்பிரவாகம் நிற்காமல் பொங்கி ஓடியவண்ணம் இருந்தது. அதற்குள் அப்பா வந்து அதட்டினார். "என்ன ஆச்சு! என்ன ரகளை! வெளிலே யாராவது வந்திருப்பாங்க, உட்கார்ந்திருப்பாங்க? காதிலே விழுந்தா என்ன நெனப்பாங்கன்னு கொஞ்சம் நெனப்பு வெச்சுக்குங்க. ஒரு நிமிஷமாவது இந்த வீட்டுல நிம்மதியில்லேடா சாமி, எப்பப்பாரு."

அம்மா அவர் பேச்சை காதில் போட்டுக்கொள்ளாமல் அதே குரலில், "உங்க செல்லம் பொண்டாட்டிக்குப் பரிஞ்சுகிட்டு வந்து

நிக்குது பாருங்க. கல்யாணத்திலே வந்த சீருக்குக் கணக்குக் கேக்கறான். கல்யாணத்திலே வந்த துணியெல்லாம் வேணுமாம், பொண்டாட்டிக்குப் பழைய புடவை கட்டிக்க வெக்கமா இருக்காம். கல்யாணத்திலே எத்தினி வெல்வெட்டுப் புடவை வந்ததுன்னு இவன்கிட்டே கேளுங்க" என்று சத்தம் போட்டாள்.

அப்பா எரித்துவிடுவது போல என்னைப் பார்த்தார். வெறுப்புடன், "பைசா சம்பாதிக்க வக்கில்லேன்னாலும், பொண்டாட்டிக்கு வக்காலத்து வாங்கிக்கிட்டு வந்துட்டியா? வெக்கமாயில்லே? தூ! இன்னொருத்தன், உழைச்சுத் தேயறானே பார்க்கலே? படிக்க வச்சதோட இல்லாமல் பகட்டிக்கிட்டுத் திரியவும் படியளக்கணுமா? நம்ம செலவையாவது பாத்துக்குவோம், எதோகொஞ்சம் பாரம் கொறயும்ன்னு இல்லே... கேக்க வந்துட்டான், அவனவனுக்கா புத்தி வரணும்_" என்று சொடுக்கி விட்டு வாக்கியத்தை முடிக்காமலேயே வெளியே உட்காரும் அறைக்குப் போய்விட்டார்.

அப்பா கோபித்துக் கொண்டார் என்றோ, அல்லது சொல்ல விரும்பியதை நன்றாகத் தைக்கும்படி சொல்லியாகிவிட்டது என்றோ அம்மா மௌனமாகிவிட்டாள். முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டு நான் என் அறைக்குத் திரும்பினேன். நான் அம்மாவிடம் ஏன்தான் போனேனோ - அண்ணி வேண்டும் என்றே இழுத்துவிட்டிருக்கிறாள். ஒருநாள் இல்லாவிட்டால் ஒருநாள் பார்த்துக் கொள்கிறேன். ஒன்றும் நல்லது செய்யாவிட்டாலும், மோதவிட்டு வேடிக்கை பார்க்கிறாள்!

பிரபா எங்கிருந்தோ வந்து சேர்ந்தாள், "அங்கே போயி இதை யெல்லாம் சொல்லி ரகளை பண்ண யார் சொன்னா? எனக்கு புடவை துணிமணி ஒண்ணும் வேண்டாம். என்கிட்டே பொட்டி நெறய இருக்கு. நல்ல புடவையெல்லாம் வீட்டு வேலையின்போது கட்டி வீணடிப்பானேன்னு கட்டறதில்லே, காலங்கார்த்தாலே போய் சண்டை போடாட்டி என்ன? ஒங்களுக்கு ஒரு வேலை கெடச்சதுன்னா, இஷ்டப்படி கட்டிக்கிட்டுப் போறேன், நடுக்கற குளிரையே இந்தப் புடவையிலே ஓட்டிட்டேன். இப்ப என்ன? உங்களுக்குக் கஷ்டமாயிருந்தா இப்பவே எடுத்துக் கட்டிக்கறேன். எங்கியாவது போனா வந்தா ஆவுமேன்னு வச்சிருந்தேன். ஆனா கையெடுத்துக் கும்பிடறேன், கால்லே விழுந்து கேட்டுக்கறேன், அங்கே போய் கலாட்டா பண்ணாதீங்க. நீங்க சொல்லிட்டுப் போயிடுவீங்க, அப்புறமா எல்லாரும் என் உயிரைத் தான் எடுப்பாங்க," என்றாள்.

நான் குரல் நடுங்க, "சரி பிரபா, இப்போ இங்கேயிருந்து போயிடு. நான் ஏதாவது சொல்லிவிடுவேன், அப்புறம் உனக்கு வருத்தமாயிடும்" என்றேன்.

பிரபா தொண்டையடைக்க, "நான் என்னிக்காவது உங்ககிட்டே கோபிச்சுக்கிட்டு இருக்கேனா?"

அதற்குள் கீழேயிருந்து யாரோ உரக்கக் கத்துவது காதில் மோதியது, "எங்கே போய்த் தொலஞ்சே? ஏண்டியம்மா பருப்பு பொங்கி அடுப்பிலே வழியுதே! இதை எறக்கி வச்சுட்டுத்தான் போனா என்னவாம்..?"

பிரபா வாழையிலையாக நடுங்கிக் கொண்டு கீழே ஓடினாள்.

நான் உட்கார்ந்து எனக்குள் முணுமுணுத்துக் கொண்டிருந்தேன். சம்பாதி, கொத்து, வெட்டு, எப்படியாவது சம்பாதிச்சுக்கிட்டு வந்து கொட்டு— அடடா எனக்கு மட்டும் ஒரு புதையல் கிடைச்சதுன்னா இவங்க வாயிலே வச்சுத் திணிச்சு, "இந்தாங்க தின்னுங்க"ன்னு சொல்லுவேன். பிறகு சிறுவயதுக் கனவு நினைவுக்கு வந்தது. நான் நடந்து போகிறேன். காலில் ஏதோ இடறுகிறது. ஏதோ கல்லென்று நினைத்துக் கொண்டு மேலே போய் விடுகிறேன். பிறகு ஏதோ நினைத்துக்கொண்டு திரும்பி வந்து பார்த்தால் ஏதோ ஒரு மூடி பூமியில் புதைந்து இருக்கிறது. காலால் சற்று மண்ணை அகற்றினால் ஒரு பெரிய பித்தளைப் பானையின்மூடி என்று தெரிகிறது. அதிலே பொற்காசுகள் அல்லது தங்க வெள்ளி நகைகள், அங்கும் இங்கும் பார்த்துவிட்டுத் தோண்டுகிறேன். அல்லது இரவு வரும் என்று காத்திருக்கிறேன்.. இந்தக் கனவின் சாத்திய மின்மை பற்றி சிரிப்பும் வந்தது. ரோடு போடுகிறவர்கள் தோண்டாமல் இருந்திருப்பார்களா, அப்படி ஏதாவது இருந்தால் வழிப்போக்கர்களும் போலீஸ்காரர்களும் இதுவரை விட்டு வைத்திருப்பார்களா, வேட்டை விட்டிருக்க மாட்டார்களா?

பிறகு என் முட்டாள்தனத்தின் மீது எரிச்சல் வரும், என்ன இது வெட்டியாக உட்கார்ந்து அபத்தமாக யோசித்துக்கொண்டிருக்கிறேன். இப்போது என்ன செய்வது என்றல்லவா பிரச்சினை. ரிஸல்ட் வராமலே வேலைக்குப் போய்த் தொலையலாம் என்றாலும் எங்கே போய் வேலை தேடுவது. எப்படியும் சரி, இன்று ஒரு மோதல் மோதிப் பார்த்துவிட வேண்டியதுதான்.. இப்படியே விட முடியாது.

கட்டுகளிலிருந்த மெட்ரிகுலேஷன் சர்டிபிகேட்டைத் தேடிப்பிடித்து பையில் திணித்துக்கொண்டு ஓசைப்படாமல் வெளியே கிளம்பினேன். வழக்கம்போல அம்மா எதற்கோ பிரபாவை சிடுசிடுத்துக்கொண்டிருந்தாள். அவளுக்கு வேறு என்ன வேலை? பூஜை செய்வதும் சிடு சிடுத்துக்கொண்டிருப்பதும்தானே? நான் போவதைக்கண்டு பின்னால். "மறுபடியும் கிளம்பியாச்சா? கொட்டிக்கிட்டுப் போறதுதானே! எவ்வளவு நேரந்தான் வச்சிருக்கிறது. நேத்துதான் சட்டிப்பருப்பை தூக்கிக் கொட்டிச்சு. தினமும் ரொட்டியை தோட்டிச்சி வாங்கிக்கிட்டுப்போறா!"

அப்பா! இது என்ன வீடா, மீன் சந்தையா. எப்போது பார்த்தாலும் ஒரே பேச்சுத்தானா? ஒரு நிமிஷம் அமைதியாக உட்கார முடியாது. இங்கே யாருக்கும் தனக்காகவும் தெரியாது, சொன்னால் கோபம் மட்டும் வரும். இப்போது பிரபா வந்து கடிந்துகொண்டாள். எனக்கு வருத்தமாகவா இருந்தது? ஆனால் அப்பா சொன்ன வார்த்தை

ஒவ்வொன்றும் ஈட்டியாகக் குத்துகிறதே! இந்த அம்மா ஒன்று-ரொட்டியை தோட்டிச்சிக்குத் தருகிறாளாம். நிம்மதியாகச் சாப்பிட விட்டால்தானே மனுஷன் சாப்பிடுவான். அன்று கிரண் மாமியாரைக் குறித்து மரியாதைக் குறைவாகப் பேசியது எனக்குப் பிடிக்காமல் இருந்தது. இன்று அவள் பேசியது சரிதான் என்று பட்டது. இப்படி மோசமாக நடந்தால் மனத்தில் வெறுப்பு வரத்தான் வரும். அம்மாவிடம் புடவைகள் இல்லாமல் இருக்காது. ஆனால் அவை அவளுடைய பெரிய மருமகளுக்குத்தான். அவள் கணவன் சம்பாதிக்கிறானே! அதுதான் அவள் குழந்தையைத் தூக்கிவைத்துக்கொண்டு சும்மா வளைய வருகிறாள், ஆட்டிப்படைக்கிறாள். வீட்டு வேலை எல்லா வற்றுக்குமாகத்தான் ஒரு வேலைக்காரி கிடைத்துவிட்டாளே! அவளை மாடு மாதிரி வேலை வாங்கிக்கொண்டு இருக்கவேண்டியது. அவள் சாப்பிட்டாளா, தூங்கினாளா என்று கவலை கிடையாது. பொழுது போகவில்லையென்றால் அவளைத் திட்டித் தீர்க்கலாம். பாவம்! வேலை வெட்டி இல்லாதவனின் பெண்டாட்டிதானே!

வீதிக்கு வந்துவிட்டேனேயன்றி அங்கேயே நின்று யோசித்தேன். எங்கே போகக்கிளம்பினேன் என்றே ஞாபகம் வரவில்லை. யாருக்கும் தெரியக்கூடாது என்று நினைத்தது மட்டும் நினைவு இருந்தது. வெகு நேரம் நெற்றியைத் தட்டித்தட்டி நினைவுபடுத்திக்கொள்ள முயன்றேன். 'என்ன ஆயிற்று என் மூளைக்கு...?'

எம்ப்ளாய்மென்ட் எக்ஸ்சேஞ்சின் பெரிய கட்டிடத்தில் சுமார் இரண்டாயிரம் பேர் கூட்டம், பெரிய திருவிழா மாதிரி இரைச்சல். கட்டிடத்தின் வராண்டாக்கள், அறைகள் எல்லாம் நிரம்பி வழிந்தன. காம்பவுண்டு நிறையவும் ஜனங்கள். மரங்கள், புல்தரை, பாத்திகள் எங்கு பார்த்தாலும் மனிதர்கள். காம்பவுண்டு சுவற்றுக்கு வெளியே ஒருவர் தோளைப் பற்றி முன்னங்காலில் எக்கி எட்டிப் பார்க்கும் மனிதர்களின் இரட்டைவரிசை. எல்லாருடைய பார்வையும் கட்டிடத்தின் மீதே இருந்தது. பார்த்தால் யாரோ தலைவர் வந்து நாடு எப்படி முன்னேறுகிறது, எத்தனை அணைக்கட்டுகள் கட்டப்பட்டன, எத்தனை தொழிற் சாலைகள் கட்டப்பட்டன, இந்தியா உலக நாடுகளிடையே எப்படி முக்கியத்துவம் பெற்று வருகிறது என்று சொற்பொழிவு ஆற்றிக் கொண் டிருப்பார் என்று தோன்றியது. பிறகு, 'இங்கே ஏதாவது விபத்து நடந்து விட்டதோ? தீப்பிடித்துக் கொண்டுவிட்டதோ, கொலைகிலை நடந்து விட்டதோ?'என்று யோசித்தேன். ஆனால் நாற்சந்தியில் போலீஸ்காரன் அமைதியாக டிராஃபிக் வேலையைக் கவனித்துக்கொண்டிருப்பதைப் பார்த்ததும் அந்த சந்தேகம் அகன்றது. கூட்டத்திற்குள் போக முடியாமல் சைக்கிள்காரர்கள் சைக்கிளில் இருந்தபடியே காலால் தாங்கிக் கொண்டு விஷயத்தை அறிய முயன்றார்கள். கூட்டத்தின் ஒருபுறத்தில் நின்றேனோ இல்லையோ, யாரோ, "என்ன தொண்டரே!" என்று தோளில் கை வைத்தார்.

திடுக்கிட்டு திரும்பினேன். "ஸாரி, நான் யாரோன்னு நினைச்சுட்டேன்" என்றார் அவர்.

பனியன் தெரிய மஸ்லின் குர்தாவும் பைஜாவும் அணிந்து, வறண்ட தலையை பின்னோக்கி சீவியிருந்த ஒரு சிவந்த மேனி பெரிய மனிதர் நின்றிருந்தார். முகத்தில் மன்னிப்பு கேட்கும் பாவனையில் ஒரு சிரிப்புடன், "நான் உங்களை வேறு யாரோன்னு நினைச்சுட்டேன்" என்றார்.

நான் புன்சிரிப்புடன், "அதனால் என்ன, பரவாயில்லை" என்றவன், "ஆமா, இங்கே என்ன விசேஷம்?" என்று கேட்டேன். ஏனோ அவர் முகம் என்னைக் கவர்ந்தது.

"இன்னிக்குத் தொழிலாளிகள், கிளார்க்குகளுக்கு ஆள் எடுக்கறாங்கன்னு நினைக்கிறேன்" என்று அருகேயிருந்த கறுப்பு நோட்டீஸ் போர்டைப் பார்த்துக் கொண்டே அவர் கூறினார். நானும் ஊன்றிக் கவனித்தேன். மேலே இருந்து கீழாக நூற்றுக்கணக்கான வேலையின் பெயர்கள் எழுதப்பட்டிருந்தன. பெரும்பாலானவற்றின் முன் பெருக்கல் குறியிடப்பட்டிருந்தது. தச்சர்கள் என்பதற்கு முன் பத்து, தொழிலாளர்கள் என்பதற்கு முன் ஐம்பது, கிளார்க் என்பதற்கு முன் மூன்று என்று எழுதியிருந்தது. அளவற்ற ஆச்சரியத்தில் என் வாய் பிளந்தது. அறுபத்தி மூன்று இடத்திற்கு மூவாயிரம் பேரா? தலைசுற்றியது.

கொஞ்சநேரம் வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்துவிட்டு நான் தலையைத் தொங்கப் போட்டுக்கொண்டு திரும்பி வந்தேன். இந்தக் கும்பலில் எனக்கு எங்கே வேலை கிடைக்கப்போகிறது? திவாகர் சொன்னது சரிதான், நல்ல டிகிரி இல்லாமல் நல்ல வேலை கிடைக்காது. இங்கே என்னை யார் சீந்துவார்? இந்த ஆயிரக்கணக்கான பேரில் எவனாவது ஒருத்தன் எம்ப்ளாய்மெண்ட் எக்ஸ்சேஞ்ச் ஆபீசரின் அக்கா பையன், அண்ணா பையனாக இருப்பான். அவனை எடுப்பார்களா, என்னை எடுப்பார்களா? சிறிது தூரம் என்னுடனேயே வந்த அந்த மனிதர் கசப்புடன் "ராத்திரியும் பகலும் தொண்டை கிழிய கத்தற தலைவர்களுக்கு வெட்கமே கிடையாது. குரங்கு மூஞ்சியை ரொம்ப சீரியஸாக வைச்சுக்கிட்டு நாம் சுதந்திரம் அடைஞ்சுட்டோம், நமக்கு நாட்டைப் புதிதாக உருவாக்க என்ஜினியர்கள் வேண்டும், டாக்டர்கள் வேண்டும், மிஷின் இயக்குபவர்கள் வேண்டும், விஞ்ஞானிகள் வேண்டும் அப்படியெல்லாம் அளப்பாங்க; ஆனா ஒனக்கு என்ன வேணும்? ஒனக்கு உன் மாளிகைக்கு தோட்டக்காரன் வேணும், வண்டியோட்ட டிரைவர் வேணும், அவ்வளவுதான். அது வேணுமாம், இது வேணுமாம் மண்ணாங்கட்டி!" என்று கூறினார்.

அவருடைய கோபம் என் மனப்புண்ணுக்கு இதமாக இருந்தது. உண்மைதானே! படித்து முன்னேற நினைக்கிறவனுக்கு வசதியும் வாய்ப்பும் இல்லை. உங்களுக்கு மந்திரத்தில் காய்த்த டாக்டர்களும்,

இஞ்சினியர்களும், விஞ்ஞானிகளும், மெக்கானிக்குகளும் வேண்டுமா?

உலகத்தில் தனிப்பெரும் மனிதனாக வரவேண்டும் என்று என்னென்ன வண்ணக் கனவுகள் கண்டு வந்தேன் என்று திரும்பிவரும் போது எண்ணமிட்டேன். பல இரவுகள் கண் விழித்து என் ரத்தத்தைப் பாய்ச்சி அந்தக் கனவுகளை நான் வளர்த்தேன். தயானந்தரிலிருந்து, வீர சிவாஜி, ரவீந்திரநாத் தாகூர், காந்தி, நேரு வரை யார் யாரோ என் லட்சியப் புருஷர்களாக விளங்கியிருக்கிறார்கள். எத்தனையோ மகா புருஷர்களைப் போல் என் வாழ்க்கையை அமைத்துக்கொள்ள நான் முயன்றிருக்கிறேன். எத்தனையோ பெரிய மனிதர்களின் வாழ்க்கைச் சரித்திரங்கள் என்னை உணர்ச்சிவசப்படுத்தி மெய்சிலிர்க்க வைத்திருக் கின்றன. வரும் இடர்பாடுகளைத் தூசுகளாகத் தட்டி முன்னேறும் உணர்ச்சி வேகம் எப்படியெல்லாம் என்னுள் மோதியது? கல்யாணம் ஆகும்வரை நான் அந்த வண்ணக்கனவுகளில் எப்படி ஊஞ்சலாடிக் கொண்டிருந்தேன்! பிரபாவிடம் பேச ஆரம்பித்தபோது என் இடை யூறுகள் யாவும் அகன்றுவிட்டன போலவும், பெரிய மனிதனாவதற்கு இறைவனே எனக்கு வழிகாட்டிவிட்டதாகவும் எவ்வளவு குதூகலம் அடைந்தேன்! பெரிய மனிதனாம்! சே! என்ன முட்டாள்தனமான கனவுகள்! சற்றும் சாத்தியமற்ற கற்பனைகள்! நானோ என் உண்மை நிலையை மறந்து அவற்றையே உண்மையாகக் கருதியிருந்தேன்.

என்கூட வந்தவர் சிகரெட் சாம்பலைத் தட்டிவிட்டவாறே, "இதிலே வேடிக்கை என்னன்னா, வாழ்க்கையிலே வெற்றியடையணும், பெரிய மனுஷன் ஆகணும்ங்கற கனவெல்லாத்தையும், ஸ்கூல், காலேஜிலியே நம்ம மனசிலே விதைச்சுடறாங்க. அதுமாதிரி பாடம் ஒண்ணு வந்துதுன்னா, மொதல்ல ஜவகர்லால் நேரு ஆயிட்டுதான் மறுவேலைங்கற மாதிரி ஆக்கிடறாங்க. அம்பது, நூறு வாங்கிக்கிட்டு வாத்திவேலை பண்ற மண்ணாங்கட்டிக்கு, 'இது மாதிரி பாடம் நாமளும் படிச்சோம், ஆனா பெரிய மனுஷன் ஆவறதுக்குப் பதிலா ஹெட்மாஸ்டர்கிட்டே வந்து வசவு வாங்கிக்கிட்டிருக்கோம்'னு நினைப்பு வந்தது கிடையாது. அவுங்கல்லாம் பெரிய மனுசங்க வீட்டுப்புள்ளைங்க, சாப்பாட்டுக்குக் கவலை இல்லாதவங்க அப்படீங்கறதை எல்லாரும் மறந்தே போயிடறாங்க, தன் முயற்சியால் பெரிய மனுஷன் ஆகிக் காட்டறதுதானே!" என்றார். இதற்குள் அவர் பிரிந்து செல்லவேண்டிய இடம் வந்துவிட்டது. "ஏதாவது தப்பா சொல்லியிருந்தா மன்னிச்சுக்கங்க, வர்றேன்" என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார்.

அவர் பேச்சு எனக்கு வியப்பூட்டியதுடன் இவரை எங்கோ பார்த் திருக்கிறேன் என்றும் எனக்குத் தோன்றியது. ஆனால் எனக்கு நினைவு வரவில்லை. நான் மேலுக்கு, "அதெல்லாம் ஒண்ணுமில்லே, வாங்க" என்று அவருக்கு விடை கொடுத்தேன். அவர் பேச்சில் இருந்த உண்மை என் மனத்தில் ஆழத்தைத்தது. எனக்கு எதிர்காலமே இல்லை, எனக்கு

எதிர் காலத்தில் ஒரு இடம் கிடையவே கிடையாது. நான் கோபத்தில் என் பையிலிருந்த மெட்ரிக் சர்டிபிகேட்டைக் கசக்கினேன்.

எவ்வளவு நேரம் திரிந்து கொண்டிருந்தேன் என்று தெரியாது. நான் ஏதாவது செய்தாக வேண்டும், எனக்காக இல்லையென்றாலும், பிரபாவுக்காக ஏதாவது செய்தாக வேண்டும் என்ற நினைவு என் மனத்தில் மோதிக் கொண்டேயிருந்தது. ஆனால் அதே சமயத்தில் செய் வதற்கு ஒன்றுமில்லை என்பதும் பொட்டில் அடிப்பது மாதிரி ஒலித்துக் கொண்டிருந்தது. எனக்கு என்று யார் இருக்கிறார், ஒருவருமில்லை.

மதியத்திற்குப்பின் வீடு திரும்பினேன். தபால்காரனிடமிருந்து எதையோ வாங்கிக்கொண்டு அமர் உள்ளே போய்க்கொண்டிருந்தான். "யாருக்குக் கடிதம் அமர்?" என்று கேட்டேன்.

அவன் திடுக்கிட்டு ஆடு திருடின கள்ளன் போல விழித்தான். "சி.. சி.. சின்ன அண்ணிக்கு..." என்று திக்கித் திணறிச் சொன்னான்.

"எங்கிட்டே கொடு" என்று கையை நீட்டி வாங்கி கொண்டேன். முத்திரையைப் பார்த்தேன். பிரபா வீட்டுக் கடிதம் அல்ல.

முத்திரை தெளிவாக இல்லை. ஊன்றிப் பார்த்ததில் ஜோத்பூர் போலத் தெரிந்தது. ஜோத்பூரிலிருந்து இவளுக்கு யார் கடிதம் எழுதுவது என்று ஆச்சரியமாக இருந்தது. ஆனால் திறந்து பார்க்க சற்றும் ஆர்வம் ஏற்படவில்லை. எனக்குத் தெரிந்தே பிரபாவுக்கு வந்த எத்தனையோ கடிதங்களைப் பிரித்துப் பார்த்திருக்கிறார்கள், அமர் முகத்தைப் பார்க்கும் போதே இரவு இதை சென்சாருக்கு உள்ளாக்கி, உசிதம் என்றால் நாளை கொடுப்பார்கள் என்று தெரிந்தது.

கடிதத்தை எடுத்துக்கொண்டு நான் உள்ளே வந்தேன். பிரபா ஒரு மூலையில் உட்கார்ந்து மாவு சலித்துக் கொண்டிருந்தாள். எப்போது பார்த்தாலும் சமையல் அல்லது சமையல் சம்பந்தமான வேலை என்று அவளைப் பார்த்துப் பார்த்து சலித்துவிட்டது. இந்த சமையல் வேலை முடியவே முடியாதா? இரண்டு தோளையும் பிடித்துத் தூக்கி, "செஞ்ச வரை போதும், எழுந்திரு, மிச்சத்தை வேற யாராவது செஞ்சுக்குவாங்க" என்று சொல்ல வேண்டும் போல இருந்தது. ஆனால் அந்த "வேற யாராவது" என்பது யார்? வறண்ட உதடுகளுடனும், உலர்ந்த தொண்டை யுடனும், "பிரபா, உனக்குக் கடிதம்" என்றேன்.

"எங்கேயிருந்து?" என்று பிரபா சட்டென்று உவகை பொங்கக் கேட்டாள், என் கையிலிருந்து கவரை வாங்கி, ஒரு மூலையில் பிரித்துப் பார்த்து, ஜோத்பூர்லேருந்து வந்திருக்கு, ரமாவோட கடிதமாத்தான் இருக்கும். அவகிட்டேயிருந்து கடிதம் வந்து ரொம்ப நாளாச்சு. நான் கூட அவளுக்கு எழுதி வச்சிருக்கேன். போடறதுக்குக் கவர் இல்லே" என்றாள். பிறகு திடீரென்று என் முகத்தைக் கவனித்துவிட்டு, தன் பேச்சைப் பாதியில் விட்டு "என்னாச்சு, உடம்பு சரியில்லியா?" என்று கேட்டாள்.

"ஏன், என் உடம்புக்கு என்ன ?" என்றவண்ணம் திரும்பிப் போய்க் கொண்டே "முதல்லே லெட்டரைப்படி, பிறகு மாவு சலிக்கலாம்" என்றேன்.

அவளோ கடிதத்தை என்னிடம் நீட்டி, "இந்தாங்க, இதைக் கொஞ்சம் என் பெட்டியிலே வச்சுடுங்களேன், ராத்திரி படிச்சுக்குவேன், இந்தாங்க சாவி" என்றபடி முந்தானை நுனியில் முடிந்து இடுப்பில் செருகியிருந்த சாவியை நீட்டியபடி, "இன்னும் ஊர்ப்பட்ட வேலை இருக்கு, இன்னும் சமையலே ஆகலே" என்றாள். பிறகு அப்போதுதான் நினைவு வந்தவளாக "நீங்க ஏன் சாப்பிடாமலே போயிட்டீங்க, நானும் இன்னும் சாப்பிடவேயில்ல பாருங்க" என்றாள்.

நான் மிகவும் மென்மையாக, "சாப்பிட்டுட்டேன் பிரபா, பசியில்லே," என்றேன்.

"என்னத்தை சாப்பிட்டுட்டேன் பிரபா_" என்று அவள் பழிப்புக் காட்டினாள். "நீங்க என்ன சாப்பிட்டீங்கன்னு எல்லாம் எனக்குத் தெரியும். முணுக்குன்னா கோபிச்சுக்கிட்டுப் போயிடறமே, இன்னொருத் தியும், சாப்பிடாம இருப்பாளே என்று கொஞ்சம் யோசிச்சுப் பாக்கணும்".

"நீ இன்னும் நெஜமாலுமே சாப்பிடலியா ?" என்று நான் சட்டென்று கேட்டேன். தோல்வியின் தளர்ச்சியும், மனத்தின் சலிப்பும் சட்டென்று உருகிப்போயிற்று, கண்ணில் ஈரம் படர்ந்தது. "உங்களுக் கென்ன, சுத்திட்டு வந்து ஓய்விருந்தா விசாரிப்பீங்க" என்று ஊடல் கொண்டவளாக அவள் மாவைச் சலிக்க ஆரம்பித்தாள். என் மனம் புளங்காங்கிதம் அடைந்தது. நான் பேசாத போதும் இப்படித்தான் பசியும் பட்டினியுமாக இருந்திருப்பாளா என்று என்னென்னவோ எண்ணினேன். தொண்டையைக் கனைத்துக் கொண்டு, "சரி, இப்போ போடு" என்றேன். காலையில் அவளிடம் நான் சொன்ன சொற்களுக்காக மனத்தில் கோபம் மூண்டது.

"இப்போ ஏன் ஆறிப்போயி சாப்பிடறீங்க ?" என்றவள் பரபரப்புடன் "தோ அரை மணி நேரத்திலே சுடச்சுட சமைச்சுடறேன். நீங்க போய் இதைப் பெட்டியிலே வச்சுட்டு வந்துடுங்க... ஆனா பொட்டியைப் போட்டுக் குடைய ஆரம்பிச்சுடாதீங்க," என்றாள்.

நான் மேலே வந்தேன், அறையில் அவள் பெட்டி ஒரு பக்கமாக வைக்கப்பட்டிருந்தது. திறந்து அலட்சியமாகக் கடிதத்தை உள்ளே போட்டேன். திடீரென்று அவள் பெட்டியைக் குடைய வேண்டாம் என்று சொன்னது ஞாபகம் வந்தது. அப்படி என்ன வைத்திருக்கிறாள் பார்ப்போம் என்று மனம் கட்டுக்கடங்காமல் மீறியது. பார்க்க ஆரம் பித்தேன். சில பட்டுப்புடவைகள், சில நூல் புடவைகள், ரவிக்கைகள், சில காகிதங்கள், சில சின்ன சின்ன டப்பாக்கள், டப்பிகள், உள்ளே என்னென்ன இருந்தனவோ தெரியவில்லை. துணிகள் உண்மையிலேயே உயர்ந்தவை. அன்றாட வீட்டு உபயோகத்திற்கு ஏற்றவை அல்ல.

என்னை மிக அதிகமாகக் கவர்ந்தவை அங்கேயிருந்த மூன்று-நான்கு புத்தகங்களே. பழைய 'மாயா' பத்திரிகை இதழ் ஒன்று. புத்தகங்கள் அவளுடைய உறவினர் யாரோ ஒருவர் கொடுத்தது. மாபெரும் பெண் மணிகளின் வாழ்க்கைச் சரித்திரங்கள் பற்றிய நூல் ஒன்று, மகாத்மா காந்திஜியின் சுயசரிதை, இன்றைய இளம்பெண்கள் அறிந்துகொள்ள வேண்டியவை பற்றி ஒன்று, பிரேம்சந்த் எழுதிய ரங்கபூமி நாவல், எல்லாவற்றிலும் அன்பளிப்பு என்று எழுதியிருந்ததுடன் அவளும் தன் கையால் 'பிரபா' என்றும் எழுதியிருந்தாள். 'ரங்கபூமி' நாவலைப் புரட்டும்போது அதில் வைக்கப்பட்டிருந்த காகிதத்தின் முனை கண்ணில் பட்டது. வெளியே உருவிப் பார்த்ததில் ஏதோ கடிதம் என்று தெரிந்தது. கீழே கையெழுத்தைப் பார்த்து திடுக்கிட்டேன். பிரபாவின் கையெழுத்தே காணப்பட்டது. பிரபா எழுதிய கடிதம் இங்கே ஏன் இருக்கிறது? கடிதத்தை முழுவதும் பிரித்தேன், எழுத்துக்கள் அழகாக இருந்தன என்றாலும், கடிதம் அவசரத்தில் எழுதியிருந்தது. ஒரு வருஷத்தில் முதல் தடவையாக நான் என் மனைவியின் கையெழுத்தை, அதுவும் வேறு யாருக்கோ எழுதிய கடிதத்தில் பார்த்தேன். என் மனைவியின் கையெழுத்து எவ்வளவோ நன்றாக இருப்பது குறித்து பெருமையும் பட்டேன். அதே சமயத்தில் கையும், களவுமாக பிடபட்டு விடக்கூடாதே என்று பயமாகவும் இருந்ததால் வேகம் வேகமாகப் படித்தேன்.

அந்தக் கடிதம் வெகுகாலம் என் மனத்தில் ஒலித்துக் கொண்டே யிருந்தது. அதை நான் படித்துப் பார்ப்பதாகவே எனக்குத் தோன்றவில்லை. அதற்கு மாறாக அன்றிரவு இருட்டில் படுத்துக்கொண்டு இதயத்தைத் திறந்து காட்டினாளே, அதேபோல திறந்துகாட்டுவதாகவே தோன்றியது. சில நாட்களுக்குப் பிறகு நான் கடிதத்தில் அவ்வளவையும் படித்ததாகத் தோன்றவேயில்லை. மாறாகக் கடிதத்தில் படித்தது கொஞ்சம், என் மனக் கற்பனை விரித்துக் கொண்டதே அதிகம் என்றே தோன்றியது. கடிதம் பல தவணைகளில் எழுதப்பட்டிருந்தது என்று மட்டும் நினைவு இருந்தது. ஆங்காங்கே கையெழுத்து புதிதாக ஆரம்பித்திருந்தது. எனக்கு வெகுநாள், நினைவிருந்த அந்தக் கடிதம் ஏறத்தாழ இப்படியிருந்தது.

"அன்புள்ள ரமா!

உன் கடிதம் கிடைத்தபோது நான் அம்மா வீட்டில் இருந்தேன். அனேகமாகத் திரும்ப அம்மா வீட்டுக்குப் போகும்போதுதான் அதற்கு பதிலையும் அனுப்புவேன். நான் மிகவும் வேலையாக இருக்கிறேன். என்பதை நீ சாக்கு சொல்வதாக நினைப்பாய். உண்மையில் எனக்கு மூச்சு விடவே நேரமில்லை. இன்று, நாளை என்று எழுதுவதை ஒத்திப் போடுகிறேன். ஆனால் சத்தியமாக நேரமே கிடைப்பதில்லை. காலையி லிருந்து இரவுவரை என் வேலைகளை வேண்டுமானால் விவரிக் கட்டுமா?

உனக்கு என்மீது கோபம் கோபமாக இருக்கும் என்று எனக்குத்

தெரியும். ஸ்கூலில் கோபித்துக்கொண்டு ஸ்கூலுக்குப் பின்னால் மாதுளை மரத்தடியில் முகத்தைத் தூககி வைத்துக்கொண்டு உட்கார்ந்து விடுவாயே, அதுபோல இருப்பாய், நான் தாடையை பிடித்துக் கெஞ்சி சமாதானம் செய்துகொள்ள வருவேனே, அதுபோல வருவேன் என்று நினைப்பாய். ஆனால் என் அன்பான ரமா, என்னால் வரமுடியாது, வரவே முடியாது என்பதை நான் உனக்கு எப்படி எழுதுவேன்? விரும் பினாலும் வரமுடியாது. நீ இங்கே வந்து பள்ளியிலேயே மிகவும் வால், அசாத்திய துணிச்சல் என்று பெயர் வாங்கிய பிரபாவைப் பார்த்தால்- நீ என்னை சர்க்கஸில் வேலை பார்க்க யோசனை சொன்னாய் அல்லவா! நமது கற்பனைகள்தான் எவ்வளவு பொய்யானவை? நாம் என்னென்னவோ கற்பனை செய்கிறோம். நமது ஆசைகளுக்கு அளவே இல்லை. உலகத்தில் சிறந்தவை ஒவ்வொன்றையும் விரும்பும் பள்ளிக்கூடக் கற்பனைகள், மனம் பொங்கும் கனவுகள்...! ரமா அன்று யாராவது இதெல்லாம் பொய் என்று ஏன் நம்மைத் தடுக்கவில்லை? எவளுக்குக் கல்யாணம் ஆனாலும் அவள் கணவனைப்பார்த்து "ஐயே, என் கணவன் இப்படியா இருப்பான்?" என்று நான் நினைத்துக்கொள்வேன். "என் கணவர் எங்காவது புரொபசராகவோ, பெரிய ஆபீசராகவோ, பெரிய கம்பெனி மானேஜராகவோ இருப்பார். நானும், அவரும் மட்டும்தான் இருப்போம். இந்த சளசளவென்ற சந்தடி, மாமியார், மைத்துனர், அண்ணி, அண்ணி குழந்தைகள் என்று யாரும் இருக்க மாட்டார்கள். புத்தம் புதிய பெரிய பங்களாவில் குடியிருப்போம்" என் றெல்லாம் கற்பனை செய்வேன். எங்காவது ஒரு பர்னிச்சர் அழகாக இருந்தால் அதை என் கற்பனை மாளிகையில் வைத்து அழகு பார்த்து விடுவேன். பங்களா முழுவதும் பளபளக்கும். திரைச்சீலைகள், மாளிகையைச் சுற்றி மருதோன்றிச் செடி வரிசைகள், லான்டென்னிஸ் அல்லது பாட்மிண்டன் கோர்ட், நாலைந்து வேலையாட்கள், காலையில் இவர் என்னை அன்போடு எழுப்புவார். காலையில் தாமதமாக எழுந் திருக்கும் பழக்கத்தைச் செல்லமாகக் கடிந்து கொள்வார். டீ அருந்திய வண்ணம் பேசிச் சிரித்துக்கொண்டும், பேப்பர் படித்துக்கொண்டும் நேரமெல்லாம் கழியும். இவர் ஆபீஸ் போனபிறகுதான் நேரம் போகாது. அக்கம் பக்கத்தில் யாராவது தோழியைப் பார்க்கப் போய்விடுவேன். அல்லது கூப்பிட்டுக் கொள்வேன். மாலையில் நானும் அவரும் சினிமாவுக்கோ, யாராவது நண்பர்கள் வீட்டுக்கோ போவோம். இது மாதிரி எத்தனையோ கனவுகளில் ஆழ்ந்திருப்பேன். இன்று அவையாவும் நினைவில் கூட இல்லை.

ஆனால் ஆசைகள் எல்லாம் நிறைவேறிவிடமுடியுமா? நாம் சிரிக்கும் போது விதி முறைக்கிறது. நாம் அழும்போது அது சிரிக்கிறது. மனிதர்கள் எவ்வளவுதான் துள்ளிக்குதித்தாலும், தான்தான் சூத்திரதாரி, ஈவிரக்கமற்ற சூத்திரதாரி என்று அதற்குத் தெரியும். கவிதை நடையில்

சொல்வதானால் சிறுபிள்ளைத்தனமான அந்த கனவுத்தனங்கள் யாவும் உண்மை நிலையின் விஷப்புகையில் மூச்சுமுட்டி மடிந்தன. அவற்றின் மூச்சைத் திணறவைக்கும் புகை பாம்பு போல்சுற்றி வருகின்றது. எனக்கு முன்பெல்லாம் பாம்பென்றால் பயம். இப்போதெல்லாம் பயமும்கூட என்னிடம் வருவதில்லை. பாம்பு கடித்துவிடக்கூடாதா என்றே ஏங்கு கிறேன். புதிய கஷ்டங்கள் வரும்போது இப்போதெல்லாம் பயப்படுவது கூடக் கிடையாது. மரத்துப்போய்விட்டது. என் மனம் உறைந்து கல்லாகி விட்டது என்று தோன்றுகிறது. இல்லாவிட்டால் நான் எப்படி உயிரோடு இருக்க முடியும், விஷம் குடித்தோ, ஆற்றில் குளத்தில் விழுந்தோ செத்திருக்க மாட்டேனா?

என் ஒப்பாரியே வைத்துக் கொண்டிருக்கிறேன், பார்! உனக்கு அறுவையாக இருக்கும் என்றுகூட நினைக்கவில்லை பார்! என்னைப் பற்றி ஏதாவது எழுதினால் இந்தக் கடிதம் உன்னிடம் வந்து சேரவே சேராது என்று எனக்குத் தெரியும். இதற்கு மேல் எழுதமுடியாது. எனவே மேற்கொண்டு கேட்கவும் கேட்காதே என்று கேட்டுக்கொள்கிறேன். உன்னைப் பார்க்கவும், உன்னைக் கட்டிப்பிடித்து அழவும், உன் மடியில் தலைவைத்து உள்ளத்தை திறந்து கொட்டவும் நான் எவ்வளவு விரும்பு கிறேன் என்று நான் உனக்கு எப்படிச் சொல்லுவேன்? கடவுள் எப்போது சந்திக்க வைக்கிறார் என்று பார்ப்போம்.

என்றும் உனக்கே உனக்குரிய<br>பிரபா.'

கடிதத்தைப் படித்துவிட்டேன். அதை எவ்வளவு நேரம் கையில் பிடித்தவாறு நின்றிருந்தேன் என்று தெரியாது. அது பிடி நழுவிக் கீழே விழுந்ததில் திடுக்கிட்டு உணர்வு வரப்பெற்றவனாக அதை எடுத்து வைக்க வேண்டிய இடத்தில் வைத்தேன். பெட்டியை மூடியபோது, யாரையோ உயிரோடு வைத்து மூடுவதுபோல இருந்தது. கண்களில் திரண்ட நீரைத் துடைத்துக் கொண்டேன். பிரபா, என் அருமை பிரபா, எனக்கும் இதே கனவுகள்தான் என்று உனக்குத் தெரியாது. இப்படி யெல்லாம்தான் நானும் கனவு கண்டேன். தனக்கு வரப்போகிற கணவன் பற்றி நீ கனவு கண்டது போல நானும் என் எதிர்காலம் பற்றிக் கனவு காண்பதில் எத்தனை இரவுகளைக் கழித்திருக்கிறேன்! உனது கனவுகள் மூச்சுமுட்டி மடிந்தன வென்றால் என் கனவுகளும் சுக்குநூறாகி விடவில்லையா? ஆனால் நான் யாரை நோவது? நீ ரமாவுக்கு எழுதி, விதியை நொந்து சும்மா இருந்துவிடுவாய், நானும் அப்படியிருந்து விட்டால் என்ன ஆவது, கதை எப்படி நடக்கும்?

என் மீது ஒரு கொலைப்பழி விழுந்திருப்பதாக எனக்குப்பட்டது. ஏதோ பூச்சிபோல ஒன்று என் ஆத்மாவைப் பற்றியிருந்தது. அருகால் படியில் சாய்ந்து தலையைக் கதவுகளில் முட்டிக்கொண்டு வெகுநேரம் நின்றிருந்தேன். சூரியன் இறங்கிக் கொண்டிருந்தது. நகரத்து ஆராவாரம்

அதிகமாகிவிட்டது. வானத்தில் சில பட்டங்கள் வட்டமிட்டன. காகங்கள் வரிசையாக சூரியனை நோக்கிப் பறந்து கொண்டிருந்தன.

அன்றிரவு நான் பிரபாவிடம், "சரி பிரபா, நீ என்ன நெனைக்கிறேன்னு உண்மையா தட்டிக்கழிக்காம சொல்லு, நான் மேலே படிக்கட்டுமா, வேலைக்குப் போகட்டுமா?" என்று கேட்டேன்.

பிரபா நெடுமூச்சுவிட்டு, "நான் நினைக்கிறதெல்லாம் நடக்க முடியுமா? வீட்டு நிலைமையும் பாக்கணுமில்லே! ஆனா என்னைக் கேட்டா நீங்க நல்லாப் படிக்கணும், கொறஞ்சது எம்.ஏ. படிக்கணும்னு தான் சொல்லுவேன்."

"அப்புறம்?" என்று ஆவலுடன் கேட்டேன். கடிதத்தில் எழுதியவற்றையெல்லாம் சொல்லுவாளோ என்று நினைத்தேன்.

"அப்புறம் என்ன, எங்கியாவது காலேஜில புரொபசராகப் போறது, இல்லேன்னா ஏதாவது நல்ல வேலை தேடிக்கிறது."

"ஆனா அது வரையும் வீட்டு நெலமை? எம்.ஏ. பாஸ்பண்ற வரைக்கும் என்னை உயிரோட விட்டுவச்சிருப்பாங்களா?"

"ஆனா இப்பமட்டும் வீட்டு நிலைமையைச் சரிசெய்யற மாதிரி வேலை கெடச்சிடப் போவுதா? ஆனா அப்புறமா என்மேலே பழி போடாதீங்க, உங்களுக்கு இஷ்டமானதைச் செய்யுங்க" என்றாள் பிரபா.

"பழிபோடறதுன்னு இல்லே பிரபா, நல்ல டிகிரி இல்லாம ஒரு ஒழுங்கான வேலை வாங்கறது எவ்வளவு கஷ்டம்னு எனக்குத் தெரியாதா? வேலை பாத்துக்கிட்டே வேற வேலை செஞ்சாவது சரி, நான் எப்படியும் எம்.ஏ. படிச்சுதான் ஆகணும். ஆனா, அதுக்கு நாம கொஞ்சம் கஷ்டப்படத் தயாரா இருக்கணும்."

"இப்ப மட்டும் என்ன மெத்தையிலயா உருண்டு புரள்றோம்?" என்று பட்டென்று சொன்னவள், "இன்னும் கொஞ்சம் பட்டுட்டுப் போறோம்.." என்றாள்.

"நெஜமா சொல்றேன் பிரபா, நான் எல்லாத்தையும் சமாளிச்சுடறேன். நீ மட்டும் எனக்கு அப்பப்ப தெம்பூட்டிக்கிட்டு இருந்தா நான் உலகத்திலே எதையும் சாதிச்சுடுவேன். வாழ்க்கையிலே எனக்கு யாருமே இல்லே பிரபா! நம்பிக்கையே இல்லாம வாழ்க்கையைத் தள்ளிக்கிட்டு வந்திருக்கேன். நீ மட்டும் எனக்குத் தூண்டுகோலாவும் தெம்பாவும் இருந்தீன்னா உன் கனவையெல்லாம் நனவாக்கிக் காட்டுவேன்." உணர்ச்சி வசப்பட்டு என் கண்களில் கண்ணீர் திரண்டது.

"உங்க காலுக்கு விலங்கா இருக்கப்போறதா எனக்கு உத்தேசமே இல்லை, என்னிக்காவது நான் உங்களைப் பின்னுக்கு இழுக்கிறேன்னு தோணுச்சுன்னா ஈவிரக்கமில்லாம, நான்என்ன அழுது மன்றாடினாலும் காதிலே போட்டுக்காம என்னை ஒரு இடைஞ்சல்னு உதறிடுங்க." வெளியே யிருந்து வந்த நிலவொளியில் அவள் கன்னங்களில் கண்ணீர்க் கோடுகள் பளிச்சிட்டன.

நான் சற்று நடைமுறை ரீதியாகப் பேசினேன், "அப்படீன்னா பிரபா, நம்ம முதல் தீர்மானம் என்னன்னா, இந்த வீட்டிலேர்ந்து நாம எதுவும் எதுவும் வாங்கிக்கக் கூடாது. நான் நாளையிலேர்ந்து இன்னும் மும்முரமா வேலை தேடறேன். ஒரு புடவை கேட்டதுக்கு அப்பாவும், அம்மாவும் என்ன பேச்சு பேசினாங்க?"

"ஊம்... விடுங்க, பாவம் அவங்களுந்தான் என்ன செய்வாங்க?" என்று பிரபா அந்தப் பேச்சை வெட்டிவிட்டாள்.

"ஏன், என்ன செய்ய முடியாதுங்கறேன்? அண்ணிக்கு மட்டும் எங்கேயிருந்து வந்து மொளைக்குதாம்?" எனக்குக் கோபம் பொங்கியது. "அவுங்க புருஷன் சம்பாதிச்சுக் குடும்பத்தை நடத்துறார்னுதானே? ஆனா அதை வாய்விட்டுச் சொல்லமாட்டாங்க, அப்புறம் எல்லாப் பையனும் ஒரே மாதிரின்னு ஏன் வாய் கிழியப் பேசறாங்க? சரி, விடு... இனிமே இவங்ககிட்டே கையேந்திக்கிட்டு நிக்கப் போறதில்லே."

"இப்ப மட்டும் என்ன வாங்கிக்கிட்டு இருக்கோம்? கேட்டாலும் கெடைக்கிறதில்லையாம்..."

"நெஜமா சொல்றேன் பிரபா, இன்னிக்கு எனக்கு மனசு ரொம்ப வெறுத்துப் போச்சு, நீ இல்லாட்டி வீட்டுக்கு வந்திருப்பேனான்னே தெரியாது" என்று உணர்ச்சிப் பெருக்கில் சொல்லி அப்படியே அவளை வாரி அணைத்துக் கொண்டேன். மயங்கும் மயிலாகத் துவண்ட அவளது நீல நயன வானத்தில் கிறக்க மேகங்கள் திரண்டன. என் களைப்பும், தளர்ச்சியும் இளஞ்சாரலாக மாறி மலர் தூவின.

# 4

எம்ப்ளாய்மெண்ட் எக்சேஞ்சிற்கு வெளியே சந்தித்தவரைப் பற்றி நான் பிரபாவிடம் சொன்னேன். அவர் பேச்சுக்கள் என் மனதில் எதிரொலித்துக் கொண்டேயிருந்தன. எனக்கு அவர் பேசிய விதமும், தன்னம்பிக்கை நிறைந்த குரலும், அவர் மனத்தில் இருந்த சீற்றமும் மிகவும் பிடித்தன. அவரை அறிமுகப்படுத்திக் கொள்ளாமல் போனோமே என்று வருத்தமாக இருந்தது. என் வேதனைகளுக்கு அவருடைய சொற்கள் மருந்திட்டன என்பதால் எனக்கு அப்படித் தோன்றியதுபோலும். ஆனால் அவரை இவ்வளவு விரைவில் மீண்டும் சந்திப்பேன் என்று நான் நினைத்துப் பார்க்கவில்லை. கண்கள் அவரைத் தேடின என்பது வேறு விஷயம்.

என்னைக் கண்டதும், "வாடா நூறு வயசுப் பிசாசே"! திவாகர் வரவேற்றான், "நினைச்சவுடன் வர்றவனை இங்கிலீஷில் பிசாசுங்கறாங்க.

இந்தியாவிலே நூறு வயசு படைச்சவன் அப்படீங்கறாங்க. உனக்கு எது பிடிச்சிருக்கு?"

வறண்ட புன்னகையுடன் உட்காரும் அறைக்குள் நுழைந்த வண்ணம், "உன்னிஷ்டப்படி வச்சுக்க!" என்றேன். ஆனால் சாய்வு நாற்காலியில் யாரோ வேற்று மனிதர் இருப்பதைப் பார்த்துத் திடுக் கிட்டேன். அவர் தன் பாதி உடம்பைப் பேப்பரை விரித்துப் பார்ப்பதில் மறைத்திருந்தார். நான் கை ஜாடையால் 'இது யார்' என்று கேட்டேன்.

"இதோ பாருங்க, பேப்பர் எங்கியும் போயிடாது. இங்கே பாருங்க, என் சினேகிதனை உங்களுக்கு அறிமுகம் செஞ்சுவைக்கிறன்" என்று திவாகர் அவர் கையிலிருந்து பேப்பரைப் பறித்தவனாக சொன்னான். ஒரு அந்நியன் வந்தும் இப்படிப் பேப்பர் படித்துக் கொண்டு அவர் உட்கார்ந்திருந்தது அநாகரிகம் என்று எனக்குப்பட்டது.

செய்தித்தாள் அகன்றதும் ஒழுங்காக சவரம் செய்த முகம் ஒன்று தெரிந்தது. நான் திடுக்கிட்டு ஏறத்தாழ துள்ளியே குதித்தேன், "அட... நீங்களா?"

அவர் மிகுந்த நிதானத்துடன் பேப்பரை ஒருபக்கம் மடித்து வைத்துவிட்டு, "ஆமாம், நானேதான், திவாகர் உங்களைப் பத்தி நிறைய சொல்லிச் சொல்லி அன்னிக்கு உங்களைப் பாத்ததும் நீங்கதானோன்னு அப்பவே நெனைச்சேன். இவன் அறிமுகப்படுத்தி வைக்கறதுக்கு முன்னாடியே அறிமுகப்படுத்திக்கலாமேன்னு பார்த்தேன். அன்னிக்குக் கண்டோன் மெண்டிலேர்ந்து வந்தபோது உங்களைப் பாத்தவுடனேயே நீங்கதானோன்னு நெனச்சேன்."

"அன்னிக்கு உங்களை அறிமுகப்படுத்திக்கலியேன்னு நெஜமாலுமே ரொம்ப வருத்தப்பட்டேன். எனக்கு உங்க பேச்சைக் கேக்கறதுக்கு..." என்னுள் நன்றிபோன்ற ஏதோ ஒன்று பொங்கியதை அடக்கிக் கொண்டு நான் பேசினேன். மேற்கொண்டு பேசாமல் நிறுத்திவிட்டேன்.

திவாகர் போலியான நிராசையுடன் கையை உதறிக்கொண்டான், "சே! இப்ப என்னத்த அறிமுகம் பண்ணி வைக்கிறது? நீங்க எங்கே சந்திச்சுச் தொலைச்சீங்க? சரி, விடு? இதுதானப்பா சமர், நான் சொன்ன எங்க ஷரீஷ் அண்ணா. இவர் உன்னை எங்கேயோ பாத்ததா சொல்லிக் கிட்டுதான் இருந்தார். நான்தான் இல்லே, அவன் ரெண்டு-மூணு நாளா ஆளே அம்பேல், போலீஸ் வலைவீசித் தேடிக்கிட்டிருக்குன்னு சொன்னேன்."

அவன் கிண்டலைக் கவனிக்காமல் நான் நன்றியுடன், "நீங்கதான், ஷரீஷ் அண்ணா அப்படீன்னு எனக்குத் தெரிஞ்சிருந்தா..." என்று ஆரம் பித்தேன்.

அவர் இடைமறித்து, "தெரிஞ்சிருந்தா நல்லா உதைச்சிருப் பீங்களோ?" என்று அவர் கடகடவென்று சிரித்தார். "சரி, விடுங்க, முதல்லே உட்காருங்க, நான் வந்து ரெண்டு மூணு நாளாச்சு, வந்த திலேர்ந்து உங்களை எதிர்பார்த்துக்கிட்டு இருக்கேன்."

"எனக்கு ஒரு முக்கியமான வேலையாப் போச்சு" என்று மன்னிப்புக் கேட்கும் தோரணையில் நான் சொல்லிவிட்டு, "ஏதாவது வேலையா தேடினீங்களா, இல்லே..." என்று இழுத்தாற்போல கேட்டேன்.

"ஊம், ஒரு வேலையாத்தான்னு வச்சுக்கங்களேன். தங்கையை அழைச்சுக்கிட்டு வந்திருந்தேன்" என்றபடி திவாகரை ஒரு முறை பார்த்தார். அவர் வேட்டி, பனியனில் தோளில் துண்டுடன் காணப் பட்டார். குளிக்கப் போகிறவர் மாதிரி தோன்றியது.

"அம்மாவைப் பார்க்க வந்திருப்பாங்க" என்று பொதுவாக சொல்லி வைத்தேன்.

"இல்லே அதுக்காக இல்லே" என்றவர் சோர்வுடன், "உம், அதுக்கும் தான்னு வச்சுக்குங்களேன்..." என்றார். பிறகு திவாகரிடம் "ஏன் திவாகர் இவருக்கு நீ சொல்லலியா?" என்று கூறிவிட்டு "அதிலே என்ன சமர் தம்பி, என் தங்கைக்கு முன்னாடியெல்லாம் ஹிஸ்டீரியா மாதிரி அடிக்கடி வரும். அப்புறம் அது முத்தி கொஞ்சம் பைத்தியம் மாதிரி ஆயிட்டா, அந்த ஹிஸ்டீரியா ரொம்ப நேரத்துக்கு நீடிக்க ஆரம்பிச்சுட்டுதுன்னு வச்சுக்குங்களேன் ஏதாவது மெண்டல் ஆஸ்பத்திரியிலே சீக்கிரமா சேக்கலான்னா கேஸ் மோசமாயிடும்னு டாக்டர் சொன்னாரு. முந்தாநேத்து அவளை சேத்துட்டு வந்துட்டோம்" என்றார்.

"நீ இருந்தா கையோடு உன்னையும் சேத்திருக்கலாம்" என்று திவாகர் இடைமறித்தான்.

இவ்வளவு பெரிய விஷயத்தில் கேலி பேசுகிறானே என்று எனக்கு எரிச்சலாக இருந்தது. ஆயினும் அதை ஒதுக்கிவிட்டு மேலும் அக்கறை யுடன் அவரை நோக்கி, "ஹிஸ்டீரியா ஏன் வருதாம்? டாக்டருங்க ஏதாவது சொன்னாங்களா?" என்று விசாரித்தேன்.

"டாக்டருங்க சொல்றதுக்கு என்ன இருக்கு?" என்றார் ஷிரீஷ். "இதெல்லாம் நம்ம மனக் கஷ்டங்கள், கவலைகள், இறுக்கங்கள்னால வர்றதுதான். டாக்டர் ஏதாவது சொல்வாரு. உண்மைக் காரணம் நமக்குத்தான் தெரியுமே." சிறிது நேரம் மௌனமாக கைவிரல்களைக் கோத்து நெட்டி முறித்தவண்ணம் இருந்தவர் தானே மேலே தொடர்ந்தார். "யோசிச்சுப்பாத்தா ஒண்ணும் புது விஷயம் கிடையாது. ஆனா அவளுக்குப் புரிய மாட்டேங்குதே என்ன செய்யறது? தப்பு எங்க வீட்டு மனுஷாள் செஞ்சதுதான். அவளுக்குச் சின்ன வயசிலேயே கல்யாணம் பண்ணிட்டாங்க. மாப்பிள்ளை படிச்சு முடிச்சப்புறம் நம்ம மனைவி படிக்காதவ, இவளோட வாழ முடியாதுன்னு திடீர்னு அவருக்குத் தோண ஆரம்பிச்சட்டுது. அப்போதிலேர்ந்து ஒரு வகையிலே தள்ளியே வச்சுட்டாரு. அவ என்கூடதான் இருந்தா. ரொம்ப சொல்லிச் சொல்லி மெட்ரிக் பாஸ் பண்ண வச்சிட்டேன். ஆனா மனசைப் போட்டுக் குழப்பிக்கறதை நிறுத்த மாட்டேங்கறா. இதுமாதிரி ஆகாட்டி இந்த

வருஷம் இன்டர் பாஸ் பண்ணியிருப்பா. ஒனக்கு ஒரு கொறச்சலும் இல்லேன்னு எவ்வளவோ சொல்றேன். ஆனா புரிஞ்சுக்கவே மாட்டேங்கறா! தூக்கத்திலே பினாத்தறா?" சகோதரியின் நினைவில் அவருக்குத் தொண்டை அடைத்தது. அவர் முகத்தை வேறுபக்கம் திருப்பிக் கொண்டு செய்தித்தாளை ஒழுங்குபடுத்தி வைத்தார்."

"ஹூம்..." என்று நான் கவலையுடன் சொன்னேன். எனக்கு அவர் முன்னியைப் பற்றிப் பேசுவதாகத் தோன்றியது. சிறிதுநேரம் கழித்து "அப்ப நீங்க இங்கே அடிக்கடி வரவேண்டியிருக்குமே?" என்றேன்.

"ஆமாம், மாசத்துக்கு ரெண்டு மூணு தடவை வரணும். பெரிய தொல்லைதான்." என்றவர் மிகவும் ஆயாசத்துடன், "ஹிந்து சட்டத்தை மாத்தியோ, இல்லே வேற எப்படியோ நம்ம தலைவர்கள் ஏதாவது சட்டம் கொண்டு வந்தா விவாகரத்து வாங்கி ஒரு கல்யாணத்தைப் பண்ணிடலாம்னு பாக்கறேன். இன்னொரு கல்யாணம் பண்ணாட்டியும் விவாகரத்து வாங்கி சனியனைஅறுத்தாவது போடலாம். ஆனா இவங்களுக்கு ஓட்டுல்ல பெரிசு! வீட்டிலே எல்லோரும் நான் சொல்ற துக்கு எதிர்தான். ஆனா இவ இப்படி மறுகிச் சாகறதைக் கண்கொண்டு பாக்க முடியலே."

தங்கை, மறுகிச் சாவதைப் பார்க்க முடியாதுதான். ஆனால் அதற்கு மாற்று, விவாகரத்து என்பதை என்னால் ஏற்றுக்கொள்ள முடிய வில்லை. "நீங்க விவகாரத்து, பெண்ணுக்கும் சொத்தில் சம உரிமை இதையெல்லாம் ஆதரிக்கிறீங்களா?"

மிகவும் தீர்மானமாகவும் உறுதியாகவும் "முழுக்க முழுக்க" என்றார் அவர்.

"இதனால் நம்ம சமுதாய அமைப்பே கலகலத்துப் போயிடுமே" என்று நான் கவலையுடன் கேட்டேன்.

"எந்த சமுதாயம்? நம்ம சமுதாயம்னு நீங்க எதைச் சொல்றீங்க?" என்று அவர் கேட்டார்.

"நம்ம ஹிந்து சமுதாயந்தான்" என்று நான் துணிவை வரவழைத்துக் கொண்டு சொன்னேன். "எங்க பாத்தாலும் குழப்பமாயிடும். திருமணம் மாதிரியான புனிதமான விஷயத்தை எல்லாரும் பொழுதுபோக்கு சாதனமாக எடுத்துப்பாங்க. ரெண்டு நாளைக்கு முன்னாடி கல்யாணம், மூணாம் நாளு விவாகரத்துன்னு ஆயிடும், வெறும் பொம்மைக் கல்யாணம் மாதிரி ஆயிடும். சொத்திலே பங்கு கேட்டு அண்ணனும் தங்கையுமோ அல்லது மாப்பிள்ளையும் மச்சானுமோ அடிச்சுப்பாங்க. அப்புறம் தங்கை பாசம் எப்படி வாழும்?"

"பாசமா? எந்தப்பாசம்?" இந்த முறை அவர் கேட்டதில் இவர் வேண்டுமென்றே கேட்கிறார், நான் சொல்ல வருவதைப் புரிந்துகொண்டு பதில் சொல்வதற்காகவே கேட்கிறார் என்று புரிந்துகொண்டேன்.

"நீங்க உங்க தங்கையை குணப்படுத்தறதுக்காக இவ்வளவு சிரமம்

எடுத்துக்கறீங்களே இந்தப் பாசம்தான். ஒருவாரம், பத்து நாளைக்கு ஒரு தடவை ஓடியாரப்போறீங்களே அந்தப் பாசம்தான்" என்று வேகத்துடன் சொன்னேன். "ஏன்னா, இப்ப உங்க மனசிலே தங்கை மேல் இரக்கம் இருக்கு. இது ஒண்ணும் சட்ட நிர்ப்பந்தமோ, சாஸ்திரக் கட்டளையோ கிடையாது. உங்க மனமே கிடந்து அடிச்சுக்குது, துடிக்குது. நாளைக்கு இதே தங்கை உங்ககிட்டே சமமாக பாகம் கேட்டா உங்க மனசிலே இந்தப் பாசமும் பரிவும் இருக்குமா? அப்போ நீங்க விரும்பாமலேயே உங்க மனசிலே ஒரு பகைமை வரும்."

"ஐயா மன்னிக்கணும்," இவ்வளவு நேரம் கேட்டுக்கொண்டிருந்தவர் சற்று தீவிரமாகப் பேச ஆரம்பித்தார். "நீங்க எல்லாத்தையும் எந்தக் கண்ணோட்டத்திலே பாக்கறீங்கன்னு தெரியலே. ஆனா அப்படிப் பாத்தாலும் அப்படியொரு காலம் வந்தா நல்லாதான் இருக்கும்னு தோணுது. இப்ப நீங்க உங்க தங்கை மேல பாசமும் பரிவும் காட்டறீங்க. இது ஒண்ணும் சட்ட நிர்ப்பந்தமோ, சமுதாய நிர்ப்பந்தமோ கிடையாது. கொஞ்சம் வெக்கத்தை உதறிட்டு நீங்க பரிவு காட்ட மறுத்திட்டீங்கன்னா, பாவம், அவளால ஒண்ணும் செய்ய முடியாது. அழுவா, ரெண்டுபேர் கிட்ட சொல்லிப்பாப்பா. அப்புறம் தன் தலைவிதியை நொந்துகிட்டு சும்மா கிடப்பா. ஆனா உங்க இஷ்டப்படிதான் வாழணும்னு அவளுக்குக் கட்டாயம் ஒண்ணும் இல்லியே! நீங்க சொன்னவரைக் காதலிச்சு, நீங்க சொன்னவரை வெறுக்க வேண்டாமே! அவ ஒண்ணும் நீங்க பாத்துப் போடற பிச்சையிலே வாழ வேண்டியிருக்காதே! ரெண்டு அண்ணன்—தம்பி சொத்து பிரிச்சுக்கும்போது மட்டும் சண்டை வர்றதில்லையா? ரெண்டு தம்பிக்குப் பங்கு தரணுங்கறது சட்டமா இல்லேன்னா நீங்க விரும்பினா கொடுப்பீங்க, விரும்பாம போனா அவனைப் பிச்சைக் காரனாத் தெருவில விட்டுருவீங்க இல்லையா?"

இந்த வாதத்திற்கு முன் நான் திகைத்துப்போனேன். இப்படிப் பல கோணங்களில் இதை இதற்கு முன் நான் பார்க்கவேயில்லை. ஆயினும் விடாப்பிடியாக, "எப்படியிருந்தாலும் இதுமாதிரி சட்டம் வந்தா குழப்பங்கள் வரும்னு ஒத்துக்கத்தானே வேணும். சமுதாயத்தைக் கட்டிக் காக்கறதுக்காக நம்ம முன்னோர்கள் யோசிச்சு வகுத்த சட்டங்கள் எல்லாம் சிதறிப்போயிடும் இல்லே" என்றேன்.

"போனா?" என்று அவர் அமைதியாகக் கேட்டார், "போனா என்ன ஆயிடுங்கறீங்க?"

அவருடைய சின்னச்சின்ன அமைதியான கேள்விகளைக் கண்டு நான் மிரண்டேன். எங்காவது கன்னாபின்னாவென்று பதில் சொல்லி விடப்போகிறேனே என்று மிக ஜாக்கிரதையாக. "இதனால் பரம்பரை பரம்பரையாக வந்துக்கிட்டு இருக்கிற கற்புக்கரசிகளையும் உலகமே கண்டு வியக்கிற மாது சிரோன்மணிகளையும் நாம இழந்துடுவோம். திருமணங்கறது சொத்து சுகத்துக்காகவோ, காம சுகத்துக்காகவோ செஞ்சுக்கறதுன்னு ஆயிடும்" என்றேன்.

"மன்னிக்கணும் சமர் தம்பி!" என்று அவர் மீண்டும் அதே குரலில் சொன்னார். "திவாகர் நீங்க ரொம்ப சிந்தனையாளர்னு சொன்னான். ஆனா சிந்திக்கறது ரெண்டு வகையா இருக்கு. ஒண்ணு, எந்த ஒண்ணையும் தர்க்கரீதியாகவும் அறிவுபூர்வமாகவும் பரிசீலிக்கிறது. இன்னொண்ணு வெறும் உணர்ச்சி வேகத்திலே தடுமாற்றது. தப்பா எடுத்துக்காதீங்க, எனக்கு என்னமோ நீங்க ரெண்டாவது ரகம்னு தோணுது." அவர் இரண்டு விரல்களால் செய்தித்தாளை எடுத்து, "நீங்க என்னமோ, சமுதாய ஒழுங்கு கலகலத்துடும் அப்படீங்கறீங்க. கொஞ்சம் கண்ணைத் திறந்து பேப்பரைப் பாருங்க. இதிலே என்ன ஒழுங்கும் அழகும் இருக்குங்கறீங்க? இது இன்னைய பேப்பர். லக்னோ ஜில்லாவிலே மட்டும் கௌரவமான குடும்பத்தைச் சேர்ந்த ஐயாயிரம்பேர் விவகாரத் துக்கு விண்ணப்பிச்சிருக்காங்க. இவங்க எல்லோரும் ஒட்டு மொத்தமா நவநாகரிகப் பித்துபிடிச்சவங்களா, அல்லது உங்க அபிப்ராயப்படி காமவெறி பிடிச்சவங்களா? ரெண்டுபேரு தீக்கிரையாயிருக்காங்க. நாலு பேரு கிணத்திலே விழுந்து செத்திருக்காங்க. எட்டுப்பேரு ஓடிப் போயிருக்காங்க அல்லது டி.பி.யிலே செத்திருக்காங்க. இதெல்லாம் நமக்கு சாதாரணமா போயிட்டுது. ஒண்ணுமில்லேன்னு ஒதுக் கிட்டுப் போற அளவு சாதாரணமா ஆயிட்டது. நம்மை மனசைத் தொடறதே இல்ல. எந்தச் சமுதாய ஒழுங்கை நீங்க சொல்றீங்கன்னு எனக்குந்தான் கொஞ்சம் சொல்லுங்களேன். எனக்கு உங்க வீட்டைப் பத்தித் தெரியாது. ஆனா பொண்ணு முடக்கப்பட்டு அவஸ்தைப்படாத ஒரே ஒரு வீட்டைக் காட்டுங்க, பாப்போம். படிச்ச துணிச்சலான பொண்ணுங் களைப்பத்தி நான் பேசல்லே. அங்கேயும் பிரச்சினைகள் இருக்கு. ஆனா அது வேற மாதிரி..."

அவர் பேசப்பேச என் மனத்தில் முன்னியும், பிரபாவும் நிழலாடி னார்கள். அவர் பேசுவது அனைத்தும் அவர்களைக் குறித்தே, எனக்காகவே என்று தோன்றியது.

"நிர்ப்பந்தத்தில் மறுகி மறுகி, ஒடுங்கி ஒடுங்கி வாழறதை இந்தியப் பெண்களோட பொறுமைன்னு போற்றாதீங்க. நம்முடைய ஆயிரக் கணக்கான வருஷங்கள் வாழ்ந்த கோடிக்கணக்கானவர்கள்லே நீங்க காட்டற உதாரணம் ரெண்டே ரெண்டுதான்—'ஒண்ணு சீதை. இன்னொண்ணு சாவித்திரி' சீதையைப் பத்திப்பேசும்போது நாம வெட்கித் தலைகுனிய வேண்டாம்? ஒரு அப்பாவிப் பெண் மேல எவ்வளவு பெரிய களங்கம் கற்பிச்சு, எவ்வளவு மனிதத் தன்மையில்லாம கொடுமை நடந்திருக்க, அதை நாம கோவில் கட்டிக் கும்புடறோம், இல்லே?"

அவருடைய இந்தப் பேச்சினால் எனக்கு முகம் சிவந்துவிட்டது. அவர் என்னைப் பலர் முன்னிலையிலும் அவமதித்துவிட்டதுபோல இருந்தது. "நம்மோட ரிஷிகளும், முனிவர்களும் ஏற்படுத்திய ஒழுங்கு முறைகள் எல்லாம் வீண் அப்படீங்கறது உங்க அபிப்ராயமா?"

"அதையெல்லாம் கண்காட்சியிலேயும், மியூசியத்திலேயும் வைக்கப்போறீங்கன்னா அதுக்கு அழகான கண்ணாடி பீரோ வேணும்னு சொல்லுவேன். இன்றைய சமுதாயச் சட்டங்களைத் திணிக்கப் போறீங் கன்னா அதை அடுப்பிலே வச்சு எரிச்சு டீ போட்டுக்குடிங்க, விட்டது சனியன்னு சந்தோஷமா இருங்கன்னு சொல்லுவேன்" என் ஆவேசத்தை ரசித்து அனுபவித்தபடி அவர் சிகரெட்டை எடுத்துக்கொண்டு தீப்பெட்டியைத் தேடினார்.

அவர் எனக்காக நீட்டிய சிகரெட்டை மறுத்தபடி நான் அவர் முகத்தைக் கவனித்துப் பார்த்தேன். இவர் தங்கையைப்போல இவருக்கும் மூளை குழம்பிவிடவில்லையே! அவர் நெருப்புக்குச்சியை சிகரெட் புகை வர ஊதி அணைத்தார். அவர் தலையை சுவற்றில் மோதினால் அதிலிருந்து வரும் புகை எப்படி இருக்கும் என்று யோசித்தேன். வலுக் கட்டாயமாக என்னை நானே கட்டுப்படுத்திக்கொண்டு, "நீங்க உங்க ஹிந்து தர்மத்தை உலகத்திலேயே உயர்ந்த மதமா நெனைக்கலியா?" என்று கேட்டேன்.

அவர் மீண்டும் உதட்டைப் பிதுக்கி, "உலகம் ரொம்ப முன் னேறிட்டுது, நீங்க ரொம்ப பின் தங்கிப் போயிட்டீங்கன்னு தோணுது. சமர் தம்பி, இந்த ஆர்.எஸ்.எஸ். பாஷை அரபிக் கடலைத் தாண்டி ஒருத்தருக்கும் தெரியாது. உலகம் அணுகுண்டு, ஹைட்ரஜன் குண்டு தயாரிச்சுக்கிட்டு இருக்கு. நீங்க என்னன்னா உங்க சாணிக் கலாச் சாரத்தைக் கட்டிக்கிட்டு மாரடிக்கிறீங்க. இதுமாதிரி பெருமையடிச்சுக்கற துக்கு முன்னாடி மற்ற கலாச்சாரங்களையும், நாகரிகத்தையும் புரிஞ்சுக்க எப்பவாவது முயற்சி பண்ணுவீங்களா? பழைய இடிபாடுகளும், வேதாந்த புஸ்தகங்களும், ரோமிலேயும், எகிப்திலும்கூட ஒண்ணும் கம்மியில்லே. சீன நாகரீகம் உலகத்துக்குக் கொடுத்ததிலே பாதிகூட வேறயாரும் கொடுத்ததில்லே. கிறிஸ்தவர்களை நீங்க வேணும்னா திட்டலாம். மதம் மாத்தறாங்கன்னு வையலாம். ஆனா அவங்கதானே எதுவுமே தெரியாத மக்களிடையேபோய் எவ்வளவோ கஷ்டங்கள்பட்டுப் பள்ளிக்கூடம் திறந்து, ஆஸ்பத்திரிகட்டி, தங்களோட வாழ்க்கையையே தங்களோட மதத்துக்காக அர்ப்பணிக்கிறாங்க? நீங்க என்ன பண்றீங்க? உலக நன்மை, உலக நன்மைன்னு வாயால சொல்லிக்கிட்டு, கொஞ்சம் ஆவேசம் அதிகமாச்சுன்னா இமயமலைக்கு ஓடிடறீங்க. பணக்காரனா இருந்தா சாமியார்களை சோறுபோட்டு வளர்க்க தர்மம் எழுதி வைக்கிறான். ஏழையா இருந்தா மொட்டை அடிச்சுக்கிட்டு சாமியாராகி மூக்குப் பிடிக்கத் திங்கறான்."

"நீங்க ஒரு பக்கத்தையே பாக்கறீங்க" என்றேன் நான்.

"அது ஒரு பக்கமா, ரெண்டு பக்கமா அப்படீன்னெல்லாம் எனக்குத் தெரியாது. நமக்கு முன்னோடியா இருக்கறது, நம்மை பலி வாங்கிக்கிட்டு இருக்கறதை நான் பாக்கறேன். உங்க நாட்டிலே பாலும், தேனும் ஆறாய் ஓடிச்சு, பால் மாரி பெஞ்சுது. ஆனா இன்னிக்கு

உலகத்திலேயே காட்டு மிராண்டி நாடு உங்களுதுதான். உங்க மதம்தான் எல்லாத்தைவிட விஞ்ஞானப் பூர்வமில்லாத மதம். மனிதனின் அறிவு வளர்ச்சியை மறந்துட்டு, நடைமுறை சாத்தியமில்லாததையெல்லாம் வாழ்க்கையோட லட்சியமாக் காட்டற மதம், உலகத்திலே இருக்கிற ஞான, விஞ்ஞான விஷயங்கள் எல்லாத்தயும் தன்னோட வேதங்களில பூந்து தேடற மதம், உண்மையாவே ரொம்ப பரிதாபப்படவேண்டிய மதம். நீங்க சொல்றதைக் கேக்கறப்ப லக்னோவில் இன்னிக்கு ரிக்ஷா இழுக்கற நவாப் பரம்பரை ஆளுங்க ஞாபகம்தான் வருது." என்றவர் தன் பேச்சுக் குறித்துத் தானே உரக்கச் சிரித்தார்.

நான் மிகவும் பிரயாசைப்பட்டு, "இந்த வெளி விஷயங்களை நாம் என்னிக்கும் முக்கிய விஷயமா நெனச்சதில்லே, அதனாலதான் நாம இன்னொரு நாட்டுமேலே படையெடுத்துப் போனதுமில்லே, மதத்தைப் பரப்பறதுக்காகப் புனிதப்போர் என்கிற பெயரிலே சண்டையும் போட்டதில்லே. நம்ம குறிக்கோள் எப்பவும் ஆன்ம சாந்தியும் முன்னேற்றமுந்தான்" என்றேன்.

இம்முறை அவர் சிகரெட் பிடிப்பதைப் பாதியில் நிறுத்தி 'ஹஹ்ஹா' என்று சிரித்தார். "வக்கத்துப்போனதை மறைக்க அருமையான வாய்ஜாலம். இதைத்தான் ஏழ்மையை ஆராதிக்கறதுன்னு மத்தவங்க சொல்றாங்க. வெளியிலே போய் தாக்குதல் நடத்தாததுக்குக் காரணம் ஆன்மீகமும் இல்லே, மண்ணும் இல்லே. உங்கிட்டே வலிமை கெடயாது. அவ்வளவுதான், இல்லாதபோனா, தங்களுக்குள்ளே சண்டை போட்டுக் கறதிலேயும், ஒருத்தன் ராஜ்யத்தை இன்னொருத்தன் அபகரிச்சுகிற திலேயும் நீங்க ஒண்ணும் சளைச்சவங்க இல்லியே! வல்லமை படைச்ச அசோகனும், கனிஷ்கனும் வெளிநாட்டுக்காரங்க மேலே பெரிய தயவு காட்டினாங்கன்னும் கிடையாதே!" என்றவர் பாதியில் அதைவிட்டு, "பழைய சரித்திரமும் வேண்டாம், கற்பனைகளும் வேண்டாம். நான் நேரே ஒரு கேள்வி கேக்கறேன். இன்னிக்கு நீங்க உங்க நாட்டிலே எவனை வேணும்னாலும் புடிச்சி 'உனக்கு எவ்வளவு ஆன்மசாந்தி கிடைச்சிருக்கு'ன்னு கேட்டுப்பாருங்க. இந்த ஆன்ம சாந்தி, கீன்மசாந்தி யெல்லாம், கோவில் குளம்னு தானம் செய்றவங்ககிட்டேயும், கோவில் பிரசாதத்தை ஒருபிடி பிடிக்கிற பண்டாரங்கள் கிட்டேயும்தான் இருக்கு."

கத்திக்கிழிக்கிற இவர் பேச்சை நறுக்கென்று நிறுத்தும் வண்ணம் என்ன கேள்வி கேட்கலாம் என்று என் மனம் பரபரத்தது. திடுதிப்பென்று "இந்த உலகம் எப்படி தோன்றுச்சு?" என்று கேட்டேன்.

அவர் உரக்கச் சிரித்தார். "நீங்க பழங்கால ரிஷிகள் மாதிரி வாக்குவாதம் பண்ண ஆரம்பிச்சுட்டீங்களே! உலகம் உண்டானதுதான் ரொம்ப சின்ன விஷயமாச்சே, பிரம்மா என்னடா தனியா இருக்கோமே, பொழுதே போகலியேன்னு 'நான் நிறைய மனுஷனா ஆயிடு வேனாக'ன்னாரு! அவர் தன் குணங்களை விரிச்சுக்கிட்டாரு, அதுதான்

'ப்ரக்ருதி' (இயற்கை) அப்படீங்கற தத்துவம். இல்லேன்னா அல்லா 'குன்'[1] அப்படீன்னாரு. உலகம் உண்டாயிடுச்சி. இதிலே என்ன பிரச்சினை?" பிறகு ஃப கால் புகை விட்டவண்ணம் சிகரெட்டைத் திறந்த கதவு வழியா ൭ தூக்கியெறிந்தார். சிரித்துக் கொண்டே "சமர்ஜி! இன்று உலகதந்ன் தோற்றத்தைப்பத்தி விஞ்ஞானிகள் சொல்றதே இறுதியான உண்மைன்னு நான் சொல்லலே. ஆனா இந்த கட்டுக்கதையெல்லாத் தையும்விட அது உண்மைன்னு தோணலே? அறிவுக்கு எல்லையே இல்லே. இன்னும் யோசிச்சுக் கண்டு பிடிப்போம்." பிறகு எழுந்து சோம்பல் முறித்து, "நாமும் சரியான ஆளுங்கதான், சந்திச்ச கையோட உலகத்தோட இறந்தகாலம், எதிர்காலம் எல்லாத்தையும் பத்திக் கவலைப் பட ஆரம்பிச்சுட்டோம் பாத்தீங்களா? முதல்லே பாத்ததையும், இப்ப பாத்ததையும் வச்சுகிட்டு இவன் பெரிய வாயாடின்னு நீங்க நினைச் சுக்கலியே!" என்று கேட்டார்.

"இல்லையில்லை, உங்ககிட்டேயிருந்து யோசிக்கவும், சிந்திக்கவும் நெறயா கெடச்சிருக்கு" என்று வெட்கத்துடன் சொன்னேன்.

"அப்ப நீங்க ஒண்ணும் சரியான ஹிந்து கிடையாது. சரியான ஹிந்துன்னா யோசிக்கறதே கிடையாது. ஆன்மீக ஞானமாகட்டும், லஞ்சமாகட்டும், கறுப்புப் பணமாகட்டும் அவன் சுருட்ட மட்டும் தான் பார்ப்பான். போகட்டும், நான் பேசினதும் ஏதாவது உங்களைத் துன்புறுத்தியிருந்தா மன்னிச்சுக்குங்க. விவாதம் செய்ய ஆரம்பிச்சா எனக்கு ஒண்ணும் நினைவிலேயே இருக்கறதில்லே. எனக்கு சரின்னு பட்டதை சொல்லிடுவேன்."

"அப்படித்தானே இருக்கணும்" என்று நான் "நான் உங்ககிட்டே பல விஷயங்கள் குறித்து பேசணும்" என்றும் கூறினேன்.

"கட்டாயம், கட்டாயம், இனிமே நாம அடிக்கடி சந்திப்போம்" என்று ஷரீஷ் சொன்னார். "கொஞ்சம் உங்ககிட்டேயிருந்து நான் கத்துக்குவேன். சிலதை நீங்க மறுபரிசீலனை செய்ய விரும்புவீங்க."

"என்கிட்டேயிருந்து கத்துக்க என்ன இருக்கு?" என்று நான் வெட்கப்பட்டேன். தலையைக் குனிந்துகொண்டு, "நான்தான் நிறைய தெரிஞ்சுக்கிட்டேன். பல விஷயம் புதுசா இருந்தது" என்றேன்.

"இல்லையில்லை, நான் எதையும் முழுமையா நெனைக்கிறதில்லே. எந்த ஒண்ணும் வளர்ச்சி அடையுது. அதனாலே எல்லாம் தெரிஞ்சவன் ஒருத்தனும் கிடையாது. அறியும் ஆர்வமுள்ளவனே, அறிவாளிங்கறதுதான் என் அபிப்ராயம். சிறிது ஆர்வம் இருக்கறவரைதான் அவன் அறிவாளி. அதுக்கப்புறம் அவனுக்கும் லைப்ரரி புஸ்தகத்துக்கும் வித்தியாசம்

---

1. 'குன்' என்பது அரபி மொழிச் சொல். இதன் பொருள் 'ஆகு' என்பதாகும். இறைவன் உலகத்தை 'குன்' என்னும் ஒரு சொல்லால் படைத்தான் என்று முஸ்லீம்கள் நம்புகிறார்கள்.

கெடயாது. உங்களுக்கும், திவாகருக்கும் பரிட்சை முடிஞ்சிட்டுதுல்லே. மேலே என்ன செய்யறதா உத்தேசம்," என்று அவர் அண்ணனுக்குரிய வாஞ்சையுடன் கேட்டார்.

"அதுதான் பிரச்சினை- என்ன செய்யறதுன்னு புரியலே-" புதியவர் முன்பு என் கஷ்டங்களைச் சொல்வது எனக்கு எப்போதுமே பிடிப்பதில்லை.

"முடிஞ்சா மேலே படிங்க. நீங்க நல்லா முன்னுக்கு வருவீங்க" என்றார்.

இப்போது நான் கேள்வி கேட்டேன்- "நீங்க என்ன செஞ்சுக்கிட்டு இருக்கீங்க?"

ஒருமுறை திவாகரைப் பார்த்துவிட்டு, "நான் மாண்புமிகு இந்திய அரசாங்கத்தில் நூத்தைம்பது ரூபாய் சம்பளம் வாங்கற சாதாரண கிளார்க். லீவே கிடைகிறதில்லே. சனிக்கிழமை வந்து ஞாயிற்றுக்கிழமை போயிடலாம்னு இருக்கேன்" என்றவர் நான் எழுவதைப் பார்த்துவிட்டு "அடுத்த தடவை வரும்போது கட்டாயம் சந்திக்கிறேன். இன்னிக்கு நான் சாயந்தரம் கிளம்பியாகணும்" என்றார்.

"உங்களைப் பாத்ததிலே உண்மையிலேயே ரொம்ப சந்தோஷம்." என்னைவிட அதிகம் தெரிந்தவர் இவ்வளவு பரிவுடன் பேசியது அதுவே முதல் தடவை. நான் மனம் நெகிழ்ந்தேன்.

என் பேச்சைக்கேட்டு அவர் முகத்தில் அன்பு பொங்கியது. அவரிடம் கைபற்றி விடை பெற்றுக்கொண்டு வெளியேறினேன். திவாகர் இதுவரை என்னையும், அவரையும் ஏதோ பயில்வான்கள் இருவரைப் பார்ப்பதுபோல மாறிமாறிப் பார்த்துக் கொண்டிருந்தான். அவனுடைய ஒவ்வொரு பார்வையும் "பார்த்தாயா எங்கள் அண்ணனை?" என்று சொல்வதுபோல இருந்தது. நான் "கொஞ்சம் வெளியில் வாயேன், ஒரு முக்கியமான விஷயம்" என்றேன்.

அவன் கீழே இறங்கி வந்தான். தெருவுக்கு வந்தவுடன், "திவாகர், எனக்கு ஒரு வேலை வாங்கித்தாயேன். ரொம்பக் கஷ்டமா இருக்குப்பா, இல்லேன்னா படிப்பு கிடிப்பு எல்லாத்தையும் மூட்டைகட்டி வச்சிட்டு, வாழ்க்கை பூராவும் எங்கேயாவது கணக்குப்பிள்ளையா இருக்க வேண்டியது தான். ஏதாவது வேலை கெடச்சுதுன்னா இன்னும் கொஞ்சம் நாள் உன்னோட படிப்பேன்" என்றேன்.

என் குரலில் இருந்த கெஞ்சலினாலோ, வேறு எதனாலோ, அவன் உடனே, "அட ஏன் முதலிலேயே சொல்லலே, நான் இன்னிக்கே அப்பா கிட்டே சொல்றேன். இன்னும் இரண்டு எடத்திலேயும் சொல்லி வைக்கிறேன்" என்றான்.

"ஆமாம்ப்பா, கொஞ்சம் கவனி, கொஞ்சம் படிக்கவும் நேரம் கிடைக்கிற மாதிரி வேலை பாருப்பா, கொஞ்சம் சீரியஸா பாரு-" என்று நான் கெஞ்சும் குரலில் சொன்னேன்.

அவனிடம் விடை பெற்றுக் கொண்டு திரும்பியபோது மனம் பாற்கடல் மாதிரி கடையப்பட்டுக் கொண்டிருந்தது. ஷிரீஷின் பதில்களைவிட, எந்த ஒன்றுக்கும் அவரிடம் உடனடி பதில் இருந்ததுதான் என்னை நிலைகுலைய வைத்தது. உண்மையிலேயே இன்று பல விஷயங்களை நான் அறிந்து கொண்டேன்.

# 5

பின்னாலிருந்து வரும் எந்த சத்தமும் காதில் விழாபடி நான் காதுகளைப் பொத்திக் கொண்டு வெளியே வந்தேன்.

மாலை நேரம் ஆகிவிட்டது. பசு எருமைகளின் கூட்டம், பாதையில் ரிக்ஷாக்களை ஓரம் கட்டிவிட்டு, புழுதியை எழுப்பிக் கொண்டும், சாணி போட்டுக்கொண்டும் சென்று கொண்டிருந்தது. கோவிலுக்கோ, சங்கத்திற்கோ போக இப்போதெல்லாம் தோன்றுவதில்லை. நான் அவற்றிலிருந்து வெகு தூரம் விலகி வந்துவிட்டேன் போலிருந்தது. அல்லது அவற்றுடன் தொடர்பு கொண்டிருந்த ஆளே வேறு, நானல்ல என்று தோன்றியது. எல்லாம் இப்போது வீணாகவும், நேரத்தைப் பாழடிப்பதாகவும் தோன்றின. இன்றைய காலகட்டத்தில் ஜனங்கள் இவ்வளவு நேரத்தை எப்படி வீணடிக்கிறார்கள் என்றும் தோன்றியது.

என்னுடைய வழக்கமான பூங்காவில் வந்து பேசாமல் படுத்து விட்டேன். கல்யாணத்திற்கு முன் இங்கே வந்துதானே படுத்திருப்பேன்! மாலை மயங்க இன்னும் நிறைய நேரம் இருந்தது. ஜனங்கள் பூங்காவின் சிறு பாதைகளிலும், ஒற்றையடிப்பாதைகளிலும் உலாவிக் கொண் டிருந்தனர். அவர்கள் உலாவுவதையும், சிரிப்பதையும் பார்க்கும்போது, இவர்களுக்குக் கவலையே கிடையாது என்று தோன்றியது. ஆயாக்கள் கலகலவென்றிருந்த குழந்தைகளைத் தள்ளுவண்டிகளில் வைத்துத் தள்ளியவண்ணம் போய்க்கொண்டிருநதனர். சமீபத்தில் இளஞ்ஜோடிகள் சரசமாக பேசிச் சிரித்துக்கொண்டு போவதைப் பார்க்கும்போது, "பாவிகளா, சாப்பாட்டுக் கவலையே இல்லாமல் சுற்றக் கிளம்பி விட்டீர்களா? அப்பன் சம்பாதித்து வைத்திருப்பான். வீட்டில் தகராறாகத் தான் இருக்கும். ஆனாலும் பார், சினிமாவுக்குப் போவது போலக் கிளம்பிவிட்டார்கள். தடியன்களா! உங்களுக்கெல்லாம் வேலையே கிடையாது..." என்று பல்லைக் கடித்தேன். இந்தக் குமைச்சலைக் கண்டு எனக்கு என்மீதே கோபமும் வந்தது. சிரிப்பும் வந்தது. எனக்கு என்ன ஆகிவிட்டது? என்னால் பிறரின் சந்தோஷங்களைக் காணக்கூட முடியாமல் போய்விட்டதே. நான் அபின் சாப்பிட்டவன்போல

செயலற்றுப் படுத்துக்கிடந்தேன். நோயுற்றுக் கிடப்பவன் போலவும், எழ முடியாது இருப்பது போலவும் தோன்றியது. பாதி திறந்த கண்களால் நாலா பக்கங்களிலும் பார்த்துக் கொண்டிருந்தேன். அதோ பையன்கள் கிரிக்கெட் விளையாடுகிறார்கள்- இரண்டு பையன்கள் சைக்கிளில் டபிள்ஸ் போகிறார்கள்- அந்த ஆள் முன்னும் பின்னும் ஆடிக்கொண்டே படிக்கிறான்- அதோ அங்கே நான்கு பெண்கள், தலைப்பின்னல் ஆட ஆட உலாவிக் கொண்டிருக்கிறார்கள். அதோ அந்தப் பையன் நாய்க் குட்டியைத் துரத்திக்கொண்டு ஓடுகிறான். ஹூக்கும், இதோ இன்னொரு ஜோடி! ஏதோ வேறு உலகத்தில் சஞ்சரித்துக்கொண்டு இருந்தேன். வீட்டிலிருந்து வரும் சத்தம் இதுவரை துரத்திக்கொண்டு வருவதாகத் தோன்றியது. சே, வீடா அது? புழுக்கள் நெளியும் நரகம் அது, நரகம்!

தட்டில் உணவு பரிமாறி அவன் பக்கம் பிரபா நகர்த்தியவுடனேயே, 'ரொட்டியிலே இன்னிக்கும் நெய் தடவலியா அண்ணி?' என்று அவன் கேட்டான். ரொட்டியைப் பார்த்து அவன் முகம் கோணியது.

"நெய் தீர்ந்து போச்சு தம்பி" என்று பிரபா மென்மையாகச் சொன்னாள்.

"இப்பதானே நேத்து முந்தாநாள் ஒரு சேர் வாங்கிகிட்டு வந்தேன். அதுக்குள்ளே தீந்து போச்சா?" என்று அமர் சத்தம் போட்டான்.

பிரபா வேலையில் ஆழ்ந்தவளாக, அதைக் கவனியாமல், "எவ்வளவு இருந்தது? நீதான் பாக்கறியே, வீட்டிலே செலவாவுதில்லே?" என்றாள்.

அமருக்கு அவள் தன்னை உதாசீனப்படுத்துவதாகத் தோன்றியிருக்க வேண்டும். அவன் முரட்டுத்தனமாக, "எல்லாத்தையும் உங்க வீட்டுக் காரருக்கு வழிச்சு வச்சுட்டேன்னு சொல்லுங்க. ஏன் வீட்டை இழுக் கறீங்க? நாங்க பாத்துக்கிட்டுத்தானே இருக்கோம், வீட்டுலே யாருக்கும் கிடைக்குதோ இல்லியோ— சமர் அண்ணா பருப்புக்கு மட்டும் நெறயா நெய் ஊத்துவீங்க. அவருக்கு மட்டும் ரொட்டியிலே நெய் தடவுவீங்க" என்றான்.

"அமர் என்ன அங்கே?" என்று நான் கத்தினேன். நான் நடையில் உட்கார்ந்து பூட்ஸுகளுக்கு பாலீஷ் போட்டுக்கொண்டிருந்தேன் என்பது அவனுக்குத் தெரியாது. நான் கண்களில் தீப்பொறி பறக்க அவனை முறைத்தவண்ணம் ஒருகையில் பிரஷ்ஷும், மறுகையில் பூட்ஸுமாக சமையல் அறைக்குள் வந்து நின்றேன்.

என்னைப் பார்த்தவுடனேயே அவன் திடுக்கிட்டு மௌனமாகி ரொட்டியை சிறுசிறு விள்ளல்களாகக் கொறிக்கத் துவங்கினான்.

அவன் உட்கார்ந்திருக்க நான் அவன் முதுகில் ஓங்கி ஒரு உதை விட்டேன். "வெக்கங்கெட்ட பயலே! என்ன பேசறதுன்னு அறிவில்லே! நாக்கை அடக்கிப் பேசு. வாயிலே வந்தது எல்லாம் பேசறதா? மெட்ரிக் படிக்கிறானாம், மெட்ரிக்-!"

உதையை வாங்கிக் கொண்டு ஒருமுறை அவன் என்னைப்

பார்த்தான். பிறகு தட்டைத் தூக்கி எறிந்துவிட்டுக் கோபத்துடன் வெளியே ஓடி அங்கு பெருங்குரல் எடுத்து அழ ஆரம்பித்தான்.

பிரபா ரொட்டி செய்வதை விட்டுக் கழுத்தைத் திருப்பி என்னை முறைத்தாள். "நீங்க பூட்ஸைத் தூக்கிக்கிட்டு நேரே சமையலறைக்கு திடுதிப்புன்னு எங்கேயிருந்து வந்து மொளச்சீங்க?"

நான் தொண்டை கிழியக் கத்தினேன், "வாயை மூடு. நான் இங்கே வெளியே உக்காந்து பாலீஷ் போட்டுக்கிட்டே கேட்டுக்கிட்டுத்தான் இருந்தேன். இவன் இவ்வளவு பெரியவனா வளந்துட்டான். மரியாதையாப் பேசத் தெரியலே?"

அதற்குள் அம்மா தன் கட்டிலில் இருந்தபடியே பலங்கொண்ட மட்டும், "டேய் சமர், இங்கே வாடா கொஞ்சம், ஏண்டா, அவ உனக்கு மட்டும்தான் உறவா, மத்தவங்க எல்லாம் பகையா?" என்று கத்தினாள்.

நான் பூட்ஸை நடையில் எறிந்துவிட்டு தடதடவென்று அம்மா விடம் போனேன். அம்மாவுக்கு மறுபக்கத்தில் அமர் அழுதவண்ணம் நின்றுகொண்டிருந்தான்.

ஜபமாலையின் கடைசி மணியைக் கண்ணில் ஒற்றிக் கொண்டபடி அம்மா, "ஏண்டா இவனைச் சாப்பிட்டுக்கிட்டிருக்கும்போதே ஏன் அடிச்சே நீ?" என்று கேட்டாள் அம்மா. "உனக்கு வரவர கைநீண்டு போச்சு, நீ மனசுலே என்னதான் நெனச்சுகிட்டு இருக்கேங்கறதையாவது புரியும்படி சொல்லிடு."

"ஏன் அடிச்சேன்னா கேக்கறீங்க," என்று நானும் தொண்டை கிழியக் கத்தினேன். "இவன் பெரியவங்ககிட்டே ஏன் மரியாதையா நடந்துக்கலேன்னு கேளுங்க."

அமர் திமிராகவும், கோபமாகவும், "நான் என்ன மரியாதையில்லாம பேசினேன். சொல்லுங்களேன் பாப்போம்" என்றான். "நேத்தி முந்தாநாள் தானே நெய் வாங்கிக்கிட்டு வந்தேன்? அதுக்குள்ளே தீந்துபோச்சான்னு தானே கேட்டேன்."

"டேய் நேரயே பொய் சொல்றியா? அம்மா இருக்கற துணிச்சல்லே துள்ளாதேடா, நான் இன்னும் இங்கேதான் இருக்கேன்" என்று நான் ஒரு கையில் பிரஷ்ஷுடன் அவன்மீது பாய்ந்தேன்.

"டேய் அவன் மேலே கையை வச்சே... ஜாக்கிரதை!" என்று அம்மா கர்ஜித்தாள். "நான் இன்னும் உயிரோடதாண்டா இருக்கேன். அவன்மேலே கையை வைடா பாப்போம்... இப்ப எங்களைப் பாத்தா உனக்குப் பகையாதான் தோணும். எனக்குத் தெரியுண்டா, நீ இப்படித் தான் ஆவப்போறேன்னு. அந்த விடியாமூஞ்சிக்காரிக்காகக் கூடப்பொறந்த தம்பியைப் போட்டு அடிக்கறதைப் பாரேன். அவனுக்கு வெக்கம் இல்லியான்னு கேக்கறியே, உனக்கு மொதல்லே வெக்கம், சூடு, சொரணை, மானம் மரியாதை இருக்கான்னு நான் கேக்கறேன். எந்த மூஞ்சியை வச்சுக்கிட்டு அவன்கிட்டே வெக்கத்தைப்பத்திப் பேசறே!

நல்லாத்தான் பேச ஆரம்பிச்சே போ, அந்த ராணி மகாராணிகிட்டே. ஆகாசத்துக்கும், பூமிக்குமால்ல குதிக்கறே? தெனம் ஒரு ரகளை, தெனம் ஒரு கலாட்டாவால்லே இருக்கு? இதைவிடப் பேசாம இருந்தப்பவே தேவலாம் போலிருக்கே."

"பேசாம இருந்ததாலதானே எல்லாரும் தலைமேலே ஏறிக் கிட்டாங்க, யாரும் யாரையும் மதிக்கிறது கிடையாது. மட்டு மரியாதைன்னா என்னன்னே தெரியாது."

"ஆமாம்பா, எங்களுக்கென்ன தெரியும் மட்டும், மரியாதையும். அந்த கட்டையிலே போறவகிட்டே நீதானே ஒரு நாள்லே எல்லாத்தையும் கத்துக் கிட்டு வந்திருக்கே. இப்ப ஐயா மரியாதை கத்துத்தர வந்துட்டாரு- நேத்துவரைக்கும் பச்சைப்புள்ளையா இருந்தவன், இன்னிக்கு இறக்கை கட்டிக்கிட்டுப் பறக்கறான். கொஞ்சம் பூமியிலே பாத்து நடப்பா தம்பி! எப்பப் பாத்தாலும் பொண்டாட்டி பேச்சைக்கேட்டு ஆடறியே, நீ வெக்கங்கெட்டவனா, அவன் வெக்கங்கெட்டவனா-? அம்மாவையும் மதிக்கற தில்லே- அப்பாவையும் மதிக்கறதில்லே- சின்னவங்க பெரியவங்க பாக்கறதில்லே- நாங்கதான் உனக்கு வேண்டாதவங்க ஆயிட்டமே-" கடைசியில் அம்மா அழ ஆரம்பித்துவிட்டாள்.

"நீ தானாவும் யோசிக்கமாட்டேங்கறே, சொல்லப்போனாலும் பெண்டாட்டி பேச்சைக்கேட்டு ஆடறேங்கறே. இத்தினி மாசமா, அவ எப்போ சாப்பிடறா, எப்போ தூங்கறான்னு யாராவது நெனச்சுப் பாத்தீங்களா? ஒரு துணி கேட்டதுக்கேதான் பெரிய மகாபாரதம் ஆயிட்டுது. அண்ணி என்ன ஒண்ணுமே செய்ய முடியாமலா கெடக் காங்க? ஆனா செய்யறதில்லே. அவங்க ஏன் செய்யப் போறாங்க? அவுங்கதான் பெரிய மருமகளாச்சே, மாமியாருக்குப் பதிலா இல்லே இருக்காங்க. அதனாலே மகாராணியாட்டம் இருப்பாங்க. மத்தவங்க எல்லாம் வேலைக்காரிங்கதான்."

"அவ ஏன் வேலைக்காரியாவுறா? நாங்கதான் வேலைக்காரிங்க. இவ்வளவு நாள் ஊட்டி ஊட்டி வளர்த்தோம். இன்னும் வளர்த்தாகணும். ஒட்டிக்கு ரெட்டியா ரெண்டு பேருக்கு ஊட்டி வளர்த்தாகணும்" அழுகின்ற குழந்தையைப் பலவந்தமாகக் கட்டிலில் உதறிவிட்டு அண்ணியும் வரிந்துகட்டிக் கொண்டு வந்துவிட்டாள். முணுமுணுத்துக் கொண்டு நேரே சமையல் அறைக்குப் போனாள். பிரபாவைப் பலவந்த மாக மணையிலிருந்து இழுத்து, "எழுந்திருங்கம்மா மகாராணி-! பாவம் உங்களுக்குக் கஷ்டமில்லே, நான் சமைக்கிறேன்" என்றாள்.

"நான்தான் செய்யறேனில்லே- நான் ஏதாவது சொன்னேனா? எங்கிட்டே ஏன் கோவிச்சுக்கிறீங்க?" என்று அழுகை கலந்த குரலில் கெஞ்சக் கெஞ்ச, ஆவேசம் கொண்ட அண்ணி மெலிந்து கிடந்த அவளைத் தூக்கி ஒரு பக்கம் வைத்துவிட்டு தொபீர் என்று உட்கார்ந்து பரட் பரட்டென்று குழவியை உருட்டி, ரொட்டி போட ஆரம்பித்தாள்.

பிரபாவின் கண்களில் கண்ணீர் மல்கியது. அவள் சிறிதுநேரம் அப்படியே உட்கார்ந்திருந்தபடி பார்த்துக் கொண்டிருந்தாள். பிறகு கிடுக்கியால் பாதி வெந்த ரொட்டிகளை நெருப்பில் காட்டிச் சுட ஆரம்பித்தாள்.

"சம்பாதிடான்னா மட்டும் இன்னும் படிப்பேன், இன்னும் படிப்பேன் அப்பமூங்கறது..." என்று அம்மா என்னென்னவோ முணு முணுத்துக் கொண்டிருந்தாள். அண்ணி கிடுக்கியை வெடுக்கென்று பறித்தாள். முகத்தைக் கடுகடுவென்று வைத்துக் கொண்டு பல்லைக் கடித்துக்கொண்டு உப்பிய ரொட்டிகளை மணையில் ஓங்கி ஓங்கித் தட்டினாள். இரண்டு மூன்று நிமிடங்கள் செய்வதறியாது உட்கார்ந்திருந்த பிரபா தான் ஏதோ தப்பு செய்துவிட்டவள் போல எழுந்து அண்ணியின் குழந்தையிடம் போனாள். அதை அண்ணி தொப்பென்று போட்டுவிட்டு வந்திருந்தாள். அது வீல்வீல் என்று அலறிக் கொண்டிருந்தது. பிரபா அதை எடுத்து கைகளில் போட்டு ஆட்டி சமாதானப்படுத்த முயன்றாள்.

ரொட்டி செய்து கொண்டிருந்த அண்ணிக்கு இது எப்படியோ தெரிந்துவிட்டது. எல்லாவற்றையும் போட்டது போட்டபடி போட்டு விட்டு, 'தொம்தொம்' என்று பிரபாவை அணுகிக் குழந்தையைப் பலவந்தமாகப் பிடுங்கினாள், "இருக்கட்டும் மகாராணி! கொஞ்சம் அழுதுட்டுதான் போகட்டுமே. செத்தாபோயிடுவா? அவ தலைலே அழணும்னு எழுதியிருந்தா அழுதுட்டுப் போறா... மிஞ்சிமிஞ்சிப் போனா செத்துட்டுப்போறா. உனக்காவது திருப்தியா இருக்குமில்லே. அப்போதிலேர்ந்து கொள்ளிக் கண்ணால பாத்துக்கிட்டு இருந்தியே..."

எல்லாவற்றுக்கும் தன்னையே மூலகாரணமாக நினைக்கிறார்கள் என்பது பிரபாவுக்குத் தெரிந்தது. இந்த எதிர்பாராத நிலைமையைக் குறித்து அவளுக்குக் கண்ணீர் முட்டிக்கொண்டு வந்தது. அழுகை பொங்கும் குரலில் அவள், "அக்கா, நான் ஒண்ணுமே சொல்லலியே! என்னைப் பாத்து ஏன் இப்படியெல்லாம் சொல்றீங்க" என்றபடி குழந்தையைக் கொடுக்க மறுத்தாள். இந்த இழுபறியில் குழந்தை இன்னும் உரக்க அழுதது.

நான் திகைப்படைந்தவனாகப் பார்த்துக் கொண்டிருந்தேன். நான் வெறும் பார்வையாளனாக மாறிவிட்டேன் என்பது தெரிந்தது. "குழந் தையைக் குடுத்துடேன் பிரபா" என்று நான் அதட்டினேன். பிறகு "ஒண்ணும் சொல்லக்கூடாது, சொன்னா ஆளுக்கு ஆள் பிடிச்சுக்குவாங்க" என்ற வண்ணம் ஓட்டம்பிடித்தேன்.

அண்ணி குழந்தையைப் பிடுங்கி அதே கட்டிலில் தொப்பென்று போட்டுவிட்டு மீண்டும் அடுப்படிக்குப் போய்விட்டாள். நான் வெளியேறுவதற்குள் இதுவரை நான் பார்த்துவிட்டேன். பிறகு என்ன ஆயிற்று என்று தெரியாது. பிரபா ஒரு புயலை எதிர்கொண்டிருப்பாள் என்று தெரியும். என் மனம் மரத்துப்போனது.

வீட்டு நிலைமையை நினைக்கும்போது பார்க்கில் படுத்திருக்கும் போதும் என் நரம்புகள் 'விண்விண்' என்று தெறித்தன.

திடீர் என்று மிக அருகிலேயே குண்டு வெடித்தது போன்று வானைப் பிளக்கும் சத்தம் ஒன்று கேட்டு ஏதோ என்னையே யாரோ குறிவைத்து சுட்டதுபோல் திடுக்கிட்டுத் துள்ளியெழுந்தேன். தூங்கிக் கொண்டிருந்தவன் சட்டென்று எழுந்து எதுவும் புரியாமல் விழிப்பது போல இங்கும் அங்கும் பார்த்தேன். பூங்காவில் சிலர் எதையோ சூழ்ந்து நின்றிருந்தனர். எல்லாவற்றையும் மறந்து அங்கே விரைந்தேன். பத்துப் பதினைந்து பேர்களுக்கு நடுவே வாயிலிருந்து நுரை தள்ள, நாக்கை நீட்டிக்கொண்டு, கழுத்தைத் திருகிக் கொண்டு ஒரு பெரிய குதிரை நான்கு கால்களையும் பரப்பிக் கொண்டு இறக்கும் தருவாயில் கிடந்தது. காய்ந்த புதர்களின் மீது ரத்தம் அடர்த்தியாக ஓடி உறைந்திருந்தது. குதிரையின் முன்னங்கால்களுக்கு மேலே ஒரு பெரிய துளை காணப் பட்டது. அதிலிருந்து ரத்தமும், வெள்ளையாக ஏதோ திரவமும் வழிந் திருந்தது. அருகிலேயே காக்கி பேண்ட்டும், வெண்ணிற சட்டையும் அணிந்த ஒருவர் கைக்குட்டையால், வழியும் கண்ணீரைத் துடைத்துக் கொண்டிருந்தார். ஒரு கையால் துப்பாக்கியை பூமியில் நாட்டிப் பிடித்திருந்தார். நின்றபடி அழுது கொண்டிருப்பதாகத் தோன்றிற்று. நான் ஒருவனிடம், "என்னங்க, என்ன ஆச்சு?" என்று கேட்டேன். அவன் வருத்தத்துடன், "இன்ஸ்பெக்டர் ஐயோவோட குதிரை. அவருக்கு இதுமேல ரொம்ப பிரியம், ரொம்ப நாளா சீக்கா இருந்தது. சரியாக மாட்டேன்னுது. அதனால சுட்டுட்டார்" என்றான்.

"ஹூம், நல்ல பிரியமய்யா! சீக்காம், அதனால கொன்னுட்டாராம். வாழ்நாள் முழுவதும் ஏறி சவாரி செஞ்சாராம், கொஞ்சம் சீக்குன்ன வுடனே சுட்டுத் தள்ளிட்டாராம். ஒருநாள் வயசான அப்பனையும் சுட்டுத் தள்ளிடப் போறாரு!" என்று நான் வெறுப்புடனும், கோபத் துடனும் உதட்டைப் பிதுக்கினேன். இன்னும் என்னென்னவோ பேசி யிருப்பேன். அதற்குள் அவன் வெறுப்புடன் என்னைப் பார்த்து, "பின்னே வாழ்நாள் பூரா துடிச்சுக் கஷ்டப்படணுமா? இப்ப ஒரு நிமிட வேதனை, அதோட விடுதலை. சில பேரு கஷ்டத்தைக் கண்ணால பாத்துட்டு சகிச்சுக்கிட்டுப் போயிடறாங்க, சில பேரால அது முடியாது" என்று சொன்னான்.

நான் அங்கிருந்து அசட்டுச் சிரிப்புடன் ஒன்றும் பேசாமல் நழுவினேன். ஒரு தனியிடத்திற்குப் போய் நான் படபடவென்று தலையில் அடித்துக் கொண்டேன். என் மூளைக்கு என்ன ஆகிவிட்டது? சின்ன விஷயம்கூட எட்டுவதில்லை. அவர் சொன்னது சரிதானே? இன்ஸ்பெக்டர் செய்ததில் என்ன தவறு, அது மாதிரிதான் ஷிரீஷ் சொன்னதும் எனக்கு அன்று புரியாமல் போய்விட்டது. அவர் சொன்னது சரிதானே! என் மூளைதான் வேலை செய்யவில்லை.

இரவு பத்து மணிக்குத் திரும்பியபோது என் மூளை அடியோடு குழம்பியிருந்தது. மண்டைக்குள் வெறும் களிமண் இருக்கிறது அல்லது சுத்தமாகக் காலி என்று தோன்றியது. வலி மட்டும் மண்டையைப் பிளந்து கொண்டிருந்தது. வீட்டில் நிசப்தம் நிலவிற்று. அனைவரும் தூங்கி விட்டனர். கதவுகள் வெறுமே சாத்தியிருந்தன. அப்பாவோ, அண்ணாவோ யாரோ ஒருவர் இன்னும் வரவில்லை போலும். நான் சத்தம் போடாமல் மாடிஏறி வந்தேன். ஏப்ரல் கழிந்துவிட்டது. அனைவரும் மேலே மொட்டை மாடியில்தான் உறங்கிக் கொண்டிருந்தனர். நான் என் அறைக்குள் நுழைந்து உடை மாற்றாமலேயே படுக்கையில் போய் உட்கார்ந்தேன். அறைக்குள் புழுக்கமாக இருந்தது. தூக்கம் இருக்கிற இடமே தெரியவில்லை. முகட்டை வெறித்துக்கொண்டு உட்கார்ந்திருந்தேன்.

எங்கிருந்தோ பிரபா வந்து என்னருகில் அமர்ந்தாள். பயந்து கொண்டே என்னைத் தொட்டு, "சாப்பிடலே?" என்று கேட்டாள்.

எனக்கு அவள் முகம் தெரியவில்லை, உள்ளுக்குள் பயந்தவளாகத் தோன்றினாள், நான் உணர்ச்சியற்ற குரலில், "வேண்டாம், நீ சாப்பிட்டியா?" என்று கேட்டேன்.

"இல்லே" என்றவண்ணம் அவள் என் நெற்றியில் கை வைத்துப் பார்த்தாள்.

நான் திடீரென்று பிரபாவின், மடியில் தலைவைத்து "பிரபா, நாம என்ன செய்யறது பிரபா? எங்கே போறது?" என்று வெடித்து விம்மினேன்.

# 6

உங்கள் மனத்தில் ஒரு சந்தோஷமான செய்தியிருக்க அதை விரைவாகச் சென்று வீட்டில் சொல்ல நீங்கள் துடித்துக்கொண்டிருக்க, அந்த சமயம் பார்த்து ஒருவன் உங்களிடம் தொணதொணத்தாலோ, வாக்குவாதத்திற்கு இழுத்துத் தர்க்கங்கள் செய்தாலோ மனத்தில் எவ்வளவு எரிச்சல் வரும்? எல்லா நாகரிகத்தையும், பண்பாட்டையும் உதறித்தள்ளிவிட்டு சட்டென்று எழுந்து "உங்க பேத்தலைக் கொஞ்சம் நிறுத்திக்குங்க, நான் போய் இந்த சமாசாரத்தை என் மனைவிகிட்டே மொதல்லே சொல்லிட்டு வந்துடறேன்" என்று சொல்லத் தோன்றுமல்லவா! திவாகரின் வீட்டில் உட்காரும் அறையில் அமர்ந்திருந்தபோது என் நிலைமை ஏறத்தாழ இப்படித்தான் இருந்தது.

திவாகர் "ஒருவேலை இருக்கு, போறியா?" என்று கேட்டான்.

"கிடைச்சுட்டுதா? எங்கே? எங்கே?" என்று பதட்டத்தில் எழுந்து நின்றே விட்டேன்.

"கிடைச்சிருக்கு, ஆனா சொஞ்சம் தூரம் - ஊர்கோடியிலேன்னு வச்சுக்கோயேன்" என்றான் திவாகர்.

"முழுசா சொல்லித் தொலையேம்பா? ஊர்க்கோடி என்ன? உலகத்தின் கோடிக்கே வேணும்னாலும் நான் போவேன்"— நான் அவன் தோளைப்பிடித்தேன்.

"ஆனா ஒரு நிபந்தனை, நீ கட்டாயம் தேர்ட் இயர் ஜாய்ன் பண்ணணும், சரியா?"

"சரி, சரி, சரி– நீ விஷயத்துக்கு வா" நான் எரிச்சலுடன் சற்று சிரித்து விட்டேன்.

"அப்பக்கேளு, ஒரு பிரஸ்ஸிலே ப்ஃரூப் ரீடிங் வேலை. காலையிலே அஞ்சு மணியிலேர்ந்து பதினோரு மணிவரைன்னு பேசியிருக்கேன். அப்பதான் நேரே காலேஜ் போக சௌகரியமா இருக்கும்."

"யாரோட பிரெஸ்? எங்கே இருக்கு? என்ன குடுப்பாங்கன்னு சொல்லேம்பா?"

"பறக்காதே! அப்பாவோட சிநேகிதர் ஒருத்தரோட பிரெஸ், இப்ப அதிகமா தரமாட்டாங்க. ரெண்டு மூணு மாசத்திலே சொல்லி கில்லி ஏத்திக்கலாம்."

"சரி, எவ்வளவு–?"

"எழுபத்தி அஞ்சு ரூபாய். ரெண்டு மூணு மாசத்திலே நூறாக்கிடலாம். அதுக்கு ஏண்டா இப்படி பதர்றே!" என்று அவன் என் பதட்டத்தைக் கண்டு சிரித்தான.

"யதேஷ்டம், திவாகர், யதேஷ்டம்!" என்று நான் நன்றியுடன் நாத்தழுதழுக்க, "இது மட்டும் கெடச்சுட்டுதுன்னா பொழச்சுக்குவேன் திவாகர். நான் எவ்வளவு சிக்கல்லே இருக்கேன்னு உனக்குத் தெரியாது. வீட்டுலே ஒரு நிமிஷம் அமைதி கிடையாது" என்று கூறினேன். மனம் பொங்கியது "எப்ப போகலாம்? இப்பவே போகலாமா?"

திவாகர் ஒரு நிமிஷம் என் முகத்தைப் பார்த்தான். பிறகு "சரி, வா" என்று கிளம்பினான்.

எல்லாம் பேசி முடித்த பின்னும் எழுபத்தைந்து ரூபாயில் எனக்கு ஒருவேலை கிடைத்துவிட்டது என்று என்னால் நம்ப முடியவில்லை. ஒவ்வொரு தம்பிடிக்கும் ஏங்கி நிற்பது என் தலையில் எழுதியிருக்கிறது என்றே நான் நினைக்க ஆரம்பித்து விட்டிருந்தேன். மாதாமாதம் எழுபத்தி ஐந்து ரூபாய் வரும் என்பது நம்பவே முடியாத கனவாகத் தேன்றியது. பாவம் அண்ணாவுக்கு சற்றுதான் கூடுதல். அதற்கே நாள் முழுவதும் மாடாக உழைக்கிறார். சிறகடித்துப் பறந்துபோய் பிரபாவிடம், "பிரபா, எனக்கு வேலை கிடைசிட்டுது" என்று சொல்லத் துடித்தேன். திவாகரினால் இது நடந்திருக்கிறது. இல்லையென்றால் மூச்சு முட்டி

செத்திருப்பேன். நான் அவனோடு வீடு திரும்பினேன். காலை ஐந்து மணியிலிருந்து பதினோரு மணிவரை அங்கே இருப்பது என்று பேசி முடித்திருந்தோம். பிறகு அங்கேயிருந்து நேரே காலேஜ். ஒருவேளை காலேஜில் முதல் பீரியட் இல்லாமலேயே இருக்கலாம். இவ்வளவு தூரம் கை கொடுத்த அதிர்ஷ்டம் அப்போதும் கை கொடுக்கும். இல்லாவிட்டால் அட்டென்டன்சுக்கு யாராவது புரொபசர் கையைக் காலைப்பிடிக்க வேண்டும். அப்படி பீரியட் இருந்தால் விட்டுவிட வேண்டியதுதான். திவாகர் காலில் விழ வேண்டும்போல இருந்தது.

"திவாகர், நல்லகாலம் என்னைக் காப்பாத்தினே! இல்லேன்னா எனக்குப் பைத்தியமே பிடிச்சிருக்கும். எங்க வீட்டு நிலவரம் உனக்குத் தெரியாது. என் நன்றியை எப்படி வெளிப்படுத்துவேன்னே எனக்குத் தெரியலே" என் கண்களில் கண்ணீர் தளும்பியது.

"அட விடுப்பா, நான் என்ன செஞ்சுட்டேன். கஷ்டத்திலே கலங்காம இரு. அதானே வீரம்? எனக்கு மட்டும் பெரிசா உபதேசம் பண்றே- இப்படிக் கலங்கிறியே!" என்றவன் நன்றிகலந்த சங்கடத்திலிருந்து என்னை விடுவிப்பதற்காகப் பேச்சை மாற்றினான். "ஆனா, ரொம்ப தூரமா இருக்கேன்னு கவலையா இருக்கு. வரப்போகவும், சாப்பாட்டுக்கும் பிரச்னையா இருக்கும்."

"என்ன பெரிய தூரம்? மிஞ்சி மிஞ்சிப்போனா ரெண்டுமைல், கொஞ்சம் கூடவே இருந்தாலும்தான் என்ன? ஆனா சாப்பிடறது ஒரு பிரச்சினைதான்" என்றவன், "சரி விடு, அதுவும் ஒண்ணும் பெரிய கஷ்டம் இல்லே. பிரபா தயார் பண்ணிடுவா. என்ன, காலையிலே கொஞ்சம் சீக்கிரமா எழுந்திருக்கணும், அவ்வளவுதானே! ராத்திரியே செஞ்சு வச்சிட்டா போச்சு. திவாகர், நான் எம்.ஏ. முடிச்சிடணும்னு அவளுக்கு ரொம்ப ஆசை. கேட்டவுடனே துள்ளிக்குதிப்பா." என்றேன்.

"ஆமாம், அன்னிக்கு நீ கிரண்கிட்டே..." என்று திடீர் என்று நினைவு வந்தவனாக திவாகர் ஏதோ கேட்க ஆரம்பித்தான்.

மன்னிப்புக் கேட்கும் பாவனையில் அவன் கைகளைப் பிடித்துக் கொண்டு, "அதை விடுப்பா, கொஞ்சம் நாள் போவட்டும், சாவகாசமா ஒக்காந்து விவரமா சொல்றேன்..." என்றேன்.

"உன் இஷ்டம், ஆனா இவ்வளவு காலையிலே சமைக்கிறது உன்னோட மனைவிக்குக் கஷ்டமா இருக்காது?" என்று அவன் கவலையுடன் கேட்டான். "ஏன்னா இங்கே அஞ்சு மணிக்கு வரணும்னா நாலு நாலரைக்கு வீட்டை விட்டுக்கௌம்பணும். அதாவது மூணரை, மூணே முக்காலுக்கு எழுந்திருக்கணும். ரொம்பக் கஷ்டம்தாப்பா!"

"எல்லாம் பாத்துக்கலாம் திவாகர். அவளைப்பத்தி உனக்குத் தெரியாது. அவ எவ்வளவு கஷ்டப்பட்டிருக்கான்னு யாருக்கும் தெரியாது. அவ எனக்காக எதையும் பொறுத்துக்குவா, எதையும் சகிச்சுக்குவா" என்று கூறிய என் கண்களில் என்னைப்போன்ற அதிர்ஷ்டக்

கட்டைக்காக பிரபா செய்யும் தியாகங்களையும் சகிக்கும் துன்பங்களையும் நினைத்து கண்ணீர் மல்கியது. உணர்ச்சி வேகத்தில் என் கீழ் உதடு துடித்தது.

முகத்தை வேறு பக்கம் திருப்பிக்கொண்டு அழுகையை அடக்க முயன்றேன். பிரபாவுக்கு முன்னாலும், அழுது வைத்தால் நன்றாக இருக்காது. சிறிது நேரம் நாங்கள் மௌனமாக இப்படியே நடந்தோம். பிறகு கஷ்டப்பட்டு, "திவாகர், எனக்கு கொஞ்சம் பணம் கடன் வேணும்!" என்றேன்.

"எவ்வளவு?"

"இருபது ரூபாய் போதும், பணம் கெடச்சவுடனே திருப்பிடறேன்" இன்று வெறுங்கையுடன் வீட்டுக்குப் போகக்கூடாது என்று நினைத்தேன். ஏதாவது வாங்கிக்கொண்டு போகவேண்டும். அவளுக்கு ஒரு புடவை உடனே வேண்டும்.

"இங்கே இல்ல. கிரண்கிட்டேயிருந்தா தர்றேன். ஹூம், மறந்தே போச்சே, ஷிரீஷ் வந்திருக்கார். உன்னை விசாரிச்சார். இன்னிக்கு சனிக் கிழமையில்லை. மத்தியான வண்டியிலே வந்தாரு. தங்கையைப் பாக்கப் போயிருந்தாரு. இந்நேரம் வந்திருப்பாரு".

நான் எங்கேயும், யாரையும் பார்க்க வரவில்லை என்று சொல்லத் தான் நினைத்தேன். ஆனால் திவாகரிடம் பணம் வாங்க வேண்டும். அத்துடன் இப்போது திவாகரிடமிருந்த நன்றியுணர்ச்சியில் அவன் நரகத்திற்கே கூப்பிட்டாலும் போகத் தயாராக இருந்தேன். நடந்து கொண்டே, "ஞாயிற்றுக்கிழமை லீவு இருக்குமில்லே?" என்று கேட்டேன்.

"நிச்சயம், அப்படி வேலை வாங்கினா ஓவர் டைம் போட்டுக் குடுப்பான்" என்றவன் எனக்கு எடுத்துச் சொல்லும் பாணியில் "அதிலே பாரு சமர், உனக்கு ப்ரூஃப் ரீடிங் தெரியாதுல்ல. மொதல்லே அஞ்சாறு நாள் கத்துக்கறதிலேயே கழிஞ்சுடுமே" என்றான்.

"அட எல்லாம் பாத்துக்கலாம்ப்பா, நான் என்ன உன்னை மாதிரி மரமண்டையா?" என்று அநாவசியமாகக் கடகடவென்று சிரித்தேன்.

நடுங்கும் கைகளுடன் பணத்தைப் பையில் வைக்க முனைந்தபோது ஷிரீஷ் வந்து சேர்ந்தார். "நான் வந்ததும் வராததுமா கௌம்பிட் டீங்களா?" என்று கேட்டார்.

"இல்லையே, உங்களைப் பாக்கறதுக்காகவே வந்திருக்கேன்." இரண்டு புடவையாவது வாங்கி விடலாம் என்று மனம் உள்ளே கணக்குப் போட்டுக் கொண்டிருந்தது. மேலுக்கு, "தங்கை எப்படியிருக்காங்க?" என்று கேட்டேன்.

அவர் ஆயாசத்துடன் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டார். ஆழ்ந்த நெடுமூச்சுவிட்டு, "பரவாயில்லே, நாள் பிடிக்குமில்லே.. திவாகர் மன்னிச்சுக்கப்பா. நீயும் வரேன்னு சொல்லியிருந்தேல்லே.. ஆனா என் மனசு பதறினதிலே நான் பாட்டுக்குக் கௌம்பிப் போயிட்டேன். சரி நீங்க எப்படி இருக்கீங்க?" என்று கேட்டார்.

"நல்லாதான் இருக்கோம்..."

அவர் இடைமறித்து, "அட இது என்ன நான் பாக்கவே இல்லியே... உங்க சிண்டு என்ன ஆச்சு" என்று கேட்டார்.

திவாகரும் கவனித்து விட்டுத் துள்ளிக்குதித்தான். "அட, ஆமாம். நான் கூடப் பாக்கலியே, என்ன ஆச்சு?"

என் முகம் சிவந்துவிட்டது. முந்தைய தினம் முடிவெட்டிக்கொண்ட போது சிண்டை எடுத்துவிட்டிருந்தேன். ஷிரீஷைப் பார்த்து பயமா, அல்லது இதன் பயன் தெரியாததாலா என்று தெரியவில்லை. ஆனால் சிண்டை எடுத்தவுடன் வெட்கமும், தயக்கமும் ஏற்பட்டது. வெளியே தலைகாட்டவே துணிவில்லை. பறக்கிற சிண்டை சரிசெய்யும் பாவனையில் கையால் தடவித்தடவி உண்மையில் அது இல்லாமல் இருப்பதை மறைத்துவிடப் பார்த்தேன். வீட்டில் சத்தம் போடுவார்கள். வெளியாட்களும் உயிரை வாங்குவார்கள். சமீபகாலமாக சிண்டை கிராப்பில் மறைத்து வைக்க ஆரம்பித்து விட்டதால் சட்டென்று யாருக்கும் தெரியாது. ஆனால் வீட்டில் எவ்வளவு நாள்தான் மறைக்க முடியும்? "பெரிய தொரைன்னு நெனப்பா? நாகரிகப் பித்துப்பிடிச் சிருச்சா? ஆசாரம், பக்தி, புனஸ்காரம் எல்லாத்தையும் ஒழிச்சாச்சா?" என்றெல்லாம் சத்தம் போடுவார்கள். தொப்பி போட்டுக் கொள்ளலாமா என்று முதலில் யோசித்தேன். அப்படி செய்தால் அது உடனே கவனத்தை ஈர்க்கும் என்று பிறகு பட்டது. எப்போதும் போட்ட தில்லை. போட்டால் எப்படி இருக்குமோ? வீட்டில் இருக்கும்போதும், வெளிக்கிளம்பும் போதும் ரோட்டில் நடக்கும் போதும் நான் சிண்டை எடுத்துவிட்டேன் என்பதைத் தெரிந்துகொண்டு விட்டார்களோ என்கிற உணர்வுடன் நடந்து கொள்வேன். வேலை கிடைத்த மகிழ்ச்சியில் அதை மறந்தே போயிருந்தேன். திடுதிப்பென்று ஷிரீஷ் நினைவுபடுத்தி விடவே மனத்தில் வெட்கம் சூழ்ந்தது.

"ஒருநாள் வாக்குவாதத்திலேயே எல்லா ஆசாரத்தையும், பூஜை புனஸ்காரத்தையும் தலை முழுகிவிட்டாயா...?" என்று திவாகர் கிண்டல் செய்தான். "இவ்வளவு நேரமா கூடவே இருக்கிறேன் கவனிக்கவே யில்லையே!"

ஷிரீஷ் எனக்குப் பரிந்து கொண்டு வந்தார். "அவருக்கு சரின்னு பட்டதை அவர் செய்யறாரு. எல்லாரும் உன்னை மாதிரி சண்டிய னாகவா இருப்பார்கள்?" என்றார்.

"போகுது, ஏதோ மனுஷன் மாதிரி தெரிய ஆரம்பிச்சியே, இல்லேன்னா கார்ட்டூன் மாதிரி இருப்பே!" என்று காரணமின்றியே திவாகர் சிரித்தான். யார் சொல்வதற்கும் வருத்தப்படும் மனநிலையில் நான் இல்லை. சீக்கிரமாக இந்த உபச்சார பேச்சு வார்த்தைகளை முடித்துக்கொண்டு பிரபாவிடம் போகத் துடித்தேன். ஆகா எப்படி பூரித்துப் போவாள்? சிகரெட்டைப் பற்றவைத்துக்கொண்டு ஷிரீஷ்

பேச்சை மாற்றினார். "ஆங்.. இந்திய நாகரிகத்தில் மிகச்சிறந்தது எதுன்னு நீங்க சொல்லவேயில்லியே!"

பேச்சை மாற்றியதில் நான் சற்று நிம்மதியடைந்தேன். அவருடைய இந்தக் கேள்வி பற்றி நான் மிகவும் யோசித்துப் பார்த்துவிட்டேன். ஆனால் எதைச் சொல்வதுஎன்று புரியவில்லை. தெரிந்ததை ஒழுங்காகச் சொல்வேன் என்ற நம்பிக்கை இல்லை.

"ஆத்ம ஞானமும், ஆன்மீகச் சிந்தனையும்தான்.." என்று பதிலை இழுத்தேன்.

அவர் இடைமறித்து, "பெரிய பெரிய வார்த்தைங்களா போடாதீங்க, எனக்குப்புரியாது. பிரயாசைப்பட்டு நீங்க புரிய வச்சீங்கன்னாலும் இதனால என்ன பிரயோஜனம், இது ஏன் அவசியம்னு எனக்கு விளங்கப்போறதில்லே, அதனாலே கொஞ்சம் எளிமையா சொன்னீங் கன்னா.." என்றார். நான் தடுமாறிவிட்டேன். பிறகு எப்படியோ சமாளித்து "சாதரணமா சொல்லணும்னா நம்மளைப் பத்தியும், உலகத்தைப் பத்தியும் தெரிஞ்சுக்கறது" என்றேன்

அவர் மீண்டும் சட்டென்று வெட்டினார். "உலகம் பொய், மாயை, பிரம்மத்தின் ஒரு அங்கம். உங்க அம்மா, அப்பா, அண்ணன், தங்கை, பெண்டாட்டி பிள்ளைகள் எல்லாம் மாயம், அதே மாதிரி அவங்களுக்கு நீங்க ஒரு மாயை! அதனால இந்த மாயைகளை அறுத் துட்டா ஆத்மஞானம் கிடைச்சுடும்! மாயைகளை அறுக்க வழி, ஒட்டமா ஓடி இமயமலை குகைக்குள்ளே புகுந்துக்கறது! அப்படி புகுந்துகிட்டா இந்த மாயை எல்லாம் தானே மறைஞ்சுடும்! ஆஹா, பிரமாதம்!" ஷிரீஷ் 'ஹாஹ்ஹா' என்று சப்தம் போட்டு சிரித்தார்.

நான் திகைத்துப்போனேன். உடனடியாக பதில் ஒன்றும் தோன்ற வில்லை. அவர் என் தோளில் கைவைத்து, "தம்பி, தோத்துப்போய் ஓட்டம் பிடிக்கிற இந்த சித்தாந்தம்தான் உங்களை இந்த நிலைமைக்கு ஆளாக்கிட்டுது. அப்பன் பிள்ளையையும், பிள்ளை அப்பனையும் மாயைன்னு சொன்னா இதைவிடப் பெரிய நன்றி கெட்டதனம், அவமானம் வேற என்ன இருக்கு? உங்களைப் பெத்த அம்மாவையும், உங்க பிள்ளைக்கு தாயாகப் போறவளையும் நரகவாயில்னு சொல்றது மிகப்பெரிய நன்றிகொன்ற செயல் இல்லியா?" என்றார்.

"ஆனா இதனால் எல்லாம் நமக்கு ஒண்ணும் கெடைக்கற தில்லையே?" என்றேன் நான்.

"அதனாலே மனுஷன் தற்கொலை பண்ணிக்கணுமா? நல்ல சித்தாந்தம் உங்களுது?" என்று ஷிரீஷ் உண்மையிலேயே சற்று ஆவேசத் துடன், "ஹூம், இந்தத் தற்கொலைக்கு ஆகா, என்னென்ன அழகான பெயர்! ஆத்ம ஞானம், இறைவனில் கலத்தல், மாயையினின்றும் முக்தி, ஸ்திதப்பிரக்ஞன் ஆகுதல். அடா..அடா.. அடா. ஏனய்யா! நீங்க இந்த உலகத்துக்கு வந்து கடைத் தேறணும்னு உங்களை யார் ஐயா கும்பிட்டுக்

கெஞ்சியது? சூ மந்திரக்காளி, இந்தா பிரம்மா, இன்னொரு சூ மந்திரக் காளி இந்தா மாயை, இந்தா இன்னொரு சூ மந்திரக்காளி தோ பார் சத்துவ, ரஜோ, தமோ குணம்– நல்ல கற்பனா சித்தாந்தம்! வீடு வாசலை விட்டுட்டு இது சொல்ற பிரம்மாவை எங்கேடான்னு தேடிக்கிட்டு ஓடுங்க" என்றார்.

"இதனாலே வீணான தொல்லைகள், கவலைகள், இதிலேர்ந் தெல்லாம் நீங்க தப்பிக்கிறீங்க" என்றேன் நான்.

"ஆமாம், ஆமாம். வீட்டுலே ஒரு துயரமான சம்பவம் நடந்து போச்சுன்னா, உடனே உங்களுக்கு பிரம்மஞானம் வந்துடும்.. போய்ப் பத்மாசனத்திலே உக்காந்துடுவீங்க. யார் இந்த வம்பிலே போய் மாட்டறது? அப்படி பிரம்ம ஞானம் வரல்லியா, 'பாட்டிலில் ஞானம்' வந்தாலும் சரிதான். அதை ஊத்திக்கிட்டு எங்காவது விழுந்து கிடந்தாலும் வீண் கவலையெல்லாம் கிடையாது. யார் எக்கேடு கெட்டா என்ன, எது எப்படி பாழாப்போனா என்னா?" பிறகு திடீர் என்று நினைவு வந்தவர்போல், "ஆமாம், உங்க அம்மா உங்களை நல்லா படிக்கவைக்கலே, நல்லா துணிமணி வாங்கிக் கொடுக்கலே, நல்லா ஊட்டி வளக்கலேன்னா மட்டும் பெரியவங்களாகி ஏன் அவங்களைத் திட்டறீங்க? அவங் களுக்கும் பிரம்மஞானம் வந்துட்டுது, அவுங்க உங்களை மாயைன்னு உணர்ந்துக்கிட்டாங்கன்னு ஏன் நெனச்சுக்க மாட்டேங்கறீங்க– அவுங்க ஏன் மாய வலையிலே சிக்கப் போறாங்க, அதனால உங்களைப் பத்திக் கவலைப்படலைன்னு நெனச்சுக்க வேண்டியதுதானே!" என்றார்.

இம்முறை நான் நிலைகுலைந்து போனேன். பிரம்மஞானத்தை இந்தக் கோணத்தில் நான் பார்த்ததில்லை. இப்படிப் பார்த்தால் உண்மையிலேயே அது நன்றி மறப்பதாகவும், பொறுப்பின்மையாகவும் அல்லவா தோன்றுகிறது? நான் வேறு விதமாக வாதம் செய்யப்பார்த்தேன். "பிரம்ம ஞானம் அப்படீன்னா, இப்படியா மேலோட்டமா அர்த்தம் பண்ணிக்கறது? அதனாலே எவ்வளவோ சித்திகள், அற்புதங்கள்.."

"சித்திகள், அற்புதங்கள் அப்படீன்னவுடனே எனக்கு ஒரு விஷயம் ஞாபகத்துக்கு வருது" என்று சிரித்த ஷிரீஷ் "இது எவ்வளவு நெஜம்னு தெரியாது. விவேகானந்தர் கதைகள்லே ஒண்ணா சொல்றாங்க. அவரு ஒரு தடவை எங்கியோ போய்க்கிட்டிருக்கும்போது ஒரு நதியைக் கடக்க வேண்டியிருந்ததாம். படகு மறுகரைக்குப் போயிருந்தது. படகு எப்போ திரும்பும், நாம அக்கரை போகலாம்னு விவேகானந்தர் காத்திருந்தாராம். அப்போ அங்கே ஒரு சாமியார் வந்தாராம். பரஸ்பரம் அறிமுகப்படுத்திக் கிட்டப்புறம் விவேகானந்தர் படகுக்காகக் காத்துக்கிட் டிருக்கார்னு தெரிய வந்ததும் சாமியார் ஏக சத்தம் போட்டாரம், "இப்படி அற்ப விஷயத்துக்கெல்லாம் தவிச்சு நின்னா என்னா ஆவுறது? நீங்கதான் விவேகானந்தராச்சே! பெரிய ஆன்மீக குரு, பெரிய வேதாந்தி ஆச்சே. கேவலம் இந்த ஆத்தைக் கடக்க முடியாதா? இதோ பாருங்க,

நான் நதிமேல நடந்து காட்டறேன்னு" மிதியடிக்கட்டை போட்டுக்கிட்டு பட்டுபட்டுன்னு தண்ணி மேலே நடக்க ஆரம்பிச்சுட்டாராம். ரொம்ப நேரம் நடந்து காட்டிட்டு சாமியார் திரும்ப வந்து சவால் விடறமாதிரி, "அமெரிக்கா போயிட்டு வந்துட்டா, பெரிசா பிரசங்கம் பண்ணிட்டா யாரும் பெரிய சாமியார் ஆயிட முடியாது. அதுக்கெல்லாம் நிறைய தவம் பண்ணணும்" அப்படீன்னாராம். இந்த சாமியார் பண்ணின அற்புதத்தைப்பார்த்து விவேகானந்தர் உண்மையிலே ஆச்சரியப்பட்டுப் போயிட்டாராம். "சாமி, நீங்க இந்த சித்தியை எப்படி எங்கேயிருந்து கத்துக்கிட்டீங்க"ன்னு கேட்டாராம். சாமியார் விவேகானந்தரோட அறியாமையையும், தன்னுடைய ஆற்றலையும் நெனச்சு அப்படியே கர்வமா ஒரு புன்சிரிப்பு சிரிச்சுட்டு, "இது ஒண்ணும் சாதாரணமாக் கெடைக்கலே, இதுக்காக நான் இமயமலை குகைக்குள்ளே முப்பது வருஷம் தவம் இருந்தேன்.' என்றாராம். அதைக்கேட்டு விவேகானந்தர் கலகலன்னு சிரிச்சாராம்" என்று கூறி எனக்குக் கேள்வி கேட்க அவகாசம் கொடுத்து நிறுத்தினார்.

உண்மையிலேயே கதை விறுவிறுப்பாக இருந்தது. சரியான இடத்தில் நிறுத்தவே என் வாயிலிருந்து என்னை அறியாமலேயே வினா எழுந்தது "ஏன்? இதிலே சிரிக்க என்ன இருக்கு?"

"விவேகானந்தர் சொன்னாராம் 'ஸ்வாமி! நீங்க காட்டின அற்புதத்தைப் பாத்து நான் நெஜமாலுமே திகைச்சுப் போயிட்டேன். ஆனா ரெண்டு தம்பிடி கொடுத்தா அந்தக் கரை போயிடலாமே! இதுக்காக வாழ்க்கையிலே முப்பது வருஷங்களை வீணடிச்சுட்டீங்களே! ரெண்டு தம்பிடியிலே நடக்கற காரியத்துக்காக கொட்டிக்கொடுத்தாலும் திரும்பக் கிடைக்காத முப்பது வருஷங்களை செலவழிச்சுட்டீங்க. மிச்ச இருக்கற வருஷங்களை இந்த சித்தியைக் காட்டறதிலே செலவழிக்கப் போறீங்க, இனிமே இருக்கிற வாழ்க்கையை ஜனங்களைப் பரவசத்திலே ஆழ்த்தறதுலே செலவழிக்கப் போறீங்க. இந்த முப்பது வருஷங்களை ஏதாவது சமுதாய நன்மைக்காக செலவழிச்சிருக்கக் கூடாதா? ஜனங் களுக்கு ஏதாவது நோய் தீர்க்கற மருந்தாவது கண்டுபிடிச்சிருக்கலாமே!' அப்படீன்னாராம்." இப்படியாக கதையை முடித்துவிட்டு, ஷிரீஷ், "இந்த நிகழ்ச்சி உண்மையா பொய்யான்னு எனக்குத் தெரியாது. ஆனா மனுஷன் பட்டினியும் பிணியுமா சாவறப்போ உங்க இந்தியப் பண் பாடு மனிதகுலம் தழைக்கவேண்டும்னு பஜனை பண்ணிக்கொண் டிருந்தது என்பது நிஜம். எல்லா உயிர்களும் சமம்னு கோஷம் போட்டுக் கிட்டு பெண்களையும் சூத்திரர்களையும் வறுத்துத் தின்னுகிட்டிருந்தது. எறும்பும், யானையும் சமம்னு சொல்ற நாம் சம்புகனையும்[1], சீதையையும்

---

1 ராமாயணத்தில் வரும் ஒரு பாத்திரம். இவன் சூத்திரன். சூத்திரனாக இருந்துகொண்டு இவன் தவம் செய்ய முற்பட்டதால் ராமன் இவனைக் கொன்றான் என்று கதை.

உயிரும், உணர்வும் உள்ள ஜீவன்களாகவே மதிக்கலே. அவங்களுக்கு எவ்வளவு கொடுமை இழைச்சோம்?" என்றார்.

ஷிரீஷ் பேச்சு காதில் விழுவது சட்டென்று நின்றது. நான் பிரபாவுக்கு முன்னால் குற்றவாளியாகத் தலை குனிந்து நிற்பதாகப்பட்டது. மனிதகுல சிரேஷ்டனாகக் கருதப்படும் ராமன் தன்மனத்திற்குள் ஒரு கணமேனும் குற்றவாளியாகத் தலைகுனிந்து நிற்காமலா இருந்திருப்பான்? சீதையின் முன்னால் பதில் சொல்ல முடியாமல் எப்போதாவது நின்றிருக்க மாட்டானா? எனக்கு மூச்சுத் திணறுவது போல இருந்தது. நான் இப்போதே, இக்கணமே பிரபாவிடம் இருக்க வேண்டியிருக்க, இங்கு நின்று வம்பளந்து கொண்டிருக்கிறேனே என்று தோன்றியது. இந்த வாக்குவாதத்தை எப்படி நிறுத்திவிட்டு ஓட்டம் பிடிப்பது? ஆனால் அவர் பேசுவதில் இருந்த கவர்ச்சியின் காரணமாக எழவே மனம் வரவில்லை. அவர் மேற்கொண்டு "நம்மோட மிகப்பெரிய கஷ்டம் நம்மகிட்டே நம்ம சொந்த வரலாறு இல்லாததுதான். வேறு எந்த இனத்துக்காவது இருக்கான்னு தெரியாது. ஆனா நம்மகிட்டே இருக்கறது வரலாறு கிடையாது. வெறும் புராணம்ங்கறது மட்டும் நிச்சயம். புராணத்திலே இலக்கியமும், வரலாறும் கலந்தடிச்சு ஒரே குளறுபடியா ஆயிடுது. அதுலே உண்மையைக் கண்டுபிடிக்கறது ரொம்ப கஷ்டமாயிடுது. வரலாற்று உண்மைகளையும், நிகழ்ச்சிகளையும் இலக்கியமாக்கும்போது, அதுக்கெல்லாம் ஒரு புது அர்த்தம் கற்பிச்சுத் திரிச்சுடறாங்க. அப்புறம் ஒவ்வொரு காலகட்டத்திலும் உண்மை என்னங்கறதே தெரியமாட்டேங்குது. ஒவ்வொரு காலகட்டமும் வரலாற்றையும், புராணங்களையும் அப்பப்ப அந்த அந்தக் காலகட்டத்திலே உள்ள சூழ்நிலைகள், பிரச்சினைகளை ஒட்டியே பாக்குதுன்னு யாருக்குத் தெரியாது? அதுக்கேத்த மாதிரி மாத்துது. புது விளக்கம் தருது. அதோட மட்டுமில்லாம புது ஜீவனைப் புகுத்துது. செவிவழிச் செய்தியாப் பரவுற ஒரு உண்மை பல நூற்றாண்டுகளுக்குப் பிறகு என்ன கோலத்திலேயிருக்கும்னு நீங்களே நினைச்சுப் பாருங்க. ஒரு சின்ன நிகழ்ச்சி அங்கே நிமிஷத்திலே நாலுபேரு வாயிலே புகுந்து புறப்படும்போது என்ன வடிவம் எடுக்குதுன்னு நீங்க பாத்திருப்பீங்க. அதுவும் காவியத்திலே உருவகம், மிகைபடக்கூறல், உட்பொருள்னு என்னென்னத்தையோ திணிச்சுடறாங்க" என்றார்.

அவர் கூறியது எனக்குப் பாதி ஏறியது. பாதி ஏறவில்லை. என் மனோ நிலையை அவர் புரிந்து கொண்டார் போலும். "என் பேச்சு உங்களைப் புண்படுத்திடலையே!" என்று கேட்டார்.

"சேச்சே! ஏன் அப்படிச் சொல்றீங்க?"

"இல்லே, உங்களைப் பாத்தா ஏதோ சங்கடப்படற மாதிரி—"

"அது வந்து— அது வந்து—" என்று திக்கிய நான், "அது என்னன்னா இன்னிக்கு நான் கொஞ்சம் அவசரத்திலே இருக்கேன். வீட்டிலே

கொஞ்சம் வேலை இருக்கு. ஆனா உங்க பேச்சிலே இருக்கிற சுவாரஸ்யத்திலே வீட்டுக்குப் போக மனசு வரலே. விஷயம் புதுசா இருக்குல்லே, அதனால கொஞ்சம் அதிர்ச்சியாக இருக்கு அவ்வளவுதான்_" என்றேன்.

"அடடே, வேலையிருக்கு போகணும்னு முன்னாலேயே சொல்லியிருக்கக் கூடாதோ? நல்ல வேலை செஞ்சீங்க போங்க!" என்று அவர் எழுந்து கொண்டார், "எனக்கு கொஞ்சம் வாயடிக்கற வியாதி. உங்களுக்கு வேலை இருந்ததுன்னா சொல்லிடுங்க. நான் பெரிய வாயாடி," என்று தன்னையே கிண்டல் செய்து கொண்டவர் , "ஆமாம், உங்க ரிஸல்ட் வர்ற சமயமில்லே இது? எங்கே பாத்தாலும் அதே பேச்சாதான் இருக்கு" என்று கேட்டார்.

"அதான் பயமா இருக்கு, என்ன ஆகப்போவுதோ!" என்று உண்மையிலேயே நெஞ்சு படபடக்க நான் சொன்னேன். வறண்ட புன்னகையுடன், "என் தம்பி இந்த வருஷம் மெட்ரிக் எழுதியிருக்கான், அவனுக்கு எப்போதும் ரிசல்ட் பத்தின கவலைதான். ராத்திரியிலே தூங்குறானோ இல்லியோ அதுவும் தெரியாது. இந்தக் கோவிலுக்கு விளக்கு போடு, அந்த ஜோசியக்காரனைப் பாருன்னு அலையறான். ஒரு நாளைக்கு அனுமாருக்குப் படையல், ஒரு நாளைக்கு சிவபெருமானுக்கு அர்ச்சனை_" என்றேன்.

இப்போது திவாகர் குறுக்கிட்டான். "எனக்கு அவனைத் தெரியுமே! நானே அவனப்பத்தி உன்கிட்டே பேசணும்னு நெனச்சுகிட்டு இருந்தேன். அவன் அங்கே இங்கே கண்டபடி அலையறதைப் பாத்தேன். இரண்டுங்கெட்டான் வயசு. அவன் மேலே ஒரு கண் வச்சுக்கணும், இல்லேன்னா ஏதாவது கெட்ட வழிக்குப் போயிடுவான். அவன்கூட இருந்த பசங்க அவ்வளவு நல்ல பசங்களா எனக்குத் தெரியலே."

"நானும் பாத்துக்கிட்டுதான் இருக்கேன். திவாகர். ஆனா இதுலே நான் ஒண்ணும் செய்யறதுக்கில்லே. நான் உன்கிட்டே என்னத்தைச் சொல்றது_?" என்று நான் தலைகுனிந்து கொண்டேன். பிரபாவிடம் அவன் மரியாதையில்லாமல் நடந்து கொண்டது எனக்கு நினைவுக்கு வந்தது. ஷிரீஷுக்கு வணக்கம் செலுத்திவிட்டு நான் வெளியே வந்தேன்.

திவாகரும் உடன் வந்தான். வெளியே வந்தவுடன் அவன், "நீங்க நாகரிகத்தையும், பண்பாட்டையும் அக்குவேற ஆணிவேறா ஆக்கிக்கிட்டிருந்தப்ப நான் உன் பிரச்சினைக்குத் தீர்வு கண்டுபிடிச்சுட்டேன்" என்று கூறினான்.

"அது என்ன?" இன்று ஏதோ தேவதூதன் போல என் பிரச்சினைகளைத் தீர்த்துக் கொண்டே போகிறானே என்று எண்ணமிட்டேன். உண்மையிலேயே இவன் இன்று எவ்வளவு பெரிய பிரச்சினையைத் தீர்த்து வைத்துவிட்டான்.!

"நாலரை, நாலேமுக்காலுக்கு இங்கே ஒரு வண்டி வருது. ஏழெட்டு நிமிஷத்திலே ராஜாமண்டி போயிடலாம். அங்கிருந்து ஒரு ஓட்டம் அவ்வளவு தான்."

“ஆமாம்ப்பா, இது எனக்குத் தோணவேயில்லியே” என்று நான் துள்ளிக் குதித்தேன். இந்தப் பிரச்சினை இவ்வளவு எளிதில் தீர்ந்துவிட்டதே?

“ஆனா போக வர தினமும் இரண்டணா ஆகும்” என்று திவாகர் மீண்டும் கவலைப்படத் துவங்கினான்.

நான் அவன் கையைக் குலுக்கிவிட்டு, “அட போப்பா, ஏன் அநாவசியமா போட்டுக் குழப்பிக்கறே! டிக்கெட் யாரு வாங்கப்போறா, டிடிக்கு என்ன டிடியோட தாத்தாவுக்கே கடுக்கா கொடுத்துட மாட்டேன்?” என்றபடி நான் கடகடவென்று சிரித்துக் கொண்டே விடைபெற்றேன்.

ஒரு புடவை பன்னிரெண்டு ரூபாய் என்றவுடன் என் உற்சாகம் எல்லாம் வடிந்துவிட்டது.

குறைந்தது இரண்டு புடவைகளாவது வாங்கிக் கொண்டு போக வேண்டும் என்று நினைத்திருந்தேன். சரி, ஒன்றே ஒன்று வாங்கிக் கொண்டாலும் போயிற்று, அதுவே பெரிதுதான். புடவை பார்சலை இந்தக் கைக்கும் அந்தக் கைக்கும் தூக்கிப்போட்டுப் பந்தாடியபடி நடந்தேன். கால் தரையிலேயே பாவவில்லை. பனித்தரையாக இருந்தால் சர்ரென்று வழுக்கிக் கொண்டு நொடியில் போய்விடலாமே என்று தோன்றியது. புடவையைப் பிரபாவிடம் கொடுத்தால் அவள் எப்படித் துள்ளிக்குதிப்பாள் என்று எண்ணமிட்டேன். நான் காற்றில் மிதந்து செல்வது மாதிரி உணர்ந்தேன். இடையிடையே தனக்குத்தானே பேசிக் கொண்டும் சிரித்துக் கொண்டும் சென்று கொண்டிருந்தேன். திடீர்திடீர் என்று விரல்களை மடக்கிக் கணக்குப் போடுவேன். பிறகு சுயநினைவு வரப்பெற்றவனாகத் தலையை உலுக்கிக்கொண்டு உதடுகளை இறுக்கிக் கொண்டு நடப்பேன். என் பைத்தியக்காரத்தனத்தைப் பார்த்து வாய் விட்டே சிரிப்பு வந்தது. கடவுள் புண்ணியத்தில் ரிஸல்ட்டும் நல்ல விதமாக வந்துவிட்டால் கொண்டாட்டம்தான். எல்லாப் பிரச்சினையும் தீர்ந்துவிடும். அப்புறம் எம்.ஏ. படிப்பதில் என்ன கஷ்டம்?

கடவுள் புண்ணியத்தில் என்பதைக் கேட்டால் ஷிரீஷ் அதையும் பிலுபிலுவென்று பிடித்துக் கொள்வார். ஊக்கும், அவருக்கென்ன தெரியும். ஆனால் அவர் பேசுவதில் உண்மை இல்லாமல் இல்லை. ஆனால் கலாச்சாரம், பண்பாடு, மதம் இதெல்லாம் இல்லாமல் என்ன செய்ய முடியும்? மனிதத்தன்மை என்ற ஒன்றைத் தவிர வேறு மதங்கள் கிடையாது என்கிற காலம் வந்துவிட்டதாம். நம்முடைய மதம் எவ்வளவு தொன்மையானது? போயும் போயும் இத்தனூண்டு விஷயத்திற்கு இரண்டு மணி நேரம் வாதம்! நான் பிரபாவிடம் போய்ச் சேரத் துடிக்கிறேன். இவரானால் வாதம் பண்ணிக்கொண்டே போகிறார்! பாவம், அவள்தான் எவ்வளவு கஷ்டங்கள் அனுபவித்துவிட்டாள். இதைத்தான் முதல்முதலாக அவளுக்கு நான் தரப்போகிறேன்.

ஆனால் விரைவிலேயே என் மகிழ்ச்சி கவலையாக மாறியது. இதை எப்படி அவளுக்குக் கொடுப்பது? இதைப்பற்றி யோசிக்கவே யில்லையே! இது உண்மையிலேயே பெரிய பிரச்சினையாயிற்றே! எல்லோர் முன்னிலையிலும் கொடுத்தால் நன்றாக இருக்காது. அம்மாவும், அண்ணியும் வேறு தப்பாக எடுத்துக் கொள்வார்கள். ஒன்று செய்யலாம், புடவையை நேரே அம்மாவிடம் கொடுத்து அம்மா உனக்காகத்தான் வாங்கினேன் என்று சொல்லிவிடுவோம். புடவை விஷயமாக இப்போதுதானே இவ்வளவு களேபரமும் நடந்தது. அம்மா வுக்குப் புரிந்துவிடும். அவள் தானாகவே பிரபாவுக்குக் கொடுத்து விடுவாள். இதுதான் சரி. இல்லாவிட்டால் ஊர்ப்பட்ட பிரச்சினைகள் வரும். எங்கள் வீட்டில் சின்னச்சின்ன விஷயத்திற்கெல்லாம் எவ்வளவு ரகளை ஆகிவிடுகிறது! ஆனால் பாவம், அவளும்தான் என்ன செய்வாள்? வீட்டு நிலைமையும் அப்படித்தானே இருக்கிறது? அண்ணா நாளெல்லாம் ஓடாய்த் தேய்ந்து சம்பாதிக்கிறார். சே, இதுவும் ஒரு சம்பாதிப்பா? எதோ வீடு சொந்தமாக இருக்கிறதோ பிழைத்தோமோ? வாடகை வீடாக இருந்தால் அதுவேறு பிரச்சினை. மாதாமாதம் என்னத்தைக் கெட்டாலும் முப்பது ரூபாய் அழ வேண்டியிருக்கும், நியாயமாகப் பார்க்கப்போனால், என் முதல் வருமானத்தில் வாங்கிய இந்தப் புடவையை அம்மாவுக்குத்தான் தரவேண்டும். கொடுத்தால் எவ்வளவு சந்தோஷப்பட்டுப் போவாள்.

ஆனால் வீட்டு வாசற்படி கண்ணில் பட்டதும் இந்த உணர்வுகள் எல்லாம் காற்றோடு கரைந்து போயின. நுழைந்தவுடன் கும்வர் "அண்ணா, இது என்ன?" என்று கேட்டான். நான் சாதாரணமாக, "உன் அண்ணிக்குப் புடவை, அவளிடம் புடவையே இல்லை" என்று சொல்லிவிட்டேன். மேற்கொண்டு எதுவும் கேட்காமல் அவன் போய் விட்டான். நான் பார்சலை நேரே போய் அம்மாவின் மடியில் போட்டேன். "இது என்ன?" என்று அவள் கேட்டாள். நான் அன்புடன் "அம்மா உங்களுக்கு புடவை வாங்கியாந்தேம்மா" என்றேன். அதை அம்மா தனக்கு வைத்துக்கொள்ள விரும்பினால் நான் ஒன்றும் சொல்லமாட்டேன் என்று உண்மையிலேயே மனதில் எண்ணம் தோன்றியது. பிரபாவுக்கு இன்னொன்று வாங்கிவந்தால் போயிற்று. அதற்குள் சட்னி அரைத்துக்கொண்டிருந்த பிரபா தென்பட்டாள். இவளுக்குத்தான் அம்மாவைவிட மிகவும் தேவை. முதல் சம்பளம் வாங்கின கையோடு பிரபாவுக்குக் கட்டாயம் வாங்கி வரவேண்டும். இதை அம்மா வைத்துக்கொண்டால் வைத்துக் கொள்ளட்டும்.

"ஹுக்கும், எனக்கு வாங்கிக்கிட்டு வரமேட்டே? உன் பெண்டாட்டிக்காக வாங்கி வந்தேன்னு சொல்லேன்" என்று அம்மா புன்னகையோடு சொன்னாள். அம்மா பார்சலைப் பிரிக்க அண்ணியும் குழந்தையைத் தூக்கிக்கொண்டு வந்துவிட்டாள்.

"புடவை பிரமாதமா இருக்கே" என்று அம்மாவும், அண்ணியும் ஏக காலத்தில் கூறினர். அதற்குள் கும்வர் வந்து சற்றுநேரம் பார்த்துக் கொண்டிருந்துவிட்டு "அண்ணிக்காக வாங்கிக்கிட்டு வந்திருக்காரு" என்றான்.

"ஆமாம், ஆமாம், இது கூடவா எங்களுக்குத் தெரியாது?" என்று அம்மா போன ஜன்மத்திலேயே இது தெரியும் என்பதுபோலச் சொன்னாள்.

"இல்லே, அண்ணனே வாசல்லே என்கிட்டே சொன்னாரு" என்று தான் சொன்னதை கும்வர் மேலும் மெய்ப்பித்தான்.

அம்மாவின் குதூகலம் சட்டென்று மறைந்தது. நான் கும்வரைத் தீயெழ முறைத்தேன். கும்வர் இருட்டில் பார்க்கவில்லையோ அல்லது அம்மாவிடம் என்னைப் பற்றிக் கோள்மூட்டும் ஆர்வத்தில் கவனிக்க வில்லையோ தெரியவில்லை. சம்பிரதாயமாக இரண்டொருமுறை புரட்டிப் பார்த்துவிட்டு 'இந்தா' என்று என்னிடம் நீட்டினாள்.

"நீயே வச்சுக்கம்மா, என்கிட்டே ஏன் கொடுக்கிறே" என்றேன் நான். எனக்கு என்மீதும் கும்வர் மீதும் கோபமாக வந்தது. "நீயே அவளுக்குக் குடுத்துடு" என்று சொற்கள் நாக்குவரை வந்துவிட்டன. ஆனால் நான் மௌனமாகவே இருந்துவிட்டேன்.

"எவளுக்காக வாங்கிக்கிட்டு வந்தியோ, அவகிட்டே நேர நீயே குடுத்துட வேண்டியதுதானே! என்னை ஏன் நடுவிலே இழுக்கறே?" அம்மா பேச்சில் இருந்த கடுமையில் நான் இப்போது புடவையை வாங்கிக் கொண்டே விட்டேன். மௌனமாக மேலே கட்டிலில் போய்ப்போட்டுவிட்டு வந்தேன். எல்லா உற்சாகமும், மகிழ்ச்சியும் வடிந்து போய்விட்டன.

அன்றே சாப்பிடும்போது நான் அண்ணாவிடம், "அண்ணா, நான் பி.ஏ. சேரலாம்னு இருக்கேன்" என்று சொல்லிவிட்டேன். எங்கே ரகளை ஆகிவிடப்போகிறதோ என்று அச்சமாக இருந்தது.

மென்றுகொண்டிருந்த அண்ணாவின் வாய் நின்றது. என்னை அடையாளம் கண்டுகொள்ள முயல்பவர் போல சிறிது நேரம் என்னையே பார்த்துக் கொண்டிருந்தார். பிறகு, "அப்பாவிடம் கேட்டுட்டியா" என்றார்.

"நீங்க சொன்னா சுலபமா ஒத்துக்குவாரு" என்று கூறிய நான் அவர் கோபித்துக் கொள்ளாததில் சற்று துணிவு வரப்பெற்றவனாக, "அதுலே என்னன்னா, ஒரு டிகிரியில்லாம நல்ல வேலை கிடைக்க மாட்டேங்குது. பெரிய பி.ஏ., எம்.ஏ. எல்லாம் வேலைக்குக் கிடந்து அலையறாங்க" என்றேன்.

அடிபட்ட குரலில், "அது சரிதான். ஆனா டிகிரி படிக்க செலவாகுமே! பி.ஏ. படிப்பாச்சே! அமர் வேற பாஸ் பண்ணுவான்னு தோணலே!" என்றார் அண்ணா.

நான் சற்று உறுதியான குரலில், "நான் என் பி.ஏ. செலவை பாத்துக்குவேன். அதைப்பத்திக் கவலைப்பட வேண்டாம்" என்றேன். வேலை கிடைத்த விஷயம் நாக்குவரை வந்து நின்றுவிட்டது.

"ஆனா, சமர், நீ மட்டுமில்லியே, மத்தவங்களும் இருக்காங்களே," அவர் கூறியது பிரபாவைக் குறித்து என்பது தெளிவு.

"அதையெல்லாம் நான் பாத்துக்கறேன் அண்ணா" என்று பிடிவாதமாகவும், கெஞ்சலாகவும் நான் சொன்னேன்.

"உன் இஷ்டம், உனக்கு சரின்னு படறதைச் செய். ஆனா நான் ஒண்ணும் அப்பாகிட்டே சொல்லமாட்டேன். சும்மாவே சள்ளு புள்ளுன்னு விழுவாரு" என்று அண்ணா மனத்தாங்கலுடன் மௌனமாகி விட்டார். ஆயினும் இன்னும் அப்பாவின் கோபத்தை நான் எதிர் கொண்டாக வேண்டுமே! விரைவிலேயே அந்த நேரமும் வந்தது.

புடவை வாங்கி வந்ததில் பிரபா ஒரு பக்கம் சந்தோஷப்பட்டாள், ஒரு பக்கம் கோபித்துக் கொண்டாள். "நல்லாதான் பொடவை வாங்கிக் கிட்டு வந்தீங்க. அம்மாவுக்கு கோபம் மூட்டிட்டீங்கல்லே" என்றாள்.

"நான் என்ன செய்யறது? என் மேலே தப்பு இருந்தா சொல்லு" என்று கூறிய நான், "அம்மா இதை எடுத்துக்கிட்டாங்கன்னா உனக்கு வேற வாங்கிட்டு வரலாம்னுதான் இருந்தேன்" என்று உண்மையைக் கூறினேன்.

"ஓஹோ, பெரிய பணக்காரரா ஆயிட்டீங்க போலிருக்கே, என்ன காசு, பணம் ஏதாவது கீழே கிடந்து கண்டெடுத்தீங்களா" என்று பிரபா கிண்டலாகக் கொஞ்சினாள்.

நான் ஏதோ சாதாரண விஷயத்தைச் சொல்வது போல, சொல்ல மிகவும் பிரயாசைப்பட்டு "எனக்கு வேலை கிடைச்சுடுச்சில்ல.." என்று கூறினேன்.

"ஹை! அப்படியா!" என்று பிரபா துள்ளிக் குதித்தாள். அவளுடைய கண்கள் ஆச்சரியத்தாலும், மகிழ்ச்சியாலும், ஆர்வத்தாலும் விரிந்தன. "ஆனாலும் நீங்க ரொம்ப மோசம். வாயைத் திறந்து சொல்லாம கமுக்கமாக இருக்கீங்களே! ஒண்ணும் பெரிய விஷயமே இல்லேங்கற மாதிரி சாவகாசமா சொல்றீங்களே!"

அவளுடைய ஆர்வத்தையும், துடிப்பையும் நான் ரசித்தேன். ஆனாலும் செயற்கையான அலட்சியத்துடன், "ஊம், இதிலே என்ன பெரிய விஷயம்! சொல்லிக்கிட்டா போச்சுன்னு இருந்தேன்!" என்றேன்.

பிரபாவின் ஒவ்வொரு அணுவிலும் மகிழ்ச்சி பீறிட்டுக் கொண்டிருந்தது. மகிழ்ச்சியில் அவள் பூங்கொத்துப்போலக் குலுங்கியதைக் காணும்போது எனக்கு உண்மையிலே இது எவ்வளவு பெரிய விஷயம் என்றுபட்டது. நான் உணர்ச்சிவசப்பட்டு அவளைத் தழுவி அவள் முகத்தில் முத்தமாரி பொழிந்தேன். "ஆமாம் பிரபா, ரொம்ப சந்தோஷமான விஷயம்தான். நான் சும்மா உன்கிட்டே

விளையாடினேன். எனக்கும் மேலே எப்படி படிக்கிறதுன்னு கவலையாகத்தான் இருந்தது-."

மூச்சு சீரடைந்தபின் பிரபா, "என்ன சம்பளம்?" என்று கேட்டாள்.

"அதைக் கேக்காதே, ஏதோ படிக்கறதுக்கு ஆவுற அளவு கிடைக்கும். அவ்வளவுதான்! இது மட்டும் நிலைச்சுதுன்னா கொறஞ்சது எம்.ஏ. படிச்சுடுவேன்" என்றவன் தொலைதூர எதிர்காலக் கனவுகளில் ஆழ்ந்தேன்.

பதைப்புடன், அவள் என் தோள்களை உலுக்கி "என்னதான் சம்பளம் சொல்லுங்களேன்?" என்றாள். அவளுடைய பதற்றம் எனக்குள் கிளுகிளுப்பூட்டியது. நான் வசதியாக அவள் மடியில் படுத்துக் கொண்டேன். அவள் பேச்சே காதில் விழாதவன் போலக் கைக்குக்கீழாக முன்னால் வந்திருந்த அவள் சடையில் விஷமம் செய்து கொண்டே நான்பாட்டுக்கு பேசிக்கொண்டே போனேன். "முதல் வேலை காலேஜில் சேர்றதுதான், அப்புறம் எப்படியாவது பீஸ்"ம் எக்ஸெம்ஷன் வாங்கிடுவேன். எப்படியாவது உனக்கு நல்ல துணிமணி வாங்கிட்டு வருவேன். ரெண்டு புடவை, ரவிக்கை, குளிருக்கு கோட்டு_"

"கேக்கறதுக்கு பதில் சொல்லாம ஊர்ப்பட்ட வெட்டிப்பேச்சு பேசறீங்களே!" என்று அவள் மேலும் எரிச்சல் பட்டாள். அவள் கையில் என் கை இருந்தது. அவள் என் விரலைக் கடித்து "இப்போ சொல்றீங்களா இல்லியா?" என்றாள். மெல்ல மெல்லக் கடியை பலமாக்கினாள்.

"வீட்டிலேர்ந்து எதுவும் வாங்கிக்க வேண்டாம். வேண்டியதை நாமளே வாங்கிக்கிட்டு வந்துடலாம்" என்று நான் மேலும் பேசிக் கொண்டே போனேன்.

"சொல்லுங்க... சொல்லுங்க_" என்று அவள் கடியை இறுக்கிக் கொண்டே போனாள்.

"ஸ்..ஸ"_ அடே விடு, விரலையே கடிச்சுத்தின்னுடுவே போலிருக்கு" என்று நான் வலியில் கதறினேன்.

"பின்னே ஏன் சொல்ல மாட்டேங்கறீங்க?" என்று சற்றே குற்ற வுணர்ச்சியுடன் அவள் கேட்டாள். விரலில் பல் பதிந்திருந்தது. நான் பொய்க் கோபத்துடன், அவள் முதுகில் ஒரு குத்து குத்தி "விட்டால் கடிச்சுத் தின்னுடுவே போலிருக்கே கழுதை" என்றேன். உடனேயே கோபித்துக் கொள்ளப்போகிறாளே என்கிற எண்ணமும் வந்தது. சின்னக் குழந்தைகள் போல சண்டையிட்டுக் கொள்வதை நினைத்து சிரிப்பும் வந்தது. அதை அடக்கிக்கொண்டு எல்லாவற்றையுமே வேடிக்கைப் பேச்சாக்கி, "மூணு குழந்தைகளுக்குத் தாயாகிற வயசாச்சு_ இன்னும் சின்னக் குழந்தைன்னு நினைப்பு, பல்லைப்பாரு எலி மாதிரி கூர் தீட்டி வச்சிருக்கா."

அவள் ஊடல் கொண்டவளாக என் தலையை மடியிலிருந்து

இறக்கி விட்டாள். "ரெண்டரை மணங்கு பாரத்தை சுமக்கறதோட உதையும் வாங்கிக்கணுமோ ?" என்று செல்லமாக சிணுங்கினாள். நான் குத்தியது வலித்திருக்குமோ என்று நினைத்தேன்.

நான் உடனே சமாதானத்திற்கு வந்துவிட்டேன். "சரி.. சரி.. சொல்றேன். ஆனா முதல்லே மடியிலே தலையை வச்சுப்படுக்க விட்டாதான்." பிறகு பெரிய ராஜா மாதிரி அவள் மடியில் தலை வைத்து விபரம் அனைத்தையும் சொன்னேன்.

அன்றிரவு வெகுநேரம் வரை நாங்கள் பேசிக் கொண்டிருந்தோம். என் கற்பனை சிறகடித்துப் பறந்தது. மீண்டும், மீண்டும் இருந்தாற் போலிருந்து நான் என் கனவுகளை விவரித்துக் கொண்டிருந்தேன். எம்.ஏ.யில் நல்ல மார்க் வாங்கித் தேறிவிட்டால் எங்காவது பேராசிரியராவது நிச்சயம். "எனக்கென்ன குறை ? தான் படிக்காட்டியும் 'புரொபசர் வீட்டுக்கார அம்மா'ன்னு பெயர் வாங்கப்போறே! புரொபசர் வீட்டுக்கார அம்மா மூஞ்சியைப் பார் !" என்று அவளைச் சீண்டினேன்.

பிரபா கோபித்துக் கொண்டாள். "ஏன், படிச்சவளா ஒருத்தியைக் கட்டிக்கிட்டு வந்துடறதுதானே! பொம்பளைங்களும் உங்ககிட்டே படிப்பாங்கல்லே, அவங்களுக்குள்ளேயே ஒருத்தியைப் பொறுக்கி எடுத்துக்குங்க."

"ஏன், நம்ம வீட்டு அம்மாவையே படிக்க வச்சுட்டா ?" என்று நான் அவளைத் தாஜா செய்தேன்.

அவள் உடனே கோபத்தை மறந்து, "ஆமாம், இப்பவே சொல்லி விட்டேன், அப்புறம் அப்படி இப்படின்னு சொல்லக் கூடாது. நானும் காலேஜிலே சேருவேன்."

"உனக்கு என்ன இஷ்டமோ செய்யலாம், பிரபா! நீதான் வீட்டுக்கு எஜமானி, உன்னை யார் வேண்டாம்னு சொல்லப்போறா ?" என்றவன் கனவுகளில் சூழ்ந்திருந்தேன். "நம்மகிட்டே ஒரு நல்ல லைப்ரரி இருக்கும், அதிலே புதுப்புது புஸ்தகம் எல்லாம் கொண்டு வந்து சேத்துக்கிட்டே இருப்போம்.. ரெண்டு மூணு பத்திரிக்கையும் வரவழைக்கணும்."

"ரேடியோ ? ரேடியோ இல்லேன்னா வீடே சூன்யமாதான் இருக்கும் ?"

"ஏன் வீடு சூன்யமாக இருக்குங்கறேன் ?" என்று நான் விஷமமாகக் கூறினேன்" அதுக்கெல்லாம் ஏற்பாடு செஞ்சுடமாட்டமா ? அதுக்குள்ளே நம்மகிட்டே நடமாடும் ரேடியோவே வந்துடாதா ?"

பிரபா வெட்கத்தில் சிவந்தாள். அப்போது எதுவுமே கஷ்டமான ஒன்றாகத் தெரியவில்லை. பிரபாவின் மென்தோளில் தலைவைத்துப் படுத்திருக்கும்போது எனக்கு உலகத்தின் பெருங்கஷ்டங்களும் சிறிதாகவே தோன்றின. எந்தக் கஷ்டத்தையும் என்னால் ஜெயிக்க முடியும் என்று தோன்றியது. நான் வகுக்கும் திட்டங்களை அவள் சீர்திருத்தினாள்.

பிரபா சொல்வதில் நான் குற்றம் குறை கண்டுபிடிப்பேன். அன்றிரவு எங்கள் வருங்கால பங்களாவின் தோட்டத்துப் பூக்களிலிருந்து வாசலில் மாட்டும் பெயர்ப் பலகைவரை எல்லா விஷயங்களையும் நாங்கள் பேசினோம். எல்லாம் எவ்வளவு அர்த்தமில்லாத பேச்சுக்கள் என்று தானாகவே நினைவு வந்துவிட்டாலோ, அல்லது எங்களில் ஒருவர் மற்றவருக்கு நினைவுபடுத்தி விட்டாலோ, "ஆமாம், அரசமரத்தடியை சுத்தினவுடனேயே அடிவயத்தைத் தடவிப் பார்த்தாளாம்!" என்று மௌனமாகிவிடுவோம். ஆனால் சிறிது நேரம் கழித்து மீண்டும் புதிதாக அதே பேச்சை ஆரம்பித்துவிடுவோம். எங்கள் பேச்சு, "கொஞ்சம் நடுவாலே கஷ்டம் அவ்வளவுதான். அதுக்கப்புறம் கவலை கிடையாது. இதைக் கொஞ்சம் தம் பிடிச்சு சமாளிச்சுட்டா அப்புறம் உன்னை ராணி மாதிரி வச்சுப்பேன் பிரபா" என்று நான் கூறுவதில் வந்து முடிவது வழக்கம். அதற்கு உலகத்துக் கஷ்டங்களையெல்லாம் பொறுத்துக் கொள்வதாக அவள் ஆறுதல் கூற நான் நன்றியுணர்ச்சியினாலும், நம்பிக்கையுணர்ச்சியினாலும் மனம் பொங்குவேன். இந்தக் கற்பனைச் சித்திரங்களில் எங்கள் வீட்டு மனிதர்கள் எவரையும் சேர்த்துக் கொள்ளவில்லையே என்று நினைவு வந்தது. உடனே, "ஒரு தம்பியை நான் என்னோட வச்சுக்கிட்டுப் படிக்க வைக்கப் போறேன். அமர் வேண்டாம். அவன் மரியாதை தெரியாத பயல். கும்வர் நல்லவன். அவன் கூப்பிட்டா நம்மோட வந்தும் விடுவான். அம்மாவும், அப்பாவும் வீடு வாசலை விட்டுட்டு எங்கே வரப்போறாங்க? அப்பப்ப வந்து போவாங்க, எப்படியோ அண்ணா பாரம் கொஞ்சம் கொறயும்" என்றேன். பிரபா ஒன்றும் சொல்லவில்லை.

அன்றிரவு கனவுகள் பொங்கி உதடுகள் வழியாகப் பிரவகித்து அலை மோதின. அன்றிரவு எங்கள் இருவரின் மனங்களும் ஒன்றாகி வானவில்லாய் வண்ண ஜாலம் காட்டின. அந்த வானவில் நிகழ் காலத்தையும் எதிர் காலத்தையும் இணைக்க, நாங்கள் கைகோத்து அதன் மீது பவனி வந்தோம். வானம் முழுவதும் வண்ண விளக்குகளாய் ஒளிர்ந்தன.

நாளை ஞாயிற்றுக்கிழமை, போய் வேலையைப் பார்த்து ஓரளவு புரிந்துகொள்வது என்றும் பிறகு வீட்டில் விவரங்கள் சொல்வது என்றும் ஆனால் மேலே படிப்பது என்கிற நிபந்தனையின் பேரில்தான் திவாகர் வேலை வாங்கிக்கொடுத்திருக்கிறான் என்று தெளிவாகச் சொல்லிவிடுவது என்றும் தீர்மானித்தேன். படுக்க முற்பட்டபோது தான் வேலை வாங்கிக் கொடுத்தவனைப்பற்றி பிரபாவுக்கு ஒன்றுமே சொல்லவில்லையே என்று நினைவு வந்தது. ஷிரீஷ் பற்றி வேறு சொல்லவேண்டும்.

காலையில் எழுந்தவுடன், "பிரபா, ஒரு நாள் நீ திவாகர் வீட்டுக்கு வரணும். அவன் எத்தனையோ தடவை சொல்லிவிட்டான்" என்று கூறி

அன்று சினிமாவுக்குப்போன விஷயத்தைச் சொன்னேன். அன்று பிரபா பிறந்தகம் போயிருக்கிறாள் என்று சொல்லிவிட்டதையும் கூறினேன். கிரணைப் பற்றியும் சொன்னேன்.

கிரண் முன்னால் போவது என்பதைக் கற்பனை செய்தே பிரபா கூனிக்குறுகிப் போனாள். "நான் எப்படி போறது? நான் வீட்டிலே செய்ய வேண்டிய வேலைகளைத்தான் நீங்க பாக்கறீங்களே!" என்றாள்.

"நீ என்கூட வர்றே, அவ்வளவுதான், வீட்டு வேலைதான் எப்பவும் இருக்குமே. சரி, சரி, அதுக்காக இப்போ பிடிச்சே மண்டையை ஒடைச்சுக்க வேண்டாம். ஆனா சீக்கிரமே ஒருநாள் போகணும். ஷிரீஷோட தங்கையையும் ஒருநாள் போய் பாத்துட்டு வரணும்."

"யார் தங்கையை?" என்று திடுக்கிட்டுக் கேட்டாள் பிரபா.

பிறகு நான் வெகுநேரம் ஷிரீஷ் பற்றி - எம்ப்ளாய்மெண்ட் எக்ஸ் சேஞ்சில் சந்தித்ததிலிருந்து இன்றுவரை விவரித்துக் கொண்டிருந்தேன்." நெஜமாலுமே பிரபா, அவர் ஒவ்வொரு விஷயத்தையும் அலாதியான முறையிலே பாக்கறதைப் பாத்து எனக்கு ஒரே ஆச்சரியமா இருக்கு. அவர் எதையும் நம்பி எடுத்துக்கவே மாட்டேங்கறாரு. எதைப் பாத்தாலும் கிழிகிழின்னு கிழிக்கறாரு. நம்மகிட்டே நம்ம சரித்திரமும் கெடயாதுங்கறாரு. நம்பகிட்டே இருக்கிறதெல்லாம், மதம், குருட்டு நம்பிக்கை, காவியக் கற்பனைகள் இதெல்லாம் நிரம்பிய புராணம் தானாம். இல்லேன்னா ராஜாக்களோட சன்மானத்திலே வயிறு வளக்கற அரச சபைக் கவிஞர்கள் எழுதி வச்ச அரச துதிகள்தானாம். அதிலே அஞ்சு ஊர் ராஜாவை அவனியெல்லாம் கட்டியாளும் ராஜ ராஜன்னு வர்ணிச்சு வச்சிருப்பாங்களாம்! சாஸ்திரங்கள், அப்படீங்கற பேர்ல நம்மகிட்டேஇருக்கிற புஸ்தகங்கள்ல விதிமுறைகளும், சட்டங்களும் மொதல்லே எழுதி வச்சிட்டதாகவும், மனித சமுதாயம் பிற்பாடு வந்ததாகவும் எழுதியிருக்காம். மனுஷனே இல்லாதப்போ சட்டம் போட்டது யார், எழுதி வச்சது யார்னு சொல்லுங்கன்னு கேக்கறார். இப்போ மனுஷனுக்கு ஹிந்து மதம், இஸ்லாம், கிறிஸ்தவ மதம் எதுவும் தேவையில்லையாம். மனிதத் தன்மைன்னு ஒரே தர்மந்தான் வேணுமாம்."

என் பேச்சு நடுவில் தடைபட்டது. யாரோ ஓங்கி உதைத்தது போல ஒரு இடி இடித்தார்கள். எங்களுக்கு இடி விழுந்தது போல் ஆயிற்று. வாரிச் சுருட்டிக் கொண்டு எழுவதற்குள் வெளியே இரைச்சல் ஆரம்பித்துவிட்டது. என்ன ஆயிற்று என்று முதலில் புரியவில்லை. பிறகு அப்பா போட்ட சத்தம் தெளிவாகக் கேட்டது. அக்கம் பக்கத்தினர் காதில் விழுமே என்ற கவலையே இல்லாமல் அவர் சத்தம் போட்டுக்கொண்டிருந்தார். பிரபா தன் உடைகளைச் சரிசெய்ய ஆரம்பிக்க நான் தடுமாறிய வண்ணம் முட்டிக்கால் போட்டு கதவிடுக்கு வழியே வெளியே பார்த்தேன். அப்பா ஒரு பக்கம் நின்று சத்தம் போட்டுக் கொண்டிருந்தார். "அதென்னடா நான் பாக்காத வாலிபம்

இவனுக்குத் தனியா வந்துட்டுது? ராத்திரி, பகல் பாக்காம பொண்டாட்டியே கதின்னு கெடக்கறானே! வீட்டிலே இரண்டு சின்னப்பசங்க இருக்காங்க, பெரியவங்க, மூத்தவங்க இருக்காங்க. எதை யாவது கொஞ்சம் நெனச்சுப் பாக்கவேணாம்? பத்து மணியாவுது, ஐயாவுக்கு இன்னும் விடியவேயில்லை. அப்படியென்ன வெக்கங்கெட்டுப் போய் குலாவச் சொல்லுது? ராத்திரி பூராதான் ஹி-ஹின்னு கூத்தடிச் சிங்களே, இன்னும் என்ன? வெக்கமாயில்லே? ஊர் என்ன சொல்லும்னு யோசிக்க வேண்டாம்? இந்தப் பெண்டாட்டி மோகத்திலே கொள்ளி வைக்க. பேசாம இருந்தப்போ ஏதோ சிங்கத்தைக் கண்டவன் மாதிரி மிரண்டான். பேச ஆரம்பிச்சப்புறம் அவளையே சுத்தி.. சுத்தி வரான்.. வீடுபூராவும் குளிச்சு முடிச்சு வேலையெல்லாம் ஏறக்கட்டியாச்சு இங்கே இன்னும் சரசமாடிக்கிட்டு இருக்காங்க."

பீரங்கிக் குண்டு வந்து நடுவில் விழுந்தது போல திடுக்கிட்டுப்போய் நாங்கள் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டு நின்றோம். இப்போது என்ன செய்வது? மெல்ல எட்டிப் பார்த்தேன். அப்பாவின் முழக்கம் மடைதிறந்த வெள்ளமாகப் பாய்ந்து கொண்டிருந்தது. "இந்த லட்சணத்திலே மேலே படிக்கப் போறானாம், பெரிய தொரை படிச்சு கிழிச்சிட்டாரில்லே.. தடிப்பய.."

ஓஹோ, இரவு புடவை வாங்கி வந்தது, மேலே படிக்கப்போவதாகச் சொன்னது, எல்லாம் அப்பாவுக்குத் தெரிந்துபோய்விட்டது. இரைந்து முடித்து அப்பா போய்விட்ட பின்னர் கதவை சற்றே திறந்து பயந்து கொண்டே எட்டிப் பார்த்தாள் பிரபா. அடங்கி ஒடுங்கி ஓசைப்படாமல் கீழே நழுவினாள். எல்லோர் முகத்திலும் விழிப்பதற்குத் துணிவை ஒன்று திரட்டிக் கொண்டிருந்தேன்.

ஏதோ மாபெரும் ஒழுக்கக் கேட்டைச் செய்யும்போது கையும் களவுமாகப் பிடிபட்டுவிட்டதுபோல இருந்தது.

# 7

இரண்டே நாட்களில் என்னைப் பொறுத்தவரை என் வீடு அடியோடு மாறிவிட்டது. ஒவ்வொருவரும் சற்று புதிய முறையில் பழக ஆரம்பித்து விட்டார்கள். நானே இதைச் சற்று உணர்ந்தாலும் இதை முதன்முதலில் வாய்விட்டு சொன்னது பிரபாதான்.

அன்று வீடு திரும்பத் தாமதமாகிவிட்டது. பயந்துகொண்டே வீட்டில் காலடி எடுத்து வைத்தேன். அப்பா எதிரே வந்துவிட்டார். கூலிக்காரன் தலையில் விறகுச் சுமையேற்றி அழைத்து வந்து

கொண்டிருந்தார். பையில் கறிகாய்கள். விறகு, கோதுமை வாங்கப் போனால் கையோடு பையும் கொண்டுபோய் ஏதோ ஒரு கறிகாய்க் கடைக்காரனின் மிச்ச மீதிக் கறிகாய்களை மலிவாக அள்ளிப்போட்டுக் கொண்டு வருவது அவர் வழக்கம். வீட்டில் சும்மா இருப்பதால் விறகு, கோதுமை, மற்றும் வீட்டுச் சாமான்களை அவர்தான் வாங்கி வருவார். இதையெல்லாம் வாங்கிவருவது யார் என்பதில் உடன்பிறந்தோராகிய எங்களுக்குள் அவ்வப்போது சச்சரவு எழும். எல்லாருக்கும், அவரவர் படிப்பு முக்கியம், அத்துடன் போகும்போதோ வரும்போதோ கிளாஸ் மேட் அல்லது ஆசிரியர் யாராவது பார்த்து விட்டால் என்ன நினைத்துக் கொள்வார்கள் என்பது வேறு.

அப்பாவைப் பார்த்தவுடனேயே எனக்கு சப்த நாடியும் ஒடுங்கி விட்டது. கடந்த சில நாட்களாகவே ஓசைப்படாமல் மாடிக்குப் போய்ப் பட்டுக் கொள்ளாமல் அங்கேயே இருந்துவிடுவது என் வழக்கமாக ஆகி விட்டிருந்தது. வெளியே போகும்போதோ வரும்போதோ அல்லது குளிக்க, சாப்பிட கீழே வரும்போதோதான் யாரையும் நேரிட்டுப் பார்ப்பது. "சரி, இன்று அப்பா அன்றைய கோபத்தின் மீதியைக் கக்கப் போகிறார்" என்று நினைத்தேன்.

ஆனால் அவரோ என்னைக் கண்டதும், "ஏம்பா சமர் இவ்வளவு நேரம்? மருமகளும் சாப்பிடாம இருக்கா பார். சாப்பிட்டுட்டு அப்புறமா உலாவப்போயேன்! சில்லிட்டுப்போய் சாப்பிட்டா உடம்புலே ஒட்டுமா?" என்ற கேட்டார்.

அப்பா குரலில் இருந்த பரிவு நான் எப்போதோ மறந்துபோன ஒன்று! கேட்டவுடன் காலோடு தலையாக உடல் சிலிர்த்தது. திட்டு வாங்கத் தயாராக வந்த என் மனம் இந்தப் பரிவினால் பயமே கொண்டு நடுங்கியது. 'ஐயோ என்ன நடக்கப் போகிறதோ தெரியவில்லையே'— ஆனால் பிரபா விரைவிலேயே என் அச்சத்தை நீக்கிவிட்டாள். "இப்போ வீட்டிலே நம்மகிட்டே தாராளமா நடந்துக்க ஆரம்பிச் சிருக்காங்க" என்று அவள் விளக்கினாள்.

நான் திடுக்கிட்டேன். மதியம் நடந்தது நினைவுக்கு வந்தது. "ஏன், ஏதாவது விசேஷமா நடந்து போச்சா?" என்று கேட்டேன்.

"அப்படி ஒண்ணும் பெரிசா நடந்துடலே, ஆனா ஒவ்வொண்ணி லேயும் பாக்கறேன், முன்னே பெரிய ரகளை நடந்த விஷயங்களைக்கூட அம்மாவும் அண்ணியும் இப்பல்லாம் கண்டுக்கறது இல்லே. அம்மா அடிக்கடி சின்னவன் கொஞ்சம் ஒத்தாசை பண்ணினா கஷ்டம் கொறயும் அப்படீங்கறாங்க. நேத்து என்கிட்டே உனக்கு வேண்டிய துணிமணி இருக்கான்னு வேற விசாரிச்சாங்க. அண்ணி குழந்தைக்கு ஐஸ்கிரீம் வாங்கினப்போ என்னையும் திங்கச்சொல்லி தொந்தரவு படுத்தினாங்க"

"ஹூம்" என்று பெருமூச்செறிந்துவிட்டு நான் மௌனத்தில்

ஆழ்ந்தேன். இந்த மாற்றத்தை நான் உணர்ந்துகொண்டுதான் இருந்தேன். வீட்டினரின் இந்தப் பரிவு என் மனத்தை நடுங்கச் செய்தது. வெகுநேரம் நான் ஒன்றும் பேசாததைக் கண்டு பிரபா என்னை உலுக்கி, "என்ன பலத்த யோசனை?" என்று கேட்டாள். ஆழ்ந்த பெருமூச்சுவிட்டு, "ஒண்ணுமில்லே பிரபா, இவங்களுக்கு என்னால எந்த உதவியும் செய்ய முடியாதுன்னு எப்படி எடுத்துச் சொல்றதுன்னு நீயே சொல்லு, இவங்க என்னன்னா என்னையே சார்ந்திருக்கப் பாக்கறாங்க. என் செலவையும், உன் செலவையும் பாத்துக் கிட்டாலே பெரிய காரியம்னு நான் நெனைக்கிறேன். குறைந்த பட்சம் இவங்க மேலே நம்ம பாரம் இல்லாமல் இருந்தாலே போதும்னு நான் நெனைக்கிறேன். நம்ம கொஞ்சம் ஒதுங்கிக்கலாம்னு பாக்கறேன். இப்ப பி.ஏ., படிப்பு ஒண்ணும் வெளையாட்டு சமாசாரமில்லே. பி.ஏ. படிச்சாதான் வேலைன்னு திவாகர் திட்டவட்டமா சொல்லிட்டான். அவன் நம்பி வேலை வாங்கிக் கொடுத்திருக்கும்போது அந்த நம்பிக்கையை வீணாக்கினா அவனுக்கு வருத்தமா இருக்காதா?" என்றேன்.

"ஏன் வருத்தமா இருக்கும்?" என்று பிரபா என்னை ஆழம் பார்த்தாள்.

"தோ பாரு பிரபா! உத்தியோகத்துக்காக நான் இந்த வேலைக்குப் போகலே, படிப்பை மேலே தொடரணும்ங்கறதுக்காகத்தான் இந்த வேலைக்கு ஒத்துக்கிட்டேன். பி.ஏ.வுலே ஒவ்வொரு புஸ்தகமும் பதினைஞ்சு பதினாறு ரூபா இருக்கும். புஸ்தகமெல்லாம் திவாகர்கிட்டே வாங்கிக்குவேன்னு வச்சுக்க. சேந்து படிச்சா தனியா புஸ்தகம் வேணும்னு கெடயாது. ஆனாலும் எழுபத்தி அஞ்சு ரூபாய்லே என்ன மீதம் பண்ண முடியும்னு நீயே சொல்லு. இருபது ரூபாய் திவாகருக்கு குடுக்கணும். காலேஜ் திறந்தவுடன் அட்மிஷன் பீஸ் அது இது எல்லாமா இருபத்தியஞ்சு முப்பது ரூபாய் அங்கே கட்டணும். இந்தத் துணிமணியெல்லாம் காலேஜ் போறதுக்கு லாயக்கா இருக்கான்னு நீயே சொல்லு. நைஞ்சு நார்நாரா போயிட்டுது. கொறஞ்சது ஒரு பாண்ட் சட்டையாவது எனக்கு வேணாமா? இன்னும் சொல்லணும்னா எவ்வளவோ சொல்லலாம். பூட்ஸ் இல்லே, பேனா இல்லே, ரேசர்கூட அண்ணா வோடதைத்தான் உபயோகிக்கறேன். அது ஒரு தொல்லை எல்லாத் தொந்தரவும் ஒண்ணா இந்த மாசத்திலே வந்து விடியுது. பேப்பர், நோட்டு புத்தகம் லொட்டு லொசுக்குன்னு இருபது-முப்பது ரூபாய் செலவாயிடும். உனக்கும் ஒரு புடவை ரவிக்கை வாங்கலாமான்னு பாக்கறேன்."

"எனக்காக வேற ஏன் நடுவிலே அலட்டிக்கிறீங்க? என்கிட்டேதான் நெறயா இருக்குன்னு சொல்லிட்டேனில்லே. வேணும்னா நானே கேக்கறேன். இப்ப எனக்கு ஒண்ணும் வேண்டாம், தெரியுதா? அடுத்த மாசம் வாங்கிக் கறோம், அல்லது பிற்பாடு வாங்கிக்கறோம்" என்றாள்

பிரபா. இம்முறை எனக்காகச் சொல்லாமல், உண்மையான கவலையுடன் சொன்னாள்.

"சரி, ஆனாலும் கணக்கைப் பாரேன், எழுபத்தியஞ்சு ரூபாயிலே என்ன மீதம்னு நீயே சொல்லு. இதிலே என்னத்தைக் கொறைக்கறது, குடும்பத்துக்கு என்ன தர்றது? வேணும்னா திவாகருக்கு இந்த மாசம் கொடுக்காம தள்ளிப்போடலாம்" பிறகு திடீரென்று நினைவு வந்தவனாக, "காலேஜ் எட்டாம் தேதியே திறந்துடும், எனக்குப் பதினைஞ்சாம் தேதி வாக்கிலே தான் பணம் வரும். இன்னும் கைமாத்து வாங்கியாகணும், இதெல்லாம் முன்னாடியே தேவைப்படுமே," என்றேன்.

பிறகு வெகுநேரம் வரை நாங்கள் எங்கள் கஷ்டங்களை ஒருவர் மற்றவரிடம் சொல்லிப் புலம்பிக் கொண்டிருந்தோம். என் நினைவுகளில் ஆழ்ந்தவனாக "அப்பா, அம்மா, அண்ணா எல்லாரும் சமர் சம்பாதிக்க ஆரம்பிச்சுட்டான்னு பெரிய எதிர்பார்ப்போட இருக்காங்க பிரபா. ஆனா இதையெல்லாம் எப்படி அவங்களுக்கு விளங்க வைக்கிறது? சொன்னாலும் புரியாது. எழுபத்தியஞ்சு ரூபாய்தான் கிடைக்கப்போவுதுன்னு தெரிஞ்சிருந்தாலும் ஏதோ பழைய புதையல் கெடக்கப்போற மாதிரி நெனக்கிறாங்க. இவங்களுக்கு எப்படி புரிய வைக்கிறதுன்னு நீயே சொல்லு" என்றேன். என் முன்னே இருள் கரைகாணாத கடலாக அலைமோதியது. அம்மா, அண்ணா எல்லாரும் என்னிடம் பெரிய எதிர்பார்ப்புடன் காத்திருக்கிறார்கள். 'சமர் சம்பாதிக்க ஆரம்பித்து விட்டான், கஷ்டங்கள் எல்லாம் தீர்ந்து போய்விடும் என்பதை அனைவரும் வெளிப்படையாகச் சுட்டிக்காட்டிக் கொண்டிருந்தனர்.

எங்கு பார்த்தாலும் ரிஸல்ட் ரிஸல்ட் என்றே பேச்சாக இருந்தது. எங்கு பார்த்தாலும் இரண்டு மூன்று மாணவர்களாக நின்று கொண்டு இன்ன பேப்பர் இப்படி எழுதியிருக்கிறேன், அதில் இவ்வளவு மார்க் கட்டாயம் வரும் என்று பேசிக்கொண்டிருந்தார்கள். உமாநாத் தன் மார்க்கைக் கூட்டிப்போடும்படி சொல்லப்போக, பேப்பர் திருத்துபவர் அவனைக் கழுத்தைப் பிடித்து நெட்டி வெளியே தள்ளிவிட்டார் என்றும், ஆனால் அவர் பார்த்துப் போட்டுவிட்டார் என்றும் கிசுகிசுத்தனர். "அவன் கழுத்தைப் பிடித்துத் தள்ளவும் ஒரு அண்ணாத்தை வந்தார் பார்" என்று பேசிக் கொண்டனர்.

நான் இதெல்லாம் காதில் விழுந்தால் காதைப் பொத்திக்கொண்டு போய்விடுவேன். வருவது வரட்டும், பார்த்துக்கொள்வோம் என்று எனக்குள் ஒரு தன்னம்பிக்கை வந்துவிட்டிருந்தது. பையன்கள் கிடந்து அலை பாய்வதைப் பார்க்கும்போது ஒரு இரக்க உணர்ச்சியே வந்தது, "பாவம், அவர்கள் வீட்டு நிலை எப்படியோ?"

நான் வேலைக்குப் போக ஆரம்பித்து விட்டேன். இன்னும் பள்ளிகளும், கல்லூரிகளும் திறக்கவில்லை. எனவே, முடிந்தவரை பிரபாவுக்கு அதிகம் கஷ்டம் கொடுக்க வேண்டாம் என்று நினைத்தேன். இப்போது

சாப்பிடாமலும் போகமுடியுமே! பதினோரு, பனிரெண்டு மணிக்கெல்லாம் திரும்பி விடலாமே! வேலையிலிருந்து நேரே காலேஜ் போக வேண்டும் என்றால்தான் பாவம், அவள் மூன்றரை, நான்கு மணிக்கு எழுந்தாக வேண்டும். அவள் ஏற்கெனவே இருபத்தி நான்கு மணிநேரமும் மாடாக உழைத்துக்கொண்டுதான் இருக்கிறாள். காலையிலிருந்து இரவு பதினொன்று பனிரெண்டு மணிவரை அவளைச் சற்றேனும் ஓழிவாக நான் பார்த்ததில்லை. ஆனால் எவ்வளவுதான் தந்திரமாக அவளுக்குத் தெரியாதபடி எழுந்தாலும் அவளுக்கு எப்படியோ தெரிந்துவிடும். தானாகவே எழுந்து உட்கார்ந்து விடுவாள். நான் மிகவும் வற்புறுத்தினால் கொஞ்சநேரம் தூங்குவாள் அல்லது தூங்குவதாக பாவலா செய்வாள். நான் வெளியே கிளம்பியதுமே எழுந்து வேலைசெய்ய ஆரம்பித்து விடுவாள் என்று எனக்கு நன்றாகத் தெரியும். எனக்கு வருத்தமாக இருக்கும். நான் சீக்கிரமாக எழுந்திருப்பதால் அவளும் சீக்கிரம் எழுந்து விட வேண்டியதாகிவிட்டது. முன்பெல்லாம் குறைந்தது ஆறு மணி வரையாவது தூங்குவாள்.

வேலைக்குச் போய்ச் சேர்வது மிகவும் சுவாரஸ்யமானது. ஆக்ராவில் இரண்டு ஸ்டேஷன்கள். ஒன்று எங்கள் வீட்டுக்கு அருகில் இருந்தது. இன்னொன்று நான் வேலை செய்யும் இடத்திற்கு அருகில் இருந்தது. காலையில் ஒரு வண்டி இருந்தது. அது எங்கும் நிற்காது. ஐந்து நிமிடப் பயணம்தான். வண்டி நின்றதும் ரயில் கிராதி இடுக்கு வழியாக வெளியே வந்து ரோட்டோடு போகிறவன்போல் கம்பீரமாக ரோட்டில் நடக்க ஆரம்பித்து விடுவேன். முதல் இரண்டு நாள் அடைந்த கிலியை சொல்லி மாளாது. என் நெஞ்சு படக்படக்கென்று அடித்துக்கொண்டது என் காதிலேயே விழுந்தது. ரயிலில் இருக்கும்போது பயத்திலே மயக்கமே வரும்போல இருந்தது. வியர்வையில் உடம்பே நனைந்து விட்டது. "இதோ டிடி வந்துவிட்டார். இதோ பிடித்துவிட்டார் என்று தோன்றும்" என்று நான் பிரபாவிடம் சொன்னேன். ஆனால் இதெல்லாம் முதல் இரண்டு நாள்தான். அதன்பிறகு துணிச்சல் வந்துவிட்டது. நான் விதவிதமாகத் தப்பிக்கக் கற்றுக்கொண்டேன். வண்டி கிளம்பும்வரை சற்றும் அக்கறையில்லாதவன்போல உலாவிக்கொண்டிருப்பேன். வேறு ஏதோ வேலையாக வந்திருப்பதாகவோ அல்லது வேறு வண்டிக்காகக் காத்திருப்பது போலவோ தோன்றும். டிடி மீது ஒரு கண் வைத்திருப்பேன். வண்டி கிளம்பியவுடன், டிடி இருக்கும் பெட்டியிலிருந்து வெகு தொலைவில் இருக்கும் பெட்டியில் ஏறிக்கொள்வேன். வண்டிநின்றதும் உடனே பிளாட் பாரத்தில் இறங்கி எப்போது பிடித்தோ அங்கே உலாவிக் கொண்டிருப்பது போலவும், அந்த ரயிலுக்கும் எனக்கும் சம்பந்தமே இல்லை போலவும் உலாவ ஆரம்பித்து விடுவேன்.

இப்படி ரயில் பயண சுவாரஸ்யத்துடன் காலையில் எழுந்து அவ்வளவு தூரம் நடக்கும் கஷ்டத்திலிருந்து விடுதலையும் கிடைத்தது.

அவ்வளவுதூரம் நடக்கவேண்டும் என்றாலே எனக்கு நடுக்கமாக இருந்தது. கோடையிலாவது நடந்து விடலாம். குளிர்காலத்தில் என் பழைய துணிமணிகளில் நடுங்கிக் கொண்டே நடப்பது என்பது பெரும் கஷ்டம்தான். அதை நினைத்தாலே என் உயிர் நடுங்கியது.

ஆனால், ஆரம்பத்தில் வேலை எவ்வளவுக்கு எவ்வளவு சுவாரஸ்ய மாக இருந்ததோ, பிறகு அவ்வளவுக்கு அவ்வளவு அலுப்பூட்டுவதாக இருந்தது. காலை ஐந்து மணியிலிருந்து பதினொன்று மணிவரை ஆறு மணிநேரம் ஈரமான சொரசொரத்த தாள்களில் ஊறிப்பரவும் மையில் புரூஃப் பார்த்துக் குறுக்கும் நெடுக்குமாகத் திருத்துவதில் தலை வெடித்துவிடும்போல ஆகிவிடும். இந்த வேலை இவ்வளவு கஷ்டமான தாகவும், களைப்பூட்டுவதாகவும் இருக்கும் பட்சத்தில் காலேஜ் திறந்தபின் இங்கிருந்து போய் நான் என்னத்தைப் படிக்கப் போறேன், ஒன்றுமே புரியப்போவதில்லை என்று நினைக்கும்போது இன்னும் அச்சமாக இருக்கும். முதல் சில நாட்கள் உற்சாக வேகத்தில் ஏராளமான பக்கங்கள் புரூஃப் திருத்திவிட்டேன். அச்சகத்தில் அனைவரும் அசந்து போய் விட்டனர். "இந்தச் சின்ன வேலையில் என்ன கஷ்டம், வெறுமனே படிக்க வேண்டியதுதானே, தப்பு இருந்தால் திருத்த வேண்டும் அவ்வளவு தானே" என்று முதலில் நினைத்தேன். ஆனால் மானேஜர் அத்தனை பக்கங்களையும் என்னிடம் திரும்ப அனுப்பி விட்டார். ஏராளமான தவறுகள்! நான் கவனமாகத்தானே படித்தேன். என் கண்ணில் படாமல் எப்படித் தப்பின என்பது எனக்கு விளங்கவே இல்லை. மெல்லமெல்ல என் உற்சாகம் எல்லாம் வடிந்தது. ஒவ்வொரு எழுத்தையும் மூலத்துடன் ஒப்பிட்டுப் பார்த்துப் பார்த்து என் மண்டை காய்ந்து போனது. அச்சு மிஷின் கஸ்ஸ். கட்.. கட்... என்று ஒலிக்கும். அதை மீறி "நோட் டைப் ஏன் நல்லா வரலே?", "இங்க் நெறயா வருது பார்", "என்னடா மூஞ்சியைப் பாத்துக்கிட்டு நிக்கறே, காகிதம் வைடா" என்றெல்லாம் தொண்டை கிழிய இரைச்சல் எழும். மைக்கறைகள் படிந்த பாண்டுக்குள் இரண்டு கைகளையும் திணித்துக் கொண்டு மேனேஜர் என்னிடம் வந்து நின்று நான் புரூஃப் திருத்துவதைக் கவனித்தால், பரிட்சை சமயத்தில் இன்விஜிலேடர் பக்கத்தில் வந்து நிற்பதைப்போல உதறல் எடுக்கும். போகும்போது, "ரொம்ப மெதுவா புரூஃப் பாக்கறீங்க மிஸ்டர், மிஷின் சும்மா கெடக்கு, இன்னும் கரெக்ஷன் வேற நேரம் எடுக்கும். கொஞ்சம் கவனமாத் திருப்பித் திருப்பிப் பாருங்க. புரூஃப் பாக்கறது விளக்கமாத்தால பெருக்கற மாதிரி. எத்தனை தடவை பெருக்கினாலும், ஒவ்வொரு தடவையும் ஏதாவது குப்பை கிடைக்கும்." என்று சொல்லிவிட்டுப் போவான். எங்கே பார்த்தாலும், கரியும் மையும் கறையாகப் படர்ந்திருக்கும். ஒரு பக்கம் சுமேரே இடித்துக்கொண்டிருக்க, மறுபக்கம் நாலு செங்கல்லால் ஆன அடுப்பில் மிஷின் மேன் மை காய்ச்சிக் கொண்டிருப்பான். மை

நாற்றத்தில் குமட்டல் வரும். மிஷினிலிருந்து சொட்டும் எண்ணெய் கலந்த கசடு, உடைகளில் தெறிக்கும். சிந்தி ஹோட்டல் பையன் பத்து நிமிடங்களுக்கு ஒருமுறை கம்பியால் செய்த டீ கிளாஸ் கேரியரில் டீ கொண்டு வந்து யாருக்காவது கொடுத்துக்கொண்டிருப்பான். அல்லது அச்சடிப்பதற்காக மேனேஜரிடம் வந்தவர்களை உபசரிக்க சுமேரா அவனுக்குக் குரல் கொடுத்துக்கொண்டிருப்பான்.

ஆனால் அங்கே வேலை செய்துவந்தவர்கள் சுவாரஸ்யமான வர்கள். எனவே அவ்வளவு அலுப்புத் தட்டாது. முதலில் மிகவும் அந்நியமாக உணர்ந்தேன். ஆனால் சீக்கிரமே அனைவரையும் எனக்குப் பிடித்துப் போய்விட்டது.

கம்போஸ் செய்து கொண்டவாறே அல்லது கம்போஸ் செய்ததைப் பிரித்து டைப் கேஷ்களில் போட்டுக்கொண்டவாறே பெரிய கம்பாஸிடர், எவளாவது ஒருத்தியின் காதல் கதையை அளப்பார். அல்லது தன் அக்கம் பக்கத்தில் நடந்த விபச்சாரக் கதைகள், கற்பனையாகவோ, பல சினிமாக் கதைகளைத் திரித்தோ தயாரித்த அதிசயக் கதைகள், ஆகியவற்றை விவரிப்பார். சினிமாப் பேச்சாகட்டும், சொந்த வாழ்க்கைபற்றிய பேச்சாகட்டும், எல்லாவற்றுக்கும் மையம் தங்கள் தங்கள் வாழ்க்கையின் செக்ஸ் அனுபவங்களை விவரிப்பதுதான். அவர்களில் ஒருவன் என் கவனத்தை மிகவும் ஈர்த்தான். அவன் பெரும்பாலும் மௌனமாகவே இருப்பான். அவன் முகத்தையும் நடந்துகொள்ளும் விதத்தையும் பார்த்தாலே அவன் ஒரு கௌரவமான குடும்பத்தைச் சேர்ந்தவன் என்று தெரிந்தது. அவன் மௌனமாக இருப்பதைப் பார்த்தால் அவன் இவர்கள் நிலைக்குவரத் தயாரில்லை என்று தோன்றும். மெஷின் ஓட்டும் கிழவனார் பார்க்காத சினிமாக்கள் அரிது. அவர்கள் அனைவரின் கதைகளையும் நான் தினமும் பிரபாவுக்கு விவரிப்பேன். பனிரெண்டு மணி தகிக்கும் வெயிலில், வியர்வையில், தெப்பமாக நனைந்து வீடு வரும்போது பசியில் தலை சுற்றும், ஆனால் வெயிலின் வேகத்தில் இரண்டு டம்ளர் தண்ணீர் குடித்துவிடுவேன். பிறகு வெகு நேரம் வரை எதுவும் சாப்பிடத் தோன்றாது. சாப்பாட்டை மேலேயே வரவழைத்துக் கொளவேன். பிரபா எனக்காக இவ்வளவு நேரம் பட்டினியாக இருப்பது என் நெஞ்சை அரிக்கும். முதல் நாளே நான் பிரபாவிடம், “இது என்ன முட்டாள்தனம் பிரபா? இவ்வளவு படிச்சும் சுத்தப் பட்டிக்காடா இருக்கியே! ஒரு மணி வரைக்கும் எனக்காக ஏன் ஒக்காந்திருக்கணும்? காலாகாலத்திலே சாப்பிட்டுடு. நாள் முழுக்க வேலை செய்யறேல்ல?” என்றேன். “நான் என் நேரத்துக்குத்தானே சாப்பிடறேன்? உங்களுக்காகக் காத்திருக்கேன்னு நெனச்சீங்களா? வீட்டு வேலையெல்லாம் இப்பத்தானே முடியுது?” என்றவள் செயற்கை யாக முகத்தை வைத்துக் கொண்டு, “அழகுக்கணவர்னு காத்திருக்கேன்னு நெனச்சிட்டீங்களாக்கும், நம்மால யாருக்காகவும் காத்திருக்க முடியா

துப்பா_" என்றாள்.

அவளுடைய சாமர்த்தியப்பேச்சு எனக்குப் பிடித்திருந்தது. "பின்னே ஏன் சாப்பிடவில்லையாம்! ஏன் நீங்கதான் அழகுன்னு நெனப்போ! உங்க வீட்டிலே ஒவ்வொருத்தரா எடுத்துப் பாரேன். அவங்களைவிட நான் அழகுதான். உங்க வீட்டு ஜனங்கதான் கொரங்கு மாதிரி இருக்காங்க" என்று சீண்டினேன்.

"ஏ- ஏ- எங்க வீட்டு மனுஷாளை ஏதாவது சொன்னா நான் பொல்லாதவளா ஆயிடுவேன. விட்டா தலைமேலே ஏர்றீங்களே" என்று அவள் முறைத்தாள்.

"பொல்லாதவளா ஆகி என்ன செய்வீங்களாம், அதையும்தான் பாக்கிறேனே!" என்று நான் மேலும் சீண்டினேன்.

"அப்ப நான் போறேன் போங்க, நீங்க எதையாவது சொல்லிக்கிட்டு ஒக்காந்திருங்க" என்று சடக்கென்று அவள் எழுந்தாள். "அம்மாகிட்டயும், அக்காகிட்டேயும் வாங்கிக் கட்டிக்கிட்டு இங்கே வந்து ஒக்காந்தா இங்க இந்தப் பேச்சு" என்றவளின் தொண்டை ஒரு கணம் அடைத்தது. உடனே அவள் அதைப் பரிகாசமாக மாற்றிக்கொண்டாள். "உங்க அப்பா சத்தம் போட்டாதான் நீங்களும் ஒழுங்கா இருக்கேன் என்கிறீங்க."

நான் சமாதானப்படுத்தும் வகையில் அவள் கைகளைப் பற்றிக் கொண்டேன். "அன்னிக்கு அவர் சத்தம் போட்டதிலே எனக்கென்ன போச்சு. உனக்குத்தான் வெக்கத்திலே மூஞ்சி குங்குமமா சிவந்து போச்சு"

"ஒஹோ, அன்னிக்கு நடுங்கியது மறந்து போச்சா? அன்னிக்குக் குரலே எழும்பலையாம், இன்னிக்குப் பெரிசா பீத்திக்கிறாரு" என்று அவள் அன்றைய நிகழ்ச்சியை நினைத்துச் சிரித்துவிட்டாள்.

"சரி விடு, ஏன் வெட்டிப்பேச்சை வளக்கறே, வா சாப்பிடுவோம்" என்று நான் அவள் கையைத் தட்டை நோக்கி இழுத்து ரொட்டியை விள்ள வைக்க முயன்றேன்.

"ஐயோ உயிரை எடுக்கிறீங்களே! யாராவது பாத்துட்டா, அவ்வளவு தான். வீட்டிலேயே சேக்க மாட்டாங்க. ஹூம் சேந்து சாப்பிடறதாம்" என்று அச்சத்துடன் வெளியே பார்த்தாள்.

"பேத்தாம சாப்பிடு" என்று நான் அதட்டினேன். இவ்வளவு நேரம் உட்கார்ந்திருந்தவளுக்கு சேர்ந்து சாப்பிடும் இன்பமாவது கிடைக்கா விட்டால் எப்படி என்று நினைத்தேன். எதிர்காலத்தில் அவளும் நானும் ஒன்று சேர்ந்து மேஜையில் சாப்பிடும் காட்சி கண் முன் விரிந்தது. கல்லூரியில் என் ஓய்வான வகுப்புகளில் அவள் ஜன்னல் வழியே என் வழிமீது விழி வைத்துப் பார்த்திருப்பாள்.

ஒரு விரக்திப் புன்னகை அவள் முகத்திலும் பரவியது. என் கற்பனையைப் போன்றதொரு கற்பனை அவள் மனத்திலும் விரிந்திருக்க வேண்டும். அவள் எழுந்து போய்க் கதவை சாத்தினாள். "முதல்லே

கதவைச் சாத்திடுவோமா?" என்றவள் சட்டென்று ஒரு சிறுமியாக, "அம்மாடி, சேர்ந்து சாப்பிட எனக்கு வெக்கமாக இருக்குப்பா." என்று தோளைக் குலுக்கிக் கொண்டு நாணிக் கோணினாள்.

"த, சும்மா நாடகம் ஆடினா உதைப்பேன்" என்று கூறியவாறு எழ முயன்றவளை நான் இழுத்து மீண்டும் உட்கார வைத்தேன்.

கடைசியில் நான் எப்படியோ தட்டுத் தடுமாறி செகண்ட் க்ளாஸில் பாஸ் செய்திருக்கிறேன், அமர் அதுவும் இல்லை என்று தெரிந்தபோது வீடே திடுக்கிட்டது. வீடு அன்று காட்சியளித்த கோலம் எனக்கு இன்னும் நினைவு இருக்கிறது. அமர் ஒரு மூலையில் உட்கார்ந்து தேம்பிக் கொண்டிருந்தான். வீட்டில் சாவுக்களை வந்து விட்டிருந்தது. அவன் பெயிலான அதிர்ச்சியில் நான் பாஸான மகிழ்ச்சியைக் கொண்டாட யாருக்கும் தோன்றவேயில்லை. அவனை இன்னொரு ஆண்டு படிக்க வைத்தாக வேண்டும் என்கிற யோசனை பயங்கரமாக அனைவரின் முன்பும் தாண்டவமாடிக் கொண்டிருந்தது. அப்பா பயில்வான் மாதிரி மார்பின் குறுக்காக கைகளைக் கட்டிக் கொண்டு கோபாவேசமாக உலாவிக் கொண்டிருந்தார். "கழுதைங்களா, படிங்கடா படிங்கடான்னு எவ்வளவோ சொன்னேன். எவனுக்காவது ஒழிஞ்சால்ல? ஒருத்தனுக்குக் கல்யாணம் பண்ணி வச்சாலும் வச்சோம், அதோட கை கழுவியாச்சு. 'நான் என்ன செஞ்சா என்னப்பா, பர்ஸ்ட் கிளாஸிலே பாஸ் பண்ணலேன்னா கேளுங்க'ன்னு பெரிசா மார் தட்டிக்கிட்டான். இப்ப செகண்ட் கிளாஸை வச்சுக்கிட்டு நாக்கை வழிச்சிக்க. அமர் அண்ணாச்சி! நீங்களும் கேட்டுக்குங்க, வருஷா வருஷம் உங்களுக்காகப் பணத்தை தண்ணியா வாரி இறைக்க முடியாது. ஊர் சுத்தற வேலை ஒழிஞ்சால்ல படிக்கறதிலே மனசு ஈடுபடும்? முடிஞ்சா சொந்த முயற்சியிலே படி, இல்லே பிச்சைஎடு, போ அவ்வளவுதான்."

அமர் பெயில் ஆனதில் அண்ணி ரொம்பவும் வருத்தப்பட்டதாகக் காட்டிக்கொண்டு ஆறுதல் சொன்னாலும் அண்ணனிடம், "நல்லாதான் இருக்கு நியாயம், ராவும் பகலும் மாடா ஒழைச்சு இந்த தடியன்களை வளர்த்தாலும், அண்ணனுக்கும் குழந்தை குட்டி இருக்கு, அண்ணனுக்கும் ஒரு வாழ்க்கை இருக்குன்னு ஒருத்தனுக்கும் தெரியலியே!" என்று சொல்லிக்கொண்டிருந்தாள் என்று பிரபா சொன்னாள். அதற்கு அண்ணன், "சும்மா இரு, மாடாட்டம் ஒழைச்சு இந்தப் பாழும் கிணத்திலே போடணும்னு என் தலைல எழுதியிருக்கும்போது என்ன செய்ய முடியும்." என்று சொல்லிவிட்டு அழுதுவிட்டாராம்.

அவருடைய துயரம் என்னை ஆழமாகப் பாதித்துவிட்டது.

வீட்டின் அனைவரின் எதிர்ப்புக்கும், குத்தல் பேச்சுக்களுக்கும் இடையே நான் திவாகருடன் காலேஜ் போய் விண்ணப்பம் போட்டு வந்தேன். காலேஜில் சேர மாணவர்கள் அலைமோதியதையும், சிபாரிசுகள்

செய்யும் மாயங்களையும் பார்க்கும்போது, பாஸாவது கஷ்டமல்ல, இந்த அட்மிஷன் அகழியைக் கடந்தாலே பிறவிப்பயன் அடைந்த மாதிரிதான் என்று தோன்றியது. முதல் வகுப்பில் பெரிதாக மார்க் வாங்கித் தேறியவர்கள் எல்லாம் பிரின்ஸிபால் ரூமுக்கும் வைஸ்-பிரின்ஸிபால் ரூமுக்குமாக ஏனென்று கேட்பாரற்று அல்லாடிக் கொண்டிருந்தனர். ஒருவன் எம்.பி. சிபாரிசுடன் வந்திருக்க இன்னொருவனுடன் மாஜிஸ்டிரேட் தன்னுடைய ஆளையே அனுப்பி வைத்திருந்தார். ஒரு செக்ஷனுக்கு அறுபது வீதம் ஒரு வகுப்பில் நான்கு செக்ஷனாவது இருக்கும் என்று இப்போதே தோன்ற ஆரம்பித்து விட்டது. சயின்ஸ், ஆர்ட் என்று பிரித்து பிறகு ஏ, பி, சி, டி என்று பிரிக்க வேண்டும் என்று ஒரே சிக்கலாக இருந்தது. நானும் அட்மிஷன் வாங்குவதில் முழுவதுமாக மூன்று நாள் மெனக்கெட்டேன். மற்ற காலேஜ் பர்ஸ்ட்-கிளாஸ் மாணவர்கள் பலரும் பாவம் மிகவும் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்க, அதே காலேஜ் ஸ்டூடண்ட் என்பதால் எனக்கு அட்மிஷன் கிடைத்து விட்டது.

அட்மிஷனுக்கு முன்னால் வீட்டில் எழுந்த புயலும், எதிர்ப்பும் இரண்டு நாட்களில் மாயமாக மறைந்து போனது தான் ஆச்சரியம். அமருக்கு அட்மிஷன் வாங்குவதுதான் பெரும்பாடாகிவிட்டது.

இப்போதுதான் பிரபாவுக்கு பெரிய சிரமம் ஏற்பட்டது. அச்சாபீஸில் பதினோருமணிக்கு விட்டவுடன் நான் காலேஜ் ஓட வேண்டியதாக இருந்தது. காலேஜ் மூன்று மணிக்குத்தான் முடியும். எங்கள் கடைசி பீரியட் மூன்று மணிக்குத்தான் முடியும். இன்னும் காலேஜில் மிலிடரி டிரெயினிங் ஆரம்பிக்காததைச் சொல்ல வேண்டும். இல்லாவிட்டால் காலை நாலரையிலிருந்து ஏழரை வரை அங்கே பிழிந்து எடுத்து விடுவார்கள். போகா விட்டால் எட்டணா அபராதம், மிலிடரி டிரெயினிங் மட்டும் இருந்திருந்தால் காலையில் நாலரை மணிக்குப் போனால் ராத்திரி ஏழரை மணிக்குத்தான் வீட்டுக்கு வந்திருப்பேன். இப்போது சாப்பாடு எப்போது என்றுதான் பிரச்னை. பிரபா, "ஏன் வீணா மண்டையைப்போட்டு குழப்பிக்கிறீங்க, நான் மூணு மணிக்கே எழுந்து ஏதாவது செஞ்சுடுவேன்" என்று சொன்னாள்.

"ஆமாம், நாளெல்லாம் உழைக்கிறது போதாதுன்னு இது வேறயா? பதினொண்ணரை மணிக்குத் தூங்கப்போய் காலையிலே மூணரை மணிக்கு எழுந்திருக்கப் போறியாக்கும்? என்னதான் நெனச்சுக்கிட்டிருக்கே மனசுலே?" என்றவன் பொய்க்கோபம் காட்டி, "கொன்னு போட்டுடுங்கன்னு சொல்லிடேன்!"என்றேன்.

"கொஞ்சம் ஜாஸ்தி வேலை செஞ்சா செத்து ஒண்ணும் போயிட மாட்டேன். சும்மாவா செய்யப்போறேன், நிக்கவச்சு வசூலிச்சுட மாட்டேன்?"

அவள் சொன்ன விதத்திலும், பாவனையிலும் நான் கிறங்கிப்

போனேன். குரல் தழுதழுக்க, "பிழைச்சுக்கிடந்தா ஒண்ணொண்ணையும் ஞாபகம் வச்சிக்கிட்டுத் திருப்பிடுவேன் பிரபா! நான் இவ்வளவு கஷ்டப்படறதே உன்னை நல்லா வச்சுக்கணும்ங்கறதுக்காகத்தானே! இல்லாட்டி காலையிலே நாலு மணியிலேர்ந்து ராத்திரி பத்துமணி வரைக்கும் மாடாட்டம் உழைக்கறதுக்கு எனக்கு என்ன பைத்தியமா பிடிச்சிருக்கு?" என்றேன். பிறகு சுதாரித்துக்கொண்டு, "அதெல்லாம் முடியாது. உன்னை மூணு மணிக்கு எழுந்திருக்க நான் விடவே மாட்டேன். ஆமாம், ராத்திரிக்கே ஏன் பண்ணி வச்சுடக்கூடாது?" என்றேன்.

"ராத்திரிப் பழசையா காலையிலே சாப்பிடறது?"

"ஒண்ணும் பழசாகாது. காலையிலே பத்து மணிக்கெல்லாம் அச்சாபீஸிலேயே சாப்பிட்டுடுவேன். அதுக்குள்ளே என்ன கெட்டா போயிடும்?"

பிரபா சம்மதித்து விட்ட மாதிரி தோன்றியது. "பகல் பூரா அந்தப் பாத்திரத்தைத் தூக்கிக்கிட்டுத் திரிவீங்களாக்கும்?" என்றாள். "ஏன் தூக்கிக்கிட்டு திரியப்போறேன். அச்சாபீஸிலேயே வச்சிடுவேன். திரும்பும் போது எடுத்துக்கிட்டு வருவேன். கிட்டதானே இருக்கு!"

அவள் சட்டென்று உதறிச் சொன்னாள் "விடுங்க, அதெல்லாம் ஒண்ணும் வேணாம். காலையிலேயே சமைச்சுடறேன். சூடா சாப்பிட்டுப் போனா சும்மா 'ஜம்'முன்னு இருப்பீங்க. பழசு சாப்பிட்டா மூளை மந்தமாயிடுமாம். நாள் முழுக்க சோம்பலா இருக்குமாம்." பிறகு சட்டென்று நினைவுக்கு வந்தவளாக, சற்று உற்சாகமான குரலில் "அப்புறம் இன்னொரு விஷயம் சொல்லலியே, சாப்பாடு எடுத்துக்கிட்டு போறதா இருந்தா, கொஞ்சம் நல்ல பரோட்டாவா நாலு சுட்டுடுன்னு அம்மா சொல்லிட்டாங்க. கூட யாராவது சிநேகிதங்க பாத்தாலோ, சாப்பிட உக்காந்துட்டாலோ, சாதா ரொட்டி எடுத்துப் போறது நல்லா இருக்காதுன்னாங்க..." என்றாள்.

"அப்படியா, இந்த விஷயம் எனக்குத் தெரியாதே." என்றவன் சற்று கவலையுடன், "பிரபா, இவங்களை எனக்கு நல்லா தெரியும், எனக்கு பத்து பதினோரு தேதிக்கு சம்பளம் கிடைக்குமில்லே, அதுக்காகத்தான் இதெல்லாம். இல்லாட்டி போனா காலேஜுக்குப் போக புது டிரெஸ், புத்தகம், நோட்டுங்க, பீஸ் எல்லாம் சும்மா கெடச்சுட்டுதுன்னு நினைக்கிறியா? ஒண்ணொணுக்கும் கொலை விழுந்திருக்காது? அந்தச் சம்பளத்திலேர்ந்து இவங்களுக்கு என்ன தரமுடியும்? நீயே சொல்லு, ஒண்ணு செய்வோமா? எப்படியாவது இந்த மாசம் நமக்காவுற செலவை அண்ணிக்குக் கணக்குக் காட்ட முடியுமா?"

"ஊக்கும், என்னை மாட்டிவிட்டு வேடிக்கை பாக்கப் போறீங்களாக்கும்? உங்க தந்திரம் எனக்குத் தெரியாதா? அம்மா பல்லைக் கடிச்சுக்கிட்டு, 'கணக்கு காட்டறாளா, கணக்கு...' அப்படீம்பாங்க."

"இல்லாட்டி என்னதான் செய்யறது, நீயே சொல்லு, இவங்களுக்கு எப்படி எடுத்துச் சொல்றது? சாப்பாட்டு செலவைத் தவிர வேற ஒண்ணும் அதிகசெலவு இவங்க மேலே வைக்கிறதில்லேன்னு நான் தீர்மானிச்சிருக்கேன். என்ன நடக்குதுன்னு பாப்போம்." ஒரு நீண்ட பெருமூச்சு வெளிப்பட்டு சூழ்நிலையை கனமாக்கியது.

சிறிது மௌனத்திற்குப் பிறகு, நான் தலையை உதறிக் கொண்டு "எல்லாத்தையும் தொலைச்சுத் தலை முழுகிடலாம்ன்னு தோணுது. பெரிய தொல்லையா இருக்கு. ராப்பகல் தூக்கமில்லாம அல்லாட வேண்டியதா இருக்கு. காலை நாலு மணிலேர்ந்து ராத்திரி பத்து மணி வரைக்கும் அங்கியும், இங்கியும் நாயா ஓட வேண்டியதாயிருக்கு. எல்லாத்தையும்விட்டுத் தொலைச்சுட்டு எங்கியாவது நிம்மதியா கிளார்க் உத்தியோகம் பாக்கலாம். மாசம் அறுபது, எழுபது ரூபா கிடைக்கும். நிம்மதியா இருப்போம். காலையிலே பத்துமணிக்குப் போனா சாயந்திரம் அஞ்சு மணிக்கு டான்னு ஆஜராயிடுவேன். என்ன கொஞ்சம் பைல் தூக்கிக்கிட்டு வருவேன், அவ்வளவுதானே..." என்று சொன்னேன்.

பிரபா பரிவுடன் என்னைப் பார்த்தாள். "ஆனா வெறும் பணத் துக்காக மட்டும் நாம இவ்வளவு மெனக்கெடலியே! அவ்வளவு பணம் இப்பவும்தான் உங்களுக்குக் கிடைக்குது. நாம பெரிய பெரிய கனவுகள் கண்டுக்கிட்டிருக்கோம்ங்கறதுல்ல முக்கியம், நம்ம எதிர்காலத்திட்டமே வேற இல்லே!"

"அதுதான் பிரச்சினை, இந்த கனவுங்க எனக்கு மட்டுமில்லையே!" என்றவன் கவலையுடன் "நம்ம கனவெல்லாம் என்ன ஆகும்? மனசுன்னு இருந்தா கனவுகள் இல்லாமல் இருக்குமா," என்றேன்.

"என்ன இன்னிக்கு இப்படியெல்லாம் பேசிக்கிட்டு இருக்கீங்க" என்று பிரபா அன்புடன் கடிந்து கொண்டாள். "என்ன பெரிய கஷ்டம்? எத்தனை நாளைக்கு இருக்கப்போகுது? கனவுகள் நிறைவேறினா அந்த சந்தோஷத்தை நாமதானே அனுபவிக்கப்போறோம்? அதுக்காகக் கொஞ்சம் கஷ்டத்தைப் பொறுத்துக்கிட்டா கொறஞ்சா போயிடுவோம்? உங்களோட யார் இருந்தாலும் இல்லாட்டியும் நான் இருப்பேன். கவலைப்படாதீங்க" என்று பிரபா என் தோள்களில் தன் கையை வைத்துக் கூறினாள்.

அவள் மடியில் தலைவைத்து ஓவென்று அழவேண்டும் என்பது போல எனக்குள் உணர்ச்சி பொங்கிற்று. வானலோகத்து தேவதை ஒருத்தி ஏதோ சாபத்திற்குள்ளாகி, சாப விமோசனம் பெறும் வரை தன் காலத்தைக் கழிக்க இங்கு வந்திருக்கிறாள் என்று தோன்றியது. இவள் மட்டும் என் தைரியத்தைத் தூண்டாமல் இருந்தால் இந்தக் கஷ்டங்களை என்னால் கடக்க ஒருக்காலும் முடியாது. முடியவே முடியாது. எப்போதோ நொறுங்கிப் போயிருப்பேன். தொண்டை அடைக்க, "ஆமாம் பிரபா, இவ்வளவு கஷ்டங்கள், துன்பங்கள், நிராசைகளைப்

பார்த்து, உனக்கு பயமாயில்லே? நான் உன்கிட்டே பேசாம, கஷ்டங்கள் கொடுத்துக்கிட்டு இருந்தப்போ உன் மனசிலே கொஞ்சங்கூடத் தோல்வி மனப்பான்மை தோணலே?" என்று கேட்டேன்.

தன்னம்பிக்கை மிக்க குரலில் அவள் "என் மனசிலேயா? என்னை உங்களுக்கு இன்னும் தெரியாது. என்கிட்டே ஜீவசக்தி நிறைய உண்டு. அதைவிட விசேஷம் என்னன்னா கஷ்டத்திலே நான் மனம் கலங்கறது கிடையாது. கலியாணத்துக்கு முன்னாடி இனிமே என்ன ஆகுமோன்னு பயமா இருந்தது. எந்தக் கஷ்டத்தையும் சமாளிக்க முடியாதுன்னு தோணுச்சு. இப்பக் கஷ்டம்னா என்னன்னு தெரிஞ்சுபோன பிறகு, இதுக்குத்தானா இவ்வளவு பயம் அப்படீன்னு தோணுது" என்றாள். டீச்சரம்மா மாதிரி பேசி விட்டதற்காக உடனே வெட்கித்தலை குனிந்தாள். அவள் முகத்திலிருந்து தேஜஸ் வீசி ஒளி மண்டலம் ஒன்றை உருவாக்குவதாக எனக்குப்பட்டது.

"நானும் தோத்துப்போயிடலே பிரபா! சும்மாதான் கேட்டேன். நான் எல்லாத்தையும் சமாளிக்கிறேனா, இல்லையான்னு நீயும் பாரு. நான் உனக்காக என்ன செய்றேன், என்ன செய்ய முடியும்ங்கறது உனக்கே தெரியாது" என்றவண்ணம் சிலிர்த்த என் கைகளால் அவள் முகத்தை நிமிர்த்தினேன். கீழ்நோக்கிக் கவிந்த இமைகளுடன் அவள் முகத்தைப் பார்த்தபோது ஒரு விசித்திரமான நினைவு வந்தது." "இடையில் இவள் தாயாகிவிட்டால்...?" என் நினைவை எப்படியோ உணர்ந்து கொண்டவள் போல அவள் முகம் முன்னிலும் சிவந்தது.

# 8

களைப்பும் ஒரு வகை மயக்கம் தரும். என் அறைக்கு முன்னே மாடியில் ஒரு சிறு கட்டிலில் சின்னப் படகில் குறுக்கு வசமாகப் படுத்திருப்பது போல நான் கிடந்தேன். சவம்போலத் தலைகீழே தொங்க, கைகள் விரிந்து கிடக்க கால்கள் தலையைத்தொட, கிடந்தேன். கீழே அனைவரும் பேசிக் கொண்டிருந்தது காதில் விழுந்து கொண்டிருந்தது. ஹூம், இப்போது அமருக்குக் கல்யாணமா...?

வீட்டுக்குள் காலடி எடுத்து வைத்தவுடனேயே ஒரு பரிச்சயமான குரலைக் கேட்டுத் திடுக்கிட்டேன். உட்காரும் அறையில் சற்று எட்டிப் பார்த்தேன். மாமா வந்திருந்தார். ஆச்சரியமாகப் போய்விட்டது. என் கல்யாணத்தின்போது கோபித்துக் கொண்டு போய்விட்டிருந்த மாமா இப்போதுதான் வந்திருக்கிறார். சற்றுத் தயங்கிவிட்டு விடுவிடுவென்று மேலே வந்துவிட்டேன்.

"அட சமர் தம்பி! என்னப்பா பாக்காமலேயே போறே!" என்று கீழேயிருந்து குரல் கேட்டது. அவருக்கு நான் வந்தது தெரிந்துவிட்டது போலும். வேண்டா வெறுப்பாக எழுந்து கீழே வந்தேன். அவர் வரவேற்பறையில்தான் உட்கார்ந்திருந்தார். மனத்தாங்கல் இன்னும் இருந்ததால் உள்ளே வரவில்லைபோலும். நான் அவர் கால்களைத் தொட்டு வணங்கினேன். அவர் கட்டியணைத்துப் பக்கத்தில் உட்கார வைத்துக் கொண்டார்.

"தோ பாருங்க, எனக்குத்தெரிஞ்ச எடத்தை சொல்லிவிட்டேன். இனிமே என்ன செய்யணுமோ நீங்களே செஞ்சுக்குங்க. ஏன்னா மனுஷன் நல்லது செய்யப் போனாலும் கெட்ட பெயர்தான் கிடைக்கிற மாதிரி இருக்கு. சமர் கல்யாணத்தப்ப அக்கா பேசின பேச்சுக்கு நான் நாக்கைப் பிடுங்கிக்கிட்டு செத்திருக்க வேண்டியது" என்று அப்பாவுக்குக் கோபமாக பதில் சொல்லிக்கொண்டிருந்தார்.

அப்பா மோடாவில் உட்கார்ந்து கொண்டு தீக்குச்சியால் காது குடைந்து கொண்டிருந்தார். முகம் விதம்விதமாகக் கோணிக் கொண்டிருந்தது. தீவிரமாக ஏதோ செய்து கொண்டிருப்பதுபோல முகத்தை வைத்துக்கொள்ள முயற்சிப்பதாகத் தோன்றியது. கடைசியாக காதில் விரலை விட்டுக் கடகடவென்று குடைந்தவர், "அட என்னப்பா, பொம்மனாட்டிங்க பேச்சையெல்லாம் பெரிசு பண்ணிக்கிட்டு! இவங்களுக்கு என்ன வேலை? இப்படியும் பேசுவாங்க அப்படியும் பேசுவாங்க" என்றார். பிறகு மென்மையாக, "நீ பொண்ணைக் கட்டாயம் பாத்திருப்பே. குலம் கோத்திரம் எப்படி? கொஞ்சம் விவரமாகத்தான் சொல்லேன்" என்றார்.

'ஹ¬ம், இப்ப எந்தப் பெண்ணைப் பற்றி பேச்சோ ?' என்று நான் மௌனமாக எண்ணமிட்டேன்.

"அதெல்லாம் சும்மா பேச்சு" என்று மாமா கைகளைத் தலைக்கு மேல் தூக்கி பெரிய கும்பிடாகப் போட்டார். "பொண்ணை நீங்களே போய்ப் பாத்துக்குங்க. அமரையும் போய்ப் பாத்துடச் சொல்லுங்க. நாலு அண்டை அசலாரையும் போய்ப் பாக்கச் சொல்லுங்க. அவங்க என்கிட்டே பேசுங்க பேசுங்கன்னு மூணு நாளா வந்து அரிச்சதாலே வேற வழியில்லாம வந்தேன். இதுக்கு மேல நம்மால ஒண்ணும் செய்ய முடியாது."

"ப்சூ... அதெல்லாம் சரிப்பா... ஆனா ?"

என்னால் சும்மா இருக்க முடியவில்லை. "அப்பா அமர் கல்யாணத்துக்கு என்ன அவசரம்? இப்பதான் ஐயா பெயிலாகி முடிச்சிருக்காரு, கல்யாணம் வேற பண்ணி வச்சிட்டா இன்னும் பெயில்..."

"சும்மா இருடா! ஒண்ணும் விவரம் தெரியாட்டியும் குறுக்குச் சால் ஓட்ட வந்துடறே!" என்று அப்பா அதட்டினார். "நாளைக்கா கல்யாணம் ஆயிடப்போவுது? சம்பந்தம் பேசவே வருஷக்கணக்கா

ஆகும். என் கண் முன்னாடியே எல்லாம் நடந்துட்டா நிம்மதியா கண் மூடுவேன். அப்புறம் எது எப்படி ஆகுமோ" அவர் தொண்டை அடைத்தது. அதை மறைப்பதற்காக அவர், மாமா பிடித்துவிட்டு அவர் முன் நகர்த்தி வைத்திருந்த ஹூக்காவைப் பிடிக்க ஆரம்பித்தார். ஒரு இழுப்பு இழுத்துவிட்டு, "பாஸாவதும் பெயிலாவதும் சகஜம். அதுக்காக வாழ்க்கையைத் தள்ளிப்போட முடியுமா? ஆனா பாரு சந்தன்.. தப்பா நெனச்சுக்கக் கூடாது. சமர் கல்யாணத்திலே பண்ணின மாதிரி மூடு மந்திரம் எல்லாம் ஒண்ணும் கெடயாது. கொடுக்கல் வாங்கல் பற்றி விலாவாரியா பேசிடணும், ஆமாம்" என்றார்.

அப்பா போட்ட அதட்டலில் அவமானத்தால் மனம் கசந்து வழிந்தது. கண்ணில் நீர் முட்டியது. எனக்குக் கல்யாணம் பண்ணிப் பார்த்தாயிற்று. இனி அமரைப் பிடித்துக் கொள்ளுங்கள். வீட்டில் இருக்கிற ரகளை போதாது. இன்னொருத்தியையும் கொண்டு வந்து வைத்துக்கொண்டு அவளுக்கும் செலவு அழுங்கள்! அட, கல்யாணம் பண்ணவேண்டாம் என்றா சொல்கிறேன்? கொஞ்சம் தன் சொந்தக் காலில் நிற்க ஆரம்பிக்கட்டும் என்றுதானே சொல்கிறேன். ஊ... ஹூம். இங்கேதான் குறுக்கே பேசுவதே பாவம் ஆயிற்றே! இப்போது கொடுக்கல் வாங்கல் பற்றி விலாவாரியாகப் பேசப் போகிறார்களா? அதன் பிறகு அது பற்றி சண்டையும் விலாவரியாக நடக்கும். யாராவது சொன்னால் கேட்கவா போகிறார்கள்? இதுபற்றி பேசும் உரிமை இவர்களுக்கு மட்டும்தானே? இதுவரை நான் அவஸ்தைப்பட்டுக் கொண்டிருந்தேன். இனி அமரா? 'நான் அங்கே உட்கார்ந்திருப்பது வீண் என்று எனக்குத் தோன்றியது. நன்றாக ஓய்வு எடுத்துக் கொண்டிருந்தேன், கெடுத்து விட்டார்கள்!

எழ முற்பட்டபோது மாமா கையைப் பிடித்து மீண்டும் உட்கார வைத்துக் கொண்டார். "அட, எங்கப்பா போறே, உக்காருப்பா! எப்போ பிடிச்சு உனக்காகக் காத்துக்கிட்டிருந்தேன். எங்கே போயிட்டே?"

நான் மிடறு விழுங்கிக் கொண்டு, "காலேஜிக்குப் போயிருந்தேன் மாமா" என்றேன். அமர், அண்ணா குழந்தையைக் கொண்டு வந்து அப்பா மடியில் கிடத்திவிட்டு இங்கே நடக்கும் பேச்சில் அவனுக்கு அக்கறையே கிடையாது என்பதுபோல போய்விட்டான்.

மாமா, "ஓஹோ ஹோ- காலேஜிலே சேந்துட்டியா?" என்றவர் மகிழ்ச்சியுடன், "ரொம்ப நல்லது. நல்லா படிப்பா! படிப்புதான் உண்மையான செல்வம்" என்று கூறினார்.

நான் மௌனமாக இருந்தேன்.

"அப்புறம் எல்லாம் நல்லபடியா இருக்கில்லே, ரொம்ப இளைச் சுட்டியே! என்ன விஷயம்? உடம்பை கவனிச்சுக்கறதில்லே" என்றவர் விஷமமாகச் சிரித்து "என்ன இப்போதெல்லாம் காலங்கார்த்தாலே ஆர்.எஸ்.எஸ். டிரில்லுக்கெல்லாம் ஒண்ணும் போறதில்லியா?" என்று

கேட்டார்.

"ஊக்கும். ராஜாவுக்கு விடியறதே ஒன்பது மணிக்குதான்! டிரில் என்ன மத்தியானமா நடக்கும்?" அப்பா குழந்தைக்கு விளையாட்டு காட்டிக் கொண்டு மெதுவாகவே சொன்னாலும், அதன் கூர்மை என்னைத் துளைத்துவிட்டது. அவர் அன்று நடந்த விஷயத்தைக் குத்திக்காட்டினார் என்பது புரிந்தது.

சட்டென்று தலையை நிமிர்த்தி, "ஆமாம், பத்து மணிக்கு முன்னாடி நான் முழிக்கிறது கெடயாது. அதுக்கு என்ன செய்யணும்ங் கறீங்க" என்று கேட்டுவிடவேண்டும் என்று வந்தது, எப்படியோ அடக்கிக்கொண்டு "அப்படியொண்ணும் இல்லே மாமா? இந்த வருஷம் இந்தப் பக்கம் பயங்கர வெயில் இல்லே. ஒண்ணும் செய்ய மனசே நாடறதில்லே" என்றேன்.

"அது வாஸ்தவம்தான், அது வாஸ்தவம்தான்" என்றவண்ணம் அப்பா பக்கத்திலிருந்த ஹுக்கா குழாயைத் தன் பக்கம் இழுத்து உதட்டுக்கருகில் கொண்டு சென்று கொண்டே, "இனிமே கொஞ்சம் வீட்டையும் கவனிப்பா, வீட்டுக்கும் கொஞ்சம் ஒத்தாசையா இருக்கப் பாரு, அம்மா-அப்பா கடன் எல்லாத்தைவிட பெரிசுங்கறதை நினைப்பு வச்சுக்க. இப்ப நீ பெரியவனாயிட்டே, குடும்பஸ்தனாவும் ஆயிட்டே. தம்பிகளைப் படிக்க வை. மூத்தவன் ஒண்டியாவே எத்தனை நாளைக்கு செய்வான், பாவம்" என்றார்.

அப்பா மீண்டும் வெடித்தார் "இவருக்கு என்ன கவலை? இவரும், ராணியம்மாவும் வாழ்ந்துட்டா போதும், மத்தவங்க எக்கேடு கெட்டா இவருக்கு என்ன?"

வேறு ஏதோவும் கடுமையாகச் சொல்லவிருந்தார். மாமா தடுத்து, "நீங்க சும்மா இருங்க, நானில்லே பேசிக்கிட்டு இருக்கேன். குறுக்கே குறுக்கே வரீங்களே.. அவன் என்ன ஒண்ணும் தெரியாத சின்னப் பிள்ளையா? இதோ பார் தம்பி, உன்னைப் படிக்க வச்சு கல்யாணமும் பண்ணி வச்சாச்சு, இன்னும் எத்தனை நாளைக்கு பெத்தவங்களையே நம்பியிருக்கப் போறே? இவ்வளவு கஷ்டப்பட்டுப் பெத்தவங்க படிக்க வைக்கிறாங்கன்னா, ஏதோ எதிர்பார்த்துத்தானே படிக்க வைக்கிறாங்க?" என்று மீண்டும் என்னை இழுத்து அணைத்துக் கொண்டார்.

அப்பா கட்டாயம் மாமாவிடம் ஒரு பாட்டம் அழுதிருக்கிறார். இல்லாவிட்டால் மாமாவுக்கு இதெல்லாம் எப்படித் தெரியும்? நான் எடுத்துச் சொல்கிறேன் என்று மாமா சொல்லியிருப்பார். எல்லாம் பேசி வைத்துக்கொண்டு ஆடும் நாடகம். அவர்கள் திட்டம் எனக்கு விளங்கியது. ஆனால் கடந்த இரண்டு வருடங்களில் எங்கள் குடும் பத்தைச் சேர்ந்த ஒருவர் என்னிடம் அன்பாகப் பேசுகிறார், வீட்டு விஷயத்தை விளக்குகிறாரே என்பதில் இருந்த பாசமானது, எல்லாம் புரிந்தும் என்னை உருக்கிவிட்டது. கண்கள் பனித்தன. நான் கால்கட்டை

விரலை நீட்டுவதும், மடக்குவதுமாக மௌனமாகக் கேட்டுக் கொண்டிருந்தேன்.

"எல்லாரும்தான் கல்யாணம் பண்ணிக்கிறாங்க. ஆனா அதுக்காகப் பெத்தவங்களையும், தம்பி தங்கச்சிகளையும் யாராவது விட்டுடு வாங்களா? குடும்பம்னா கொஞ்சம் முன்னே பின்னே இருக்கறதுதான். அஞ்சு விரலும் ஒரே மாதிரியா இருக்கு? பொம்மனாட்டிங்களுக்கு என்ன, இன்னிக்கு ஒரு பேச்சு, நாளைக்கு ஒரு பேச்சு பேசுவாங்க. சுயபுத்தியுள்ளவன் அவங்க பேச்சையெல்லாம் கேக்கலாமா? அவங்க இன்னொரு வீட்டிலேர்ந்து வந்தவங்கதானே? அவங்களுக்கு நம்ம உறவைப் பத்தி என்ன அக்கறை இருக்கப் போகுது? உனக்குல்லே ரத்த பந்தம் இருக்கு? அதைப் பிரிக்க முடியுமா? இதெல்லாம் குடும்ப சமாச்சாரம் தம்பி, பாத்து ஜாக்கிரதையா நடந்துக்கணும்." என்று மாமா என் தோளை வருடிக்கொண்டே சொன்னார்.

என் மனத்திலிருந்து ஒரு கூக்குரல் எழுந்தது- "மாமா உங்களுக்கு வீட்டு நெலமை புரியாது. புரிஞ்சிருந்தா அமருக்குக் கல்யாணம் பேச வந்திருக்க மாட்டீங்க." எல்லாவற்றையும் எண்ணமிட்டும் குற்றவாளிபோலப் பார்வையை நிலத்தில் நாட்டிக்கொண்டு வெறுமே நின்று கொண்டிருந்தேன்.

"மாமியார் மருமகள் சண்டை அப்பமட்டுங்கறியா? எந்த வீட்டில்தான் இல்லே? பெரிய பெரிய லட்சாதிபதிங்க வீட்டு விஷயமெல்லாம் எனக்குத் தெரியும். வீட்டுக்கு வீடு வாசப்படிதான், தெரிஞ்சுக்க" என்றார். மாமாவின் கை என் முதுகை அன்புடன் வருடியவண்ணம் இருந்தது.

நான் விரும்பாமலேயே எனக்குள் அழுகை பொங்கியது. ஓடிப் போய் அப்பா காலில் விழுந்து நான் எவ்வளவோ அநியாயமாகவும் அநாகரீகமாகவும் நடந்து கொண்டுவிட்டேன். என்னை மன்னித்து விடுங்கள் என்று அழ வேண்டும் போல மனத்தில் வேகம் மூண்டது. இதுவரை இந்தக் கண்ணோட்டத்தில் நான் பார்க்கவேயில்லை. நான் உண்மையிலேயே அவர்களிடம் எவ்வளவு அலட்சியமாகவும் தவறாகவும் நடந்து கொண்டிருக்கிறேன்! மிகவும் பிரயாசைப்பட்டு, "மாமா, நான் மேலே படிக்க ஆசைப்படறேன்" என்று மட்டுமே கூறினேன்.

"படிக்க வைக்கக் கூடாதுன்னா இருக்குப்பா? வீட்டு நிலையை அனுசரித்துதானே எதையும் செய்யணும். முடிஞ்சவரைக்கும்தானே செய்ய முடியும்... உன் அண்ணனைப்பாரு, அவன் தன்னோட கடமையைச் செய்யலே? வீடுன்னா எல்லாத்தையும் அனுசரிச்சுதான் நடந்துக்கணும் ராஜா! இப்ப நீ குடும்பஸ்தனாயிட்டே, குடும்பத்தை எப்படி நடத்தறதுன்னு புரிஞ்சுக்கப்பா. பெண்டாட்டியை கொஞ்சம் அடக்கி வைப்பா! அவளுக்குக் கொஞ்சம் மட்டு மரியாதை

சொல்லிக்கொடு. புது மோகத்திலே தலையிலே தூக்கி வச்சுகிட்டேன்னா, அப்புறம் தொலைஞ்சே! பொண்ணுங்க வாழ்க்கைப்பட்ட இடத்திலே தான் நாலும் கத்துக்கறாங்க. பொறந்த இடத்திலே குதிச்சுக் கும்மாளம் போடறதைத் தவிர என்ன செஞ்சிருக்கப் போறாங்க?" என்றெல்லாம் வெண்ணையை ஒத்த மென்மையும், தேனை ஒத்த இனிமையும் வாய்ந்த குரலில் "பெண்டாட்டியை அடக்கி வைக்கும்" மந்திரோபதேசம் செய்து கொண்டே போனார். இவையெல்லாம் அறிவுரைகள் அல்ல, என்மீதும், பிரபா மீதும் சாட்டப்பட்ட குற்றச்சாட்டுகளின் மறுவடிவமே என்பது எனக்கு விளங்கிற்று. பலமுறை எதிர்த்து பதில் சொல்லத் துடித்தேன்.

"நீ பூஜை புனஸ்காரம் எல்லாத்தையும் விட்டுட்டு நாஸ்திகன் மாதிரி ஆகிக்கிட்டிருக்கேன்னு உங்க அப்பா சொல்றாரே! என்னப்பா இது? இதுக்குத்தானா படிக்கறது? கடவுள், பாவம், புண்ணியம் எல்லாத்தையும் எல்லாரும் விட்டுட்டா உலகம் எப்படிப்பா நடக்கும்? நம்ம முன்னோர்களைப் பார்! எவ்வளவு கஷ்டங்கள், துன்பங்கள்? உயிரே போனாலும் தங்களோட தர்மத்தை விட்டாங்களா? ஹகீகத்ராய், பந்தா பஹாதுர் இவங்களையெல்லாம் எவ்வளவு கொடுமை பண்ணினாங்க? நம்ம சனாதன தர்மத்தோட பலத்தினால்தான் நானும் நீயும் இங்கே உட்கார்ந்து பேசிக்கிட்டிருக்கோம். இல்லேன்னா பாகிஸ்தானிலே இருப்போம் அல்லது எங்காவது சர்ச்சிலே ஜபம் பண்ணிக்கிட்டு இருப்போம். நீ எங்களைவிட நிறைய படிச்சவன். உனக்குத் தெரியாதது இல்லை, ஜெர்மன்காரன் நம்மகிட்டேருந்து வேதங்களைத் திருடிக்கிட்டு போகலேன்னா புதுசு புதுசா எப்படி ஆயுதங்கள் கண்டுபிடிச்சிருப்பான்? திருடிக்கிட்டுப்போய் என்னதான் செய்ய முடியாது? தானா ஏராப்ளேன் செய், ரேடியோ செய், அப்ப அறிவாளின்னு உன்னை ஒத்துக்கலாம். என்ன நான் சொல்றது?" என்று கூறியவரின் கண்களிலிருந்து தன் பழம்பெருமையை நினைத்துக் கண்ணீர் திரண்டது.

இதற்கெல்லாம் என்ன பதில் சொல்லலாம் என்ற யோசித்துக் கொண்டிருக்கும்போதே, அப்பா உரத்த குரலில் கூறியது எல்லா மந்திரக் கட்டுகளையும் சட்டென்று அறுத்தது. "இதையெல்லாம் இந்தக் குட்டிச் சுவர்கிட்டே சொல்லி என்ன பிரயோஜனம் சந்தன்? வாழை மட்டையை ஊதி ஊதியா பத்தவைக்க முடியும்? அவனுக்கு ஒண்ணும் ஏறாது. எல்லாத்தையும் ஊமைக்கோட்டான் மாதிரி கேட்டுக்குவானே தவிர தன் இஷ்டப்படி தான் செய்வான், இல்லே பெண்டாட்டி சொல்றபடி செய்வான். ஏன் வீணா நேரத்தைப் பாழடிக்கிறே? அவனுக்கும் பொண்டாட்டிகிட்டே போக நேரம் ஆவுதுபார்." ஒரு கணம் சும்மா இருந்துவிட்டு, "இவனுக்குப் பட்டதை இவன் நல்லா செஞ்சிட்டு போகட்டும், விட்டுடுன்னுதான் நானும் சொல்றேன். நம்ம

தலைலே எழுதியிருக்கிறதை நாம அனுபவிச்சுட்டுப் போறோம். இது வரையிலும் அனுபவிக்கலியா-?" என்றார்.

மாமாவும் அவர் இப்படி வெடித்ததைக் கண்டு திகைத்துப் போனார். இது அவர்கள் பேசி வைத்துக் கொண்டதில் இல்லைபோலும். அவர் என் முதுகில் தட்டி, "இல்லே, இல்லே- நம்ம சமர் சின்னப்பையனா? அவனுக்கு எல்லாம் தெரியும். என்ன, கொஞ்சம் விடலைக்குணம் அவ்வளவுதான். இல்லேப்பா, அப்பாகிட்டே மன்னிப்பு கேட்டுக்கப்பா, பெரியவரில்லே?" என்றார்.

என் பணிவு, நாகரிகம், இதயத்தில் பொங்கி வந்த பச்சாதாப உணர்வு, எல்லாம் ஒரு சுவிட்சைப் போட்டதுபோல மறைந்துவிட்டிருந்தது. அப்பா பேசினது என் இதயத்தைப் பிளந்துவிட்டது. எல்லாப் பண்பாடுகளையும் நாகரீகங்களையும் உதறி ஏதாவது கடுமையாக சொல்லிவிடத் துடித்தேன். நாவும் துடித்தது. பணிவுடன் குனிந்த என் தலையைச் சீற்றத்துடன் தூக்கி, விறைப்பாக ஒரு வார்த்தையும் பேசாமல் மேலே போய்விட்டேன். "ஆமாம், நான் அப்படித்தான், என்ன செய்ய வேண்டுமோ, செய்து கொள்ளுங்கள்."

பாதி மாடிப்படியில் நின்று வெளியே எங்காவது சுற்றப் போகலாமா, அல்லது மாடியில் கட்டிலில்போய் விழுந்து கிடக்கலாமா என்று யோசித்தேன். மாற்றிய ரவிக்கையில் முன்புறப் பொத்தானைப் போட்ட வண்ணம் அப்போது பிரபா அறைக்குள்ளிருந்து வெளியே வந்தாள். சிறிது நேரம் அப்படியே என்னைப் பார்த்துக் கொண்டிருந்தவள் அருகே வந்து, "என்ன ஆச்சு?" என்று கேட்டாள், எனக்கருகில் வந்து கன்னத்தைத் தொட்டுப் பார்த்தவள் "உடம்புக்கு ஒண்ணும் இல்லியே?" என்று வினவினாள்.

நான் அதற்கு பதில் சொல்லாமல் மௌனமாக நின்றிருந்தேன். "மாமா என்ன சொன்னார்?" என்று மீண்டும் அவள் கேட்டாள்.

"உன் தலை" என்று எரிந்து விழுந்தேன். ஆனால் அவள் முகத்தை ஏறிட்டவுடனேயே 'பாவம் இவள் என்ன செய்தாள். இவள் மீது எரிந்து விழுந்து என்ன பயன்' என்று தோன்றியது. இவளுக்குப் பாவம், என்ன நடந்தது என்றுகூட தெரியாது. உடனே நான் சற்று மென்மையாக, "பெண்டாட்டியை எப்படி அடக்கி வைக்கணும்னு சொல்லிக் கிட்டிருந்தார். அப்பா எல்லாத்தையும் சொல்லியிருப்பார், உக்காந்து ஒப்பாரி வச்சிருப்பார். இல்லாட்டி மூஞ்சியைப் பாத்தே எல்லாம் சொல்லிடறதுக்கு மாமாவுக்கு ஜோசியமா தெரியும்? வந்ததுமே எப்படி எல்லாம் அவருக்கு தெரிஞ்சுட்டுதாம்" என்றேன்.

பிரபா அன்புடன் என் தோளைத் தொட்டு, "அட அவரு என்னவோ ஒண்ணு சொன்னார்னா அதுக்கு ஏன் இப்படி மனசைப் போட்டுக் குழப்பிக்கிறீங்க? கொஞ்சம் வெளியிலே போயிட்டு வாங்க மனசு சரியாயிடும். பெரியவங்கன்னா அப்படித்தான் இருப்பாங்க, எடுத்துச் சொல்றது அவங்க கடமையில்லியா?" என்றாள்.

"பெரிசா எடுத்துச் சொல்ல வந்துட்டாங்க. நாம சொன்னா மட்டும் காதிலேயே ஏறாது." என்றவன் சிறிது யோசித்து, "இல்லே பிரபா, நான் பலவீனமான மனசுக்காரனா இருக்கறதுதான் எல்லாத் துக்கும் காரணம். அதனால்தான் எவனைப் பாத்தாலும் என் முதுகிலே ஏறி சவாரி செய்யப் பாக்கறான். மாமா ரெண்டு வார்த்தை அன்பா பேசினதும் உருகிப் போயிட்டேன். அப்பாகிட்டே மன்னிப்பு கேக்கும்படி இவர் சொல்றாரே அப்படி நான் என்ன பண்ணிட்டேன்னு நீயே சொல்லு. ஏதாவது ஒரு தப்பு இருந்தால்லே அதை சொல்லி அப்பா இன்ன தப்பு பண்ணிட்டேன். என்னை மன்னிச்சிடுங்கன்னு கேக்கலாம். நான் இன்னிக்கு வரைக்கும் அவர்கிட்டே மரியாதைக்குறைவா நின்னதோ நடந்ததோ கிடையாது. அவரைப்பத்தி இப்படி அப்படின்னு ஒரு வார்த்தை சொன்னது கிடையாது. எப்பப் பாத்தாலும் பெண்டாட்டி சொல்லிக்குடுக்குறா, பெண்டாட்டி சொல்லிக்குடுக்குறாங்கறாங்க. நீ அப்படி என்ன சொல்லிக்குடுக்குறே நீயே சொல்லு. வாயைத் திறந்தாலே 'லோலோ'ன்னு பிடிச்சுக்குறாங்க. இது என்ன நியாயம்? எப்பப் பாத்தாலும் மருமக இப்படிப் பண்றா மருமக அப்படிப் பண்றாங்கறது. காலையிலே மூணு மணிக்கு எழுந்து வேலை செய்ய ஆரம்பிக்கிறே. இன்னும் என்ன இழுவெடுக்கணுமாம்? ராத்திரி பனிரெண்டு மணிக்கு முன்னால் தூங்கப் போக ஒழிய மாட்டேங்குது. மத்தவங்களுக்கும் விருப்பு வெறுப்புகள் இருக்கும்னு யோசிக்கணுமில்லே? இங்க யாராவது அதை யோசிக்கறாங்களா நீயே சொல்லு..." என்று சொல்லிக்கொண்டே போனேன்.

"அதெல்லாம் சரி. ஆனா இப்படியெல்லாம யோசிச்சு ஏன் இப்ப பொரிஞ்சு தள்ளுறீங்க? எல்லாம் கொஞ்ச நாளைக்குதானே? எப்பவும் இப்படியா இருக்கப்போவுது?" என்று பிரபா எடுத்துச் சொன்னாள்.

நான் என்பாட்டுக்கு பேசிக்கொண்டே போனேன். 'பெரிசா சனாதன தர்மத்தைப்பற்றி உபதேசிக்க வந்துட்டாரு. மொதல்லே சனாதன தர்மத்தை இவர் புரிஞ்சுக்கிட்டும். சனாதன தர்மம், சனாதன தர்மம்னு மனுஷனை சாகடிக்கிறாங்க. உலகம் எப்படி மாறிக்கிட்டு வருதுன்னு பாக்க விடறதில்லே, கோயில்லே ஒக்காந்து பஜனை பண்ணிக்கிட்டிருந்தா போதும், எல்லாம் தானே ஆயிடும், கடவுள் செஞ்சுடுவார். அறிவு பூர்வமா ஒரு விஷயத்தைச் சொன்னா நாஸ்தீகன்னு சொல்லி அடிக்க வர்றது..."

பிரபாவுக்கு எரிச்சலாகிவிட்டது போலும், "சரி, அதனால என்ன, சொன்னாங்க, அவ்வளவுதானே? போய் வேலையைப் பாருங்க. பெரியவங்க பெரியவங்கதான். அவுங்களுக்கு எதுவும் சொல்ல உரிமை இருக்கு." பிறகு சற்று பரிகாசமாக, "அவங்கதானே கல்யாணம் பண்ணி வச்சாங்க, இவ்வளவு சொல்லக்கூட அவங்களுக்கு உரிமை கெடயாதா?" என்றாள்.

நான் சீறினேன், "நல்லாப் பண்ணி வச்சாங்க, வீடு இப்ப ரொம்ப சீரும் சிறப்புமா இருக்கு பாரு, இன்னொரு கல்யாணம் பண்ணி வைக்க வந்துட்டாரு... இப்ப அமர் மகாராஜா மேலே குறி வச்சாவுது. சம்பாத்தியம் கிம்பாத்தியம் ஒண்ணும் கெடயாது. அவளும் வந்து உன்னை மாதிரி காலணா ஊசி, நூல் கெடச்சா புடவையைத் தைச்சுப் போட்டுக்கலாம்னு கிடந்து தவிக்கப்போறா. ஒருத்தன் சம்பாதிக்க ஆரம்பிச்சவுடனே எனக்கு கல்யாணம் பண்ணி வச்சுட்டாங்க. நான் இன்னும் ஒண்ணும் பண்ண ஆரம்பிக்கக்கூட இல்லே. இன் னொருத்தனை மாட்டி வைக்க ஆரம்பிச்சுட்டாங்க. அவளும் வந்து தன் தலைவிதியை நொந்துக்கிட்டு கெடக்கட்டும்."

பிரபா கலகலவென்று சிரித்தாள். "இப்பவே இவ்வளவு கோபிச்சுக் கிறீங்களே, வயசாச்சுன்னா இவங்களைவிட மோசமாயிருப்பீங்க போலிருக்கே!"

அவள் சொன்ன விதத்தில் நான் கோபத்தை மறந்து சிரித்து விட்டேன். அவள் கன்னத்தில் செல்லமாக ஒரு தட்டு தட்டி 'போக்கிரி' என்று சொல்லத் தோன்றியது. ஆனால் மீண்டும் தீவிரத் தன்மையை வரவழைத்துக் கொண்டு, "இல்லே பிரபா, உண்மை என்னன்னு எனக்குத் தெரியும். இன்னிக்கு தேதி பதினொண்ணு. அவங்க கணக்குப்படி எனக்கு சம்பளம் கிடைச்சிருக்கணும். ஆனா நான் ஒரு தம்பிடிகூட வீட்டுக்குக் குடுக்கலே. இன்னிக்கும் இது சம்பந்தமாக நான் வாயைத் திறக்கலேன்னவுடனே பொறுமை பறிபோயிட்டுது" என்றேன்.

"அட, ஆமாம் நானும் கேக்கவே மறந்துட்டேன். பணம் நேத்தியே கிடைச்சிருக்குமே! என்ன பண்ணினீங்க?" என்று ஒரு அசல் குடும்பத் தலைவியின் குரலில் கேட்டாள்.

நான் மீண்டும் எரிந்து விழுந்தேன். "அந்தக் கட்டையிலே போற பிரெஸ்காரன் கொடுத்தால்லே? இதைவிட நாலுபேருக்கு ட்யூஷன் சொல்லிக் கொடுக்கலாம். அவன் பிள்ளை குட்டிங்க நாசமாப்போக. அந்தப் பாழாய்ப் போறவனோட மனசிலே என்னதான் நெனச்சிருக் கான்னு தெரியலே. இதுவரைக்கும் அறுபத்தோரு ரூபாய் கடன் வாங்கி வச்சிருக்கேன். மீதி எட்டு ரூபாயையும் அப்பாவுக்குக் குடுத்துட்டா ஒரு வேர்க்கடலை வாங்கக்கூட காசு இல்லாம திண்டாடலாம். நல்ல சோதனைடா சாமி! நாளைக்கும் கொடுக்கலேன்னா, எது எக்கேடு கெட்டாலும், என் பணத்தை எடுத்து வையுன்னு சொல்லப்போறேன். இங்கே என்ன கொட்டியா கிடக்கு. உனக்கு என்ன, அங்கேயிருந்தும் பணம், இங்கேயிருந்தும் பணம். இது மாதிரி லேட் பண்ணுவேன்னா உன் ப்ரூஃப் ரீடர் வேலையை நீயே வைச்சுக்க, நான் வேற வேலை பாத்துக்கறேன்னு சொல்லிட வேண்டியது தான். உன் வேலையுமாச்சு, நீயும் ஆச்சு, உன் திசைக்கே நூறு கும்பிடு. கட்டையிலே போறவன். பாக்கெட்டிலேருந்து பணம் வெளியே வருவேனாங்குதே..."

இதற்கு பிரபா முந்தானையால் வாயைப் பொத்திக் கொண்டு வெகுநேரம் சிரித்தாள். என் வேதனையை மறக்கடிப்பதற்காக செயற்கையாகச் சிரிக்கிறாளோ என்று எனக்குத் தோன்றியது. "எழுபது வயசு கிழவி மாதிரி திட்டறீங்களே, யார் காதிலாவது விழுந்தா என்ன நினைப்பாங்க...?" என்றவள் என்னை ஒரு தள்ளு தள்ளி, "சரி, சரி போங்க, போய் காத்தாட உலாவிட்டு வாங்க. ஆனா சீக்கிரமா வந்துடுங்க, நான் சாப்பாட்டை வச்சுக்கிட்டுக் காத்திருப்பேன்" என்றாள்.

என் முட்டாள்தனத்தையும், பிரபாவின் பேச்சையும் நினைத்து சிரித்துக் கொண்டே அப்போதைக்குக் கிளம்பினாலும், விரைவிலேயே அப்பாவின் பேச்சுகளும், மாமாவின் பேச்சுகளும் என் மனத்தில் மீண்டும் கருமேகமாய்த் திரண்டன. அப்பா அதட்டிச் சொன்னதும், மாமா இனிக்கச் சொன்னதும் ஒன்றேதான் என்பதை யோசிக்கும்போது உண்மையிலேயே வியப்பாக இருந்தது. ஒரே கருத்து, இரண்டு விதமான பேச்சு.

யோசித்தவண்ணம் நான் ஒரு குறிக்கோளின்றித் திரிந்தேன். என் நினைவுகளில் தன்னை மறந்து நடந்து கொண்டிருந்த எனக்கு திடீரென்று யாரோ என் பின்னால் வருவதாகத் தோன்றியது. பயந்து போய்த் திரும்பிப் பார்த்தேன். திவாகர் கலகலவென்று சிரித்தான். அவனுடன் வேறு ஒருவரும் இருந்தார். "நீ நடந்துபோகும்போது எங்கே போறோம், எதுக்குப் போறோம்னு பிரக்ஞை இருக்குமா இருக்காதா? ரெண்டு பர்லாங்கா நாங்க பின்னாலேயே வர்றோம். கையை ஆட்டிஆட்டி உனக்கு நீயே பேசிக்கிட்டே போறியே! உனக்கு நீயே கோபிச்சுக்கறே, முறைச்சுக்கிறே, என்ன சேதி?" என்று திவாகர் கேட்டான்.

நான் திகைத்துத் தடுமாறிவிட்டேன். பக்கத்திலிருந்தவரைப் பார்த்தேன். அது ஷிரீஷ். இருட்டில் சலனமற்று சிகரெட் பிடித்த வண்ணம் நின்று கொண்டிருந்தார். சிகரெட்டை இழுக்கும்போது அதன் நெருப்பு அவர் கண்களுக்குக் கீழே ஒளிர்ந்தது. நான் சட்டென்று அவருக்கு வணக்கம் கூறினேன். எவ்வளவு தூரம் இவர்கள் என் பின்னால் நடந்து வந்தார்களோ என்று நினைத்து வெட்கமாக இருந்தது. இதற்கிடையில் நான் எனக்கு நானே என்னென்ன பேசிக்கொண்டேனோ, எப்படி எப்படியெல்லாம் கையை ஆட்டினேனோ? அதையெல்லாம் பார்த்து இவர்கள் என்ன நினைத்தார்களோ? எப்படியோ சமாளித்து அசட்டுச் சிரிப்புடன், "நீங்க எங்கேயிருந்து வரீங்க?" என்று கேட்டு வைத்தேன்.

"அதான் சொன்னேனே அப்பா, அரைமணி நேரமா உன் பின்னால தான் வந்துக்கிட்டிருக்கோம்" என்று திவாகர் விஷமமாக மீண்டும் கூறினான், "உனக்கு நீயே என்ன பேசிக்கறேன்னு கேட்டுக்கிட்டே வந்தோம்."

"ஏதோ பெரிய பிரச்சினையைப் பத்தி யோசிச்சுக்கிட்டு இருக்

கீங்கன்னு தெரிஞ்சுது. என்ன விஷயம்? ஏதாவது இந்தியக் கலாச்சாரச் சிக்கலா?" என்று ஷிரீஷ் உரக்கச் சிரித்தார். பிறகு என் தீவிரமான முகத்தோற்றத்தைப் பார்த்து, பரிவுடன், "என்ன ஏதாவது பெரிய பிரச்சினையா?" என்று விசாரித்தார்.

திவாகராக இருந்தால் எரிந்து விழுந்திருப்பேன் அல்லது வேறு மாதிரி சொல்லியிருப்பேன். ஆனால் ஷிரீஷ் மீது எனக்கு மதிப்பும் மரியாதையும் இருந்தது. சற்று வெட்கத்துடன், "அப்படி ஒண்ணும் இல்லே! ஒண்ணைப் பத்தி யோசிக்க ஆரம்பிச்சா என்னால அதை லேசிலே விட முடியறதில்லே" என்றேன்.

"இதோ பாருங்க, நம்ம மனத்தையும், மூளையையும் தொந்தரவு பண்ற விஷயத்தை எப்பவும் யாரிடமாவது சொல்லிடணும். அப்படி செஞ்சா அது நம்மை பாதிக்கறது கொறயும். கிறிஸ்தவர்கள் பாதிரியாருக்கு முன்னாடி குற்றங்களை ஒபபுக்கறதுக்குக்கூட அடிப்படைக் காரணம், இதனாலே மனசு லேசாயிடறதுதான்னு நெனைக்கிறேன்." என் அருகில் வந்து என் தோளில் கையை வைத்து "ஆனா அதுக்காக உங்க தனிப் பட்ட விஷயங்களை நான் கேக்கறதா நெனச்சுடாதீங்க" என்றார் அவர்.

"அட, தனிப்பட்ட விஷயத்தைத்தான் கேட்டுவிட்டோம், இவனும் சொல்லிட்டான்னாலும் என்ன குடிமுழுகிப்போயிடும்?" என்று இன்னொரு தோளில் கைவைத்து திவாகர் சொன்னான்.

"ஆனா அதுக்காக போலீஸ்காரன், திருடனைப் பிடிச்சு விசாரிக்கற மாதிரி விசாரிக்கறது நல்லாயில்லே" என்று ஷிரீஷ் திவாகர் பேச்சுக்கு சிரித்துக் கொண்டே சொன்னார்.

என்னைத் தவறாக நினைத்துக் கொள்ளக்கூடாதே என்று நினைத்து நான்—"இல்லே, இல்லே, அப்படியொண்ணும் இல்லே" என்றவன் ஒரு கணம் யோசித்துவிட்டு மேற்கொண்டு "எங்கள் குடும்பத்தில் எவ்வளவு தொந்தரவுகள்னு உனக்குத்தான் தெரியுமே திவாகர், தெனமும் ஒண்ணு இல்லாட்டா ஒண்ணு. என் கல்யாணம் ஆச்சோ இல்லியோ இப்ப அமருக்கு கல்யாணம் பேச ஆரம்பிச்சிட்டாங்க. ஏதாவது சொன்னா ஊர்ப்பட்ட உபதேசம்" என்றேன்.

"நீங்க எல்லாம் ஒரே குடும்பமாத்தானே இருக்கீங்க?" என்று ஷிரீஷ் கேட்டார்.

"சித்தப்பா எல்லாம் தனியா இருக்காங்க. நாங்க எல்லாம் ஒண்ணா இருக்கோம்" என்று நான் சொன்னேன்.

"உங்க குடும்ப விஷயங்களைக் கேக்கறதுக்காக மன்னிச்சுக்குங்க" என்று கூறி ஷிரீஷ் போகும் வழியில் வெகுநேரம் வரை என் குடும்பத்தைப் பற்றியும், குடும்பத்தினர் பற்றியும் கேட்டுக்கொண்டே போனார். நானும் எதையும் மறைக்காமல் சொல்லிக்கொண்டே வந்தேன். வீட்டில் சண்டை சச்சரவு பற்றிக்கேட்டபோது அவை என் கல்யாணத்திற்கு முதல் நாளே ஆரம்பித்து விட்டன என்று நான் துயரம்

தோய்ந்த குரலில் ஒப்புக் கொண்டேன். பிறகு பிரபாவைப்பற்றி, எதுவரை படித்திருக்கிறாள், சுபாவம் எப்படி, அவளுடைய கனவுகள் என்னென்ன, வீட்டில் அவளுக்கு என்னென்ன கஷ்டங்கள் என்றெல்லாம் கேட்டார். டாக்டர் மாதிரி அவர் கேட்ட கேள்விகள் என்னை உள்ளூர உறுத்தினாலும் பிரபாவின் புத்தி சாதுர்யம், படிப்பு, கனவுகள் ஆகியவைபற்றிப் பேச எனக்குக் குதூகலமாகவே இருந்தது. ஆனால் கடைசியில் அவர் கேட்ட ஒரு கேள்விக்கு என்னால் உண்மையிலேயே பதில் சொல்ல முடியவில்லை.

"சரி, உங்க விருப்பப்படி உங்க கல்யாணம் நடக்கலே, ஆனா நீங்க உங்க மனைவியை நெஜமாவே நேசிக்கிறீங்களா அல்லது கணவன் என்கிற முறையிலே உங்க கடமையைச் செய்யறீங்களா, இது பற்றி என்ன நெனைக்கிறீங்க? உண்மையா சொல்லுங்க" என்று அவர் தீவிரமான பாவத்துடன் சிகரெட் புகையை இழுத்துக்கொண்டே வினவினார்.

"நான்... நான்..." என்று நான் தடுமாறினேன்.

பிரபாவின்பால் என் உணர்வு காதலா, பச்சாதாபமா? அல்லது அவளது கையறுநிலை குறித்த இரக்கமா என்று உண்மையிலேயே அந்தக் கணத்தில் என்னால் தீர்மானிக்க முடியவில்லை. எனக்குப் பதில் ஒன்றும் தோன்றவில்லை. ஆயினும் எப்படியோ சமாளித்துக் கொண்டு "நான் அவளுடைய ஊக்கத்தினாலேதான் படிக்கிறேன். அவ இல்லாட்டி நான் எப்போதோ நூறு, நூற்றைம்பது ரூபாயிலே ஒரு கிளார்க் வேலை பாத்துக்கிட்டுப் போயிருப்பேன். நான் நல்லாப் படிச்சு அதன் பிறகு பெரிய வேலைக்குப் போகணும்கறது அவ ஆசை. அவ எனக்காக எடுத்துக்கற சிரமத்தை சொல்லி மாளாது. இப்பவும் காலையிலே மூணு மணிக்கு எழுந்து சமைக்கிறா. ராத்திரி பனிரெண்டு மணி வரைக்கும் ஓடாத் தேயுறா..." என்றேன்.

நாங்கள் மூவரும் மௌனமானோம். நான் இன்னும் என் பதிலைத் தேடிக்கொண்டிருந்தேன். சட்டென்று ஒரு விஷயம் நினைவுக்கு வந்தது. அதையும் அவரிடம் சொல்லிவிடலாம் என்று நினைத்து "அவளுக்குன்னு தனியா விருப்பு, வெறுப்பு, கனவுகள் எதுவுமே இல்லாத மாதிரி அவ எனக்காகத் தன்னைத்தானே மறந்தே போயிட்டா," என்று கூறினேன். ஆனால் இதுவும் அவளைப் பற்றிய பேச்சே அல்லவா? என் மனத்தில் அவள் மேலிருக்கும் உணர்வு பற்றியது என்ன என்பதற்கு நான் இன்னும் பதில் சொல்லவேயில்லையே என்று யோசித்தேன். ஆயினும் என் மனம் பிரபாவுக்காக உருகியது உண்மை. என் உள்ளத்துடிப்பை அவருக்கு எப்படி விளக்குவது என்று தடுமாறிய வண்ணம், நான் ஷிரீஷைப் பார்த்தேன். அவர் ஏதோ யோசனையில் ஆழ்ந்தவராக மௌனமாக ஒவ்வொரு அடியாக எடுத்து வைத்துப் போய்க்கொண்டே இருந்தார். ஏதாவது கட்டாயம் பேசுவார் என்று

எனக்குத் தெரியும். அதையே எதிர்பார்த்து நான் காத்திருந்தேன். தெரு வெறிச்சோடிக் கிடந்தது. எங்கே வந்துவிட்டோம் என்று விளங்கவேயில்லை. கொஞ்சம் கவனித்துப் பார்த்தால் இடத்தை அடையாளம் கண்டு கொண்டிருக்கக்கூடும். ஆனால் உயரமான சுவர்களில் காணப்பட்ட பூட்ஸ், துணி விளம்பரங்களை மட்டும் படித்துக்கொண்டு இருந்துவிட்டேன். ஏதோ பனி மூட்டமாகப் படர்வதுபோல இருந்தது. எட்டரை ஒன்பது மணி இருக்கும். பொழிந்து கொண்டிருந்த நிலவில் பூமியும் வானமும் பளிச்சென்று கழுவிவிட்ட மாதிரி இருந்தது. ஆதனால் தானோ என்னவோ தெரு விளக்குகள் எரியவில்லை. வளர் பிறையில் பொதுவாகத் தெரு விளக்குகள் எரிவதில்லை. அது என்னவோ தெரியவில்லை. நிலவு வெளிச்சம் மிக்க இரவில் நான் எங்கேயிருந்தாலும் பிரபா நினைவு வந்துவிட்டால் அன்று மாடியில் ஒடுங்கி உட்கார்ந்திருந்தாளே, இன்னும் சரியாகச் சொன்னால் அழுதுகொண்டிருந்தாளே, அந்தத் தோற்றம்தான் நினைவில் தோன்றும். இப்போதும் அந்தத் தோற்றம் கண் முன் எழுந்தது.

கடைசியாக ஷிரீஷ் எங்கோ வெகு தூரத்திலிருந்து பேசுபவர் போலக் கூறினார். "இதிலே பாருங்க, உங்க விஷயமாகட்டும், திவாகர் விஷயமாகட்டும், நல்லா யோசிச்சுப்பாத்தா ஒரு விஷயம் தெளிவாப் புரியுது. இந்த கூட்டுக் குடும்ப முறைய ஒழிச்சாகணும். உங்க விஷயத்திலே சொல்லணும்னா, நீங்களும், உங்க மனைவியும் உயிரோட இருக்கணும்னா தனியாப் போறதைத்தவிர வேற வழி கிடையாது. எப்படியாவது தனியாப் போய்த்தான் ஆகணும்."

இந்த விஷயம்— அல்லது யோசனை என்று சொல்ல வேண்டுமோ?— சற்றும் எதிர்பாராதது. நான் திடுக்கிட்டு நின்றுவிட்டேன். திகைப்புடன் "நீங்க என்ன சொல்றீங்கன்னு புரியலியே!" என்றேன்.

"நீங்க தப்பா எடுத்துக்காதீங்க, ஆனா உண்மை என்னன்னா உங்க மனைவியின் கனவுகளும், உங்க முயற்சிகளும் இந்த சூழ்நிலையிலே வீணாகி, குமைஞ்சி குமைஞ்சே மடிஞ்சிடும். ஒண்ணுக்குப் பின்னால ஒண்ணா கஷ்டங்கள் மொளச்சிக்கிட்டே இருக்கும். நீங்க இன்பத்தைப் பத்திக் கனவு கண்டே வாழ்க்கையைக் கழிச்சுட்டாலும் கழிச்சுடுவீங்க."

"அதாவது நீங்க கூட்டுக் குடும்பமே தவறு அப்படிங்கிறீங்களா?" என் பிரச்சினைகள் முடிவற்றவையாக இருந்ததால் தனிப்பட்ட முறையில் என்னைப் பொறுத்தவரை அவர் கூற்று சரி என்று பட்டாலும் அந்த ஒழுங்கு முறையையே தவறு என்று கருதுவதை என்னால் ஜீரணித்துக் கொள்ள முடியவில்லை.

"ஆமாம், அப்படித்தான் வைத்துக் கொள்ளுங்களேன்" என்றவர் தன் கருத்தை வலியுறுத்தி, "இன்றைய பொருளாதாரச் சூழ்நிலையிலே கூட்டுக்குடும்பம், நடக்க முடியாத ஒன்று. அப்படி நடந்தாலும் மேலோட்டமாகப் பார்க்க எப்படி இருந்தாலும் அதற்குள் சின்னச்சின்ன

குடும்பப் பிரிவுகள் உண்டாயிடும். இந்தப் பாசப்பித்து எவ்வளவு மோசமான விளைவுகளை ஏற்படுத்துதுன்னு உங்களுக்குத் தெரியாது. இரவும் பகலும் நிம்மதியின்மை, சண்டை சச்சரவு எல்லாம் நடக்கும். ஆனாலும் ஒண்ணா இருப்பாங்க. கௌரவப் பிரச்சினையாச்சே! 'தனி அடுப்பா? கூடாது'ங்கற பிடிவாதம், மேலோட்டமான குடும்பப் பாசத்துக்கு உள்ளே சுயநலத்தின் இழுபறி. இதனால் எத்தனை கொலைகள், தற்கொலைகள் தினமும் நடக்குது? இதையெல்லாத்தையும் விட்டாலும் கூட்டுக்குடும்பத்தோட இன்னொரு விளைவு ஒப்பிடவே முடியாதபடி பயங்கரமானது" என்றார்.

அவர் கொண்டு வந்து நிறுத்திய விதத்தில் 'அது என்ன' என்று கேட்க வேண்டியதாயிற்று.

நாங்கள் கவனமாகக் கேட்டுக் கொண்டிருக்கிறோம் என்பதைக் கண்ட அவர், "கூட்டுக்குடும்பத்தின் லட்சியம் வார்த்தையளவில் எவ்வளவு பெரிசா இருந்தாலும், அதன் உறுப்பினர் எவரும் தனிப்பட்ட முறையில் வளர்ச்சியடைய முடியறதில்லே. காலமெல்லாம் பிரச்சினைகளை உண்டு பண்றதிலேயும், அல்லது இருக்கிற பிரச்சினைகளைத் தீர்க்கறதிலேயும் கழிஞ்சு போகுது. சண்டை சச்சரவுகளும், இழுபறிகளும், வருத்தங்களும் வஞ்சகங்களும் சூழ்நிலையை விஷமாக்கி மூச்சைத் திணற வைக்குது. காரணம் பொருளாதாரம்தான். அதனால நமக்கு இரட்டைச் சண்டை வீட்டுக்கு வெளியே பொருளாதாரப் போராட்டம். வீட்டுக்கு உள்ளே குடும்பச் சிக்கலைத் தீர்க்கிற போராட்டம். சாதாரண அறிவும், மனசும் கொண்ட ஒரு சராசரி மனுஷன் இதிலேயே நசுங்கிப் போயிடறான்" என்றார்.

இவ்வளவு நேரம் கழித்து திவாகர் சட்டென்று திரும்பி ஒரு கேள்வியை முன் வைத்தான். "இது சூழ்நிலை இல்லே? இது ஒண்ணும் விளைவு இல்லியே!" என்றான்.

"நான்தான் சொன்னேனே, இதன் விளைவா உங்களால உங்க ஆளுமையை-பர்சனாலிடியை வளர்த்துக்க முடியாம போகுது. உங்களோட ஆற்றலையும், தனித்திறமையையும் சரியான திசையிலே வளர்த்துக்க உங்களுக்கு வாய்ப்பே கிடைக்கறதில்லே. இன்னொரு வகையிலே சொல்லப் போனா நீங்க இந்த விஷயங்களிலே சிக்கி ரொம்பக் களைச்சுப் போறீங்க. உங்க கனவுகளைப் பூர்த்தி செஞ்சுக்கறதுக்கு உங்க மனசுலேயோ மூளையிலேயோ வலுவே இருக்கறது கெடயாது. படிக்கவோ, அல்லது அறிவு, மன ஆற்றலை வளர்த்துக்கவோ உங்ககிட்டே ஆற்றல் எங்கே மிஞ்சுது? நம்ம நாட்டிலே அறிவாற்றல் அதிகம் வளராததுக்கு இதுவும் காரணம். தப்பும் தவறுமா உருப்போட்டு பாஸ் பண்ணிட்டா பெரிசா சாதிச்சுட்டதா நெனைக்கிறோம். நம்ம உருப் போடறதெல்லாம் எவனோ முந்தியே வாந்தியெடுத்தது. உலக அறிவியல் முன்னேற்றத்திற்கும், இலக்கிய முன்னேற்றத்திற்கும் துணை செய்யறதை

விடுங்க. உலகம் அடைஞ்சிருக்கிற அறிவியல், இலக்கிய முன்னேற்றத்தைத் தெரிஞ்சுக்கக்கூட உங்களால முடியலே. அதிலே தெரிஞ்சுக்கறதும் எவனோ மூன்றாம் மனுஷன் சொன்னது அல்லது அம்பது வருஷத்துக்கு முந்தையதுதான். இந்த இரங்கத்தக்க நிலையை நாம "இந்த லௌகீக அறிவியல் எல்லாம் நமக்கு எதுக்கு? நாமதான் இந்த உலகத்திலே பெரிய ஞானம் மிக்க இனமாச்சே, நாமதான், உலகத்துக்கு எவ்வளவோ கொடுத்திருக்கோமே"ன்னு மறைச்சுக்கப் பார்க்கிறோம். இந்த மாதிரி உளுத்துப்போன சித்தாந்தவாதிகள் பட்டாளம் பட்டாளமா இருந்துக்கிட்டே இருக்காங்க." பிறகு தன் பேச்சை ஒன்று திரட்டியவராக, "ஆக இதுக்கெல்லாம் எளிய விடிவு— நீங்க தனியா இருந்துக்கிட்டு வீட்டுக்கு உங்க பொறுப்பு என்னவோ அதை நிறைவேத்துங்க அப்படீங்கறதுதான்."

நான் அவருடைய அலசும் ஆற்றலைக் கண்டு வியந்துபோனேன். அவர் சொல்வது எல்லாம் எளிதாக எனக்கு விளங்கியது கண்டு ஆச்சரியமாக இருந்தது. இவ்வளவு எளிய விஷயம் இதுவரை என் அறிவுக்கு ஏன் உதிக்கவில்லை? சட்டென்று ஒரு கேள்வி உதித்தது. "ஆனா, இது மோசமான சுயநலம் இல்லியா? அம்மா, அப்பா எதை எதையெல்லாம் எதிர்பார்த்து குழந்தைகளை வளர்த்துப் படிக்க வச்சு ஆளாக்குறாங்களோ? தள்ளாத வயசிலே தாங்குதலா இருப்பாங்க. ஒரு நோய் நொடியிலே, உதவி ஒத்தாசையா இருப்பாங்க, அவங்களால வம்சம் வளரும் அப்படீன்னெல்லாம் நெனச்சிருப்பாங்க. வளர்ந்தவுடன் தனியா போயிட்டா அது சுயநலம் இல்லியா?" என்று கேட்டேன்.

"அப்படிப் பார்க்கப் போனா சுயநலந்தான்." என் கேள்வியினால் சற்று தயங்கினர் அவர். "ஆனா குழந்தைகளோட ஆளுமையை வளர்க்காம, அவர்கள் முன்னேற வாய்ப்பு தராம, நீங்க சொன்ன காரணங்களுக்காக அவங்களைத் தன்னோடு பிணைச்சே வச்சிருக்கறதை விட அவங்களைத் தானவே முன்னேறவிட்டு நீங்க சொல்ற இந்தக் காரியங்களை அவங்களாகவே ஒரு கடமையா உணர வைக்கிறது நல்லதில்லையா? எனக்குத் தெரிஞ்ச வரைக்கும் ஒண்ணு, ரெண்டு பிள்ளைங்க இருந்தா, இது மாதிரி பிரச்சினைகள் வர்றது இல்லே. நிறைய பிள்ளைகள் இருந்து, பொருளாதார ரீதியா பலமா இல்லாம வருவாய் குறைஞ்சிருக்கும்போதுதான் கூட்டுக் குடும்பம் ஒரு சாபக்கேடா ஆயிடுது. இந்த நிலையிலேதான் அம்மா-அப்பா, மகன் மேல நமக்குத்தான் உரிமைன்னும், மனைவி, தன் கணவன் அவங்க மகனோ இல்லியோ, தனக்குத் தாலி கட்டின கணவன், அதனால அவன் சம்பாத்தியத்திலே அவளுக்குத்தான் முதல் உரிமைன்னும் நெனைக்கிறாங்க. கடமைன்னு நினைச்சீங்கன்னா தனியா இருந்துக்கிட்டு, ஒன்றிரண்டு தம்பி தங்கையைத் தன்னோட வச்சுக்குங்க. இப்படி செஞ்சா உங்க பாரமும் உங்க அப்பா-அம்மா மேல இருக்காது, அவங்க சுமையும் குறையும். நடைமுறை ரீதியிலே இதனாலே உறவுகளும் நல்லாவே நீடிக்குதுன்னு

தெரியுது. கூடப்பிறந்தவங்க அப்புறமும் கூடத் தனியாப் போறாங்க, ஆனா அப்படிப்போகும்போது ஒரு சண்டை, மனக்கசப்போட போறாங்க, பேச்சு வார்த்தைகூட நின்னு போவுது. பெத்தவங்க, பிள்ளைகளை ஆளாக்கி அவுங்க அவுங்க ஆற்றலைப் பரிசோதிச்சு பாத்துக்க விட்டுடணும். அதுலே அவங்களுக்கு உதவி செய்யணும். எல்லோரும் ஒண்ணா இருக்கணும்ங்கற அவங்க பாசப்பித்து எவ்வளவு நஷ்டம் விளைவிக்குதுன்னு அவங்களுக்குத் தெரியாது.

"அடடா, இதையெல்லாம் கேட்க பிரபா இங்கே இருந்தால்...?"

வழி முழுவதும் இதையெல்லாம் பிரபாவிடம் சொல்லுவேன் என்று நினைத்துக்கொண்டே வந்தேன். அப்பாவிடம் சொன்னால் ஷிரீஷைத் திட்டுவார் "எவண்டா அவன் இப்படியெல்லாம் சொல்லிக் கொடுக்கறது. பொறுக்கிப் பசங்களோட சேர்ந்தா வேறு என்ன கத்துக்குவே" என்று சத்தம் போடுவார்.

மாமா நிஜமாகவே எங்கள் வீட்டில் சாப்பிடவில்லை.

# 9

பிரபாவின் மீது நான் வைத்திருந்த அன்பு, அவளது கையறு நிலையைக் கண்டு என்னுள் ஏற்பட்ட இரக்கமா, அல்லது நான் செய்த தவறுக்காக ஏற்பட்ட பச்சாதாபமா என்று அப்போது எழுந்த கேள்வி எவ்வளவோ நேரம் என்னைக் குடைந்து கொண்டிருந்தது. அப்போதுதான் என் ஒவ்வொரு அணுவையும் நடுங்க வைத்த அந்த நிகழ்ச்சி நடந்தது. என்னருகில் ஒருவருமே இல்லை, நான் தனியனாகவே எப்போதும் நின்றிருக்கிறேன் என்று தோன்றியது.

"இன்னிக்குப் பாவம் உங்களுக்கு ரொம்ப வேலை. உங்க காலைக் கொஞ்சம் பிடிச்சு விடவா?" என்று என் கால்மாட்டில் பிரபா உட்கார்ந்தாள். என் அரைகுறைத் தூக்கம் கலைந்து சட்டென்று நான் கால்களை இழுத்துக் கொண்டேன்.

"வேண்டாம், என் காலைக் கீலை ஒண்ணும் அழுத்த வேண்டாம். நீ படு. கொஞ்சம் வேலை செஞ்சுட்டா எனக்கு என்ன ஆயிட்டுது? நீ நாள் முழுக்க இவ்வளவு வேலை செய்யறியே?" பிறகு வானத்தைப் பார்த்து, "பத்தரை, பதினொண்ணு இருக்கும். இப்பதானா அடுக்களை வேலை முடிஞ்சுது?"

"என்ன செய்யறது? உங்க அண்ணன் இப்பதான் சாப்பிட்டாரு. யார் கூடயோ எங்கியோ போயிட்டாரு. நிஜமா சொல்றேன், எனக்கு அவரைப் பாத்தா பாவமா இருக்கு. ரொம்ப சாது, வாய் திறந்து

யார்கிட்டேயும் பேசறதுகூட இல்லே. எப்பப் பார்த்தாலும் வேலை வேலை." கட்டிலில் உட்கார்ந்துகொண்டு தொங்கும் கால்களை ஆட்டிக்கொண்டே "அவருக்கு சாப்பாடு வச்சு, சாமான் விளக்கி, அடுக்களை சுத்தம் பண்ணினேன். காலைக்கு வேண்டியதைத் தயார் பண்ணி வச்சேன். அப்புறம் புழுக்கமா இருந்ததால கொஞ்சம் குளிச்சேன்" என்றாள் பிரபா.

"ஒஹோ— அதான் பளிச்சுன்னு ராணி மாதிரி இருக்கியா? இன்னிக்கு என்னவோ விசேஷம்னு முன்னாடியே தோணிச்சு. வாசம் கமக்குதே! என்ன செண்ட் போட்டிருக்கே?" என்றவண்ணம் நான் பிரபாவை என்பால் இழுத்துக் கொண்டேன்.

பிரபாவுக்கு வெட்கமாகப் போய்விட்டது. வேறு எங்கோ பார்த்துக் கொண்டு, "கொஞ்சூண்டு வெட்டிவேர் செண்ட் கிடந்தது. மனசு கேக்கலே" என்றவள் தன்னை விடுவித்துக்கொண்டு, "நிஜமாவே இன்னிக்கு உங்க காலைப் பிடிச்சு விடணும்னு ரொம்ப தோணுது. நீங்க வாளி வாளியா தண்ணி மேலே கொண்டு போய்க்கிட்டிருந்தப்பவே, இவரு பிடிவாதமா வாளி வாளியாத் தண்ணி தூக்கறாரு, கால் வலிக்கப் போவுதுண்ணு நெனச்சேன்" என்றாள்.

பிரபா எவ்வளவு அக்கறை செலுத்துகிறாள்! நான் நெகிழ்ந்து போனேன். முதுகில் கை வைத்து அன்புடன், "இல்லே பிரபா, இந்த வயசிலே கொஞ்சம் வேலை செஞ்சா கால் வலிச்சுதுன்னா, அப்பா வயசிலே என்ன செய்வேன்? அவரைப் பார். இன்னிக்கும் இருபது. இருபது சேர் கோதுமையை இரண்டு பக்கமும் தொங்கவிட்டுக்கிட்டு கடைத்தெருவுக்குப் போறாரு. இன்னிக்கு ரொம்ப வெய்யிலா வேற இருந்தது இல்லே?" என்றேன்.

மாலையிலிருந்தே வெப்பம் அதிகமாகப்பட்டது. எனவே நான் கீழேயிருந்து வாளியில் தண்ணீர் கொண்டு வந்து, மாடி முழுவதும் நன்றாகத் தெளித்துவிட்டேன். நாங்கள் ஒரு மறைப்பில் தூங்குவோம். என் அறைக்கும், தெருப்பக்கமாக இருக்கும் கைப்பிடிச் சுவருக்கும் இடையில் இருந்த குறுகிய திறந்த வெளிதான் நாங்கள் படுக்கும் இடம். அந்த இடம் ஒரு மூலையில் சற்று தள்ளி இருந்தது. எனவே, வேண்டு மென்று யாரும் வந்தாலொழிய மாடிக்கு சாதாரணமாக வருபவர்களால் அந்தரங்கத்திற்கு பங்கம் ஒன்றும் வராது. அண்ணனும், அண்ணியும் இன்னொரு பக்கம் தூங்குவார்கள். அவர்களுக்கு ஒரு மறைப்பு ஏற்படுத்திக்கொள்ள வேண்டியது அவசியமாக இருந்தது. அமர், கும்வர், அம்மா, அப்பா எல்லாரும் திறந்த வெளியில் மாடிப்படி அருகில் படுப்பார்கள். நான் இன்று மாடி முழுவதும் தண்ணீர் தெளித்ததுடன் பகலெல்லாம் வெப்பத்தில் சூடாகி விடைத்துக் கிடந்த கட்டில்கள் மீதும் ஒவ்வொரு வாளி ஊற்றியிருந்தேன். அதனால் இப்போது சற்று குளிர்ச்சியாக இருந்தது. ஈரமான கட்டிலில் வெறும்

தலையணை மட்டும் வைத்துக் கொண்டு படுத்தவண்ணம் நான் திறந்த வானத்தைப் பார்த்துக் கொண்டிருந்தேன். வானம் முழுவதும் நட்சத்திரப் பூ வேலைப்பாடு. சமயத்தில் ஒரு நட்சத்திரம் ஒளி வீசிக் கொண்டு இன்னொரு திக்கில் பாய்ந்தது. இது ஒரு கணத்தில் பயணித்தாலும் எத்தனை ஒளியாண்டுகளைக் கடந்ததோ என்று ஆச்சரியமாக இருந்தது. இந்த வாழ்க்கையிலேயே இந்த நட்சத்திரங்களுக்கெல்லாம் போய், அங்கேயெல்லாம் மனிதர்கள் எப்படி வாழ்கிறார்கள் என்று பார்க்க உபாயம் எதுவும் கிடையாதா? பிறகு, 'ஆமாம், நம் பூமியைப் பற்றியே தெரிய வில்லையாம், நட்சத்திர மண்டலங்களைத் தெரிந்துகொள்ளப் போகிறோமா?' என்று என் மீதே எரிச்சல் வந்தது. அன்று ஷிரீஷ் சொன்னாரே— "உலகத்து விஞ்ஞானத்தை முன்னேத்தி அதிலே ஒண்ணை சாதிக்கறதை விடுங்க, மத்தவங்க சொன்னதையும் நாம கத்துக்கறதில்லே" இப்படியெல்லாம் யோசித்தவண்ணமே என்னையறியாமல் கண் ணயர்ந்து விட்டேன். பாத்திரங்களின் ஒலி, மற்றும் பேச்சுக்களினால் யார் வந்தது, யார் போனது, வீட்டு வேலை எவ்வளவு தூரம் முடிந்தது என்பதை உள் மனம் ஊகித்துக்கொண்டேயிருந்தது. மாடியில் ஒரு மூலையிலிருந்து அண்ணியும் அவள் குழந்தையும் ஏதோ பேசுவது கேட்டது. தூரத்தில் எங்கோ ஒலித்த சினிமாப் பாடலும் அவ்வப்போது காதில் வந்து மோதியது. எங்களுக்கென்று தனி வீடு இருக்கும்போது மாடியில் எப்படியெல்லாம் தூங்குவோம்? ஆனால் எங்கள் வீட்டில்தான் 'லான்' இருக்குமே.

"என்ன யோசிக்க ஆரம்பிச்சிட்டீங்க" என்று பிரபா முழங்கையில் சற்று இடித்தாள். அவள் கை மெதுவாக என் காலின் ஆடுசதைக்கு எப்போது வந்தது என்றே எனக்குத் தெரியவில்லை.

அவள் குரல் கேட்டு நான் திடுக்கிட்டு நனவுக்குத் திரும்பினேன். கொட்டாவி விட்டு, "சாப்பிட்டியா?" என்று விசாரித்தேன்.

"சாப்பிட்டிருப்பேனா இருக்கும். அது பத்தி உங்களுக்கென்னா கவலை," என்று புகார் தொனிக்க பிரபா சொன்னாள்.

குரலில் பரிவையும், கையறு நிலையான புகாரையும் கலந்து உருக்கமாக நான், "ஏன் பிரபா, அப்படி ஏன் நெனைக்கிறே? இங்கே இருக்கற கஷ்டங்கள் உனக்கும் தெரியும், எனக்கும் தெரியும். நாம ரெண்டு பேரும் சேர்ந்தே சாப்பிடணும்னுதான் எனக்கு எப்போதும் ஆசை. புரொபசர் ஆகித் தனி வீடு போனப்புறம் பாரேன். நீ குறை சொல்ற மாதிரி வச்சுக்கவே மாட்டேன். இங்கே ஒவ்வொரு வேளைக்கும் வந்து நீ சாப்பிட்டியான்னு கேட்டுக்கிட்டிருக்கவும் முடியாதே. அப்புறம் அதுக்கு ஒரு தனி கலாட்டாவே நடந்துடும்" என்றேன்.

பிரபா கலகலவென்று சிரித்தாள், "நான் சும்மா வெளையாட்டுக் குல்லே சொன்னேன்? இன்னிக்கு நான் உங்களைவிட நல்லா சாப்பிட்டேன். பூரி, பாயசம், அல்வா, இன்னிக்கு உங்களுக்கெல்லாம்

கொஞ்சம் கொஞ்சம் கெடச்சுதே, அதெல்லாம் உங்களுக்காக செஞ்ச துன்னு நெனச்சிங்களா?"

அவள் சிரிப்பு இரவின் அமைதியில் மிகவும் இனிமையாக, சிறு வெள்ளி மணிக்கொத்து ஒன்று காற்றில் குலுங்கி ஒளியெழுப்புவதுபோல இனிமையாக இருந்தது. உடனேயே அன்று அப்பா போட்ட சத்தம் இருவருக்கும் ஒருங்கே நினைவு வந்துவிட்டது போலும்! அவள் சிரிப்பு நடுவிலேயே நின்றுவிட்டது. பேச்சை மாற்றுவதற்காக நான், "இன்றைக்கு என்ன விசேஷம்? ஏதாவது கல்யாண வீட்டிலேருந்து வந்திருக்கும்னுல்ல நான் நினைச்சேன்" என்று கேட்டேன்.

அதற்குள் மெல்ல மெல்ல என் ஆடுசதையை வருடிக் கொண் டிருந்த பிரபா உண்மையிலேயே என் கால்களைப் பிடித்துவிட ஆரம்பித்துவிட்டதை கவனித்தேன். அவள் கையைப்பிடித்துத் தடுத்து, "இன்னிக்கு உனக்கு என்ன ஆச்சு, எனக்குப் பிடிக்கலேன்னு சொல் லிட்டேன், இல்லே? நானில்லே உனக்கு கால்பிடிச்சு விடணும்? நாளெல்லாம் மாடா ஒழைக்கறே!" என்றவன் உடனே, "ஆங்- இன்னிக்கு என்ன விசேஷம்னு கேட்டேனே! மாமா எங்கியாவது அமருக்கு சம்பந்தம் நிச்சயம் பண்ணிட்டு வந்தாரா," என்றேன்.

"இல்லே, அது இல்லே" என்றவள், "இன்று நாங்க விரதம், நான், உங்க அண்ணி, பக்கத்து வீட்டு அவஸ்தி மனைவி எல்லாரும்..."

"ஓஹோ, அதான் கணவன் பணிவிடை பிச்சிக்கிட்டு போவுதோ?" என்று கேலி செய்தேன். "மகாராணி எதற்கு விரதமோ?"

"எதுக்கு வச்சா உங்களுக்கு என்ன? இதெல்லாம் பொம்பளைங்க சமாச்சாரம்" என்றவள் நான் வருத்தப்பட்டுவிடக் கூடாது என்று, "நீங்க நல்லா படிச்சு நல்ல வேலைக்குப் போகணும்னா அதுக்கு நானும் ஏதாவது செய்யணுமில்லே?" என்று விளக்கினாள்.

அவள் கைகள் தொடர்ந்து கால்பிடித்து விட்டுக் கொண்டிருந்தன. எனக்கும் இப்போது இதமாக இருந்ததால் தடுக்கப் பிடிவாதம் பிடிக்க வில்லை. தலைக்கு அடியில் மடங்கிய முழங்கையை வைத்துப் பிரபா பக்கம் ஒருக்களித்துப் படுத்த நான், "ஏற்கெனவே கொஞ்சமாவா வேலை செய்யறே? போதாதற்கு பூஜை, புனஸ்காரம், விரதம் எல்லாம் வேற ஆரம்பிச்சுட்டியா? உடம்பையும் கொஞ்சமாவது பாத்துக்க, ஏதாவது உடம்பு சரியில்லாம போயிட்டா என்னால வைத்தியம்கூட பாக்க முடியாது" என்றேன்.

பிரபா சட்டென்று தலையை ஆட்டினாள், "விரதம் வைக்கறதினால உடம்பு எங்கியாவது கெடுமா? அதனால் உடம்பு இன்னும் நல்லாகும். உபவாசம் இருக்கறதனால எவ்வளவு லாபம்னு உங்களுக்கு ஏதாவது தெரியுமா?"

நான் வறண்ட குரலில், "இருக்குமா இருக்கும். எனக்கு இதிலெல்லாம் நம்பிக்கை இல்லே, இதையெல்லாம் பத்தி கேக்கவும்

பிடிக்கலே" என் வறண்ட குரலைக் கேட்டு நானே திடுக்கிட்டுவிட்டேன். பிறகு சமாளித்துக் கொண்டு, "விரதம்னா, நல்ல அமுதுபடையல், பழம், பால், முந்திரிப்பருப்பு, திராட்சையெல்லாம் இருந்தால் லாபம் வெளயும், நாள் பூரா ஒரு வாய் தண்ணி குடிக்காம கிடந்தா இது விரதமா, சித்ரவதையா?" என்றேன்.

பிரபா அத்துடன் விஷயத்தை விட்டுவிட முயன்றாள், "என்ன தெனமா விரதம் இருக்கோம். ஏதோ ஆறு மாசத்துக்கு ஒரு தடவை, ஒரு வருஷத்துக்கு ஒரு தடவை."

"எவ்வளவு நாளைக்கு ஒரு முறை விரதம்ங்கறது பேச்சில்லே. எனக்கு இந்த மூடப்பழக்கத்திலே எல்லாம் நம்பிக்கை இல்லே. உனக்கு இந்த நம்பிக்கையெல்லாம் உண்டுன்னு சொல்லவேயில்லையே! நான் ஒரு காலத்தில் இதையெல்லாம் நம்பினேன். கோயிலுக்குப் போவேன். விரதமெல்லாம் இருப்பேன். ஆனா இப்ப இது மேலே எல்லாம் நம்பிக்கையே கிடையாது." மனத்திற்குள் ஷிரீஷின் தொடர்பினாலோ என்று நினைத்துக் கொண்டேன்.

பிரபாவுக்குத் தொண்டை அடைத்தது, "எனக்கும்தான் நம்பிக்கை கிடையாது. ஆனா ஒரு வீட்டில் இருக்கறப்போ விருப்பமில்லாமலேயே பலதும் செய்யவேண்டியிருக்கு. உங்க அண்ணி விரதம் இருந்தாங்க. நான் மட்டும் வைக்கலேன்னா எவ்வளவு கலாட்டா நடக்கும்? சரி விடுங்க, ஏதோ நல்லதை நினைச்சுதானே வச்சேன். இதுக்காக சண்டை பிடிக்காதீங்க" என்றவள், "விரதங்கறது ஒரு சங்கற்பத்தை மனசிலே நிறுத்தறதுக்கு ஒரு வழி, அவ்வளவுதானே" என்று எடுத்துச் சொன்னாள்.

"வழியாவது, மண்ணாங்கட்டியாவது!" என்று எரிந்து விழுந்தேன். "எனக்குப் பிடிக்காததைச் செய்தது மட்டுமல்லாமல் சால்ஜாப்பு வேறயா?"

இரண்டொரு கண்ணீர்த் துளிகள் அவள் கன்னங்கள் வழியாக உருண்டு என் ஆடு சதையில் விழுந்தன. "உங்களைக் கும்பிட்டுக் கேட்டுக்கறேன். இன்னிக்கு ஒண்ணும் சொல்லாதீங்க. நாளைக்கு எவ்வளவு வேணும்னாலும் திட்டுங்க."

அவளுடைய கெஞ்சல் கலந்த குரலாலும், கண்ணீராலும் நான் சட்டென்று பொங்கிவிட்டேன். அவளை இழுத்து மார்போடு அணைத்துக் கொண்டேன். பச்சாதாபத்தினால் நான் உள்ளும் புறமும் நிறைந்து போனேன். பாவம், எனக்காக, என் எதிர்காலத்திற்காக இவள் நாள் முழுவதும் பட்டினி இருந்திருக்கிறாள். நான் என்னடாவென்றால் இவளைக் கடிந்து கொள்கிறேன். ஒன்றும் கெட்டதற்காகச் செய்ய வில்லையே, நம்பிக்கையே உண்மையில் இருக்கிறது என்று வைத்துக் கொள்வோம். ஒருவருக்கு இவ்வளவு உரிமை கூடவா கிடையாது? ஒருவருக்கு இனிப்பு பிடிக்கும். இன்னொருவருக்குக் காரம். அவரவர் இஷ்டம். பலவந்தமாக இனிப்பைத்தான் விரும்ப வேண்டும் என்று

சொல்ல முடியுமா? சே, சமயத்தில் எப்படி, வரம்பு மீறி நடந்து கொள்கிறேன்?

ஏனோ, பிரபா வெகுநேரம் அழுதுகொண்டிருந்தாள், நான் அவளுக்கு "ஐயய்யே, நான் சும்மாதானே உன்னை கலாட்டா பண்ணிக் கிட்டு இருந்தேன். இதுமாதிரி சின்ன விஷயங்களையெல்லாம் பெரிசு படுத்தாதே பிரபா! பல விஷயங்களை உலகத்துக்காகச் செய்ய வேண்டி யிருக்குதுன்னு எனக்குத் தெரியாதா?" என்றெல்லாம் ஆறுதல் சொல்லிக் கொண்டிருந்தேன். ஆனால் என் மார்பில் சாய்ந்திருந்த அவள் கன்னங் களிலிருந்து கண்ணீர் மார்பில் உருண்டோடி விலா வழி இறங்கிக் கொண்டே இருந்தது. இந்தக் கண்ணீர் வருத்தத்திலோ துன்பத்திலோ உண்டானவை அல்ல. இவை நன்றி உணர்வின் காரணமாகவும் மற்றும் வாழ்க்கையின் நிறைவின் காரணமாகவும் துளிர்த்தவை. இந்தத் தேம்பல்கள் இவள் எனக்காக வாய்விட்டுக் கூறமுடியாதபடி சமர்ப்பித்து விட்ட மூச்சுகளின் வெளிப்பாடுகள். இவள் தன் வாழ்க்கையின், தன் உயிரின் ஒவ்வொரு மூச்சையும் எனக்காக அர்ப்பணித்துவிட்டாள். என் கண்களும் பனித்தன. பிரபாவின் உடலிலிருந்து எழுந்த வெட்டிவேர் அத்தரின் மணம் என் நாடி நரம்புகள் தோறும் பரவியது. இப்படிப்பட்ட மனைவி கிடைத்தால் யார்தான் ஆனந்தத்தில் திளைக்க மாட்டார்கள் என்று எனக்கு அப்போது தோன்றியது. கண்ணீர் திரையிட்ட கண்களால் நான் மேலே பார்த்தேன். வானம் முழுவதும் நட்சத்திரங்கள் பொரிந்து கிடந்தன. இந்த என் இன்பத்துக்கு சாட்சிகளாக விளங்கும் இந்தத் தாரகைகள் மனத்தில் என்ன எண்ணமிட்டுக் கொண்டிருக்குமோ என்று ஒரு கணம் யோசித்தேன். ஒரு வேளை இவற்றில் ஒன்றில் ஒரு மொட்டை மாடியில் நாளெல்லாம் உழைத்துக் களைத்த ஒரு ஜோடி கட்டியணைத்துக்கொண்டு, பரஸ்பரம் களைப்பை ஆற்றிக்கொண் டிருக்குமோ? அந்த ஜோடி பார்க்கும் தாரகைகளில் ஒன்றாக நம் பூமியும் இருக்குமோ? அந்த ஜோடியும் இதேபோன்று எண்ணமிட்டுக் கொண்டிருக்குமோ? அப்போது "இந்த நட்சத்திரங்கள் நிறைந்த வானம், இந்த திக்குகள், இவையெல்லாம், நம்முடைய, நம் ஆத்மாவினுடைய அங்கங்களே. இவையாவும் நாமே' என்று ஒரு எண்ணம் பளிச்சிட்டது. நான் அவள் கன்னத்தைத் தட்டிக் கொடுத்தவண்ணம் "அழாதே பிரபா! இப்படியா அழுவார்கள்? அழுகையை நிறுத்து பிரபா" என்று அவளுடைய இதழ்களையும், கண்களையும் முத்தமிட்டுக் கொண்டிருந்தேன்.

அண்ணா குழந்தைக்கு என்ன கஷ்டமோ தெரியவில்லை, அழுது கொண்டே இருந்தது. திடீர் என்று அண்ணா போட்ட சத்தத்தில் என் கண்களும் திறந்து கொண்டன. "அழுகையை நிறுத்தாட்டித் தெருவிலே தூக்கி எறி சனியனை. அந்தப் பக்கம் எடுத்துக்கிட்டுப் போய்த்தொலை, என்னைக் கொஞ்சம் தூங்கவிடு" என்று அவர் அண்ணியிடம் சத்தம்

போட்டுக் கொண்டிருந்தார். அப்பாவும் விழித்துக் கொண்டார்போலும், அண்ணி அம்மாவுக்கு அருகே குழந்தையைக் கொண்டு சென்று சமாதானப்படுத்த முயன்றாள். சிறிது நேரம் தூங்க முயன்று தோற்ற பின் எனக்கு நானே "மணி என்ன இருக்கும்"? என்று கேட்டுக் கொண்டேன்.

பிரபாவும், விழித்துக் கொண்டுவிட்டிருந்தாள். நான் சீக்கிரம் போக வேண்டியிருந்ததால் அவளும் சீக்கிரமே எழவேண்டியிருந்தது. தலையணை உறையிலிருந்து தன் கடிகாரத்தை எடுத்து "இப்பதானே ஒண்ணரை ஆவுது" என்றாள்.

"அப்படியா, சரி நீ தூங்கு" என்று நான் மீண்டும் வானத்தைப் பார்க்க ஆரம்பித்தேன். ஊகமாக சப்தரிஷி மண்டலத்தையும், துருவ நட்சத்திரத்தையும் அடையாளம் கண்டு கொள்ள முயன்றேன். வானத்தின் ஒரு மூலையில் வெளிச்சமாக இருந்தது. எங்கோ மிகப் பிரகாசமான ஒளி உண்டாவது போலவும், இது அதன் ஒளிச் சிதறல் போலவும் தோன்றியது. முன்பு அங்கு ஏரோட்ராம் சர்ச் லைட் சுற்றிக் கொண்டிருந்தது எனக்கு ஞாபகம் வந்தது. அப்போது அதன் பிரகாசமான ஒளி நாக்கு இருளைத் துழாவிக் கொண்டு அவ்வப்போது போகும். ரயில் எஞ்சினின் ஓசையும், சிக்புக் சத்தமும் அன்று லாந்தர் வெளிச்சத்தில் நான் ஸோஹ்ராப்-ருஸ்தம் படித்துக் கொண்டிருந்ததையும் பிரபா வருத்தம் கொண்டு நின்றிருந்ததையும் நினைவுபடுத்திற்று. அந்த நாளை விட்டு எவ்வளவு தூரம் முன்னேறி வந்துவிட்டேன்? அடுத்த ஆண்டு இதே கோடையில் நான் எங்கிருப்பேனோ? தனியாகப் போய்விட்டால் வாழ்க்கை எப்படி அமையுமோ? ஷிரீஷ் சொன்னவற்றை பிரபாவிடம் சொல்ல வேண்டும் என்று ஆசை மூண்டது.

பிரபாவின் தோளைத்தொட்டு, "எனக்குத் தூக்கம் வரலை பிரபா!" என்றேன்.

பிரபாவும் விழித்துக் கொண்டிருந்தாள்போலும், "அப்படீன்னா ஏதாவது பேசுங்களேன். ஆனா அப்புறம் காலையிலே முழிப்பு வராத படி தூங்கிடாதீங்க. ரொம்ப நாளா உங்க நண்பரைப்பத்தி ஒண்ணுமே சொல்லலியே..." என்றாள்.

"யாரைப்பத்தி? திவாகரைப் பத்தியா" என்று நான் உற்சாகமாகக் கேட்டேன். "உன்னை அவன் ஒய்ஃப் எவ்வளவு நாளாக் கூப்பிட்டுக் கிட்டேயிருக்கா. நீதான் வரவேமாட்டேங்கிறே. ஒருநாள் வாயேன். ஷிரீஷ்கூட இப்போ வந்திருக்காரு."

"யார் அது ஷிரீஷ், அவரோட தங்கச்சி..."

"ஆங்... அவரேதான். பாவம் ரொம்ப நொந்து போயிருக்காரு, அவரோட தங்கச்சியை குணப்படுத்த முடியாதுன்னு டாக்டரெல்லாம் சொல்லிட்டாங்க. நேத்தி அவர் பேசின பேச்சிலே எனக்குக் கண் தொறந்தது" சரி, தூக்கம் வராததற்கு அவரைப் பற்றியே பிரபாவிடம்

சொல்லுவோம் என்று நான் பேச ஆரம்பித்தேன். "வழி நெடுக்க நாங்க கூட்டுக் குடும்பம் பற்றிப் பேசிக்கிட்டிருந்தோம். அவர் கூட்டுக் குடும்பத்தை எதிர்க்கறாரு. இதனால தனி மனித ஆளுமை வளர மாட்டேங்குதாம். அதனால மனிதன் தன் ஆற்றலையும், திறமையையும் வளர்த்துக்க முடியாம போயிடுதாம். அது மட்டுமல்ல, பரஸ்பர சண்டைச் சச்சரவுகள்லேயும், வஞ்சகங்களிலேயும் அவன் தன்னோட கடமையை மறந்துடறானாம். தனியா இருந்துக்கிட்டு தன்னை உருவாக்கிக்கிட்டே தன் கடமையையும் செய்ய முடியாதாங்கறாரு. நீயே சொல்லு, நாம கூட்டுக்குடும்பமா இருந்து நம்ம கடமையை சரியா செய்யறோமா? மனத்திலே கசப்பை வளர்த்துகிட்டு இருக்கறதைத் தவிர வேறு என்ன செய்யறோம்? கடமையும் செய்யறதில்லே, நல்லுணர்வையும் வளர்த்துக்கறது இல்லே. தனியா இருக்க முயற்சி பண்ணினோம்னா இரண்டும் இல்லாட்டியும் ஒண்ணாவது மிஞ்சுமில்லே."

பிரபா கண் கொட்டாமல் வானத்தைப் பார்த்தவண்ணம், "அவர் சொல்றது தப்பில்லேதான்..." என்றாள்.

"இதையேதான் பிரபா, நானும் அவர்கிட்டே சொன்னேன். சொல்றது சரிதான்னு பட்டாலும், அந்தராத்மா ஒத்துக்க மாட்டேங்குது. இது பயங்கரமான சுயநலம்னு தோணுது. அப்புறம் அவர் ஆத்மா, கலாச்சார பாதிப்புகள் எல்லாத்தையும் பத்தி ரொம்ப நேரம் பேசிக்கிட்டு இருந்தார். ஆத்மான்னு ஒண்ணும் கிடையாதாம். வழக்கம், பாதிப்புகள், பாரம்பரியம், ஒருவரைப் பார்த்து அதுமாதிரி நடக்கறது எல்லாம் சேர்ந்து ஒரு கலாச்சார பாதிப்பை நம்மேல ஏற்படுத்திடுதாம். இந்தப் பாதிப்பு புதுசா எதையும் செய்யவிடாம இடைஞ்சல் செய்யுதாம். அதைத்தான் நாம நம்ம அந்தராத்மா தடுக்குதுன்னு சொல்றோமாம். இந்த ஆத்மா, வாசல்லே கட்டிப்போட்ட நாய் மாதிரியாம். புது ஆள் வந்தா துள்ளிக் குதிச்சு குரைக்கும். பழக்கப்பட்ட ஆள் வந்தா வாலைக் குழைக்கும். மாமிசம் சாப்பிடாதவனுடைய ஆத்மா, மாமிசம் சாப்பிட்டா அவனைப் பிறாண்டும். வெங்காயம் திங்காதவனுக்கு வெங்காயம் அந்தராத்மாவுக்கு விரோதமானதுன்னு தோணும். ஒண்ணு, மாமிசமும், வெங்காயமும் சாப்பிடாதவங்களுக்கு ஆத்மா கிடையாதுன்னு சொல்லணும். இல்லே, ஆத்மா சிலபேரோட பிரத்யேக சொத்துன்னு வச்சுக்கணும். ஒரு காலத்திலே ரொம்ப ஆசாரமான பிராமணரோட ஆத்மா கார்ப்பரேஷன் குழாய்த் தண்ணி குடிக்கக்கூட சிணுங்கிச்சு, அவரு கைகழுவக்கூட மண்ணைக் கையிலேயே எடுத்துக்கிட்டுப் போய்க்கிட்டிருந்தார். அப்ப ஆத்மா பழங்காலத்துலேதான் இருந்துது, இப்ப இல்லேன்னு வச்சுக்கறதா? உண்மையிலே பழைமைப் பிடிப்புக்கும், புதுமையை ஏற்கவிரும்பாத சோம்பலுக்கும், மடத்தனத்துக்கும் நாம அந்தராத்மான்னு பேர் வச்சுடறோம். உண்மையிலே இது வெறும் கலாச்சார பாதிப்புதான். இதை சரியா புரிஞ்சுக்கிட்டா நாம நம்மோட

கலாச்சார -பாதிப்புகளை மாத்திக்க முடியும்- அப்படீன்னெல்லாம் சொல்றாரு."

பிரபா கண்கொட்டாமல் கேட்டுக் கொண்டேயிருந்தாள். நான் முழங்கையை ஊன்றி ஒருக்களித்துப்படுத்து சொல்லிக்கொண்டே போனேன். இப்படியே அவ்வப்போது சொல்லிக்கொண்டேயிருந்தால் இவள் எவ்வளவோ கற்றுக் கொள்வாளே என்று தோன்றியது. எங்கேயாவது ஒரு சின்ன வேலை கிடைத்தாலும் நான் சற்று நேரம் ஒதுக்கிக் கொண்டு இவளுக்குக் கல்வி புகட்ட முடியும். பிற்காலத்தில் என் அக்கம் பக்கத்தவர் எல்லாம் பி.ஏ., எம்.ஏ. என்றிருப்பார்கள். அவர்கள் மனைவிகள் எல்லாம் ஒருவரை ஒருவர் படிப்பில் மிஞ்சி யிருப்பார்கள். அப்போது அவர்களுடன் பழகுவதற்கு வசதியாக பிரபாவுக்கும் சற்று கல்வி அளித்தே ஆக வேண்டும் அல்லவா? அதற்கு அவள் மனசைத் தயார் செய்வதற்கு இது ஒரு முயற்சி என்றுதான் வைத்துக் கொள்வோமே. கல்லூரியில் சேரும்போது சேரட்டும், குறைந்த பட்சம் ஷிரீஷைச் சந்திக்கத் தயக்கம் காட்டினாளே அந்த தயக்க மாவது விலகும். அவள் யோசிக்கவும், கேள்வி கேட்கவும் நான் அவகாசம் கொடுத்தேன். "கேக்கறதுக்கு நல்லாதான் இருக்கு. ஆனா இன்னிக்கே சேலை மாராப்பை மாத்திக் கட்டிக்கிட்டு, முக்காடு போடாமல் என்னோட தெருவில் நடன்னு சொன்னீங்கன்னா, அம்மாடி, எனக்குத் துணிச்சல் வராது" என்றாள் பிரபா.

அவளுக்கு நான் சொல்வது புரிகிறது என்பதில் திருப்தியாக இருந்தது. "அப்படீன்னா எல்லாம் கலாச்சார பாதிப்புகள் அப்படீங்கறது தானே உண்மையாவுது. ஷிரீஷ், இந்த அந்தராத்மாங்கற கலாச்சார பாதிப்பு பத்தி ஒரு நல்ல உதாரணம் சொன்னார். இந்த கலாச்சார பாதிப்புகள் இருக்கே இதெல்லாம் ரயில் பெட்டியில் உட்கார்ந்திருக்கிற பிரயாணிகள் மாதிரியாம். பிரயாணிகள் நிரம்பிய பெட்டியிலே நீங்க ஏறப்பாத்தீங்கன்னா, உள்ளே யிருக்கறவன் ஒவ்வொருத்தனும் உங்களைப் பிடிச்சுத் தள்ளப் பார்ப்பான். உங்களை ஏறவிடாம அடிக்கப் பார்ப்பான். ஆனா உங்களுக்கும் ஏறவேண்டிய கட்டாயம் இருக்கே. அதனால எப்படியோ முண்டியடிச்சு ஏறிடுறீங்க. உள்ளே இருக்கறவங்களோட கொஞ்சம் பழக்கம் ஏற்பட்டவுடனே எதிர்ப்பு எல்லாம் மறைஞ்சுடுது. நீங்க சண்டைபோட்டு வாங்கின இடத்தை விட்டு கொஞ்சம் அங்கே இங்கே போனாலும் உங்க இடத்தை பத்திரமா வச்சுருக்கற அளவு பழக்கம் ஏற்பட்டுடுது. ஆனா என்ன கஷ்டம்னா, நீங்க உள்ளே யிருக்கறவங்களோட ஒன்றிப்போன பிறகு நீங்களும் அவங்களோட சேந்துக்கிட்டுப் புதுசா வர்றவங்களை எதிர்க்க ஆரம்பிச்சிடுறீங்க. உங்களையும் இதுமாதிரிதானே கஷ்டப்படுத்தினாங்க அப்படீங்கறதை மறந்தே போயிடுறீங்க."

பிரபா இதுபற்றி ஏதும் கேள்வி கேட்காமல் பேச்சை ஒரேயடியாக

மாற்றினாள். "ஆமாம், உங்க ஷிரீஷுக்கு எது மேலேயாவது நம்பிக்கை உண்டா? அவரைச் சந்திக்கணும் போல இருக்கு. ஆனா தயக்கமா இருக்கு. அவர்கிட்டே நான் என்ன பேசறது? பேச்சே கிளம்பாது".

"பேச்சு, ஏன் கிளம்பாது? நான் உன்னைக் கட்டாயம் அறிமுகப் படுத்திவைப்பேன்" என்றேன். பிறகு பிரபாவின் கேள்விக்கு பதில் சொன்னேன். "நானும் இதே கேள்வியைத்தான் ஷிரீஷ்கிட்டே கேட்டேன். 'எல்லாத்தையும் எதிர்க்கறீங்களே, எது மேலேயாவது நீங்க நம்பிக்கை வச்சிருக்கீங்களா?'ன்னு கேட்டேன். அதுக்கு அவர் உரக்க சிரிச்சுட்டு, கடவுள், மதம், அந்தராத்மா, கலாச்சாரம் இதையெல்லாம் விட்டுட்டு, மிச்ச எல்லாத்தையும் நம்பறேன்னார். அதாவது எதையும் நம்பறதில் லேன்னு சொல்லுங்கன்னேன். நம்பிக்கைங்கறது இந்த நாலஞ்சு விஷயத் துக்கு மட்டும்தான் பட்டா எழுதி வச்சிருக்குன்னா, அப்படியே வச்சுக்குங்கன்னார். நான் மீண்டும் அவரைத் துருவினேன். 'அது எப்படி முடியும்? ஒண்ணை நம்பாம மனிதனால எப்படி முன்னேற முடியும், எந்த திசையிலே முன்னேற முடியும்'னு கேட்டேன். அதுக்கு மனிதன் எந்த நிலைமையிலேயும், எப்பவும் முன்னேர்றான், பழசை விட்டுட்டுப் புதுசை கைக்கொண்டான் அப்படீங்கறத நம்பினா போதும், மனிதனுக்குக் கால் முன்னோக்கி இருக்கறதுக்கே காரணம் அவன் முன்னேறிப் போகணுங்கறதுதான். பேய்களுக்கும், பூதங்களுக்கும் கால்கள் பின்னோக்கி இருக்கும் அப்படிங்கறாங்க. அதாவது முன்னேறி நடக்காம பழமைவாதம் பேசிக்கிட்டு இருக்கறவங்க பேய்கள், பூதங்கள். உண்மையைச் சொல்லப்போனா நீங்க இந்தியப் பண்பாடு, பாரம்பரியம் பெருமைன்னெல்லாம் சொல்றது எல்லாமே எனக்கு இந்த பழைமை வாதப் பேய்களோட கலாச்சாரமா தோணுது. நான் எதையுமே நம்பறதில்லே. ஆனா அதுக்கப்புறம் பிரபா, அவர் ஒரு கடுமையான விஷயத்தைச் சொன்னார் பாரு, நான் கொதிச்சுப் போயிட்டேன். எனக்கு மட்டும் அவர் மேல மதிப்பு இல்லாம இருந்திருந்தா அவரைத் தூக்கிப் போட்டு மிதிச்சிருப்பேன். அவர் மேல ரொம்ப மரியாதை இருந்ததாலே பேசாம இருந்துட்டேன்."

"அது என்ன?" என்று சற்று கவலையுடனும் ஆர்வத்துடனும் பிரபா கேட்டாள்.

"எனக்கென்னவோ நாம எல்லாருமே அந்த பொய்யான பித்த லாட்டமான, மோசடிக்கார பேடிகளின் சந்ததிகள்னு தோணுதுன்னாரே பாக்கலாம்! 'அவங்களுக்குத் தங்களோட சமுதாயத்தைப் பத்தியோ, காலச் சூழலைப் பற்றியோ அக்கறையே இல்லை. மற்ற நாடுகள்கூட ஒட்டாம கிணற்றுத் தவளையா இருந்துக்கிட்டு சந்தனக் கீற்றும் குங்குமப் பொட்டும் தானே வச்சுகிட்டு தங்களையே பூஜிக்கச் சொல்லிக்கிட்டு இருந்தாங்க. தங்களைத் தாங்களே எவ்வளவு பெரியவங்க பாருங்கன்னு சொல்லிக்கிட்டு இருந்தாங்க. நாம யாரைப் பெரிசா

பூஜிக்கிறோமோ அல்லது பெரிய வீர புருஷர்களா போற்றுகிறோமோ அவங்க எந்த வகையிலே பெரியவங்க, வீரபுருஷங்கன்னு எப்பவாவது யோசிச்சிருக்கோமா? நெஞ்சை நிமிர்த்தித் தங்கள் காலத்திலே இருந்த சமுதாயப் பிரச்னைகளை எதிர்கொண்டதால தானே? அவங்க, காலம்விட்ட சவாலை அவுங்க உயிரையும் துச்சமா மதிச்சு ஏத்துக்கிட்ட தாலதானே? வெறுமனே ராம நாம ஜெபம் பண்ணிக்கிட்டு இருந்ததாலே அவங்க வீரபுருஷராகலியே!' அப்படீன்னாரு. நான் குறுக்கிட்டு, "எது எப்பிடி இருந்தாலும் நம்ம முன்னோர்களைப்பத்தி இப்படியெல்லாம் பேசறது சரியில்லே, எப்படியும் அவங்க பெரியவங்க, நல்லவங்க'ன்னு சொன்னேன். அதுக்கு அவர், 'நீங்க இப்படி சொல்லுவீங்களா இருக்கும். நான் சொல்லமாட்டேன். ஒண்ணும் செய்யமாட்டாதவனா இருக்கற துக்காக நான் என்னை நானே கடிஞ்சுக்கிட்டு இருக்கேன். நம்ம முன்னோர்கள் இந்த மண்ணாங்கட்டி பாரம்பரியத்துக்கு ஒரு மியூசியம், அவ்வளவுதான். நாம அவங்க சந்ததியினர். அதனாலதான் வெறும் சோளக்கொல்லை பொம்மைகளா இருக்கோம். கொடும்பாவி பொம்மைகள் மாதிரி. இருந்தால் வெறும் குப்பை கூளம், இல்லா விட்டால் எரிக்கத்தான் லாயக்கு. ஒரு நாள் அதுமாதிரி வெட்டியா எரிஞ்சு சாம்பலாதான் போகப் போறோம். வேற ஒண்ணும் செய்ய முடியாட்டியும் மிச்சமீதி இருக்கற இரும்பை அந்த நெருப்பிலே காய்ச்சி எஃகாக்கிடுவோம்' அப்படின்னாரு" என்றவன் சட்டென்று பேச்சை நிறுத்தினேன். ஷிரீஷின் பாதிப்பு என்னை எங்கு கொண்டு செல்லுமோ என்று தோன்றியது. இப்பொதெல்லாம் நான் என் வழியில் சிந்திப்பதே கிடையாது. என்மூளையை அவரே ஆக்கிரமித்திருந்ததாகத் தோன்றியது. அந்தப் பாதிப்பை ஆராய்ந்த வண்ணம், "சமயத்திலே இவரோட கோபத்தைப் பார்க்கும்போது எனக்கும் உணர்ச்சி பொங்குது. நானும் ஏன் இப்படி சிந்திக்கக் கூடாது, என்னையும் ஒரு பிரச்சினை ஏன் இப்படி கடையறதில்லே? நான் ஏன் ஜடமாகிக்கிட்டே போறேன்? சமயத்திலே, பாவம் மனுஷன் கஷ்டத்திலே இருக்கான், அதனாலதான் எல்லாத்தையும் எதிர்க்கறான்னு இரக்கமாவும் இருக்கு. எது எப்படி யிருந்தாலும் அவர் பேச்சு என்னை ரொம்ப கவர்ந்து இழுக்குதுங்கறதிலே சந்தேகம் இல்லே" என்றேன். சற்றே அவர் தோற்றத்தை மனத்துக்குள் ஆராய்ந்து கொண்டிருந்தேன்.

கேட்டுக் கொண்டே பிரபா தூங்கிவிட்டாளோ என்று திடீரென்று தோன்றியது. பாவம், தூங்கட்டும், நாள் முழுவதும் வேலை செய்து களைத்திருக்கிறாள் என்று முதலில் தோன்றியது. ஷிரீஷைச் சந்தித்து விட்டுத் திரும்பியதை நினைத்துப் பார்க்க ஆரம்பித்தேன். பழசெல்லாம்– அவை எப்போதும் என்னுடையதாக இருந்ததே இல்லை என்பதுபோல– அப்போது மறந்து போயிற்று. இந்தப் புதிய சிந்தனைகளே வார்த்தை வார்த்தையாய் மனதில் எதிரொலித்துக் கொண்டிருந்தன. அறிவின்

அறைகள் அனைத்தும் பன்னெடுங்காலமாக, அடைபட்டு, புழுங்கி ஈரநெடியடித்து, புழுதியும், குப்பையும், ஒட்டடைகளும், இன்னும் என்னென்னவோ சனியன்களும் மண்டிக்கிடந்தன போலவும்., தோன்றியது. அவற்றின் மயான அமைதி தன்னையே விழுங்கிக்கொண்டு இருந்ததுபோலத் தோன்றியது. அந்த அறைகளின் கதவுகளை யாரோ பூட்ஸ்காலால் ஓங்கி உதைத்துத் திறந்துவிட்டது போலவும், அதில் நிறைந்திருந்த புழுக்கமும், இறுக்கமும் வெளியாகிக் கொண்டிருப்பது போலவும் தோன்றியது. அங்கு படிந்திருந்த புழுதி, புதிய காற்றால் மேலே எழும்பியதுபோல இருந்தது. தேன் கூட்டைக் கலைத்ததுபோல ஒரே களேபரம். வீட்டில் நுழைந்தவுடன் நான் எனக்கு நானே, "நான் பழைமை பேசும் பேய் அல்ல. என் அறிவு குப்பை கூளங்களின்றித் தூய்மையாக இப்போது இருக்கிறது. ஆனால் இப்போது அந்தக் காலி அறைகளில் என்ன கனவுகளை நிறைப்பது? எந்த சொர்க்க கீதங்கள் இனி பைரவி பாடும்? எந்த மகத்தான யுகத்தைக் கொண்டுவர நான் ஒரு சிறு சக்கரமாக விளங்கப் போகிறேன்? அந்த யுகம் நம்மை எங்கு இட்டுச் செல்லும்? அது என் வாழ்நாளிலேயே வருமா? அதை உண்மையிலேயே நான் காண்பேனா? நாங்கள் இரவின் தனிமையில் எந்த யுகத்திற்காகத் துடித்தோமோ அதே யுகமாக அது இருக்குமா?" என்று கேட்டுக் கொண்டேன்.

காலத்தை மாற்றும் அந்தத் துடிப்பையும், ஆற்றாமையையும், நான் வாளிவாளியாகத் தண்ணீர் தெளித்து சற்று ஆற்றிக் கொண்டேன். இப்போது பிரபாவிடம் எல்லாவற்றையும் விவரிக்க விவரிக்க அதே துடிப்பு மீண்டும் என்னுள் ஏற்பட்டது. என்ன செய்வது என்று விளங்க 'வில்லை. பிரபா தூங்கி விட்டாள்போலும். முதலில் கட்டிலின் கயிற்று நார் ஒன்றை எடுத்து அவள் காதில் விடலாமா என்று வந்தது. 'நான் விழித்திருக்கிறேன். இவள் நிம்மதியாகத் தூங்குகிறாள் பார்.' பிறகு அவள் இடுப்பில் கிச்சுக்கிச்சு மூட்டலாமா என்று தோன்றியது. இடுப்பில் கிச்சுகிச்சு மூட்டினால் அவளால் தாங்க முடியாது, மிகவும் துள்ளுவாள் என்று எனக்குத் தெரியும். அதில் என்ன ஒரு பயம் என்றால் உரக்கக் கத்திவிட்டாலும் கத்திவிடுவாள். ஆனால் கட்டுப் படுத்திக்கொள்ள முடியாமல், "ஏ பிரபா, எந்திரி, நான் முழிச்சுக்கிட் டிருக்கேன். நீ பேசிக்கிட்டிருப்பவே தூங்கிட்டியே" என்று அவள் இடுப்பில் விரலால் நிமிண்டியே விட்டேன்

"ஆங்.. என்ன, என்ன" என்று அவள் தூக்கிவாரிப்போட்டு எழுந்தாள். "நான் தூங்கிட்டேனா?"

நான் இன்னும் கிச்சுகிச்சு மூட்டியிருப்பேன். அதற்குள் அவள் இடுப்பில் ஏதோ உருண்டையாகத் திடீரென்று தட்டுப்பட்டது. ஏதோ கயிற்றால் கட்டப்பட்டிருந்தது போல இருந்தது. நான் அதை விரல்களால் கிள்ளியது போலப்பிடித்து, "இது என்ன இது?" என்று கேட்டேன்.

“ஒண்ணுமில்லே, ஒண்ணுமில்லே.. விடுங்க” என்று பிரபா கெஞ்சினாள்.

“அப்படீன்னா கட்டாயம் விடமாட்டேன். என்னவென்று மொதல்லே சொல்லு” என்று அவளை இறுக்கப் பற்றிக் கொண்டு அதை மேலாகத் தொட்டுத் தடவி என்ன அது என்று பார்க்க முயன்றேன். ஏதோ கொட்டைப்பாக்கு மாதிரி இருந்தது.

“ஐயோ, கும்பிட்டுக் கேட்டுக்கறேன். விடுங்க அது ஒண்ணுமில்லே,” என்று அவள் கையை அகற்ற முயன்றாள். ஆனால் நான் விடவில்லை. அவள் தடுத்ததிலிருந்த கலக்கம் என்னை விடாமல் ‘அது என்ன’ என்று கேட்கத் தூண்டியது. “எனக்கு வயித்துவலி, அதுக்கு அம்மா சொன்ன மருந்து” என்றாள் அவள்.

பொய்! நான் தீவிரமாக, “மருந்தை ஒண்ணும் இப்படி கட்டி வைக்க மாட்டாங்க. சாப்பிடுவாங்க. என்ன அது? இல்லேன்னா அறுத்துக் கடாசிடுவேன்” என்றேன்.

“ஐயோ, என் தலைமேல ஆணை, அப்படி மட்டும் செஞ்சுடாதீங்க” என்று அவள் கெஞ்சினாள்.

எனக்குக் கோபம் அதிகரித்துக்கொண்டே போயிற்று. ‘சொல்ல மாட்டே’ என்று உறுமினேன். அதன்பேரில் அவள் பயந்துகொண்டே, “அண்ணியும் அம்மாவும் சொன்னா கேக்கலே. எனக்கு இதிலெல்லாம் நம்பிக்கை இல்லைன்னதுக்கு திட்டினாங்க. அவங்களுக்காக நான் சரின்னேன்..” என்றாள்.

நான் குறுக்கிட்டு, “அவங்களுக்காக விரதம் இருந்தேங்கறது புரியுது. ஆனா இது என்ன? விளங்கச் சொல்லேன்!” என்றேன்.

“அவங்க.. அவங்க” என்று பிரபா திக்கினாள்.

“அவங்க என்ன சொன்னாங்க, ஏன் சொல்லித் தொலைக்க மாட்டேங்கறே?” எனக்குக் கோபம் கட்டுமீறிக் கொண்டிருப்பதுபோல உண்மையிலேயே தோன்றியது.

“சையது பாபா தர்கா சாம்பலாலே சரியாயிட்டாலும் சரியா யிடும்னு சொன்னாங்க” என்று விழப்போகிற அறையைத் தடுப்பவள் போல முழங்கையால் முகத்தை மறைந்த வண்ணம் பிரபா பதில் சொன்னாள். எனக்கு ஒன்றும் புரியவில்லை. ஆற்றமாட்டாமல் அவளை உலுக்கினேன். “வயித்துவலி சரியாயிட்டுதா? முழுசா சொல்லித் தொலையேன்! ஏதாவது வலின்னா எங்கிட்டே ஏன் சொல்லலே?”

பிரபா உண்மையிலேயே அழ ஆரம்பித்துவிட்டாள். “அவஸ்தி மனைவி இல்லே அவளுக்குக் கல்யாணம் ஆகி நாலு வருஷம் கழிச்சி சையத் பாபா தர்கா சாம்புலினால்தான் பிரமோத் பிறந்தானாம்..”

எனக்கு சட்டென்று விளங்கிவிட்டது. அவள் தோளை விட்டு விட்டுப் பைத்தியம்போல கடகடவென்று சிரித்தேன், “ஓஹோ, அப்படியா விஷயம். அதுக்குதான், உபவாசம் விரதம் எல்லாமா!

அதுக்குதான் சையத் பாபாவுக்கு பூஜையா? இடுப்பிலே சையத் பாபா தர்கா சாம்பல், உடம்புலே அத்தர்..." என்றவன் சட்டென்று பல்லை நறநறவென்ற சத்தம் எனக்கு கேட்க "குழந்தையா வேணும் குழந்தை? நமக்கே வயித்துப்பாட்டுக்கு வழியைக் காணுமாம், இதுலே தூளிவேற தொங்கவிட்டுக்கணுமா?" என்று இடுப்பில் கட்டியிருந்த சாம்பல் முடிச்சை ஒரே பிடுங்கலில் பறித்து தெருவில் எறிந்தேன். "என்னென்ன வெல்லாம் யோசித்துக் கொண்டிருந்தேன். இங்கே என்னடாவென்றால்..?"

வெகுநேரம் வீண் கோபத்தில் மொணமொணத்தவண்ணம் கயிற்றுக் கட்டிலின் கட்டையில் தலையை மோதிக் கொண்டிருந்தேன். முழங் காலில் முகத்தைப் புதைத்துக் கொண்டு பிரபா அழுதாள். "நான் என்ன பண்றது? நீங்களே சொல்லுங்க. நாள் முழுக்க என்னைப் பிடுங்கித் திங்கறாங்க. மலடி மலடின்னு திட்டறாங்க. உங்க அண்ணி என் நிழல்கூட அவுங்க பொண்ணு மேலே பட்டுடக்கூடாதுன்னு கிட்டேயே அண்ட விடறதில்லே!"

நான் எவ்வளவு தனிமையில் இருக்கிறேன் என்று என் தலையில் அடித்துக் கொண்டேன். பிரபா எனக்குத் துணை இருப்பாள் என்று நினைத்தேன். ஆனால் இவளோ.. இவளோ.. பிள்ளையார் பிண்டத்தை எடுத்துப் பற்றுப் பாத்திரம் தேய்த்துவிட்ட பிரபாவா இவள்? இவளா இன்று இப்படி? இவள் மேலா நான் இவ்வளவு கனவுகளை வளர்த்துக் கொண்டேன்?

# 10

"காலையிலேர்ந்து இங்கே ஒக்காந்துகிட்டு என்ன செய்யறீங்க? வேல ஒண்ணும் இல்லியா? இன்னிக்கு காலேஜ் கெடயாதா?" என்று பிரபா மென்மையாகக் கேட்டாள்.

நான் அச்சாபீஸிருந்து வந்தவுடன் உற்சாகமின்றி சோர்வாக மாடியில் வந்து உட்கார்ந்து கொண்டிருந்துவிட்டேன். அறையின் சுவர் மறைப்பாக இருந்ததால் அங்கே நிழலாக இருந்தது. நான் யாரிடமும் பேசாமல் கொள்ளாமல் உம்மென்று முகத்தை வைத்துக்கொண்டு வந்து உட்கார்ந்து ஒரு அணிலை வெறித்துக்கொண்டிருந்தேன். என் முகம் மிகவும் சோர்வுற்று வாடி இருந்தது போலும். பிரபா ஜுரமில்லையே என்று கையைப் பிடித்துப் பார்த்தாள். நான் வெறுமையாகப் பிரபாவைப் பார்த்தேன். அப்போதும் ஒன்றும் பேசவில்லை. அன்று நடந்த விஷயம் என் மனத்தில் எதையோ அடியோடு உலுக்கிவிட்டது. அதன் விளைவாக எனக்கு என்னைச்சுற்றி எதுவுமே யதார்த்த சத்தியமாகத் தோன்றவில்லை.

எல்லாமே பொய்ம்மையும், கபடமும் நிறைந்த மாயவலை. அதில் நான் சிக்கிக் கொண்டிருக்கிறேன் என்று தோன்றியது. ஒரு சுருக்கிலிருந்து விடுபட்டால் இன்னொன்று என்று முடியவேயில்லாத மாயவலை. இந்தப் பிரபா? இவளும் கடைசியில் இப்படித்தானே இருக்கிறாள்? இவளை வைத்தா நான் எதிர்கால வண்ணக் கனவுகளை வளர்த்துக் கொண்டேன்? அவளைப் பார்க்கும் போதெல்லாம் என் மனத்தில் இந்தக் கேள்வி எழுந்து அலை மோதியது.

பிறகு நான் மௌனமாகக் கீழே முற்றத்தின் மீது பார்வையைச் செலுத்தினேன். கீழே வளையல் கூடை ஒன்று வைக்கப்பட்டிருந்தது. வளையல்கள் உடைந்துவிடாத வண்ணம் அங்கும் இங்கும் துணிகள் வைக்கப்பட்டிருந்தன. பச்சை, நீலம், சிகப்பு, பொன்னிறம் என்று பலவகையான வளையல்கள் மாலைமாலையாக மிகவும் கவனமாகக் கிடத்தப்பட்டிருந்தன. வளையல்காரி என் பார்வையின் எல்லையில் இல்லை. குனிந்து பார்த்தால்தான் தென்படுவாள். அவளுடைய பச்சை குத்திய கைகள் மட்டும் அவ்வப்போது தென்பட்டன. இந்தப் பச்சை குத்திய கை வளையல் அணிவிக்கும் கரம் நிச்சயம் அண்ணியினுடையது தான் என்று நான் அறிந்து கொண்டுவிட்டேன். அவளுடைய கட்டை விரலுக்குப் பின்னால் ஒரு கரிய தழும்பு உண்டு.

என் மௌனத்தைப் பார்த்து பிரபா பயந்துபோனாள். அங்கேயே கீழே உட்கார்ந்து தோளில் கைவைத்து "ஏன் பேசமாட்டேங்கறீங்க. என் மேல ஆணையா நீங்க சொல்லித்தான் ஆகணும். யார் கூடயாவது சண்டையா?" என்று கேட்டாள்.

"ஒண்ணுமில்லே" என்று வறண்ட குரலில் விரக்தியாகச் சொன்னேன். உட்கார்ந்தது உட்கார்ந்தபடி இருந்தேன். வறண்ட சூனியப்பார்வை பார்த்த இடத்தையே மாறாமல் வெறித்துக்கொண் டிருந்தது. இவ்வளவு நேரமாக அமுங்கியிருந்த கேள்வி சட்டென்று மீண்டும் எழுந்து நின்றது. "இனி என்ன செய்வது?"

"என்னதான் சொல்லுங்களேன்" என்றவண்ணம் பிரபா மறைவுக்கு நகர்ந்து உட்கார்ந்து கொண்டவளாக, மனக்கிலேசத்துடன், தொண்டை அடைக்க என் கையை அசைத்து, "அதப்பத்தி இன்னும் மனசுலே கோபமா இருக்கீங்களா?" என்று கெஞ்சும் குரலில் கேட்டாள், அவளுடைய தாமரை இதழ் போன்று சிவந்த கண்களில் கண்ணீர் திரண்டது. அவள் அப்படியே கெஞ்சும் விழிகளுடன் என்னைப் பார்த்தவண்ணம் இருந்தாள்.

அவள் குரலில் இருந்த தீனத்தன்மை என்னை அசைத்து விட்டது. மெதுவாகத் திரும்பி அவளைப் பார்த்தேன். பிறகு மீண்டும் முன்பு பார்த்த திக்கிலேயே பார்க்கத் துவங்கினேன். அடைபட்ட குரலில் "எனக்கு வேலை போயிட்டுது" என்று சொன்னேன்

"வேலை போயிட்டுதா? எப்படி?" என்று பிரபா தூக்கிவாரிப்

போட்டுக் கேட்டாள். ஒரு கணத்தில் அதன் விளைவுகள் அவள் கண்முன் பளிச்சிட்டிருக்க வேண்டும்.

கீழேயிருந்து அம்மாவின் குரல் கேட்டது. "அம்மா, பிரபா, கொஞ்சம் கீழே வாயேம்மா!" என்று அம்மாவின் அன்பொழுகும் குரல் கேட்டது.

பதிலுக்கு பிரபா சற்று குனிந்து, "இதோ வரேம்மா", என்று குரல் கொடுத்தாள்.

நான் அவள் முன்பு கேட்ட கேள்விக்கு பதில் சொன்னேன். "ப்சு.. போயிட்டுது. அந்தக் கட்டையிலே போறவன், பதினஞ்சு நாள் நீ வேல கத்துக்கிட்டுதான் இருந்தே, அதுக்கு சம்பளம் கிடையாது. சம்பளக் காகிதத்துலே எழுவத்தி அஞ்சுன்னு எழுதுவேன். ஆனா அறுபது ரூபாய் தான் கொடுப்பேன்னான். சண்டை வந்துட்டுது, பார்ட் டைமுன்னு பேரு, வேலை பூராவும் செஞ்சாகணும், இதுலே இது வேற" என்று நான் பிடித்து வைத்த பதுமையாக பிரபாவுக்கு பதில் கூறினேன்.

"ஏன், அது ஏன் அப்படி? இது என்ன எழுவத்தியஞ்சுன்னு எழுதிக் கிட்டு அறுபது கொடுக்கறது? நீங்க திவாகர்கிட்டே சொல்றதுதானே? அவங்க அப்பாவுக்குத் தெரிஞ்சவன்தானே?" என்ற பிரபாவின் நெற்றி சுருங்கியது. "மகா அநியாயமா இருக்கே!" என்றாள்.

"அநியாயம்தான்" என்று வேதனையுடன் நான் முறுவலித்தேன். பிறகு நீண்ட பெருமூச்சுவிட்டு, "அவங்ககிட்டே போய் என்னத்தை சொல்றது? நாமதான் ஏதாவது செஞ்சாகணும், நாளைக்கு ஒருநாள் கடைசியா போவேன். பதினைஞ்சு நாளைக்காவது ஏதாவது கொடுத்துத் தொலைக்கட்டும். சம்பளம் வரும்னு ஊர்ப்பட்ட கடன் வாங்கி வச்சிருக்கேனே, அதை எப்படியாவது அடைச்சாகணுமே!"

மீண்டும் அம்மாவின் குரல் கேட்டது. "ஏம்மா பிரபா, வரல்லே? அப்புறமா பேசிக்கியேன்!" குரலில் இன்னும் இருந்த பரிவைப் பார்த்து ஆச்சரியமாக இருந்தது.

"ஏன், போகலே? அம்மா அப்போ பிடிச்சுக் கூப்பிடறாங்க?" என்று கேட்டேன்.

"என்ன செய்யறதுன்னு நீங்களே சொல்லுங்க. வளையல் போட்டுக்கக் கூப்பிடறாங்க. இப்பல்லாம் உபசரிப்பு பலமால்ல இருக்கு?" என்று பிரபா கவலையுடன் பதில் சொன்னாள்.

"அப்படியா?" என்று நான் தீவிரமானேன் - என் முகம் இறுகியது. கடுமையான குரலில், "வேண்டாம் பிரபா, வளையல் கிளையல் ஒண்ணும் வேண்டாம். நாம யாரையும் வீணா எதிர்பார்க்க வேண்டாம். எதுவும் யார் கிட்டயும் வாங்கிக்கொள்ளவும் வேண்டாம்."

அம்மாவின் குரல் மீண்டும் கேட்டது. வேறு வழியில்லாமல் கெஞ்சும் விழிகளுடன் என்னைப் பார்த்தவண்ணம் மனசேயில்லாமல் பிரபா எழுந்து கீழே போனாள். நான் ஒருமுறை அவளைப் பார்த்தேன்.

வெறுமனே பார்த்தவண்ணம் இருந்தேன். பாதிவழியில் திரும்பி வந்து, "கவலைப்படாதீங்க, வேலை போனா போகட்டும், அதுக்கு ஏன் மண்டையை ஒடைச்சுக்கிறீங்க? என்கிட்டே கடிகாரம் இருக்கு, தங்க வளையல் இருக்கு, காது வளையம் இருக்கு. இப்ப இல்லாட்டா எப்பப் பயன்படப்போவுது? அப்புறம் வேணுங்கும்போது பண்ணிகிட்டா போச்சு. சும்மா பெட்டியிலேதானே தூங்குது? தினமும் போட்டுக்கிட்டா இருக்கேன்? தோ வந்து எடுத்துத் தர்றேன். படிப்புக்காவது பயன்படு மில்லே!" என்றாள். பிறகு திரும்பிப் போய்விட்டாள். வேறு ஒரு சமயம் என்றால் இப்படி அவள் சொன்னதற்கு நன்றியினால் கண்ணில் நீர் மல்கியிருக்கும். இப்போதோ அது காதில் விழுந்தது. அவ்வளவுதான். ஆனால் நானோ அது பற்றி யோசிக்கவும் மாட்டாமல் அப்படியே உட்கார்ந்திருந்தேன்.

கீழே அம்மா அன்புடன் அதட்டினாள், "நல்ல கதை, இது கூடவா நாங்க செய்யக்கூடாது? இந்தா வளையக்கார அம்மா! போட்டுடு, என்ன வளையல்வேணும் பிரபா? உனக்கு இஷ்டமானதைப் போட்டுக்க" அதாவது பிரபா கீழே போய்விட்டாள் என்பது புலனாகியது.

"வேண்டாம் அம்மா, எனக்கு வேண்டாம், நீங்களே மேலே வந்து பாருங்க. பெட்டியிலே நிறைய வச்சிருக்கேன்" இது பிரபா.

"இன்னும் ரெண்டு போட்டுக்கிட்டா என்ன வந்துடும்மா? யார் கிட்டேதான் இல்லே? நாங்களும் அப்புறம் எப்படித்தான் பொழைக் கிறது?" என்று வளையல்காரி சொன்னாள். வளையல்கள் குலுங்கும் ஒலியிலிருந்து வளையல்களை எடுத்துக்காட்டத் துவங்கினாள் என்று தெரிந்தது. இரண்டொரு அரைகுறை வாக்கியங்களும் காதில் விழுந்தன. "இதோட இது போட்டுக்கிட்டா பிரமாதமா இருக்கும். சிவந்த கையிலே எப்படி பளிச்சுன்னு இருக்கு பாருங்க".

"போட்டுக்க பிரபா, சும்மா கிராக்கி பண்ணிக்காதே! அம்மா சொல்றதுக்காவது போட்டுக்க" என்று அண்ணியின் குரல் கேட்டது.

பிறகு நிசப்தம், ஏதாவது சத்தம் வருகிறதா என்று நான் மூச்சைப் பிடித்துக்கொண்டு கேட்டுக்கொண்டிருந்தேன். அவள் போட்டுக்கொள்ள மாட்டாள் என்று நான் நம்பினேன். 'ஊம், இப்போது பெரிதாக வளையல் போட்டுவிட வந்துவிட்டார்கள். இதுவரை இருந்தாளா செத்தாளா என்றே தெரியாமலிருந்தது.' சற்றே கீழே குனிந்து பார்த்தேன். அம்மாவும் அண்ணியும் வளையல்கள் அணிந்து கொண்டுவிட்டிருந் தனர். மிகவும் மலர்ந்த முகத்துடன் ஆர்வம் கொப்பளிக்க பிரபாவைப் பார்த்துக் கொண்டிருந்தனர். பிரபா முழங்காலில் தோளை வைத்து முன் கையை வளையல்காரியிடம் நீட்டிக் கொண்டிருந்தாள். இன்னொரு கையை ஒரு பாதத்தின்மீது வைத்திருந்தாள். அதில் ஏராளமாக வளையல்கள் போடப்பட்டு விட்டிருந்தன. மறுகையை அழுத்தி வளையல்காரி வளையல்களைப் போட்டுக்கொண்டிருந்தாள். கீழே

சில முழு வளையல்களும், சில உடைந்த வளையல்களும் சிதறிக்கிடந்தன. வலியினால் பிரபா முகத்தை வேறுபக்கம் திருப்பி, கண்களை மூடி அவ்வப்போது வலியினால் "இஸ்.. இஸ்ஸ்..." என்று சொல்லிக்கொண் டிருந்தாள். இன்னொரு கை, கால் கட்டை விரலை அவ்வப்போது வலியின் காரணமாக இறுக்கிப் பிடித்துக்கொண்டிருந்தது.

என் நெஞ்சில் சுருக்கென்று தைத்து அடிவரை பாய்ந்தது. 'நான் தடுத்தும் போட்டுக்கொள்கிறாள் பார், ஹூம்' என்று உறுமிக் கொண்டேன். என் நாசி விடைத்து ஒரு மூச்சு சீறி வெளி வந்தது. நான் சடாரென்று எழுந்தேன். பற்களை நறநறத்து உதட்டை இறுக்கினேன். உறுதியுடன் கீழே இறங்கி வந்து வளையல்காரி முன் வந்து நின்றேன்.

பிரபா வளையல்கள் அணிந்து முடித்துவிட்டிருந்தாள். கண்ணாடி வளையல்கள் அவள் மணிக்கட்டில் தகதகத்தன. அவள் என்னைப் பார்த்தாளோ இல்லையோ பயத்தில் முகம் வெளிறிப்போனாள். எப்படியோ சமாளித்து அசட்டு சிரிப்பு சிரிக்க முயன்று "எப்படி இருக்கு பாருங்க. அம்மாவும், அக்காவும் செலக்ட் பண்ணினது" என்றாள். அம்மாவுக்கும், அண்ணிக்கும் முன்பு அவள் என்னுடன் பேசுவதில்லை என்பதைக் கூட அவள் அப்போது மறந்துவிட்டாள் போலும்.

நான் ஒரு கணம் மிகக் கசப்புடனும், வெறுப்புடனும் அவளைப் பார்த்தேன். பிறகு சட்டென்று பாய்ந்து அவள் கைகளை வளையல்களுக்கு மேலேயே பற்றிப் பிடித்துக்கொண்டேன். பயத்தில் பிரபா என்னை இறைஞ்சுவதுபோலப் பார்த்தாள். என் கைகளில் ஏதோ ராட்சசன் புகுந்து கொண்டது போலிருந்தது. சடாரென்று இரண்டு கைகளையும் மோதி விட்டேன். வலையல்கள் என் கைப்பிடிகளில் உடைந்தன. வளையல் துண்டுகள் கலகலவென்று பூமியில் சிதறின. நான் பித்துப் பிடித்தவனைப் போல் அண்ணாந்து பார்த்து உரக்கச் சிரித்தேன். ஏதோ கொழுந்தைக் கசக்கி எறிவதுபோல நான் அவள் கைகளை விட்டேன். வளையல் துண்டுகள் என் விரல்களிலும், உள்ளங்கைகளிலும் குத்திவிட்டிருந்தன. என் கைகள் இரத்தத்தில் தோய்ந்து போய்விட்டன. அவள் கைகளிலும் ரத்தக்கோடுகள் புறப்பட்டுக் கொட்ட ஆரம்பித்தன. ரத்தத்தைப் பார்த்து நான் இன்னும் உரக்கச் சிரித்தேன். பிறகு திரும்பியும் பார்க்காமல், எதைப்பற்றியும் அலட்டிக்கொள்ளாமல் கையை வீசிக்கொண்டு மேலே வந்துவிட்டேன்.

வளையல்காரி, அம்மா, அண்ணி அனைவரும் பரக்கப் பரக்க விழித்துப் பார்த்துக் கொண்டிருக்கிறார்கள் என்பது திரும்பிப் பார்க்காமலே எனக்குப் புரிந்தது.

நானாக ஏதாவது சொல்லுவேன் என்று பொறுத்துப் பொறுத்துப் பார்த்துவிட்டு கடைசியில் தோற்றுப்போய் அப்பாவே ராத்திரி, "ஏண்டா சமர்! நீ பத்தாம் தேதியிலேருந்து வேலைக்குப்போக ஆரம்பிச்சீல்லே?" என்று கேட்டுவிட்டார்.

நான் அலட்சியமாக, "அது போயும் போயிட்டுதுப்பா!" என்றேன்.

"அட, அவர் உன்கிட்டே என்னவோ காசு கேட்ட மாதிரி உடனே வேலை போயிட்டுதுங்கறியே!" என்று அம்மா குறுக்கிட்டாள்.

நான் திமிராக "வாயை விட்டுக் கேக்கலேன்னாலும் எனக்கு அர்த்தம் புரியாதாக்கும்...?" என்றேன்.

அப்பாவுக்கு சீற்றம் வந்துவிட்டது. கையையும் காலையும் வீசி வீசி, "ஆமாம், புரிஞ்சுக்கிட்டீஇல்லே! தூக்கிலே போட்டுடேன்! பெரிசா புரிஞ்சுகிட்டானாம். ஒரு பேச்சு கேட்டதுக்கு ஒழுங்கா பதிலைக் காணோம். மேலே பாஞ்சு கொதர்றான். இவன்கிட்டே பேச்சு வச்சுக் கிட்டதே தப்பு." என்றவர் தலையில் அடித்துக்கொண்டு, "ஏண்டா உன்னை எங்களுக்குத் தெரியாது. நாங்க பாத்து வளர்ந்தவன் தானே நீ! என்னையே மிரட்டறியா? என்ன தைரியம் பாரு! நான் என் முதல் சம்பளத்தை அப்படியே கொண்ணாந்து அப்பா கையிலே வச்சேன். அந்த மரியாதையும், ஒழுங்கும் மலையேறிப்போச்சு. நான் வாய்விட்டுக் கேக்கலேன்னு மிரட்டறான். அயோக்கியப்பயலே! இதுக்குத்தானா உன்னைத் தாலாட்டி, சீராட்டி, படிக்கவச்சு பெரிய மனுஷனாக்கினது? எங்களையே எதிர்த்துப் பேசறதுக்காகவா இதெல்லாம் செஞ்சோம்? எங்க தலைமேல ஏறி ஒக்காந்துக்கவா? ஒரு வார்த்தை கேட்டதுக்கு வெறிநாயாட்டம் விழுந்து பிடுங்குறியே! என்றார்.

நான் துயரத்துடன் நிதானமாக, "அப்பா, நான் என்ன சொல்லிட் டேன்னு இப்படி கோவிச்சுக்கிறீங்க?" என்று கேட்டேன்.

"சொல்றதுக்கு இன்னும் என்ன இருக்குடாப்பா! நாங்க என்ன கண்ணவிஞ்ச குருடங்களா? படிச்சாச்சு, கல்யாணம் பண்ணிக் கிட்டாச்சு, இனிமே அம்மா அப்பா தயவு எதுக்கு? எக்கேடு கெட்டா என்ன? குட்டிச் சுவாரா போனா என்ன? நீ மஜா பண்ணு" என்று அவர் கத்திக்கொண்டே போனார்.

"நான்தான் எனக்குக் கல்யாணம் வேணாம்னு சொன்னேனே அப்பா, நீங்கதானே பலவந்தமா..."

கூச்சல் கேட்டு வீட்டிலிருந்த மற்றவர்களும் வந்து குழுமிவிட்டனர். பீதியுடன் ஒரு கும்பலாக நின்றிருந்தனர்.

"கல்யாணம், கல்யாணம், கல்யாணம்!" அப்பாவால் வெறுப்பில் வேறு ஒன்றும் பேசமுடியவில்லை. ஆவேசத்தில் அவர் உடம்பு நடுங்கியது. "நீ இப்படி ஆவேன்னு தெரிஞ்சிருந்தா பொறந்தவுடனேயே வெட்டிப் புதைச்சிருப்போமே, என்ன அற்புதமான பிள்ளை! படிக்க வச்சு கடா மாதிரி வளர்த்துட்டோமில்லே, அதான் மார்லே பாயுது. புள்ளையாப் பொறந்தவனுக்கு அதானே லட்சணம். நல்லா வம்சத்தை விளங்க வச்சேப்பா, ரெக்கை மொளச்சிட்டுதில்லே, இனிமே கூட்டிலே என்ன வேலை? இனிமே உன் இஷ்டம்தானே! மத்தவங்க ஏதாவது குரைச்சு ஓஞ்சிடுங்க, நாய்ங்க காலையிலே வளையல் போட்டுவிட்டதுக்கு ஒடைச்சு எறிஞ்சுட்டார் துரை! உன்னையும் உன் பொண்டாட்டியையும்

யார் கேக்க முடியும்? நீ நேரா கடவுள்கிட்டேயிருந்து தானா வந்தவனில்ல. எதுக்கு வாயைக் குடுக்கணும், புத்திசாலிப்பையன், தானா புரிஞ்சுக்குவான்னு பாத்தா- ஹூம் அவனுக்கு என்ன? தனக்கு மட்டும் நல்ல சோறு,துணிமணி, நல்ல படிப்பு, தன் பொண்டாட்டிக்கு ஆடை அலங்காரம் எல்லாம் கெடைக்கறப்ப அவன் ஏன் புரிஞ்சுக்கப் போறான்? தனக்கு மட்டும் எல்லாம் கெடச்சுட்டாப் போறாது? வாயைத் தெறக்கறதுக்குள்ளே மேலே ஏறிப் பாயறானே?"

பொறுக்க முடியாமல் போனபோது "பிரபாவுக்கு என்ன ஆடை அலங்காரம் வாங்கிகிட்டு வந்தேன்னு சொல்லுங்கப்பா!" என்றேன்.

"பாரு எதிர்த்துப் பேசறான்? எதிர்த்துப் பேசறான், பாரு" என்று கோபத்தில் அப்பா வார்த்தைகளுக்குத் தடுமாறினார். கோபாவேசமாக என்மீது பாய்ந்தார். அண்ணா தடுக்க முனைவதற்குள், உதைகள், அடிகள், அறைகள் என்மீது சராமாரியாக விழுந்தன. மேல்மூச்சு, கீழ்மூச்சு வாங்க, "இந்தா இதுக்கு பதில் சொல்லு, இந்தா இதுக்கு பதில் சொல்லிப்பாரு, டேய் நான் கிழவன்தான்டா, தள்ளாதவன்தான், ஆனா இன்னிக்கும் உன்னை நிமித்திடுவேண்டா, ரொம்பத்தான் துளுத்துப் போச்சு உனக்கு" என்று அடிமேல் அடியாய் அடித்தார். நான் மௌனமாக எல்லா அடிகளையும் வாங்கிக்கொண்டேன். உள்ளூர கோபத்தில் குமைந்தேன். ஆனால் வாய் திறந்து ஒரு வார்த்தையும் பேசவில்லை. இது அவர் கோபத் தீக்கு நெய் வார்த்தது போல் இருந்தது போலும். நான் அழவோ, தடுத்துக் கொள்ளவோ முயலவில்லை. அப்பாவை அண்ணாவும், அமரும் பிடித்துக்கொண்டனர்.

"போடா வீட்டைவிட்டு, என் முகத்திலேயே முழிக்காதடா, ஆத்திலே குளத்திலே விழுந்து சாவுடா, அயோக்கிய ராஸ்கல். எனக்கு உன்னை முன்னயே தெரியுண்டா, மேல படிக்கவேற ஆரம்பிச்சுட்டார்ல."

"வேணாம்பா, ஆத்திரப்படாதீங்க, சும்மாயிருங்க" என்று அண்ணா அப்பாவை சமாதானப்படுத்த முயன்றார். அவரும் அமரும் அவரை இருபக்கத்திலும் பிடித்து அகற்ற முயன்றனர். கோபாவேசத்தில் அவருக்கு வாயில் நுரை தள்ளியது. அப்பா கண் உருட்டி விழித்துப் புருவம் நெரிய வசவுமாரி பொழிந்து கொண்டிருந்தார். பெண்டுகள் அழுகையை அடக்கியவண்ணம், "என்ன ஆச்சு, என்ன செஞ்சுட்டாரு" என்று தங்களுக்குள் கிசுகிசுத்துக் கொண்டிருந்தனர். சிலர் அக்கம் பக்கத்தி லிருந்தும் வந்து விட்டார்கள் போலும், அவர்கள் முந்தானை நுனியைப் பிடித்துக்கொண்டு வந்திருந்த குழந்தைகள் இந்தக் காட்சியைப் பார்த்து அழத் துவங்கிவிட்டனர்.

"சரிப்பா, நான் போயிடறேன்" என்று நான் தலை நிமிர்த்தி, தொண்டை அடைக்கச் சொன்னேன்.

இதைக் கேட்டவுடன் அப்பா அனைவரையும் உதறித்தள்ளிவிட்டு மீண்டும் என்மீது பாய்ந்தார். "தெரியுண்டா எனக்கு, எனக்கு அப்பவே

தெரியும். ரோஷக்காரனா இருந்தா இப்பவே, இந்த நிமிஷமே போடா வெளியே! நீ என்னடா போறது, நானே வெளியே தள்ளறேன்டா! இவன் சாமான்களையெல்லாம் எடுறா! ரெண்டுபேரையும் தொரத் துங்கடா! இனிமே இவங்களுக்கும் நமக்கும் சம்பந்தம் கிடையாது. நம்மளைப் பொறுத்தவரை பொறந்தவுடனேயே செத்துட்டாங்கன்னு வச்சுக்குவோம். ஐயா.. கிளம்புங்க ஐயா, உங்க சாமான் செட்டை எடுத்துக்கிட்டு உங்க வழியைப் பாத்துக்கிட்டு போங்க, உங்க திசைக்கே பெரிய கும்பிடு." என்று பளாரென்று கைகளை அடித்துக் குவித்துக் கும்பிட்டார். பிறகு என் தோளைப்பிடித்துக் குலுக்கி, "போங்க, ஐயா, யோயிட்டு வாங்க.. உங்களுக்கு இங்கே இனிமே எடம் இல்லீங்க, இனிமே இந்த வீட்டு வாசப்படியை மறந்தும் மிதிச்சிடாதே ஜாக்கிரதை! அப்புறம் நான் ரொம்ப பொல்லாதவனாயிடுவேன். எங்கியாவது ரோட்டோரம் விழுந்து சாவு, எக்கேடும் கெட்டுப்போ. இனிமேயும் நம்மாலே தடிமாட்டுக்கெல்லாம் தீனிபோட்டு வளர்க்க முடியாது–" என்றார். அதற்குள் அண்ணா முதலானோர் மீண்டும் அவரைப் பிடித்துக் கொண்டனர். சமாதானப் படுத்தியவண்ணம் ஒரு பக்கமாக இட்டுச் சென்றனர்.

பெண்கள் என்னைப் பார்த்து "சீச்சீ" என்றனர். அம்மா "சமர், நீ சும்மா இருக்கமாட்டே! இனிமே பேசினா தெரியும் சேதி! பெத்த அப்பன்கிட்டயே சரிக்கு சரியா வாயடிக்கிறியே, உனக்கு வெக்கமா யில்லே!" என்று அதட்டி இரண்டு அறை விட்டாள்.

இப்போது யார் பேச்சையும் காதில் போட்டுக்கொள்ளாமல் நான் கர்ஜித்தேன். "போதும் நிறுத்துங்கம்மா! வாய்விட்டுச் சொல்லட்டும்னுதான் இருந்தேன். வாய்திறந்து சொல்லிட்டாரு. இந்த நரகத்திலே இருக்க எனக்குமே இஷ்டம் கிடையாது. ராவும் பகலும் நிம்மதிங்கறதே கிடையாது. பெத்தவங்களே காரியவாதியா இருக்கறப்போ, எங்கேயோ போறேன், எங்கேயோ இருந்துக்கறேன். இல்லேன்னா ஆத்திலே குளத்துலே விழுந்து சாவுறேன். நாளைக்கே போயிடறேன். நீங்களே உங்க ராஜ்யத்தைக்கட்டி ஆளுங்க." அந்த ஆவேசத்திலும் கோபத்திலும்கூட நான் மிகவும் தவறான காரியம் செய்கிறேன் என்று எங்கோ மனத்திற்குள் பட்டது. 'பெற்ற தகப்பனிடம் இப்படியா பேசுவது?' மனத்திற்குள், ராமனும், சீதையும்கூட இப்படித்தான் சண்டை போட்டுக்கொண்டு போயிருப்பார்களோ என்று தோன்றியது. அந்த சந்தர்ப்பத்தில் அந்த யோசனை மகா விசித்திரமாக இருந்தது. அது குறித்து எனக்குள் யாரோ சிரித்த மாதிரி இருந்தது.

என் பேச்சைக்கேட்டு மீண்டும் அப்பா திரும்புவதற்குத் திமிறினார். ஆனால் மற்றவர்கள் அவரை விடவில்லை. அவர்கள் அவரை வெளியே உட்காரும் இடத்திற்கு இட்டுச் சென்றுவிட்டனர். நடைபாதையில் கிடந்தாலும் சரி. நடுத்தெருவில் நின்றாலும் சரி,

அதுவும் இல்லாவிட்டால் ஆற்றிலோ, குளத்திலோ விழுந்தாலும் சரி, நான் இங்கு இருக்கமாட்டேன். என்று அந்தக்கணத்தில் சபதம் மேற்கொண்டேன். எங்கே இருந்தாலும் இருப்பேன். வானமே கூரையாக, வெறும் தரையில் படுத்தாலும் படுப்பேனே தவிர இந்த நரகத்தில் இருக்கமாட்டேன். பிச்சையெடுப்பேன், திருடுவேன், ஏதாவது செய்வேன். இந்தப் பரந்த உலகத்தில் பிழைக்கவா முடியாது..?"

அழுகை ஆர்ப்பாட்டம் எல்லாம் ஓய்ந்தது. வீட்டினர் அனைவரும் ஒரு குரலாக என்னைக் கண்டித்தனர். நான் மரியாதைக் குறைவாக நடந்து கொண்டேன் என்று திட்டித் தீர்த்தனர். ஆனால் நான் முழங் கால்களில் தலை பதித்தவனாக மௌனமாக இருந்தேன். மனத்தில் 'இனிமேல் இங்கு இருக்கக்கூடாது, இனிமேல் இங்கு இருக்கக்கூடாது' என்ற ஒரு வாக்கியம் மட்டும் எதிரொலித்துக்கொண்டே இருந்தது. 'உலகத்தின் எந்தக் கோடிக்கு வேண்டுமானாலும் போகலாம். எங்கே வேண்டுமானாலும் போகலாம்.' என் மனத்தில் ஒரு காட்சியே எப்போதும் பளிச்சிட்டுக் கொண்டிருந்தது. தகரப் பெட்டியுடன் நான் முன்னே, தயங்கி நடக்கும் பிரபா பின்னே! அவளுக்குப் பின்னால் அவளைத் தடுத்துக்கொண்டு கும்வர் (லக்ஷ்மணனோ ?)

இரவு முழுவதும் நான் நெருப்பினால் வெந்து கொண்டிருந்தேன். மனதிற்குள் ஏதேதோ குரல்கள் ஒலித்தவண்ணம் இருந்தன. ஒரு கணமும் கண் மூடவில்லை. ஆனால் ஒரு மரத்துப்போன நிலையில் நான் விழிப்புக்கும், தூக்கத்திற்கும் இடையில் ஊசலாடிக் கொண்டிருந்தேன். என் நெஞ்சு இருக்க வேண்டிய இடத்தில் யாரோ பெரிய பாறாங்கல்லை வைத்துவிட்டது போலவும், அதன் கனத்தால் என் மூச்சுத் திணறுவது போலவும் இருந்தது. இதயம் நிற்க ஆரம்பிக்கும் போது எப்படியிருக்குமோ தெரியாது. ஆனால் எனக்கு இதயத்துடிப்பு நின்றுவிடப் போகிறதோ என்று அவ்வப்போது தோன்றிக் கொண்டே யிருந்தது. உடல் எகிப்திய பிரமிடுக்குள் இருக்கும் பதப்படுத்தப்பட்ட சடலங்கள் போல மரத்து மரக்கட்டையாகிக் கிடந்தது. நண்டு போன்ற ஏதோ ஒன்று தன் முட்களும், முடியும் நிறைந்த கைகளால் என்னைப் பற்றி, என் தலையிலிருந்து அட்டைபோல ரத்தம் உறிஞ்சுவது மாதிரி இருந்தது. துடியாய்த் துடித்தாலும், அழுது அரற்றினாலும் அதன் நெருப்பு போன்ற கண்கள் என்னைப் போகவிடாது கட்டி வைத்திருப்பது போலவும் அது என்னைத் தின்று தீர்த்துக் கொண்டிருப்பது போலவும் தோன்றியது. என் மனதில் வெறுமை முனகிக் கொண்டிருக்க என்னை யாரோ தண்ணீரில் மெல்ல அழுத்திக் கொண்டிருப்பது போலப் பட்டது. இரவு முழுவதும் பெரும் மழை கொட்டிக்கொண்டிருப்பது மாதிரி இருந்தது. நான் அவ்வப்போது அந்த மழை நின்றுவிட்டதா என்று பார்க்க திடுக்கிட்டுத் திடுக்கிட்டு விழித்துக் கொண்டிருந்தேன்.

யாரோ என்னைத் தொடுவதை உணர்ந்து திடுக்கிட்டு எழுந்து

உட்கார்ந்தேன். என்னை யாராவது தொட்டவுடன், எழுந்து அவர் பின்னால் போய்விடுவேன் என்று தோன்றியது. மிகவும் சிரமப்பட்டு கண்களைத் திறந்து யாரென்று பார்த்தேன். மணிக்கட்டில் கட்டுகளுடன் மிகவும் தயக்கத்துடனும், பயத்துடனும் பிரபா என்னைத் தொட்டு எழுப்பினாள். "மணி நாலாச்சு, இன்னிக்குப் போகலியா...?"

இரவு பலமுறை பிரபா என் நெற்றியைத் தொட்டுப் பார்த்தாள் என்பதும், நெற்றியில் எதையோ தேய்த்தவண்ணம் இருந்தாள் என்பதும் எனக்கு நினைவு வந்தது. நான் எழுந்து கை கால் கழுவினேன். மந்திர வசப்பட்டவன்போல அனிச்சையாக செயல்படுகிறேன் என்பது எனக்கே வியப்பாக இருந்தது. இந்தக் கைகால்கள் என்னுடையன அல்ல போல் ஏன் தோன்றுகிறது? எங்கோ உயரத்தில் போய் விட்டது போலவும், அங்கிருந்து எல்லாம் மங்கலாக, தெளிவற்று மாயை போலவும் தோன்றியது. யார் பேசுவதும் கேட்கவில்லை. முகம் கழுவிக் கொண்டே திடீரென்று, திரும்பி 'ராத்திரி மழையா பெஞ்சுது?' என்று கேட்டேன்.

நாங்கள் இருவரும் கீழே தனியாக இருந்தோம் போலும். பிரபா கரியடுப்பைப் பற்றவைத்து ஏதோ செய்து கொண்டிருந்தாள். நான் குழாயடியில் இருந்தேன். பிரபா அட்டையால் கரியடுப்பை விசிறுவதை நிறுத்தி "மழையா, ஏது மழை" என்று கேட்டாள். அதைக்கேட்டதும் எனக்கு சட்டென்று இன்று இந்த வீட்டை விட்டு வெளியேற வேண்டும் என்பது நினைவுக்கு வந்தது. 'ஆம், இன்று இந்த வீட்டை விட்டுவிடத்தான் வேண்டும். இந்த வீட்டுடன் எனக்கு பந்தம் எதுவும் கிடையாது. நான் ஒரு வீடு பார்த்தாக வேண்டும், எங்காவது, என்ன பாடுபட்டாவது.'

பிரபா, சிறிய அலுமினிய டப்பாவில் சாப்பாடு வைத்து கட்டிலின் மீது கொண்டு வந்து வைத்தாள். நான் ஒரு பழக்க வசத்தில் அதைப் பையில் திணித்துக் கொண்டேன். கோட்டை அணியும்போது உள்ளங்கை வலித்ததை முதன்முறையாக உணர்ந்தேன். நேற்று வளையல் குத்திய வலி போலும்.

விளக்கை அணைத்துவிட்டு அடிமேல்அடி வைத்து மாடிப்படியிறங்கினேன். இன்று கால்கள் நடுங்குவது போல் இருந்தது. என் பூட்ஸ் ஒலியே எனக்கு சற்று விசித்திரமாகப்பட்டது. எல்லாமே அந்நியமாகவும், விசித்திரமாகவும் பட்டது. பிரபா நான் போவதைப் பார்க்கிறாளா என்று கடைசிப்படியில் நின்று திரும்பிப் பார்த்தேன். ஒருவரும் இல்லை வீட்டில் மற்ற அனைவரும் தூங்கிக் கொண்டிருந்தனர்.

திடீரென்று வெளியே யாரோ கதவைத் தட்டினார்கள். நான் ஏதோ கொலைகாரன் போலவும், வெளியே போலீஸ் வந்து நிற்பது போலவும் திடுக்கிட்டேன். ஒருகணம் திக்பிரமையில் நின்று விட்டேன். கதவைத் திறப்பதா வேண்டாமா என்று பீதியுடன் அங்கும் இங்கும் பார்த்தேன். பிறகு பின்னந்தலையைச் சொறிந்தவாறே முன்னேறினேன்.

கதவைத் தட்டியதுடன், 'சார் தந்தி' என்று உரத்த குரல் கேட்டது.

கதவைத் திறந்தேன். சிவப்புச் சைக்கிளில் சிவப்புச் சீருடையில் பியூன் தந்தியுடன் நின்றிருந்தான். கையெழுத்துப் போட்டுத் தந்தியை வாங்கினேன். அவன் சைக்கிளில் ஏறித் திரும்புவதைப் பார்த்தவண்ணம் நின்றிருந்தேன். தந்தி அப்பா பேருக்கு இருந்தது.

மெல்லிய வெளிச்சம் படர ஆரம்பித்து விட்டிருந்தது. மீண்டும் ஒருமுறை தந்தியைத் திருப்பிப் பார்த்தேன். அப்படியே கொடுத்துவிட்டு வந்துவிடலாமா என்று நினைத்தேன். பிறகு என்ன யோசித்தோ நிதான மாகத் தந்தியைப் பிரித்தேன். ரோஸ்நிற காகிதத்தில் 'முன்னி எக்ஸ்பைர்டு' என்று எழுதியிருந்தது—'முன்னி செத்துவிட்டாள்.'

ஒருமுறை படித்தேன். இருமுறை படித்தேன். இந்தச் சிறு வாக்கியத்தின் பொருளை என்னால் உணர்ந்துகொள்ள இயலவில்லை. தந்தி என்ற சத்தம் கேட்டு அப்பாவும், அண்ணாவும், "எங்கிருந்து தந்தி, என்ன தந்தி" என்று பதறிக் கொண்டு வந்தனர்.

நான் மிகவும் செயற்கையாக மெதுவாக சிரித்துவிட்டு தந்தியை அவர்களிடம் நீட்டினேன், "முன்னி செத்துவிட்டாளாம். சாகடிச் சுட்டதா விளக்கமா எழுதலே" என்றேன்.

அவர்கள் என்ன சொல்கிறார்கள் அல்லது செய்கிறார்கள் என்பதை சிறிதும் லட்சியம் செய்யாமல் உணர்வற்ற ஜடமாக நான் புறப்பட்டு வந்துவிட்டேன். வீட்டில் ஓலமும் ஒப்பாரியுமாக ஆகிவிட்டிருக்கும். ரயிலில் ஏறிய நான் பிளாட்பாரம் வரும் பக்கம் தெரியும் ஆகையால், வருவோர் போவோர்க்கு இடைஞ்சல் இல்லாதபடி மறுபக்கம் அமர்ந்து கொண்டேன். வண்டி போய்க் கொண்டிருந்தது. நான் வெளியே தலையை நீட்டி விரிந்த கண்களுடன் காலையில் பரவும் வெளிச்சத்தைப் பார்த்துக் கொண்டிருந்தேன். இன்றைய விடியலும்தான் எவ்வளவு அந்நியமாக இருக்கிறது?

மனம் இருண்டு கிடந்தது. மின்தடையினால் திடீரென்று தொழிற் சாலையொன்று நின்றுபோய் அங்கே பயங்கர அமைதி நிலவுவதுபோல என் மனம் வெறிச்சோடிக் கிடந்தது. ரயிலின் கடகட...கட்கட்...கடகட... என்கிற சத்தம் மட்டுமே காதில் ஒலித்தது. அது காதுகளில் 'முன்னி செத்துவிட்டாள், முன்னியைச் சாகடித்துவிட்டார்கள், முன்னி செத்து விட்டாள், முன்னியை சாகடித்துவிட்டார்கள்' என்று ஒலித்து என் நாடி நரம்புகளைத் தெறிக்கச் செய்து கொண்டிருந்தது.

இடிந்த ஒரு மாளிகையின் பெரிய டோமில் வௌவால் ஒன்று சிறகடிக்க அதன் அச்சம் தரும் ஒலியும், எதிரொலியும் மயான அமைதியில் ஒன்றோடு ஒன்று மோதி, பரவி, பிறகு அந்த மயான அமைதியில் மறைவதுபோல இருந்தது. பிறகு எல்லையற்ற துளைக்க முடியாத கும்மிருட்டு.

'எனக்கு என்ன ஆகிவிட்டது' நான் நெற்றியைத் தடவிக்கொண்டு லேசாகத் தட்டிக் கொண்டேன்.

வண்டி திடீரென்று ஒரு குலுக்கலுடன் நின்றது. ஸ்டேஷன் வந்து

விட்டது. இறங்க வேண்டும். ஒருமுறை பிளாட்பாரத்தை நோட்டம் விட்டேன். பிறகு உட்கார்ந்தபடியே என் பக்க பிளாட்பாரத்தை பார்த்தேன். மூன்று தண்டவாளங்கள் பளிச்சிட்டன. அதன் பிறகு பிளாட்பாரம் இருந்தது. இருட்டு சுத்தமாக இல்லை. ஆனாலும் விளக்குகள் எரிந்து கொண்டிருந்தன. எதிர்ப்பக்க பிளாட்பாரத்தின் ஒரு முனையில் கூட்டுபவன் கூட்டிக்கொண்டிருந்தான். நான் அங்கு இறங்குபவன் அல்ல என்பதுபோல உட்கார்ந்திருந்தேன். ரயில் விசில் ஊதிய பிறகுதான் இறங்கவேண்டுமே என்பது நினைவுக்கு வந்தது. சட்டென்று கதவைத் திறந்துகொண்டு கருங்கல் ஜல்லிகள் மீது இறங்கினேன்.

வெற்றுத் தண்டவாளத்தின் மீது காலை வைத்தேனோ இல்லையோ, அதே தண்டவாளத்தின் மீது மறுதிசையிலிருந்து ஒரு வண்டி வருவதைக் கண்டேன். டெல்லியிலிருந்து வருகிறது போலும், தூரத்தில் தெரிந்த மேம்பாலத்திற்குக் கீழ் ஒரு பெரிய எஞ்சின் கணத்திற்குக் கணம் நெருங்கிக் கொண்டிருந்தது. குப்குப்பென்று புகை. பளிச்சிட்ட தண்ட வாளங்கள் அதிர்ந்து ஒலித்தன. ஒரு பயங்கர ராட்சசன் உருண்டு புரண்டு வருவது போல அது வந்தது.

எனக்குள் திடீரென்று ஒரு குரல்—இதன்முன் பாய்ந்துவிட்டால்? இந்தக் கேள்வியுடனேயே குதிரை பக்கத்தில் நிற்க, துப்பாக்கி ஏந்திய இன்ஸ்பெக்டரின் உருவம் கண்முன் வந்தது. பாய்ந்துவிட்டால் எல்லாக் கஷ்டங்களுக்கும் ஒரேயடியாக விடுதலை கிடைத்துவிடும். ஏதோ இனம்தெரியாத மின் அதிர்ச்சியால் தூக்கியெறியப்பட்டது போல நான் இஞ்சினின் முன்பாகக் கிடப்பதாக உணர்ந்தேன். விழும் முன்பு ஒரு கணத்தின் பகுதியில் என் உணர்வில் இருந்த தெளிவின்மை சட்டென்று அகன்றுபோனதுபோல இருந்தது. கனவு கலைந்து விழிப்பது போன்றிருந்தது. என்ன காரியம் செய்துவிட்டேன்? ஆனால் அதற்குள் சில்லிட்ட தண்டவாளங்களில் நான் ஒட்டிக்கொண்ட மாதிரி இருந்தது. எஞ்சினின் முன்புறத் தடுப்பு என்னைத் தொடுகிறது. பல்லைக் கடித்துக் கொண்டு தடுப்பைப் பிடித்துக் கொள்கிறேன். பிரபாவின் பாவப்பட்ட முகம் கண்முன் வருகிறது. ஆனால் எஞ்சினுடன் சேர்ந்து நான் இழுபடு கிறேன். ஒருகணம்... இரு கணம்... இதோ என் கையில் பலம் தீர்ந்து போயிற்று. என் கைப்பிடி நழுவுகிறது. உரக்க 'பிரபா... ஆ- ஆ...' என்று சத்தம்போட நினைக்கிறேன். என் திறந்தவாயின் மீது பெரும் சக்கரங்கள்!

கற்பனைச்சித்திரம், நிஜம்போலவே இருந்தது. உண்மையிலேயே இப்படியெல்லாம் செயல்பட்டு விடுவேனோ என்று தோன்றியது. ஆனால் நான் தண்டவாளத்திலிருந்து அகன்றுவிட்டேன். ரயில் வந்து நின்றது. என் முன்னால் இரு பெட்டிகள் இணையும் காலி இடம் இருந்தது. தடித்த கம்பிகள், பெட்டிகளின் இடிதாங்கிகள், ஒரு பெரியவர் ஜன்னல் வழியாக எட்டி, குச்சியால் பல் துலக்கிக் கொண்டிருந்தார். இரண்டு சுவர்களுக்கு மத்தியில் நிற்பது போல நான் இரண்டு ரெயில் களுக்கு இடையே நின்றிருந்தேன்.

இப்போதே இதன் கைப்பிடியைப் பற்றி இதில் ஏறி அமர்ந்து கொண்டு விட்டால்? மறுகணமே நான் பம்பாயிலிருந்து வெளிநாடு செல்லும் ஒரு கப்பலில் கலாசி உடையில் நின்றிருப்பதை மனக் கண்ணால் கண்டேன். மறுகணமே அந்தச் சித்திரம் கௌபீனம் தரித்து தாடியுடனும், கமண்டலத்துடனும் இருக்கும் துறவியின் சித்திரமாக மாறியது. காலா கம்பளிவாலா ஆசிரமத்தில் கம்பளி போர்த்துக்கொண்டு கிடப்பதாகவும் ரிஷிகேசத்தில் ஒரு பெரிய மரத்தின் அடியில் என் ஆசிரமம் இருப்பதாகவும் தோன்றியது. எவ்வளவோ காலம் உருண்டோடி விடுகிறது. ஒருநாள் விதவைக் கோலத்தில் ஒருபெண் பல கிழவிகளுடன் என் ஆசிரமத்திற்கு வருகிறாள். இல்லையில்லை, ஒரு கங்கைக்கரையில் ஒரு பெண்ணை நான் பார்க்கிறேன். அட இது பிரபா அல்லவா! நான் பிரபாவை அடையாளம் கண்டுகொள்கிறேன். அவளால் என்னை தாடி மீசையிலும், தடித்த கம்பளியிலும் அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லை. அதன்பிறகு குளிக்கிற யுவதியிடம் 'பிரபா பிரபா' என்று கூவிக்கொண்டு நான் நெருங்கினேன் என்று ஜனங்கள் என்னை செருப்புகளாலும், தடியாலும் அடிக்கிறார்கள்.

பிறகு எல்லாச் சித்திரங்களும் குழம்பிப் போய் ஒரு பெரிய சித்திரமாக விரிகிறது. பேப்பரில் என் படம் வெளியாகிறது. "அன்பு மகனே சமர்! உன் தாயார் உடல் கவலைக்கிடமாக இருக்கிறது. உடனே ஒருமுறை காணத் துடிக்கிறாள்" என்று விளம்பரம்.

எதிரேயிருந்த வண்டியின் விசிலில் என் கனவு மீண்டும் கலைந்தது. என் முன் இருந்த சக்கரம் மெல்லச் சுழன்றது. இந்தப் பெட்டிகளின் நடுவே பாய்ந்துவிட்டால்? அல்லது பாய்ந்து கைப்பிடியைப் பற்றிப் பெட்டியில் ஏறிக்கொண்டால்?

என் பின்னால் இருந்த வண்டியும் நகர ஆரம்பித்தது. இரு வண்டிகளும் எதிரெதிர் திசைகளில் நகர்ந்தன. நான் தரையில் வேகமாகச் சுழலும், ஒரு வட்டத்தின் மீது நின்று கொண்டிருப்பதுபோல இருந்தது. உள்ளேயிருந்து யாரோ, "பாய்ந்துவிடு, ஏறிக்கொள், பாய்ந்து விடு, ஏறிக்கொள்" என்று கூறிக்கொண்டேயிருந்தது போல இருந்தது.

நான் பயந்துபோய் மேலே அண்ணாந்து பார்த்தேன். வானம் முழுவதும் என் கண் முன் கிர்ரென்று சுழன்றது.

Lasertypeset at Capital Creative New Delhi
and printed at The Central Electric Press, New Delhi 110028